# தமிழ் இலக்கிய வரலாறு

## (இலக்கியத் தோற்றம்)





டாக்டர் மு. கோவிந்தசாமி, M. A., M. Litt., Ph. D.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

# தமிழ் இலக்கிய வரலாறு

## (இலக்கியத் தோற்றம்)

[பி. ஏ. தமிழ்ப் பாடத்திட்டத்திற்கும் உரியது]

டாக்டர் மு. கோவிந்தசாமி, M. A. M. LITT., Ph. D.
தமிழ் ஆராய்ச்சித்துறை
அண்ணமலைப் பல்கலைக் கழகம்

விற்பனை உரிமை
பாரி நிலையம்
59-பிராட்வே, சென்னை-1

வாசுகி பதிப்பக வெளியீடு
ஆகஸ்டு 1969, இரண்டாம் பதிப்பு

விலை ரூ. 3-60

ஆசிரியரின் பிற நூல்கள் :

1. நல்ல நாடு
2. வள்ளுவரும் காந்தியும்
3. ஔவை
4. நக்கீரர்
5. திருக்குறள் நயவுரை
6. பாரதி கவித்திறன்
7. பாரதிதாசன் கவித்திறன்
8. குறள் மனம்
9. பழனியான் காதல்.
10. வள்ளுவர் தந்த மணப்பரிசு.

சிவகாமி அச்சகம், அண்ணாமலைநகர்

# முன்னுரை

வரலாற்றிலும் பழம் பண்பாட்டிலும் மக்களுக்கும் அறிஞர்க்கும் இருக்கும் உணர்ச்சியும் பெருமையும் ஒரு மொழியின் வரலாற்றிலும் உண்டு. பழமையான மொழியையும் இலக்கியத்தையுமுடையவர்கள் தம்மைப் பற்றி ஒருவகை இறும்பூதெய்துவதியற்கையே. ஆனால் அஃதொரு அளவோடு நின்றுவிடவேண்டும்.

தமிழ்மொழியும் அதன் இலக்கியமும் என்று பிறந்தது என்றுணராத இயல்பினவாய் தமிழர் யாவரும் நினைந்தின்புறுதற்குரிய தன்மைகளை யுடையவேயாகும். தமிழின் தொன்மையைப்பற்றி நாம் ஒன்றும் ஐயப்படவோ, குறைபாடடையவோ, தலைகுனியவோ தேவையில்லை. தமிழ் மொழியும் எழுத்தும் பண்டைப் பெருமையுடைய நாகரீகங்களின் மொழிகட்கீடான பழமையுடையவை. தமிழ் இலக்கணத்தில் முதல், எழுத்ததிகாரத்தை ஆசிரியர்கள் எங்கும் பேசுவது அதன் எழுத்து மிகவும் பழமையானதென்பதனைக் குறிக்கவேயாகலாம். எகிப்திய, சுமேரிய, சிந்துவெளி நாகரீகங்கள் மிகத் தொன்மையானவை. மிகப்பழமையான எகிப்திய நாகரீகம் கி. மு: 5000-6000 ஆண்டுகட்கு முற்பட்டதென்பர். ஆனால் எகிப்தியர் தம் எழுத்தும் தனித்ததன்றென்றும் அதற்கு முந்திய (காரணமான) எழுத்துக்கள் ஏதோ கிழக்கே ஒரு நாகரீக நாட்டிலிருந்து வந்திருக்க வேண்டுமெனவும் அந்நாடும் சுமேரியநாடாகவும் இருக்க முடியாதெனவும் கூறுவர். அப்படியானால் சுமேரியரைத் தவிர்த்து அத்தனைப் பழங்காலத்தில் கிழக்கேயிருந்து எகிப்து முதலிய நாடுகளுடன் தொடர்பு கொண்டவர்கள் தமிழர்களாகவே இருக்கலாம். தமிழரின் சொல்லமைப்புக்கள் சுமேரியரின் சொல்லமைப்புக்களுடன் பலவகையில் ஒத்திருக்கின்றன. ஆகவே எகிப்தியருக்கும் எழுத்துமுறையை உதவியவர்கள் தமிழராக இருக்கலாம். எழுத்

தினைச் சொந்தமாகக் கொண்ட தமிழர்க்கு இலக்கியங் களும் இருந்திருக்கவேண்டும். சுமேரிய மக்களிடம் இலக் கியங்கள் இருந்தமை புலனுகின்றது. இது 5000-6000 ஆண்டுகட்கு முற்பட்ட வரலாறு. கி. மு. 3000-4000 ஆண்டுகட்கு முற்பட்ட சிந்துவெளி நாகரீகத்தின் எழுத்துக் கள் தமிழர்தம் எழுத்துக்களுடன் ஒன்ருக இருக்கவேண்டு மென ஹீராஸ் பாதிரியார் போன்ற சீரிய வரலாற்றறிஞர் கருதுகின்றனர். சிந்துவெளி எழுத்துக்களை இப்போது விளக்கத் தலைப்பட்டிருக்கின்றனர். அஃது தமிழர்தம் எழுத்துக்களுடன் பெரிதளவு ஒத்திருந்தாலும் தமிழ் இலக் கியத்தின் 3000 ஆண்டுகளைப் பற்றிய வரலாறு நமக்கு ஓர ளவு தெரியும். எப்படியும் ஆரியர்கள் இந்தியாவினுள் வரு வதற்குமுன் இங்கு நாகரீகமும் தமக்கென எழுத்துக்களும் உடைய ஒரு சிறந்த இனம் இருந்ததென்பதில் இனியும் தடையிருக்கவேண்டியதில்லை. அந்தப் பொது இனக் குடும்பமாகவோ அன்றி அதன் ஒரு பிரிவாகவோ தமிழ் இனக் குடும்பம் அன்றிருந்தது என்பதிலும் ஐயமில்லை. ஆகவே தமிழ் எழுத்தும் இலக்கியமும் 3000-5000 எனும் ஆண்டுகட்கு முற்பட்ட பழமையும் பெருமையும் உடையன வாகும்.

இத்தனைப் பழமையுடைய மொழிக்கு உரியவர்களாக இருந்தும் சில இலக்கியங்களின் பழமை கருதித்தமிழ ரிடையே கருத்து வேறுபாடும் முரண்பாடும் பிணக்கும் பூசலும் பலவாண்டுகளாக நிலவி வந்தன. அவை நல்ல காலமாக இப்போது குறைந்தும் குன்றியும் வருகின்றன. அம்முரண்பாடுகட்குக் காரணம் ஒருவகையான சமயப் பற்றேயாகும். தொல்காப்பியர் பொருள்புலப்பாட்டை மிக மிக வற்புறுத்துவார், பொருள் புலப்பட்டால்தான் அறிவு வளரும். இலக்கிய இன்பம் ஏற்படும். பொருள் புலப்பாட் டுக்குக் காலவரலாறு மிக இன்றியமையாதது. ஓர் நூல்

இன்ன காலத்ததென்பதனைத் திட்டமாக அறிந்தபின்பே அதனை விளக்கவோ அதற்கு உரை வகுக்கவோ முடியும். அக்காலத்தின் மற்ற இலக்கியங்களுடனும் வரலாற்றுடனும் அதனை ஒப்பிட முடியும்.

இலக்கியத் தோற்றம் என்ற இவ்விலக்கிய வரலாற்று நூல் 15 ஆண்டுகளாக யான் எழுதிய இலக்கியகாலம்; இலக்கியத் தோற்றம் முதற்பதிப்பு ஆகியவற்றை அடியொற்றியதாகும். எம். லிட்., டாக்டர் முதலிய பட்டங்களுக்கு எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகளின் அடிப்படையான கோட்பாடுகளையும் கருத்துக்களையும் இதனுடன் இணைத்திருக்கிறேன். இலக்கிய வரலாறு பற்றிய தரமான (Standard) நூல் ஒன்றனை உருவாக்கவேண்டுமென்பது எனதார்வம். மற்றும் கேம்பிரிட்ஜ் முதலிய பல்கலைக் கழகங்களில் செய்துள்ள மாதிரியில் தமிழ்இலக்கிய வரலாற்றினை பத்துக்கு மேலான தொகுதிகளில் 5000-6000 பக்கங்களில் எழுத வேண்டுமென்பதும் என் அவா. அவா நல்லதைப் பற்றியது ஆதலால் இறைவனருள்இதற்குத் துணையாகவேண்டும்.

முச்சங்க காலங்கள்; அவற்றின் நூல்கள்; நான்காம் சங்கம்; ஆழ்வார்கள் மெய்கண்டார் ஆகியோர்களின் காலங்கள் ஆகியவற்றில் புதிய கோட்பாடுகள் பலவற்றையும் புதியகருத்துக்களையும் இந்நூலில் வெளிக்கொணர்ந்துள்ளேன். கி. பி. 12-ஆம் நூற்றுண்டுக்குப்பிற்பட்ட நூற்றுண்டுகளில் மற்ற இலக்கிய வரலாற்றுசிரியர் குறிக்காத நூற்றுக்கணக்கான புதிய நூல்களை எடுத்துக் காட்டி இணைத்திருக்கிறேன். புதிதாக கி. பி. 7 முதல் 14 வரையும் நூற்றுண்டுவரிசையில் இலக்கியங்களை வரிசைப்படுத்தியுள்ளேன். இவ்வகையில் பல அடிகள் முன் எடுத்துவைத்துள்ளது இந்நூல்.

இலக்கிய வரிகள் என்ற புதிய பகுதி ஒன்றனை ஒவ்வோர் அத்தியாயத்தின் இறுதியிலும் இணைக்க முயன்றுள்ளேன். மேற்கோளாகவும், நினைவில் பதிக்கக்கூடியவாகவும் ஆராய்ச்சி, சொற்பொழிவு, கட்டுரை ஆகியவற்றிற்கு உதவுவனவாகவும் உள்ள (ஒவ்வோர்) இலக்கியத்தின் சிறந்த வரிகளைத் தொகுத்ததே இப்பகுதி. இது மிகவும் பயன்தரக்கூடியதாகும்.

# உள்ளுறை.

# துணை நூல்கள்

---


Pandyan Kingdom : K. A. Nilakanta Sastri.
Some Contributions of South India to Indian Culture.
Vaishnavism : Early Vaishnavism of South India.
History of the Tamils : P. T. Srinivasa Iyengar.
Vincent A. Smith : Early Indian History.
History of Tamil Language & Literature: S. Vaiyapuri Pillai.
Manickavasakar Kalam: Maraimalaiadigal.
History of India : R. Sathianathier.
Ilakkiya Varalaru : K. Subramania Pillai.
M. V. K. Rao : Gangas of Talakad.
Pallavas : Prof. Dubreaul.
History of Sanskrit Literature : Keith.
Sasana Tamil Kavi Charitam : Peruntogai.
History of Tamil Literature : M. S. Purnalingam Pillai.
H. O. T. L; T. P. Meenakshisundaranar.
Advanced Studies in Tamil Prosody :
Dr. A. Chidambaranathan.
Ephigraphica Indica.
Journal of Oriental Research, Madras.
S. I. Inscriptions : & Indian Antiquary, Vol. VII.
Administrative Systems of Pallavas : Dr. Meenakshi.
Mozhinool : Dr. M. Varadarajan.
Pallavas : Gopalan.
Rajavali : Rajaretnakari : Mahavamse of Ceylon.
Tamils 1800 Years ago : Kanagasabai Pillai.

இந்நூல்

**Dr. ஆதிநாராயணன்**, M.A., Ph.D. அவர்கள்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்

துணைவேந்தராகப் பதவியேற்றபொழுது அளித்த

பாராட்டாக வெளியிடப்பெற்றது.

# அணிந்துரை

டாக்டர் ச. அகத்தியலிங்கம்,
எம்.எ., பி.எச். டி. (கேரளா) பி.எச். டி. (இந்தியானு)
பேராசிரியர் ; மொழியியல்துறை
அண்ணுமலைப் பல்கலைக்கழகம்

இன்று உலகில் காணப்படும் மொழிகளில் ஒரு சிலவே பழைமையும் தொன்மையும் இலக்கிய வளமும் இலக்கண அரணும் கொண்டவை. அத்தகைய மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்று. இத்தகைய தமிழ் மொழியின் இலக்கிய வரலாற்றின் தோற்றமும் ஏற்றமும் இந்நூலின் கருவாக அமைந்து கற்போரை மகிழ்விக்கக் காண்கிறேம்.

தமிழனுக்கெனச் சிறந்ததொரு பாரம்பரியம் உண்டு. அப்பாரம்பரியத்தில் தோன்றிய செல்வங்களே தொல் காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ் கணக்கு, சிலப்பதிகாரம், சிந்தாமணி, கம்பராமாயணம் போன்ற அறிவுக் கருவூலங்கள். இவற்றின் தோற்றம், தொன்மை, வாழ்வு, வளர்ச்சி, போன்றவற்றை நூற்ருண்டு களின் அடிப்படையில் சிந்தனைத் தெளிவுடன் ஆராய்ந் துள்ளார் அன்பர் கோவிந்தசாமி. இலக்கிய வரலாற்றை ஆராயும் போது அதன் வளர்ச்சிக்கும் தளர்ச்சிக்கும் துணை நிற்கும் அரசியல் வரலாற்றையும் ஆங்காங்கே குறித்துச் சென்று தமிழிலக்கிய மாணவர்களின் உள்ளத்தில் ஒரு வர லாற்றுப் பின்னணியை உருவாக்கும் ஆசிரியரின் திறம் சிந்தித்து மகிழ்தற்குரியதாகும். பரந்து பட்ட கருத்துச் செறிவையும் சிறந்த சொன்னடையையும் கொண்டு விளங் கும் இந்நூல் சிந்தனைக்கு விருந்தாகவும் விறுவிறுப்பாகவும் அமைந்துள்ளது.

'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' என்பது ஆன்ருேர் வாக்கு. அதற்கேற்பப் பலதொகுதிகளில் தமிழிலக்கிய வர லாற்றை எழுத விழையும் ஆசிரியரின் அவா அறிஞர் பெரு மக்களின் அவா ஆகும். இந்த நல்லெண்ணம் நிறை வேறும் நாள் தமிழ் இலக்கிய வரலாற்றின் ஒரு பொன்னுளா கவே அமையும்.

# சங்க காலம்

நக்கீரர் தம் இறையனுர் அகப்பொருளுரையில் கூறிய முச்சங்கங்களைப் பற்றிய குறிப்புக்கள் நம்பத்தக்க வல்ல வென்பார் பலர். நக்கீரர் சிறந்த வரலாற்றுணர்வினர். அவர்தம் பதினேராம் திருமுறைப் பாடல்களும் அகப்பொரு ளுரையும் அரிய வரலாற்றுண்மைகள் மிளிர்வனவாயுள்ளன. பர்கீடர் முதலிய பேராசிரியர்கள் புராணங்களிலும் உண்மை கள் கலந்துள்ளமையைப்பற்றி வற்புறுத்திப் பேசுவர். நக்கீ ரர் சங்கங்களைப் பற்றிக் கூறிய காலம் புத்த சங்கங்களெல் லாம் கூடிய காலம், இலங்கை வரலாற்றுக் குறிப்பு நூல்க ளாய மகாவம்சங்களெல்லாம் எழுதப்பட்ட காலம். தமக்கு ஆயிரமாண்டுகள் முற்பட்ட வரலாற்றினைத்தான் தமதுரை யில் நக்கீரர் நவின்ருர். இற்றைக்கு ஆயிரமாண்டுகள் முற் பட்ட இராசராசன் வரலாற்றினை நாம் தெளிவாகவே சொல்ல முடிகின்றது. கிரேக்கரும் காளிதாசன் போன்ருே ரும் தம் காலத்தில் திறம்பெற வரலாறுகளை எழுதியிருக்கக் கண்ட நக்கீரர் சங்க வரலாருகிய புதைபொருளை அகழ்ந் தெடுத்து வெளிப்படுத்தியுள்ளார். அகப்பொருள் பாடல் களில் அடங்கியுள்ள வரலாறுகளை அறிந்த எவரும் இதனை அடியோடு மறுத்து விடமாட்டார்.

சங்கங்களைப்பற்றி நக்கீரர் மட்டும் கூறிவிடவில்லை. அவர்க்கைந்நூறு ஆண்டுகள் பின்வந்த அடியார்க்கு நல்லா ரும் கூறுகிருர், பேராசிரியர் முதலியோரும் பேசுகின்றனர். நக்கீரர் கூறுவது பல புதிய குறிப்புக்களைக் கொண்டதாக வுள்ளது. அக்குறிப்புக்கள் பனம்பாரனுர் பாயிரம் புற நானூற்றுப் பாடல்கள் முதலியவை கூறும் பாண்டியர் பெயர்களுடன் ஒத்து வருகின்றன. எனவே நக்கீரர் தம் குறிப்புக்கள் நம்பத்தக்கதாகி வருகின்றன. சங்கம் என்ற அமைப்பைத் தவிர நக்கீரர் கூறிய குறிப்புக்கள் பெரிதும் உண்மையாகலாம். ஒவ்வொரு சங்கத்திலும் இன்னின்னுர்

புலவர் இருந்தனரெனவும் இத்தனை புலவர் பாடினரெனவும் குறிப்பிட்ட இத்தனை பேர் கவியரங்கேறினர் எனவும் கூறிய கூற்றுக்களை யெல்லாம் வெறும் கற்பனையெனத் தள்ளிவிட முடியாது. சில கற்பனைகளில் அவர் கொண்ட உண்மைகளை மட்டும் புரிந்துகொள்ள வேண்டும். அமைப்போடு கூடிய சங்கங்கள், அதன் தலைவர், காலத் திட்டப்படிக் கூடும் கூட்டங்கள் என்பன வெல்லாம் நான்காம் சங்கம் எனப் பின்னர் பேசப்படும் நக்கீரர்—இறையனர் (கொங்குதேர் வாழ்க்கைச்) சங்கத்தில்தான் இருந்தன. இதனை மனத்துட் கொண்டே மற்ற முச்சங்கங்களையும் கற்பனை செய்துள்ளார் நக்கீர தேவர்.

## முதற் சங்கம்

முதற் சங்கம் 4440 ஆண்டுகளும் இரண்டாம் சங்கம் 3700 ஆண்டுகளும் கடைச் சங்கம் 1850 ஆண்டுகளும் விளங்கி யிருந்தன வென்பது நக்கீரர் குறிப்பு, இம் மூன்று சங்கங்களும் 9900 ஆண்டுகள் (சுமார் 10000) இலங்கின வென்பதில் பலர்க்கும் நம்பிக்கை யில்லை. ஒன்றைப் பத்து, நூறாகப் பாராட்டிப் பேசுவது பாடல் மரபும் இலக்கிய மரபுமாம். ஒருவகை உயர்வு நவிற்சியும் இதுவாகும்.

எனவே இவற்றை 444; 370; 185 ஆக 999 எனக் கொண்டுவிட்டால் நிரம்பப் பொருத்தமாகிவிடலாம். வேறு வகையிலும் இக்கணக்கீடு இசைவாகின்றது. இடைச் சங்கம் இருந்த 3700 ஆண்டுகளில் 59 பாண்டியர் ஆண்டனரென நக்கீரர் கூறுகிறார். இதன்படி ஒவ்வோரரசனும் சுமார் 60 ஆண்டுகள் ஆண்டுள்ளான். இது வரலாற்றறிவியலுக்குப் பொருந்தாதது வரலாற்றில் ஒரரசனுக்குச் சுமார் 25—30 ஆண்டுகளே கணக்கிடுவது மரபு. ஓரிருவர் 60 ஆண்டுகள் வீதம் ஆண்டனரென ஒப்புக்கொண்டுவிடலாம். ஆனல் அனைவரும் 60 ஆண்டுகள் வீதம் ஆண்டனரென்பது எவரும் ஏற்றுக்கொள்ள வியலாததாகும். இதற்குப் பதிலாக 370 ஆண்டுகளில் 60 அரசர்கள் ஒவ்வொருவரும் சுமார் 6 ஆண்டு கள் ஆண்டனரெனில் அஃதறிவியலுக்குப் பொருந்துவதே யாகும்.

இச் சங்கங்களின் எல்லைகள் கடல்கோள்களாக இருக்கின்றன. ஒவ்வொரு சங்கமும் ஒரு கடல்கோளினுல் மாறியுள்ளது அதன் தலைநகரமும் மாறியுள்ளது. அகத்தியர் முதற் சங்கத்தில் இருந்துள்ளார். அவர் மாணவர் தொல்காப்பியர் இரண்டாம் சங்கத்தில் இருந்துள்ளார். தொல்காப்பியர் முதற் சங்கத் திறுதிக் கடல்கோளுக் கடுத்தவராக வேண்டும். பல காரணங்களால் தொல்காப்பியர் கி. மு. 4.5-ஆம் நூற்ருண்டினரெனக் கருதப்படுகிருர். இலங்கை வரலாற்றின்படிக் கி. மு. 306-ல் ஒரு கடல்கோள் நிகழ்ந்துள்ளது. அதனையே இரண்டாம் சங்கத் தொடக்கமாகக் கொள்ளலாம். அதற்குமுன் முதற் சங்கம் 444 ஆண்டுகள் கி. மு. 750 வரை நிலவியிருக்க வேண்டும். கி. மு. 306 முதல் இடைச்சங்கம் 370 ஆண்டுகள் நிலவி கி. பி. 64-ல் முடிவு பெற்றிருக்க வேண்டும். அதன்பின் கடைச் சங்கம் 185 ஆண்டுகள் இலங்கி 249 கி பி. யில் மணிமேகலை கூறும் சோழன் கிள்ளி காலக் கடல்கோளில் முடிவுபெற்றிருக்க வேண்டும். கடைச்சங்ககாலம் கி. பி. முதல் மூன்று நூற்ருண்டெனவும் கி. பி. 75-225 எனவும் கூறுவோர் கூற்றுக்கு இக் கருத்துக்கள் ஏற்புடையனவே யாகும்.

பாண்டியர் என்ற பெயர் பண்டையர் என்ற பொருளில் ஏற்பட்டதாக வேண்டும். தமிழகத்தில் பாண்டியர் தலைமை பற்றிய வரலாருகவே முச்சங்கக் குறிப்பைக் கொள்ள வேண்டும். தமிழ் மொழி வளர்ச்சியில் ஒரு குறித்த வரலாற்றையும் அது குறிக்கக்கூடும். கி. மு. 4-ஆம் நூற்ருண்டில் விளங்கிய மெகஸ்தனிஸ், ஹெறாக்ளிஸ் என்பவன் இந்தியாவின் தென் பகுதியைப் பண்டையா என்ற மகளிடம் ஒப்படைத்தான் என்ற கதையைக் கூறுகிருன். அதே காலத்தில் மௌரிய சந்திரகுப்தன் அவையில் விளங்கிய சாணக்யன் பாண்டிய கவாடம் என்ற முத்தைப் பற்றிக் கூறுகிருன். கபாடபுரத்து 'முத்துக் கவாடமாக' இருக்கலாம். கி. மு. 3-ஆம் நூற்ருண்டின் அசோகன் கல்வெட்டுக்களில் மூவேந்தரைப்பற்றிய குறிப்புக்களுள்ளன. கி. மு. இரண்டாம் நூற்ருண்டில் காத்யாயனர் பாண்டியர் சோழர் எனும் பெயர்களைப் பற்றிய விளக்கங்களைக் கூறுகிருர், நம் கணிப்பின்

படித் தொல்காப்பியம் கி. மு. 4-ஆம் நூற்றாண்டினதாகும். தொல்காப்பியம் தெளிவாக மூவேந்தரை 'வண்புகழ் மூவர்' எனக் குறிப்பிடுகின்றது. தமிழகம் தெளிவாக மூன்று பிரிவுகளாகப் பிரிந்திருந்த காலம் தொல்காப்பிய காலம் அல்லது இடைச் சங்க காலம். முதற் சங்க காலத்தில் பாண்டியர் சேரர்மட்டுமிருந்து மற்றவர் தெளிவாகப் பிரியாமல் இருந்திருக்கலாம்.

முதற் சங்கத்தில் அகத்தியனாரும் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும் குன்றெறிந்த முருகவேளும் முரஞ்சியூர் முடிநாகராயரும் நிதியின் கிழவனுமென இத் தொடக்கத்தார் 549 பேர் இருந்துள்ளனரென நக்கீரர் கூறுகிறார். அவருக்கு நூல் (இலக்கணம்) அகத்தியம். எத்துணையோ பரிபாடலும் முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை போன்றனவும் இச்சங்கத்தில் தோன்றிய நூல்கள். காய்சின வழுதி முதல் கடுங்கோன் ஈறாக 89 பாண்டியர் ஆண்டுள்ளனர். அவருள் எழுவர் கவியரங்கேறியவர்கள். மொத்தத்தில் 4440 ஆண்டுகளாய இக்காலத்தில் 4449 புலவர் பாடியுள்ளனர்.

மொழியுணர்ச்சியும் மொழிப் புலமையும் உடைய அரசரால் முச்சங்கங்களும் வளர்க்கப்பெற்றுள்ளன. மூன்று சங்க காலத்திலும் எழுவரும் ஐவரும் மூவருமெனக் கவி பாடும் திறமுடைய அரசர்களே இலங்கியுள்ளனர். எனவே முச்சங்க காலம் மொழி வளர்ச்சியில் சிறந்த அரசியலமைதியையும் திறமையையும் கொண்டு வளர்ந்துள்ளது. 89-59-49 என்ற எண்ணிக்கையையுடைய அரசர்கள் முக்காலங்களையும் ஆண்டுள்ளமையால் இடையீடின்றி ஏற்றமுடைய அரசர்கள் விழிப்புடன் தமிழகத்தையும் தமிழ் மொழியையும் போற்றி வளர்த்துள்ளனர்.

காய்சின வழுதி கடுங்கோன் வெண்டேர்ச் செழியன் என்ற பெயர்கள் அவர்கள் வீரத்தையும் வலிமையையும் குறிக்குமாதலால் தென்னகத்தை என்றும் எவரும் அடிப்படுத்தாமல் ஆண்டுள்ளனர் சங்ககாலத்தரசர் என அறியலாம். இந்திய வரலாற்றில் தமிழகத்தை அசோகன் காலம் வரையுங்கூட வடநாட்டரசர் எவரும் வெல்லவுமில்லை அடிமைப்

படுத்தவுமில்லை. ஆனால் கடைச் சங்கத்துக் கரிகாலனும் செங்குட்டுவனும் இமயம் சென்று வென்று வந்துள்ளனர்.

சிவனும் முருகனும் குபேரனும் முதற்சங்கத்தில் மொழிப் புலமையும் தலைமையுமுடையோராகக் குறிக்கப்படுகின்றனர். இது பலருக்கு முச்சங்க வரலாற்றைப் பற்றிய ஐயத்தை உண்டாக்குகின்றது. கடவுளர் புலவராய் வந்து சங்கத் தலைமையேற்று நடத்தியிருப்பரா வென்பதில், கடவுளரைப் புலவராகக் கொள்ளவேண்டுவதில்லை. நாட்டில் நடப்பனவற்றை அரசன் பெயராலும் வீட்டில் நடப்பனவற்றைத் தந்தையின் பெயராலும் பேசுவதுபோல இங்கு முதல்வராகிய இறைவர்களை முதல்வர்களாகவும் புலவர்களாகவும் மொழியப்பட்டுள்ளது, அவ்வளவே காரணம்; அதுவும் நக்கீரர் சிறந்த சைவர். இத்தகைய கற்பனைகளை விலக்கிவிட்டு இதனை நோக்க வேண்டுமென முன்பும் நுவலப்பட்டது.

இந்தியாவிலும் தமிழகத்திலும் சிவனுக்குத் தலைமை ஏற்பட்டதனை முதற் சங்க வரலாறு குறிக்கலாம். வேதகாலத்தின் பிற்பகுதியில் அதாவது சம்ஹிதை பிராமணக்காலத்தில் சிவனுக்குத் தலைமையும் பெருமையும் ஏற்பட்டது. திராவிடரின் தொடர்பாற்றான் வேதகால ருத்ரன் பிற்காலத் தலைமையுடைய சிவனாக ஆயினனென அறைவர் வரலாற்றாளர்,

சம்ஹிதைகளின் காலம் முதற்சங்க காலமாகிய 7-8 ஆம் நூற்றாண்டுகள்தாம். வட இந்தியாவில் இலக்கிய காலம் தொடங்கியபோதே (அதற்கு முன்பும்) தமிழகத்தும் இலக்கிய யுகம் தொடங்கிவிட்டதென்பதனையே சங்க வரலாறுகள் உணர்த்துகின்றன. வேத காலத்தில் எத்தனைப் புலவர்கள் வடமொழிக்கிருந்தனரோ அதனினும் மேலான எண்ணிக்கையுடையவர்கள் தமிழுக்கிருந்து அதனைப் போற்றியுள்ளனர்.

தொல்காப்பியத்திற்கு 40—50 ஆண்டுகள் முன் அகத்தியம் இயற்றப் பெற்றிருக்கலாம், எனவே தொல்காப்பியத்

தைக் கொண்டு அகத்தியத்தின் இயல்புகளையும் மரபுகளை யும் அறிந்துகொள்ளலாம். அவ்வகையில் அகத்தியத்தின் நூலமைதியும் யாப்பும் ஏற்பட அதற்குமுன் ஆயிரத்தினும் பலவாய ஆண்டுகள் இயன்றிருக்க வேண்டும். எனவே வால்மீகி இராமாயணத்தே குறிக்கப்பட்ட பாண்டிய நாடு, நூற்காலத்தில் அதாவது வால்மீகி காலத்தில் இருந்ததென் பதைவிட இராமாயண நிகழ்ச்சிக் காலத்தேயே இருந் திருக்கலாம். புறநானூறு குறிப்பதன்படி சேர நாடு பாரத நிகழ்ச்சிக் காலத்திலும் இருந்திருக்கக்கூடும். தடாதகையை மணந்து தமிழகத்தும் சிவனுக்குத் தலைமை யேற்பட்டிருக்க லாம். இவ்வகையில் மெகஸ்தனிஸ் கூறும் கதை உண்மை யாகலாம். ஹெராக்ளிஸ் தன் மகளைத் தெற்கே ஆளுமாறு அனுப்பியது இக்காலமேயாம். அவளைச் சிவன் மணந்த தையே திருவிளையாடலும் குறிக்கக்கூடும். அத் திருமண காலத்தில் அகத்தியர் தெற்கே வந்து தங்கியிருக்கிறார் என்ற கதையும் பொருத்தமாகலாம். இதற்கும் அகத்தியர் தலைச் சங்கச் சிறப்புற்றிருந்ததற்கும் இணைப்புண்மையைக் காண் கிறோம். அகத்தியர் கரகங்கவிழ்த்துக் காவிரியைத் தோற்று வித்ததெல்லாம் அவர்க்குச் சோழ நாட்டுடனும் தொடர்பு இருந்தமைமையைப் புலப்படுத்தலாம். காவிரியை நாட்டு வளத்திற்குப் பயன்படுத்தத் தொடங்கியமையையும் இது குறிக்கலாம்.

அவலோகிதப் புத்தரிடம் அகத்தியர் தமிழ் பயின்றார் என்ற மரபு முதற் சங்க அகத்தியரைக் குறிக்குமானால் அகத் தியர் புத்தர் காலத்திற்கு அண்மையில் விளங்கியவர் என்ப தனை அது குறிக்கலாம்,

கற்றோன்றிய காலத்தே முற்றோன்றியது தமிழ்க்குடி. அக்கல்லாகிய மலைக்குத் தலைவன் முருகன், எனவே தமிழர்க்கு முதற் கடவுள் முருகன் என்பதனை குன்றெறிந்த குமரவேள்—முதற் சங்கத் தொடர்பு குறிக்கலாம். சிவன் தொடர்பு ஒரு வகையில் வடக்கிருந்து தெற்கே பரவிய தாயின் முருகன் உறவு தெற்கேயிருந்து வடக்கே பரவி யிருக்க வேண்டும்.

நிதியின் கிழவனுகிய குபேரன் தொடர்பும் முதற் சங்கத்திற்குக் குறிக்கப்படுகின்றது. இது முதற் சங்க காலத்திலேயே இந்தியாவின் புராண இதிகாச காலம் தொடங்கிவிட்டது என்பதனை உணர்த்தக்கூடும். பொருளின் இன்றியமையாமையை உணர்ந்திருந்தமைக்கும் நிதியின் கிழவன் குறிக்கப்பெற்றிருக்கலாம்.

முதற் சங்கத்திருந்தே தமிழ் நூல்கள் முத்தமிழ் நூல்களாகவே இயற்றப்பெற்று வந்துள்ளன. இசையொடு சிவணிய நரம்பின் மறைய என்றும் நாடக வழக்கினும் என்றும் தொல்காப்பியர் இசை நாடகத் தமிழ்ப் பிரிவுகளைக் குறிக்கிருர். அகத்தியரும் இத்தகைய பிரிவுகளைக்கொண்டே நூல் எழுதியதாக அறிகிருேம். அவ்வகையில் முதுநாரை முதுகுருகு என்பன இசைத் தமிழ் நூல்களையும் களரியாவிரை என்பது நாடகத் தமிழையும் குறிக்கலாம், களரியென்பது கூத்தர் ஆடும் களம். அடியார்க்கு நல்லார் இடைச் சங்க நூல்களாகக் குறிக்கும் பெருநாரை பெருங்குருகென்பன இம்முதுநாரை முதுகுருகுகளையே குறிக்குமென்பார் கருத்து பொருந்தலாம். அவ்வாருயின் முதற்சங்க நூல்கள் இடைச் சங்கத்திலும் நிலவியமையை இது குறிக்கலாம். இவையெல்லாம் இக்காலத்து இல்லாமலாயின. இசையுடைய புள்ளெலாம் இருக்கையில் இவற்றிற்கேன் நாரை குருகெனப் பெயர் வந்தது. புரியவில்லை.

இயற்றமிழ் நூலாக முதற் சங்கத்துக் குறிக்கப்பெறுவது பரிபாடல் ஒன்றேயாகும். இஃது எண்ணிறந்த பரிபாடல் எனப்படுகிறது. பன்னூறு பாடல்கள் இதனில் இருந்திருக்க வேண்டும். கலியும் பரிபாட்டும் அகத்திற்குரியவென (அகத்திணையியல்) தொல்காப்பியம் கூறும். கடைச்சங்கப் பரிபாடல்களைப்போல இவையும் அகத்துறை கலந்து தேவர்ப் பராஅய பாடல்களாகவே இருந்திருக்க வேண்டும். சிவனையும் குன்றெறிந்த குமரனையும் அவை பரவியிருக்கலாம். வேதப் பாடல்களே அக்காலத்து வடமொழியில் விளங்கிய இலக்கியப் பாடல்கள். அவற்றிற்கீடாகத் தமிழில் இலங்கியவை இப்பரிபாடல்கள் என்னலாம்.

அகத்திய நூலைப் பற்றிப் பலர்க்கு ஐயம் உண்டாகின்றது. அகத்தியச் சூத்திரங்களாக இப்போது உரைகளில் கிடைக்கும் சுமார் 20 சூத்திரங்கள் அவருடையவாக இருக்கலாம். ஓரிரு தொடர்களோ சூத்திரங்களோ தவிர மற்றவை உண்மையாகலாம். தமிழ் திரிந்த நிலங்களைப் பற்றிய கன்னித் தென்கரை யென்ற சூத்திரம் பலவிடங்களில் பாட வேறுபாடுகளுடன் காணப்படினும் அதனைத் தள்ளிவிடற்கில்லை.

அதனில் கன்னடம் வடுகு கலிங்கம் தெலுங்கம் என்பவற்றுடன் பல்லவமும் குறிக்கப்படுகின்றது. பல்லவம் பிற்காலக் குறிப்பெனப்படுகின்றது. மணிமேகலையில் காணும் மணிபல்லவம் அதுவானல் மணிபல்லவப் பெயர் பழமையானதேயாக வேண்டும். அங்கு ஈழத்துக் கடுத்துப் பல்லவம் கூறப்படுகின்றது.

செய்யுளில் ஆனந்தக் குற்றம்பற்றி அகத்தியர் கூறவில்லை யெனப் பேராசிரியர் முதலோரும் கூறினரென யாப்பருங்கல உரையாசிரியரும் கூறுதலில் கருத்து வேறுபாடிருப்பது கொண்டு அகத்தியச் சூத்திரங்களையே மறுக்கின்றனர் பலர். யாப்பருங்கல உரைகாரரர் அகத்தியர் சூத்திரம் ஒன்றையே எடுத்துக் காட்டுகிறார். பிற ஆசிரியர் ஆனந்தப்பையுள் பற்றிக் கூறும் சூத்திரமொன்றும் அகத்திய சூத்திரங்களுள் காணப்பெறுகினறது. கலிப்பாடல்கள், வேற்றுமைகள், எச்சங்கள், முற்றுக்கள் முதலியவை பற்றியே, கிடைக்கும் அகத்தியச் சூத்திரங்கள் பேசுகின்றன. தொல்காப்பியம் கிடைக்கும்பொழுது அதற்குச் சில பத்தாண்டுகள் முன் எழுதப்பட்ட அகத்திய சூத்திரங்கள் கிடைத்தவெனின் அதில் தவறொன்றுமில்லை. திருமூலர் போல வடநாட்டிலிருந்து வந்து தமிழுக்காக வாழ்ந்தவர் அகத்தியர்.

முச்சங்கக் குறிப்புக்கள் நக்கீரர் ஒருவரே கட்டியுரைத்தவையல்ல வென்பதற்கு மற்ற உரையாசிரியர்கள் கூறும் வெவ்வேறு வகையான சங்கக் குறிப்புக்களே சான்றாகும். அடியார்க்கு நல்லார் பல புதிய வரலாற்றுக் குறிப்புக்களைத் தருகிறார். அவை நக்கீரரால் கூறப்பட்டவை யல்ல. எனவே

சங்கம் பற்றிய வரலாறுகள் நாட்டில் பரம்பரையாகப் பலராலும் பேசப்பட்டு வந்தனவாகும். நக்கீரர் முதற் சங்கப் புலவராக முரஞ்சியூர் முடிநாகராயரைக் குறிக்கிறார். நச்சினார்க்கினியர் தலையாய ஓத்து என்ற வரிசையில் புறநானூற்றிற் காணும் கௌதமனார், மார்க்கண்டேயர், வான்மீகியார் முதலோர் பாடல்களைத் தருகிறார். இவையெல்லாம் சங்கம்பற்றி உரையாசிரியரிடையே நிகழ்ந்த ஆராய்ச்சிகளாக வேண்டும். தலைச் சங்கத்திற்குரியன என்பதனையே தலையாய ஓத்தென அவர் கூறுகிறார்.

முடிநாகராயர் சேரமான் பெருஞ்சோற்றுதியன் சேரலாதனைப் புறநானூற்றில் பாடுகிறார். அது பழமையான பாடல் எனக் குறிக்கவோ அதனை முதற் பாடலாக அமைத்துள்ளனர். ஐம்பெரும் பூதங்களுடன் சேரனை ஒப்பிட்டு அவன் பாரதப் போரில் (பாண்டவர்க்குத் துணையாய்) படைகளுக்குப் பெருஞ் சோறளித்தது பற்றியது பாடல். உதியன் முன்னோர் அளித்ததையே உதியன் மேலேற்றி யுரைத்திருக்க வேண்டும் புலவர். இது சிறந்ததொரு வரலாற்று நிகழ்ச்சியாகக் கடைச் சங்கத்தும் பேசப்பட்டுள்ளது. பாடற் கடைசியில் மான்கள் 'அந்தணர் மூத்தீ விளக்கிற் றுஞ்சும் இமயம்' என்பது, பாடல் வேத காலத்தது, பழமை மிகவுடையது என்பதனை யுணர்த்தலாம். 'நால்வேத நெறிதிரியினும் திரியாச் சுற்றமொடு முழுது சேண் விளங்கி நடுக்கின்றி நிலீஇயரோ' எனச் சேரனை வாழ்த்துதல் தமிழ்க்குடி என்றும் ஆழி பெயரினும் தான் பெயராத நடுக்கற்ற நிலையையும் வளர்ச்சியையுமுடைய தென்பதனையும் தலைச் சங்கப் புலவர் முதல் அனைவர்க்கும் அவ்வுணர்ச்சி எவ்வளவு உயர்ந்திருந்த தென்பதனையும் புலப்படுத்துவதாகும்.

முடிநாகராயர் நாகர் எனும் பண்டைய தென்னாட்டுப் பரம்பரையினர். எகிப்தியர் போன்று முடியில் நாகத்தை யணிந்தவர். சேரநாட்டு முரஞ்சியூரினர்.

புறத்தில் (366) தருமபுத்திரனைக் கௌதமனார் பாடிய பாடலென வொன்று காணப்படுகின்றது. அண்மைய நிகழ்ச்சிகளை நேரிற் கண்டதுபோல் பாடுதலும் மரபேயாகும்.

அன்றிப் பாரத காலத்துப் பாடல்களாகவும் இவை யிருக்கக் கூடும். கி.மு. 1200 அளவினது பாரத நிகழ்ச்சியென வரலாற்றினர் கூறுவர். அவ்வாருயின் முதற் சங்கத்திற்கு 500-600 ஆண்டுகட்கு முற்பட்டதாகும். தலைச் சங்க இலக்கணங்கட்குரிய இலக்கியங்கள் 500-600 ஆண்டுகட்கு முன்பும் இயன்றிருக்கலாம். எனவே இவற்றைப் பாரதகாலத்துப் பாடல்களாகவும் கொள்ளலாம். நிலைமையை எடுத்துரைத்தத் தருமனை அறமும் இன்பமும் உடையவனாக இருக்குமாறு வற்புறுத்துவதிச் செய்யுள். தருமபுத்திரன் போன்ற மிகப் பெருஞ் சான்றோர்க்கே அறமுரைத்தாக அமைந்தது இத் தமிழ்க் கவி கௌதமனார் பாடல். பாடல் வரிகள் பல காணுமற் போயிருத்தல் ஒரு பழமையைக் குறிக்கலாம். அற வோன் மகனே எனத் தருமனை விளிக்கிறார். பாடல் வரி ஒவ்வொன்றும் உயர்தனிச் செம்மையுடையது. 'ஞாயிற் றெல்லை ஆள்வினைக்குதவி இரவினெல்லை வருவது நாடி' என்ற வரிகள் பொருளேற்றமுடையன.

வான்மீகியார் பாடல் (புறம்-358) தவத்தின் மேன்மையைக் குறிப்பது. வையத்தையும் தவத்தையும் எடை போட்டுப் பார்த்தால் தவமே சிறந்து நிற்கும். வையத்தைத் துறந்து தவத்தைத் துறவாதோரைத் திருமகளும் துறவாள். ஒரு நாளைக்குலகை ஏழரசர் மாறி மாறி ஆட்சி செய்தற்குரிய நிலையாமையை யுணர்த்தி, வாழ்வில் கோடியுமல்ல பல கருது தலைப்பற்றி எச்சறிக்கை செய்வது பாடல். வடமொழி இராமாயண ஆசிரியர் வால்மீகியின் காலமாகவும் இவ்வான் மீகியார் காலமாகலாம். வான்மீகி காலம் கி. மு. 7-8-ஆம் நூற்றுண்டென்பர்.

மார்க்கண்டேயனார் பாடல் (புறம். 362) காஞ்சியாகிய நிலையாமையைக் கற்பனை செய்வது. மார்க்கண்டேயனார் காஞ்சியென்றோர் நூலை யாப்பருங்கல விருத்தியுள் குறிக்கக் காண்கிறோம். அவ்வாசிரியர்க்கும் இவர்க்கும் தொடர் பறியோம்.

கடலிலும் கலம் செலுத்தி வலிமையூன்றி யாண்டார் தமிழரசர். அவர்களிடத்தே தற்போது பலவரசர் ஆள்கிறு

ரென நிலமகள் அவலமுறுவதாகக் காட்டுவது பாடல். அவலச்சுவை நிறைந்தது பாடல். நாட்டுணர்ச்சி நிமிர்ந்து நிற்கிறது புலவரிடம். தலைச்சங்கப் பாடல் இதுவாயின் எகிப்து சுமேரியா முதலிய நாடுகளுடன் தமிழரசர் கடல் கடந்தும் தொடர்புற்றிருந்தமையை இது புலப்படுத்தலாம், பல வேற்று நாட்டரசரும் இந்தியாவிற் பரவியிருந்ததோர் தலைச்சங்க காலத்தை இது குறிக்கலாம். புத்தர்க்கும் மகா வீரர்க்கும் முற்பட்ட இந்திய வரலாற்றுக் காலமாகலாமிது.

இப்பாடல்களில் பிற்காலக்குறிப்புக்களே தும் இல்லாமை யாலும் பழமைக்குரிய குறிப்புக்கள் பலவிருத்தலானும் இவற்றைத் தலைச் சங்கப் பாடல்களாகக் கொள்ளுதலில் தவறிருப்பதாகத் தோன்றவில்லை.



## இடைச் சங்கம்

இடைச்சங்கம் கி. மு. 306 முதல் கி. பி. 64 வரை 370 ஆண்டுகள் நிலவியதாகக் கூறப்பட்டது. வெண்டேர்ச் செழியன் முதல் முடத்திருமாறன் ஈருன பாண்டியர் இக்காலத் தாண்டனர். முதற் சங்கக் கடைசியிலும் இடைச் சங்கத் தொடக்கத்திலும் தொல்காப்பியர் இருந்து நூல் செய்திருக்கிறார். அவர் காலத்துப் பாண்டியன் நிலந்தருதிருவிற் பாண்டியனென்னும் மாகீர்த்தியாவான். பனம்பாரர்தம் தொல்காப்பியப் பாயிரத்தும் புறநானூற்றிலும் இவன் குறிக்கப் பெறுகிறன். தொல்காப்பியம் இவன் அவையில் அரங்கேறியுள்ளது. இவன் கவியரங்கேறியவன். சங்கப் பாடல்களில் இவன் பலபடப் பாராட்டப்படுவது கொண்டு இவன் சங்க காலத்துக்' குலோத்துங்கன்; அசோகன்' எனப்படலாம். பஃறுளியாற்றை உண்டாக்கியவனுகிய இவன் நிலந்தரு திருவிற் பாண்டியனுகக் கூறப்படுகிறன். தமிழ் மண்ணை வளப்படுத்தி யுழவுக்குரியதாக்கியமையையும் நாட்டெல்லையை வரையறுத்தமையையும் நாட்டுடன் பிற நாட்டுப் பகுதிகளையும் வென்றிணைத்தமையையும் இத்தொடர் குறிக்கலாம். பிற நாடுகளை இவன் வென்றமையைச் சிலப்பதிகார உரை உறுதிப்படுத்துகின்றது. செந்நீர்ப் பசும்பொன்

வயிரியர்க் கீத்தவன் முந்நீர்க்கண் வடிம்பலம்ப நின்றவன் எனவெல்லாம் இவன் நூலாசிரியராலும் உரையாசிரிய ராலும் பாராட்டப்பெறுகிருன். இதற்கு ஜாவா முதலிய கீழைக்கடல் நாடுகளுடன் இவன் தொடர்புகொண்டிருந்த தாகக் கூறுவர். அதனைவிடச் செங்கடல் (செந்நீர்) அருகாய சுமேரியா முதலிய நாடுகளுடன் இவன் தொடர்புகொண் டிருந்திருக்கலாம் எனப் புலனுகின்றது.

இக்காலப் பாண்டியர் தலைநகராகிய கபாடபுரம் வால்மீகி இராமாயணத்தும் கௌடில்யத்தும் குறிக்கப்பெறு கின்றது. பாண்டிய நாட்டிற்கும் தமிழகத்திற்கும் வாயிலாக இருந்துள்ளது கபாடபுரம். இடைச் சங்கம் கிறித்து ஆண் டின் தொடக்கம்வரைத் திகழ்ந்துள்ளது. இந்திய வரலாற் றின் பொற்காலம் என்னலாம். மௌரிய சந்திரகுப்தன் அசோகன் ஆகியோர் காலம் இடைச்சங்கத்திற் குரியதாகும். வடக்கே, அர்த்த சாத்திரம், தர்ம சாத்திரம், காம சூத்திரம், இராமாயண பாரதங்கள், புராணங்கள் ஆகியவற்றின் விளக்கமுடைய காலமும் இதுவாகும்.

இவற்றுடனெல்லாம் தமிழகத்தின் வளார்ச்சியையும் இடைச் சங்கத் தமிழ் நூல்களின் பொருள்களையும் ஒப்பிட் டுப் பார்க்க வேண்டும்.

தலைச் சங்கத்தே சிவனுக்குத் தலைமையுற்றமைபோல இடைச்சங்க காலத்தே துவரைக்கோமானுகிய கண்ணனுக்கு ஏற்றமியன்றுள்ளது. பரிபாடல் முதற் சங்கத்தே விரிவடைந் திருந்ததாயின் கலிப்பாடல் இடைச் சங்கத்தே விரிவடைந் துள்ளது. இரண்டும் தொல்காப்பியரால் இன்பியலுக்குரிய பாடல் வகைகளாகப் பகரப்பட்டுள்ளன. அப்பரிபாடல்களும் கலிப்பாடல்களும் இப்போது கிடைத்திருப்பின் எவ்வளவோ பயனுடையவாக விருக்கும்.

தொல்காப்பியமும் மாபுராணமும் பூத புராணமும் இக்காலத்திலக்கண நூல்களாகும். காப்பியமும் புராணமும் வாழ்க்கைக் கிலக்கணமுரைக்கும் இலக்கிய நூல்களாகும். எழுத்து சொல் ஆகியவைபற்றி மட்டுமன்றிப் பொருளதிகார மாகிய வாழ்க்கை இலக்கணமும் கூறுதலாற்ருன் சங்ககால

இலக்கணங்களெல்லாம் காப்பியமெனவும் புராணமெனவும் கருதப்பெற்றுள்ளன. மாபுராணத்தையும் பூதபுராணத்தையும் பேராசிரியர் முதலோர் குறிப்பதுடன் எடுத்தும் காட்டுகின்றனர். 'மா' என்ற அடையினுல் இரண்டனுள் மாபுராணம் சிறந்ததாகலாம். மதிநலங்கவின்ற மாபுராணம், புதுநலங்கனிந்த பூத புராணம் என இவை பாராட்டப்பெறுகின்றன. இவ்விரண்டையும் தொகுத்தது தொல்காப்பியம் எனக் கூறப்பெறுதலால் இவை பரப்புடைய நூல்களெனப் போதரும். மாபுராணம் வெண்பாவும் சூத்திர யாப்பும் உடையது. 14 செய்யுட்கள் மாபுராணத்திருந்து உரையாசிரியர்களால் எடுத்துக்காட்டப்பெறுகின்றன. இவற்றுள் பெரும்பாலன யாப்பருங்கல விருத்தியுட் காணப்பெறுகின்றன. பூத புராணச் செய்யுட்கள் கிடைக்கப்பெறவில்லை.

இசை நுணுக்கமென்பது இடைச் சங்கத்துச் சிகண்டி என்பவரால் அநாகுலனென்னும் பாண்டியற்கும் திலோத்தமைக்கும் பிறந்த சாரகுமாரன் என்ற இளவரசற்கு இசை கற்பிப்பதற்காக இயற்றப்பெற்றதென்பர். சிகண்டி அகத்தியர் மாணவர் பன்னிருவருள் ஒருவர் என்பர். இசைப்பாவகை முதலியவற்றைப் பற்றிய மூன்று பாடல்களை இசை நுணுக்கத்தினின்றும் அடியார்க்கு நல்லார் எடுத்துக் காட்டுகிறுர். இசையோடு கூடிய சாம வேதப் பாடல்களெல்லாம் மலிந்திருந்த காலம் அது. அகத்தியரின் இசை யிலக்கண நூல்களும் இசை நுணுக்கம் போன்றனவும் தமிழில் இசைப் பாடல்களை மிகுதியாகத் தோற்றுவித்திருக்க வேண்டும். அவற்றின் இலக்கணங்களை அவை அளவையிட்டிருக்க வேண்டும். குருகு என்ற இசை இலக்கணமும் இக்காலத்துப் பேசப்படும். முதற் சங்கத்து முதுகுருகு போன்ற நூல்களே இக்காலத்திலும் வழங்கிய வென்பதனை இது குறிக்கும். அகத்தியர் முத்தமிழ்க்கும் இலக்கணம் செய்தாரென்பர். களரியாவிரை நாடகத் தமிழாகலாமென முன்பும் மொழியப்பெற்றது. நாட்டியம் தென்னகத்திற்கு மிகவும் பழமையானது. சிந்துவெளி நாகரிகத்தில் காணும் நாட்டியவுருவம் எதுவாயினும் அது ஆரியர்க்கு முந்தையோரின் நாட்டியக் கலையுயர்ச்சியைக் குறிக்கலாம். இச் சங்கத்து வெண்டாளி

யும் வியாழ மாலையும் கிடைக்கவில்லை. (வெண்டேர்ச் செழியற்கும் வெண்டாளிக்கும் தொடர்புண்டா? வியாழ பகவானுகிய பிரகஸ்பதி சூத்திரம் போன்றதோ வியாழ மாலை! ஒன்றும் புலனாக வில்லை). பதஞ்சலி மாபாடியத்துள் இந்திரன் பிரகஸ்பதியிடம் வடமொழி கேட்டதாகக் கூறப் பெறுகின்றது.

அகத்தியர் மாணவர் பன்னிருவர் இருந்தனரெனவும் அவர்கள் பாடியதே பன்னிரு படலம் எனவும் கூறுவர். தொல்காப்பியர்; பனம்பாரர்; அதங்கோட்டாசான்; அவிநயன்; நத்தத்தனுர்; காக்கைபாடினி; வாய்ப்பியன்; வாமனன்; செம்பூட்சேய்; வையாபிகன்; துராலிங்கன்; கழாரம்பன் ஆகியோராக அவர் அழைக்கப்பெறுவர். தொல்காப்பியத்திற்கும் பன்னிரு படலத்துள் தொல்காப்பியர் செய்ததாகக் கருதப்பெறும் வெட்சிப் படலத்துக்கும் வேற்றுமை யிருப்பதால் பன்னிரு படலத்தில் தொல்காப்பியர் பாடியிருக்க வியலாதென உரையாசிரியர்களே கருதுவதாகக் கூறுவர். எனவே பன்னிரு படலம் பிற்காலத்ததென்பர். இப்பன்னிருவருள் பலருடைய நூல்கள் இருந்தனவாகத் தெரிதலால் பன்னிரு படலம்பற்றிய செய்திகளும் உண்மையாகலாம். ஒரே ஆசிரியர் தம் நூல்கள் இரண்டனுள் ஒன்றற்கொன்று வேறுபாடாக எழுதக்கூடும். ஒருவர் வாழ்க்கையில் காலப்போக்கில் கருத்து வளர்ச்சியை அது குறிக்கலாம்.

பனம்பாரரது பனம்பாரம்; வாய்ப்பியர் செய்த வாய்ப்பியம்; (இசை) அவிநயரது அவிநயம்; காக்கைபாடினியம்; நத்தத்தம் முதலிய நூல்களிலிருந்து சில பல சூத்திரங்கள் உரையாசிரியர்களால் காட்டப்பெறுகின்றன. இதனுல் இந்நூல்கள் இருந்தமை புலனுகும். இசை நுணுக்கம் செய்த சிகண்டியார் இப்பன்னிருவருள் யாரோ ஒருவர் என அறிஞர் கருதுகின்றனர். செம்பூட்சேய் என்பது ஒரு பாண்டியன் பெயரெனத் தெரிகின்றது. அவன் செய்தது கூற்றியல் (கூத்தியல்-?) என்பதாம். பிற்காலத்துக் (சிறு) காக்கை பாடினியாரின் வேருகக் காக்கைப் பாடினியார் ஒருவர் முற்காலத்

திருந்ததாக அறிஞர் ஒப்புக்கொள்கின்றனர். அவிநயச் சூத்திரங்கள் இருப்பவற்றுள் மிகவாகக் கிடைத்துள்ளன. தொல்காப்பியர் கூறுதவற்றை விரித்துரைத்தார் இவரென்பர். இராசபவித்திரப் பல்லவதரையர் என்பார் இதற்குரை வகுத்துள்ளார். நத்தத்தம் அடிநூல் எனவும் வழங்கியதெனத் தெரிகின்றது. காக்கை பாடினியச் சூத்திரங்களும் பலவாகக் கிடைக்கின்றன. தொல்காப்பியர் கூறியவற்றைத் தொகுத்துரைத்தார் பாடினியர் என்பர்.

இவற்றையன்றிப் பனம்பாரனர் செய்த பாடலொன்று குறுந்தொகையிற் (52) காணப்பெறுகின்றது. ஐந்தடிகளையுடைய அழகிய குறிஞ்சிப் பாடல் அது. கபிலரது குறிஞ்சிப் பாடலைப்போன்று இதுவும் தோழி அறத்தொடு நின்றதாகவே அமைந்தது. இடைச்சங்கத்துக் கடைசிப் பாண்டியன் முடத்திருமாறன் பாடியனவாக நற்றிணையில் இரண்டு செய்யுட்கள் (105, 228) உள்ளன. அவற்றுள் ஒன்று குறிஞ்சியையும் மற்றது பாலையையும் பற்றியது. பாலைப் பாடலுள் குடவரைக் குட்டுவனைக் குறிக்கிறன் பாண்டியன். இடைச் சுரத்துத் தலைவன் கூற்றுகவும் சிறைப்புறத்துத் தோழி கூற்றுகவும் இவை அமைந்தன.

மேலும் வேங்கடத் தலைவன் வள்ளல் ஆதனுங்கனைக் கள்ளில் ஆத்திரையனர் பாடிய பாடல்கள் புறநானூற்றில் இரண்டு காணப்பெறுகின்றன. அவரது பாடல் குறுந்தொகையிலும் ஒன்றுள்ளது. மோரியரைப் பற்றிய குறிப்புக்கள் இவற்றுள் வருகின்றன. மற்றும் பிற்காலக் குறிப்பேதும் இவற்றுளில்லை. எனவே கள்ளில் ஆத்திரையனின் (மோரியர் குறிப்புடைய) பாடல்களை இடைச் சங்கத்திற்குரியவாகக் கொள்ளலாம். நந்தர் குறிப்பு வரும் பாடல்களையும் இடைச் சங்கப் பாடல்களாகக் கருதுவோர் உளர்.

இவற்றை நோக்கின் சங்கப் பாடல்களில் பல தலைச் சங்கத்திற்கும் இடைச் சங்கத்திற்கும் உரியவாகலாம் எனத் தோன்றுகின்றன, அவற்றை யெல்லாம் ஆராய்ந்தெடுக்க வேண்டும்,

**தொல்காப்பியம்:** ஒல்காப் பெருமைத் தொல்காப்பியமே இக்காலத்தின் ஒளிவிளக்காகும். இளங்கோவடிகள் குறிக்கும் காப்பியத் தொல்குடி இவர் காலத்திருந்து விளங்கியிருக்க லாம். அன்றி இவர்க்கும் பழமையான காப்பியக் குடியில் இவர் தோன்றியிருக்கலாம். இவரும் திருவாங்கூர்ப் பகுதி யினராகக் கருதப்பெறுகிறூர். போந்தை வேம்பேயெனப் போந்தையை முதலிற் கூறுவதால் இது பொருந்தலாம். 'அதங்கோட்டாசாற் கரில்தபத் தெரிந்ததனுலும்' இது பொருந்தலாம். ஜமதக்னியின் மகன் திரணதூமாக்கினி இவர் என நச்சினுர்க்கினியர் கூறுவார். ஆசிரியர் அகத்திய ரையே எதிர்த்த மாணவர் இவரெனத் தெரிகின்றது. அகத் தியத்தினும் தொல்காப்பியம் இன்றுவரை நன்னூல்போல நின்று நிலவுகின்றது. பனம்பாரர் காக்கைபாடினியனை உடன் பயின்றோர் நூல்களை யெல்லாம் கடந்தும் தொல்காப் பியம் நிலைத்தது.

வடமொழியின் பழமை வடிவங்களைத் தன்னகத்தே காத்து வைத்திருப்பதெனவும் மொழி நூலறிவிற்கு மிகவும் உதவுவதெனவும் பாணினீயத்தைப்பற்றி அறிஞர் கூறுவது தமிழில் தொல்காப்பியத்திற்கும் பொருந்தும். இதனை அறிஞர் பலரும் உணர்ந்து கூறியுள்ளனர், தமிழையும் தொல்காப்பியத்தையும் அறியாமையினுல் அவர்கள் அவ் வாறு கூறினர் என்பர். மகரப்போலி, மகரக்குறுக்கம், சந்தி யக்கரம், ஆய்தம், வரிவடிவம், குற்றியலுகரம் போன்ற பகுதிகள் மொழிநூலறிவிற்கு மிகவும் துணையாவனவாம்.

இவரைக் கி. பி. ஐந்தாம் நூற்றூண்டுக்குக் கொண்டு செல்லும் அறிஞரும் ஓரிருவருளர். திருவிளையாடலில் வரும் நக்கீரருக்கு இலக்கணமுபதேசித்த அகத்தியரே கி. பி. 5, 6-ஆம் நூற்றுண்டுக்குரியவர். அவர் மாணவர் தொல்காப்பிய ரானுல் திருவிளையாடல் தொல்காப்பியர் கதையைக் கூறி யிருக்கும். உறுதியாகக் கடைச்சங்கப் பாடல்கள் பல கி. பி. 2-3 நூற்றுண்டுகளில் தோன்றின. அவற்றைக் கண்டும் கொண்டும் தொல்காப்பியம் இயற்றப் பெற்றதென்ருகும். ஐந்திரத்தின் வழியாகத் தொல்காப்பியர் நூலியற்றினுர்

எனப் பனம்பாரர் கூறுகிருர். பாணினிக்கு முற்பட்டது ஐந்திரம் என்பதனை வரலாற்ருளர் பலரும் ஒப்புகின்றனர். அது ஜைனருக்கெதிரானதென்பது சிலப்பதிகாரத்துக் கவுந்தியடிகள் அதனை விரும்பாததால் தெரிகின்றது. கடைச் சங்கத்திற்குப் பின்பும் ஐந்திரம் கற்கப்பட்டதென்பதையே சிலப்பதிகாரம் உணர்த்தும். அகத்தியர் சூத்திரமொன்றில் இந்திரன் எட்டாம் வேற்றுமை என்றனன் என்றுள்ளது. செயதேவரது கதா சரித்சாகரத்தில் தென்னிந்தியரான காத்தியாயனர் ஐந்திரமறிந்திருந்தாரெனவும் அந்நூலைப் பாணினி அழித்தார் எனவும் ஒரு கதையுள்ளது. இவற்ருல் வடநாட்டவர்க்கெதிரானது ஐந்திரம் என அறியலாம் தாரநாதர் என்ற திபேத்தியர் முருகனருளால் ஐந்திரம் பலர்க்கும் அறியலாயிற்றென ஒரு மரபு கூறுகிருர். புண்ணிய சரவணம் பொருந்திஞல் ஐந்திரம் எய்துவிர் என்பதில் சரவணம் முருகனுக்குரியதெனப் போதரும். எனவே தமிழ்க்கடவுளாகிய முருகன் முதற்சங்கத்தில் ஐந்திர அறிவிற்குரிய தலைமை பெற்றிருக்கிருன்.

எழுத்து, சொல், பொருள் ஆகிய மூவிலக்கணங்களையும் சொல்லியிருப்ப, மயங்காமரபின் எழுத்து முறை காட்டியென எழுத்தினை எடுத்துச்சொல்லியது ஒரு காரணத்தையொட்டியிருக்கலாம். ஆசிரியர்கள் எழுதுவதற்குக்கையாண்ட லிபிகள் இரண்டு: கரோஷ்தி, பிராமி என்பன. அசோகன் கல்வெட்டுகள் பிராமியிலிருந்தே வந்தன என்பர். தமிழும், பிராமியிலிருந்தே எழுத்து முறையைக் கொண்டதென்பர். இந்தியாவில் எழுத்துமுறை கி. மு. எட்டாம் நூற்ருண்டிலோ ஐந்தாம் நூற்ருண்டிலோ வழக்கில் வந்ததென வரலாற்றினர் கூறுவர். அதற்கு முன்னிருந்த சுமேரியர் எழுத்திலிருந்தே பிராமி வளர்ந்ததெனவும் ஒப்புவர். எனவே வடமொழியின் எழுத்து லிபி அதற்குச் சொந்தமன்று. சுமேரியரும் தென்னவரும் நெடுங்காலமாகவே ஒன்ருகவோ நெருங்கியவராகவோ இருந்துள்ளனர். எனவே சுமேரியர் லிபியைத் தமிழர் எடுத்துக்கொண்டிருக்கலாம். அன்றி சுமேரியர்க்கும் தமிழர்க்கும் பொதுவான வட்டெழுத்து அல்லது கண்ணெழுத்து முறையினைக் கையாண்டு கொண்டிருக்கலாம்.

இங்ஙனம் எழுத்து லிபியிலும் எழுத்தொலி முறையிலும் வட மொழினும் தனித்தன்மையுடையது தமிழ் எனக்குறிக்கவே 'மயங்கா மரபின் எழுத்து முறை காட்டி' எனப்பட்டிருக்க லாம். ஒலியதிகாரமென்னது எழுத்ததிகாரமென்றலிதற் கேயாம். வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ எழுத்தொடு புணர்ந்த' என்றவிடத்தில் தனிவரிவடிவைக் குறிக்குமோ அறியவேண்டும். வடவெழுத்தினை (வரி வடிவை) விட்டுத் தமிழுக்கேயுரிய லிபியுடன் புணர்ந்த என்ற கருத்தும் அங் கிருக்கக்கூடும்.

தொல்காப்பியத்தில் சொல்லதிகாரம் உரியியல் தமிழுக் குரியதொரு தனியியல் பிணையுணர்த்துவது. சொற்களுக்குரிய மூலங்களையும் பொருள்களையும் உணர்த்துவது உரியியல், வட மொழியினும் வேறுபாடுடைய சொல் அடிப்படைகளையும் வேர்களையுமுடையது தமிழ் என்பதையறிவிப்பதே உரியிய லின் சிறப்பாகும். நால்வகைச்சொற்களிலும் திரிசொல்லை யும் திசைச்சொல்லையும் இன்னும் விரிந்த வகையில் பொருள் செய்ய வேண்டும். திரிசொற்களைத் தமிழ்நாட்டிற்குட்பட்ட குடம், குட்டநாட்டு வட்டமொழிகளாகவும் (Dialects) திசைச் சொற்களை வடமொழி தவிர்த்த மற்ற இந்திய மொழிகள் சுமேரிய எகிப்தியமொழிகள் ஆகியவையாகவும் கொள்ள வேண்டும். அகத்தியச் சூத்திரமொன்றில் ஈழம் சிங்களம் ஆகியவற்றையும் திசைமொழிப் பன்னிரு நிலங்க ளாகக்கொண்டுள்ளனர்.

பொருளதிகாரம் தமிழுக்கே சிறந்ததென உலகமறியும். பொருளதிகாரத்தை மீட்டுத்தரவே இறைவனே இடையிற் ருேன்றி வந்திருக்கிருன் தமிழில். பௌத்தமும் சமணமும் பரவி வந்த காலமது. இவ்வுலகியலை மறவாதது தமிழகம். அறம் அறமெனப் பொருளையும் இன்பத்தையும் அது புறக்கணிக்கவில்லை எனக் காட்டுவதே பொருளதிகாரம். முத்தமிழ் நாடு முத்தமிழ் மொழிபோன்று அறம் பொருள் இன்பமும் என்றும் இணைபிரியாதன என்பதே தமிழ் இடத் திற்கேற்ப இன்பமும் பொருளும் அறத்தின் வழிப்படுவும். 'நடுவணதெய்த' என ஒவ்வொன்றிற்குத தலைமை கூறப்படும்.

பொருளில்லார்க் கிவ்வுலகமில்லை எனவுணர்ந்தனர் தமிழர். பொருளியலில் பாலைப்பிரிவு இதனை வற்புறுத்துவதேயாகும். காணும் இவ்வுலகின்பினை மறவாததுதான் இன்பியல் (அகவியல்) காணாத உலகினை ('வீட்டுலகினை,) அவர்கள் மறந்து விடவில்லை எனவே வாகைத்திணை வற்புறுத்தும். அறத்திற்காகவும் சமயத்திற்காகவும் தலைவன் பிரிவு மேற் கொள்ளுகிறான். எனவே வாழ்க்கை (மனிதச்செயல்) முழு வதையும் உட்கொண்டது பொருளதிகாரம். முதற் பொருளில் ஐவகை நிலங்களை மட்டுமன்றி ஐம்பூதமாகிய உலக முழுவதையுமே உட்படுத்துகின்றனர் உரையாசிரியர் கள். எனவே உலக வாழ்க்கை முழுவதற்க்கும் உரிய பயனுடைய இலக்கணங்களையே தந்தது தொல்காப்பியம் என்பது உரை யாசியர்கள் முடிபு.

தொல்காப்பியத்தின் பழைய சொல்லமைப்புகள் அது கிறித்துற்குப் பிற்பட்டதென்பார் கருத்தினை மாற்ற வல்ல வாம்.

1. சகரக்கிளவி அ-ஐ-ஔவுடன் மொழி முதலில் வருத லில்லை. கடைச்சங்க நூல்களில் சமம், சந்து சவட்டி போன் றன வந்துள்ளன.

2. ஞகரம் ஆ, எ, ஒ மூன்றோடு மட்டுமே முதலில் வரும்.

3. யகரம் ஆவோடல்லது முதலாகாதென்பதற்கு மாறாகப் பிற்காலத்தில் 'யவனர்' வழங்கியுள்ளது.

4. பிற்காலத்திய 'கோடி'யெனும் வழக்கு தொல்காப்பி யத்தில் இல்லை.

5. கள்; அன்; மார்; மோ முதலிய விகுதிகள் பிற்காலத் தில் தொல்காப்பிய விதிக்கு மாறுபட்டுள்ளன.

6. அதோளி இதோளி முதலிய வழக்குகள் பிற்காலத்தே வீழ்ந்துவிட்டன. 7. ஆம் என்பதற்கு 'ஔ' என்னும் வழக் கும் வீழ்ந்தது. 'ஔவு' என்பது தெலுங்கு மரபு. எனவே தொல்காப்பியக்காலத்தே இது திராவிடப் பொதுச்சொல் லாக வழங்கியுள்ளது.

8. அகப்பாடல்களில் வருணன், இந்திரன், ஆகியோர் கடைச்சங்க காலத்தில் காணப்பெறவில்லை. தொல்காப்பியத்து அவை திணைமுதன்மை பெற்றுள்ளன.

9. மகரப்போலி (மகரம் னகரமாதல்) ஒன்பதுஎனவரையறுத்துஓர் எண்ணிக்கையைக் கொடுக்கிறார்.

இவ்வாறு பலவகைப்பட்ட மரபுகளில் தொல்காப்பியம் கடைச்சங்க காலம் அதனினும் பிற்பட்ட காலம் ஆகியவற்றிற்குத்தெளிவாக வேறுபட்ட(முற்பட்ட) காலத்தது என்பது உணரப்படும். இடைச்சங்க காலம் முன்பு குறிப்பிடப்பெற்றது. அக்காலத்தே வடமொழியில் தோன்றிய இலக்கண, பொருளியல் அறிவியல் களவியல் நூல்களுடன் தொல்காப்பியத்தை ஒப்பிட்டு அவற்றுடன் ஒப்புமைப்பகுதிகள் பலவாகவிருப்பது கொண்டு அதனால் அவற்றைக்கொணடு தொல்காப்பியம் இயன்றதென்பர் அறிஞர் பலர். ஒரே சமூக அமைப்புடைய அறிஞர் ஒரே மாதிரி நினைப்பதுண்டு. யார் யாரிடமிருந்து பெற்றனர் என்பதனை வேறு வரலாற்றுதாரகங்களைக் கொண்டு தான் நிறுவ இயலும்.

தொல்காப்பியம் ஒன்பது விதம் இயல்பிகளையுடைய மூன்று அதிகாரங்களையும் (483—463—656) 1602 நூற்பாக்களையுமுடையதாகும். எழுத்ததிகாரத்தில் எழுத்தொலிகள், சொல்லொலிகள், எழுத்துப்பிறப்பு, எழுத்துச்சேர்க்கை ஆகியவற்றைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. தொல்காப்பியர் தம் திறமையும், பழமையும் இவ்வதிகாரத்தில் தோன்றி நிற்கின்றது. எழுத்துப்புள்ளிகள், போலியெழுத்துக்கள் ஆகியவற்றைக்கூறுகையில் தொல்காப்பியர் மிகவும் நுட்பமுடையவராகக்காண்கிறார். 'இசையொடு சிவணிய நரம்பின் மறைய' என வடமொழியறிவை யுணர்ந்து இலக்கணங் கூறுகிறார். அந்தணர் மறைத்தே அஃதிவண் நுவலாது எழுந்து புறத்திசைக்கும் அளவு நுவன்றிசின், எனத்தமிழர் தனித்தன்மையைத் தரம் எடுத்துப் பேசுவதனைக்குறிப்பிடுகிறார். அணுத்திரளொலி என அணுவைக் காரணமாக்கியதால் இவர் ஜைனர் எனச் சமயம் காண்பர் சிலர். அணுவைஉலகக்காரணமாகக்கருதும் பண்டைய சமயத்தோர் பலர், ஆகலின் அது

கொண்டு தொல்காப்பியர் சமயத்தைக் கணிக்கவியலாது. ஓரெழுத்தொரு மொழி, ஈரெழுத்தொரு மொழி இரண்டி றந்திசைக்கும் தொடர் மொழி யென்பது தமிழ் வழக்கே யென உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர். பொன் நாள், திங்கள், பருவம், நட்சத்திரங்கள் ஆகியவற்றைக் குறிக்கிறார். பருவங்கள், நட்சத்திரங்கள் ஆகியவற்றின் எண் ணிக்கைகள் குறிப்பிட்ட காலங்களில் அளவு பெற்றுள்ளன. தமிழ் என்ற சொல்லையே தொல்காப்பியர் குறிக்கின்றார். திராவிடம் என்பதிலிருந்தே பிறந்ததாகவெல்லாம் விந்தை ஆராச்சிகள் செய்வோர் பலர். புத்தர் காலத்தையடுத்த பாலிமொழி வழக்கிலேயே தமிழ் (ழகரவொலியில் சிறு மாறு தலுடன்) என்பது இருந்துள்ளது, தாமரை, ஆம்பல், பது மம் முதலிய எண்ணிக்கைகள் வழங்கியுள்ளன. தொழிற் பெயர் முதலிய சொற்களின் கடைசியில் தோன்றும் உகரம் மொழியியல் கூறு சிறந்ததென மேனாட்டறிஞர் பலரும் பாராட்டுவர்.

சொல்லதிகாரத்தில் கிளவியாக்கம், வேற்றுமைகள், நால்வகைச் சொற்கள் ஆகியவை பேசப்படுகின்றன. சொற் கள் தனித்தனியாக நினைக்கப்படுவதில்லை. தொடர்களா கவே நினைக்கப்படுகின்றன. எனவே தான் சொல்லாக்கம் என்பது கிளவியாக்கம் எனப் பெயர் வந்ததென்பர் அறிஞர் பலர். வேற்றுமைகள் பேசப்பட்டிருப்பதனை பாராட்டு வோர் பலர்.பெயர் வினை என்ற இருவகைச் சொற்களையே தொல்காப்பியர் கொள்கிறார் எனலாம். இவற்றிலிருந்து தோன்றுவன இடைச்சொற்கள். மொழிக்கும் செய்யுட்கும் உரியவே உரிச்சொற்கள். உரியியலே பிற்காலத்தே நிகண்டு களாகவும் அகராதிகளாகவும் பிரிந்தும் விரிந்தும் வளர்ந்தது. மொழி வளர்ச்சிக்கு முதன்மையும் இன்றியமையாமையு முடைய சொல் எதுவாயினும் அதை ஏற்றுக் கொள்வதற்கு இடம் வைத்தே தொல்காப்பியர் இலக்கணம் செய்திருக் கிறார். மொழி வெறி என்பது அவரிடம் காணப்படவில்லை.

பொருளதிகாரத்தில் அகத்திணை, புறத்திணை, செய்யுள் இயல், மெய்ப்பாட்டியல் ஆகியவை அடங்கியுள்ளன. தமிழர்

தம் மனித அன்பினையும் மணமுறையையும் கூறுவது அக வியற் பகுதிகள். உலகம் ஆண் பெண்களாலாகியது. அவர் தம் பிணைப்பைப் பற்றிக் கூறுவது அகவியற் பகுதிகள், மணக்குமுன் ஒருவரையொருவர் பிறரது உடல் நலத்தையும் மன வளத்தையும் அறிந்திருக்க வேண்டுமென்பதே அகவிய லின் நோக்கம். யாழோர் கூட்டமெனத் தொல்காப்பியரும் கூறுகிறார். கந்தர்வ மணம் போன்றது களவியலென இறைய னார் அகப்பொருள் கூறும். களவியலே தமிழ் (ஒழுக்கம்) எனக் குறிஞ்சிப்பாட்டு கூறும். கந்தர்வத்தில் காதலித்தவரை யே மணக்க வேண்டுமென்பதில்லை. ஆனால் தமிழ்க்களவில் காதலித்தவர் மணத்திற்குரியவராக இருக்க வேண்டும். கள வியலும் கற்பியலும் தமிழில் பிரிக்க முடியாதன, தமிழ் மகன் தன் மணத்திற்காகும் பொருளைத் தானே தேடிக் கொள்ளும் திறம் படைத்த பிறகே மணக்கிறான் என்ற பண்பாட்டைக் குறிப்பதே வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரியும் பகுதி. கல்விப் பிரிவிற்குரிய இடங்களை ஆராய்ந்தால் எவ்வளவோ புதிய உண்மைகள் வெளியாகும்.

அரசியலுக்கும் மக்களுக்கும் நெருங்கிய தொடர்பிருக்க வேண்டுமென்பதே புறத்திணையின் நோக்கம், மக்களுக்கு வீரமும், தியாகமும், உழைப்பும் கொடையும் இன்றியமை யாதன வென்பதே புறத்திணை யுணர்த்தும் குறிக்கோள்கள். போரில் மட்டுமின்றி வாழ்க்கையில் வெற்றியடைவதே வாகையென வாகைத்திணை யுணர்த்தும், மனத் தூய்மையும் இல்லறத்தோடு கூடிய துறவுள்ளமும்கூட அகத்திணையுணர்த் தும் உண்மைகள். தமிழர்தம் மணவியல் வளர்ச்சி என்பதை விட மனவியல் வளர்ச்சியே பொருளதிகாரம்.

உவமை, செய்யுள் மரபியல்கள் உயர்ந்த நூல்களையும் பாடல்களையும் ஆக்குமுறைகளைக் கூறுவன. தொல்காப்பிய ரது உவமையியலே இன்றைய அணியிலக்கணங்களாக் விரிவடைந்துள்ளது. அவ்வியலில் தொல்காப்பியர் கூறிய கருத்துக்களே என்றும் நிலைக்கும் எனத் தோன்றுகிறது. ஆயிரமாயிரம் ஆண்டுகள் பாடற்றிறத்தில் உயர்ந்திருந்தாற் றான் செய்யுளியலையும் மரபியலைக் கூறிய நூல் இயல்புகளை யும் கூறவும் அடையவு முடியும். முற்றிய நூலமைப்புக்களை

அங்குக்காண்கிறோம். எல்லா வகைப் பாடல் வகைகளுக்கும் நூல் வகைகளுக்கும் செய்யுளியலில் இடமுள்ளது. இவ்வியலைக் கொண்டு அக்காலத் தமிழ் இலக்கிய வளத்தை அறிந்துகொள்ளலாம். உள்ளுறை இறைச்சிப் பொருள் ஆகியவற்றைத் தமிழர்தம் பாடல்களில் கையாளுந் திறன் வியப்புக்குரியதாகும்.

மெய்ப்பாட்டியலிற் காணும் மெய்ப்பாடுகள் உணர்ச்சிகளும் ரசங்களும் அகத்துறைக் கென்பதைவிட நாட்டியம் நாடகம் கலை ஆகியவற்றிற்கு மிகவும் இன்றியமையாதன என்னலாம். நாட்டியம் நாடகம் காவியம் முதலிய தமிழ்க் கலைகளுக்கு இவ்வியல் மிகவும் துணை செய்திருக்கின்றது நகை, இனபம், வீரம், அவலம் முதலிய உணர்ச்சிகளைத் தூண்டி விவரிக்கும் கற்பனைகளின் மூலம் மனிதவுள்ளத்தைப் பண்படுத்துவதே கலைகளின் செயலாகும். அதற்குரிய நவரசங்களைப்பற்றி விவரிப்பதே மெய்ப்பாட்டியல். தமிழர் கலைகளில் எவ்வளவு சிறந்திருந்தனர் என்பதற்கிவ்வியல் எடுத்துக்காட்டாகும். சங்கப் பாடல்களிலெல்லாம் இவ்வுணர்ச்சிகள் எவ்வளவு ஏற்றமுற்றுள்ளன வென்பதனைக் கற்றோரறிவர்.

## முதற்சங்க காலம் :



### இலக்கிய வரிகள் :

அகத்தியர் :

1. கன்னித் தென்கரைக் கட்பழந்தீவம்
சிங்களம் கொல்லம் கூவிளமென்னும்
எல்லையின் புறத்தவும் ஈழம் பல்லவம்
உடனுறைபு பழகுந் தமிழ்திரி நிலங்களும்
முடியுடை மூவரும் இருநிலவாட்சி

அரசுமேம்பட்ட குறுநிலக் குடிகள்
பதின் மரும் உடனிருப் பிருவரும் படைத்த
பன்னிரு திசையிற் சொன்னய முடையவும்.

(மயிலைநாதர்)

2. தாங்கா நல்லிசைத் தமிழ்க்கு விளக்காகென
வானோரேத்தும் வாய்மொழிப் பல்புகழ்
ஆனாப் பெருமை அகத்தியன் ... (பன்னிரு படலம்)

3. பெயரினும் வினையினும் மொழிமுதலடங்கும்.

4. இந்திரன் எட்டாம் வேற்றுமை யென்றனன்.

5. பாடப்படுவோன் பதியொடு நாட்டொடும்
உள்ளுறுத் திறினே உயர்கழி யானந்தப்
பையுளென்று பழித்தனர் புலவர். (யாப். விருத்தி)

## முரஞ்சியூர் முடிநாகராயர் :

ஐம்பெரும்பூதத் தியற்கைபோலப்
போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியதகலமும்
வலியும் தெறலும் அளியுமுடையோய்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி நிலீஇயரோ வத்தை
பொற்கோட் டிமையமும் பொதியமும் போன்றே (புறம். 1)

## கௌதமனார் :

ஒரு தாமாகிய பெருமையோரும்
தம்புகழ் நிறீஇச் சென்று மாய்ந்தனரே
...அறவோன் மகனே மறவோர் செம்மால்
நின்னூற்றம் பிறரறியாது
பிறர்கூறிய மொழி தெரியா
ஞாயிற்றெல்லை ஆள்வினைக்குதவி
இரவினெல்லை வருவது நாடி. (புறம். 366)

### வான்மீகியார் :

வையமுந் தவமுந் தூக்கில் தவத்துக்
கையவி யனைத்துமாற்று தாகலின்
விட்டோரை விடாஅடிருவே (புறம். 358)

### மார்க்கண்டேயனார் :

மயங்கிருங் கருவிய விசும்பு முகனாக
இயங்கிய இருசுடர் கண்ணெனப் பெயரிய
வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம்
பொன்னந் திகிரி முன்சமத் துருட்டி (புறம். 362)

## இடைச் சங்கம் :

### இலக்கிய வரிகள் :

### தொல்காப்பியர் :

1. வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ்கூறும் நல் உலகத்து
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்து நூல் கண்டு முறைப்பட எண்ணி
நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
...... ஐந்திரம் நிறைந்த
தொல்காப்பியன் எனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே. (பனம்பாரர்—பாயிரம்)

2. உட்பெறுபுள்ளி உருவாகும்மே. (14)
எகர ஒகரத் தியற்கையு மற்றே. (16)
அகர இகரம் ஐகாரமாகும் (21)
அகரத்திம்பர் யகரப் புள்ளியும்
'ஐ' என் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும் (23)
இகர யகரம் இறுதி விரவும் (25)

மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த
னகரத் தொடர்மொழி ஒன்பஃதென்ப (49)
......இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர். (நூ ம. 33)

3. அகத்தெழு வளியிசை அரில்தப நாடி
அளவிற் கோடல் அந்தணர் மறைத்தே (20)

4. தமிழ் என் கிளவியும் அதனோரற்றே. (90 பு. ம)

5. எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே. (பெ. 1)

6. உரிச்சொல் கிளவி விரிக்கும் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி
பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தி
எச்சொல்லாயினும் பொருள்வேறு கிளத்தல் (1. உரி)
பொருட்குப் பொருள் தெரியின் அதுவரம்பின்றே (93)
பொருட்குத் திரிபில்லை உணர்த்தவல்லின் (94)
மொழிப் பொருட்காரணம் விழிப்பத் தோன்றா (96)
உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே (95)

7. இருபாற்றென்ப திரிசொற் கிளவி (3)
செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தம் குறிப்பினவே திசைச்சொற் கிளவி (3)
சிதைந்தன வரினும் இயைந்தன வரையார் (6)

8. மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனலுலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும் (5–அகத்)
தெய்வம் உணாவே...செய்தியாழின் பகுதியொடு தொகைஇ
......கருவென மொழிப.
உயர்ந்தோர்க்குரிய ஒத்தினான: (33)
காளது சின்மையும் இளமையதருமையும்
தாளாண் பக்கமும் தகுதியமைதியும்

இன்மைய திளிவும் உடைமைய துயர்ச்சியும்
அன்பின தகலமும் அகற்சிய தருமையும் (44)

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம் (3)

தந்துநிறை பாதீடு உண்டாட்டு கொடையென
வந்த ஈரேழ் வகையிற்று ஆகும் (5)

போந்தை, வேம்பே, ஆர்என வரூஉம் (17)

தொல்உயிர் வழங்கிய அவிப்பலியானும் (19)

9. நல்லோள் கணவனொடு நளியழல் புகீஇச்
சொல்லிடையிட்ட பாலை நிலையும் (24)

10. குழவி மருங்கினும் கிழவதாகும் (25)

ஊரொடு தோற்றமும் உரித்தெனமொழிப
கொடிநிலை கந்தழி வள்ளியென்ற—மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே (27)

இன்பமும் பொருளும் அறனுமென்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை (1)

பெருமையும் உரனும் ஆடூஉமேன (7)

உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்பு சிறந்தன்று (23)

......நீகை தொட்டது
வானோ அமிழ்தம் புரையுமால் எமக்கு
மெல்லென் சீறடி புல்லிய இரவினும் (5)

காமம் சான்ற கடைக்கோட்காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே (51)

அறிவும் அருமையும் பெண்பாலான (14)

பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
உருவு நிறுத்த காம வாயில்

நிறையே அருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே (25)
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு (75)
ஆற்றலொடு புணர்ந்த ஆண்பால் (50)
வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல் நூலாகும் (96)
ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
முப்பத் திருவகை உத்தியோடு புணரின்
நூல் என மொழிப (100)

## கடைச் சங்கம்

கடைச் சங்கம் எனப்படும் மூன்றும் சங்கம் 185 ஆண்டுகள் விளங்கியுள்ளது. இக்காலம் கி. பி. 64—249 வரைப்பட்டதாகும், கி. பி. முதல் மூன்று நூற்றுண்டுகளெனவும் கி. பி. 75—225 எனவும் கடைச்சங்க காலத்தினை வரையறுக்கும் வரலாற்றுளருண்டு. முடத்திருமாறன் முதல் உக்கிரப் பெருவழுதி யீருகப் பாண்டியர் இக்காலத் தாண்டுள்ளனர். உக்கிரப் பெருவழுதி புறநானூற்றுப் புலவனுகவே பொலிவுற்றிருக்கிறுன். அவன் காலத்தை கி. பி, இரண்டாம் நூற்றுண்டின் முதல் பகுதியெனத் திரு. கனகசபைப் பிள்ளை வரையறுக்கிறுர். இச்சங்கம் நிலவிய இடம் வட மதுரை எனப்படும் இப்போதுள்ள மதுரை (மாட) யாகும். (நான் மாடக்) கூடலாவதற்கு முற்பட்ட மதுரை யிதுவாகும்.

இக்காலத்தில் தாலமி, பிளினி, பெரிபுளுஸ் முதலியோர் தமிழகத்திற்குவந்து குறிப்புக்களை எழுதிவைத்துச் சென்றுள்ளனர். பருவ காலங்களின் நிலைகளை அறிந்ததும் கி. பி. முதல் நூற்றுண்டிலாகும், 'வளிதொழி லாண்ட உரவோன்' என்பதில் காற்றின் நிலையறிந்து கலஞ்செலுத்திய இக்குறிப்பு காணப்பெறுகின்றது. தாலமி முதலோர் குறிக்கும் தமிழகத்தின் ஊர்ப்பெயர்கள் இலக்கியங்களுள் வரும் பெயர்களுடன் பெரிதும் ஒத்துவருகின்றன. பெரிபுளுஸ் கொற்கையையும் தாலமி மதுரையையும் குறித்துள்ளனர். கடைச்

சங்ககாலம் வடக்கே கனிஷ்கனுடைய யுகமாக இருந்துள்ளது கனிஷ்கனுல் தொடங்கப்பெற்ற தெனப்படும் (Saka era) சகாப்தம் கி. பி. 78 முதல் தொடங்குகின்றது. இதுவும் கடைச் சங்கத் தொடக்கமும் ஒன்ருக விருக்கின்றது.

கடைச் சங்கத் தொடக்கத்தில் ஆண்ட முடத்திருமாறன் குட்டுவன் குடவரைச் சுனேயெனச் சேரனேப் பாராட்டுகிருன். சேரருடன் ஒத்தவனுகவும் நண்பனுகவும் அவன் தமிழகத்தை ஆண்டிருக்கவேண்டும் முடம் பட்டவனுகலின் தன் வீரத்தைக் காட்டித் தன்னேரற்றவனுக விருந்திருக்க வியலாதாகலாம் உக்கிரப் பெருவழுதியாகிய கடைசிப் பாண்டியன் தானே கவியரங்கேறியவனுய் அகநானூற்றிலும் நற்றிணையிலும் இரண்டு பாடல்களேப் பாடியிருக்கிருன். அகநானூற்றுப் பாடல் குழந்தையின்பமும் உருக்கமுமுடையது. கானப்பேர் எயில் கடந்த உக்கிரப் பெருவழுதியே கடைசிப் பாண்டியன் உக்கிரப் பெருவழுதியானுல் அவனேப் பாடிய பாடல்கள் இரண்டுபுறநானூற்றுள் உள்ளன. ஒன்று மூவரும் கூடியிருந்த அரிய அழகிய காட்சியைக் கண்டு ஔவைபாடியது. மற்றது ஐயூர் மூலங்கிழார் பாடியது. பாண்டியன் வீரத்தையும் கொடையையும் பாராட்டியது.

கடைச் சங்க நூல்களில் சிற்றிசை, பேரிசை, கூத்து, வரி என்பன இசை நாடகம் பற்றிய நூல்கள். பேராசிரியர் இளம் பூரணர் முதலோர் சிற்றிசை, பேரிசை, வரி முதலிய இசை யின் பகுதிகளேக் குறிக்கின்றனர் (செய்-153-172) இவற்றி லும் இப்பெயர்களேயுடைய நூல்களே யிருந்தவென அறிஞர் கள் கருதுகின்றனர். கூத்து வரி என்பன நாடகத்தையும் வரிக் கூத்தையும் பற்றியவென்பர். கூத்த நூல் எனவொன்றி லிருந்து அடியார்க்கு நல்லார் மேற்கோள் தருகிருர். அதுவும் மதிவாணன் நாடகத்தமிழ் நூலும் ஒன்றென்பர் பலர். வசைக்கூத்திற் கெதிராகப் புகழ்க் கூத்தினியன்ற மதிவாணன் நாடகத்தமிழ் கடைச் சங்கத்துப் பாண்டியன் மதிவாணனு லியன்ற தென்பர் அடியார்க்கு நல்லார். அரங்கேற்று காதை யிலும் கடலாடு காதையிலும் 30 வரிகளுக்குமேல் இந்நூலி லிருந்து அவரால் எடுத்துக் காட்டப்பெறுகின்றன.

இயற்றமிழில் எட்டுத் தொகை நூல்களே நக்கீரரால் இயம்பப்பெறுகின்றன. தொகையும் பாட்டும் என்ற பெயர்களும் எட்டுத்தொகை பத்துப் பாட்டு என்ற விளக்கங்களும் கி. பி. 12-ஆம் நூற்றாண்டுக்குமேல் உரையாசிரியர்கள் காலத்தேதான் வெளிப்படுகின்றன, பத்துப் பாட்டும் பதினெண் கீழ்க்கணக்கும் கூடக் கடைச் சங்க நூல்களாகவே பலராலும் பாராட்டப்பெறுகின்றன. ஆனால் இவற்றை நக்கீரர் கடைச் சங்க நூல்களுள் கணக்கிடவில்லை. திருக்குறளைக் கூட அவர் குறிக்கவில்லை, எனவே இவை நக்கீரர் காலத்தோ அன்றி அவர் காலத்துக்குப் பின்போ தொடுக்கப்பட்டிருக்கலாம். இந்நக்கீரரது நூலாகவே திருமுருகாற்றுப்படை கருதப்பெறுகின்றது. எனவே பத்துப் பாட்டு கீழ்க்கணக்கு நூல்களையும் மணிமேகலை சிலப்பதிகாரக் காவியங்களையும் திருமந்திரத்தையும் இதற்கடுத்த சங்கச் சார்புக் காலத்தில் (கி. பி. 4-6 நூற்றாண்டுகள்) இணைத்து ஆராயலாம். சங்கச் சார்புக் காலத்தைக் களப்பிரர் காலம் அல்லது நான்காம் சங்க காலம் எனவும் சிலர் குறிப்பர், ஆனால் இறையனார் களவியலைக் கடைச் சங்க நூலாக அவர் குறிப்பதிலிருந்து கி பி. 6-ஆம் நூற்றாண்டு வரைப்பட்ட பல பாடல்களையும் அவர் கடைச் சங்கத்திற்குரியனவாகக் கருதினர் எனத்தெரிகின்றது. நக்கீரர் காலத்துச் சங்கத்திருந்த பெருந்தேவனார் நற்றிணை, குறுந்தொகை' ஐங்குறுநூறு அக நானூறு ஆகியவற்றிற்குக் கடவுள் வாழ்த்துப் பாடியிருக்கிறார். எனவே இவற்றுள் ஐங்குறு நூற்றைத் தவிர்த்த மற்றநான்கும் பெருந்தேவனார் காலத்திலோ அன்றி சங்கச் சார்புக் காலத்திலோ தொகுக்கப் பெற்றிருக்க வேண்டும். அகநானூற்றைத் தொகுத்த உருத்திர சன்மன் பெருந்தேவனார் காலத்தவன். தொகுப்பித்த உக்கிரப் பெருவழுதி திருவள்ளுவமாலையிற் பாடியவன், பதிற்றுப்பத்து பரிபாடல் கலித்தொகை ஆகியவை பெருந்தேவனார் பாடல்களைக் கொள்ளாமையின் சங்கச்சார்புக் காலத்தில் (4-6 ஆம்) நூற்றாண்டுகள்); இடைக் காலத்தில் தொகுக்கப்பெற்றிருக்கலாம்.

## தொகை நூல்கள்

அகத்தைப் பற்றியும் புறத்தைப்பற்றியும் பாடிய பாடல்களாக இந்நூல்களைப் பகுக்கின்றனர், பரிபாடல் கடவுள் பற்றிய பாடல்களாகலாம், பாடல்கள் பெரிதும் தனிப் பாடல்கள்; ஆசிரியப்பாவானியன்றவை. பரி-பாடலும் கலித் தொகையின் கலிப்பாடலும் தவிர்த்துப் புறநானூற்றில் வஞ்சிப் பாடல்கள் சிலவுள்ளன. தொல்காப்பிய இலக்கணங்களை யமைத்த முழுப் புற நூல்களோ அகநூல்களோ இக் காலத்தியலவில்லை. ஆசிரியர்களுக்கு வாழ்வில் போதிய அமைதியில்லையோ தெரியவில்லை. இடத்திற்கேற்பத் தேவையான துறைகளில் பாடல்களைப் பாடியுள்ளனர். புறத்திணைகளுள் வாழ்க்கைக்கென்றும் இன்றியமையாத அறங்களையும் ஒழுக்கங்களையுமே வற்புறுத்தும் பாடாண் முதலிய துறைகளைப் பாடியுள்ளனர். வெட்சி முதலிய போர் முறைகளும் துறைகளும் அனைவர்க்கும் எக்காலத்தும் பொதுவாகாவெனக் கருதிபோலும் அவற்றை மிகுதியாகப் பாடவில்லை. அகத்துறைகளையும் பிற்காலக் கோவை நூல்களைப் போல முறையாகவும் தொகுத்தும் பாடவில்லை. கிடைத்த பாடல்களில் அகத்திற்கு நானூறு என்றதற்கேற்பப் புறத்திற்கும் நானூறு பாடல்களைத் தொகுத்தனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்கு திணைகட்கும் நான்கு நூறு என ஒருவகையாகத் தொகை கொண்டனர். ஐங்குறு நூற்றுள் பாலைக்கும் ஒரு நூறு கொண்டனர். பிற்காலத்தார் நான்கு திணைப் பாடல்களை ஐந்து திணைக்கும் பலவகையாகப் பிரித்திருக்கக்கூடும். பாடல்களின் அடியளவுகளைக்கொண்டு பல தொகை நூல்களைத் தொகுத்துள்ளனர். மூன்றடிச் சிறுமையும் ஆறடிப் பெருமையுமுடைய பாடல்களை ஐங்குறு நூறாக்கினர். ஐந்து புலவர்கள் நூறு நூறாகத் தொகுத்தே பாடிய தனித்தன்மையும் உடையது இத் தொகைநூல். சேரமான் யானைக்கட்சேய் மாந்தாஞ் சேரல் இரும்பொறை யென்ற சேரன் ஆதரவால் கூடலூர்கிழார் இதனைத் தொகுத்திருக்கிறார். இச் சேரன் கடைச் சங்கத்தவன். 4 - 8 என்ற அடியெல்லையினையுடைய பாடல்களைக் குறுந்தொகை நானூ

ருக்கினர். 9 - 12 அடிப் பாடல்கள் நற்றிணையாக அமைந்தன. 13 - 31 அடிப் பாடல்கள் நெடுந்தொகையாய் அகநானூறாயின. அகத்திணைக் கருத்துக்களைச் சிறந்த முறையில் கற்பனைச் செய்வனவாகக் கருதியோ அதற்கு நல்திணையெனப் பெயரிட்டனர். புறநானூறும் பதிற்றுப் பத்தும் புறத்தைப் பற்றியன. மற்றவை அகம்பற்றியன. சிறப்பாக ஒரு பகுதியைப் பேசினாலும் திணை நூல்களின் பாடல்கள் அறம் பொருள் இன்பமென்னும் முப்பகுதிகளைப்பற்றிய உண்மைகளை இடையிடையே தம்முள் விரவப்பெற்றிருக்கின்றன. அகப் பாடல்களில் அரசரின் போர்கள், கொடை யாகியவை பற்றியும் புறப் பாடல்களில் வாழ்க்கைக்குரிய ஒழுக்கவுண்மைகளைப் பற்றியும் அரிய குறிப்புக்கள் பெய்யப் பெற்றுள்ளன. கடையெழு வள்ளல்கள் பண்ணன் போன்றவர்களைப்பற்றிய குறிப்புக்கள் புறநானூற்றிலும் அகப்பாடல்களிலும் மிகுதியாகக் காணப்பெறுகின்றன. தம்மைப் புரந்த வள்ளல்களை நன்றியுடன் பாராட்டும் குறிப்புக்களே இவை. மற்றும் அவர்கள் சிறந்த வீரமுடையவர்களாய் மூவேந்தர்க்கிணையாகவும் விளங்கியுள்ளனர். கடைச் சங்கத் தொடக்கத்தில் இமயவரம்ப நெடுஞ்சேரலாதனும் கரிகாலனும் இலங்கியுள்ளனர். கடைசியில் குமணன் நல்லியக்கோடன் முதலோர் விளங்கி யிருக்கக்கூடும். அக்காலத்தாண்ட சேர சோழ பாண்டியர் சிற்றரசர்கள் குறுநில மன்னர் ஆகியோரைப் பற்றிய குறிப்புக்கள் புறநானூற்றில் மிகுதியாகவும் அக நூல்களில் ஓரிரு வரிகளாக விரவியும் காணப்பெறுகின்றன.

## ஐங்குறுநூறு :

தொகை நூல்களில் முதலில் தொகுக்கப்பட்டது இதுவாக வேண்டும். இதிலுள்ள குறிஞ்சித் திணையைக் கபிலரும், முல்லையைப் பேயனாரும் மருதத்தை ஓரம்போகியாரும் நெய்தலை அம்மூவனாரும் பாலையை ஓதலாந்தையாரும் பாடியுள்ளனர். திட்டமிட்டுப் பாடிய தொகை நூல் இதுவாகும் குயிற்பத்து பயிற்பத்து என வகுத்துப் பாடப்பெற்ற பாடல்கள் பொருளைச் சுருக்கமாகவும் அழகு பெறவும் விளக்குகின்றன. ஆதன், அவினியாகிய சேரர்கள் மருதத்

தில் குறிக்கப்பெறுகின்றனர். ஆதன் என்பது சேரரின் பொதுப் பெயர். சேரலாதன் என்பதன் பிற்பகுதியாகும். அம்மூவனார் தொண்டி முதலிய நகரங்களைக் குறிக்கிறார். தொண்டிப் பத்து எனப் பத்து பாடல்களையே பாடுகிறார். கண்ணனூரும் பேயனூரும் (பையனூர்) இமயவரம்பனைப் பாடிய கண்ணனாருக்கும் முல்லைப்பேயனாருக்கும் அளிக்கப் பெற்ற ஊர்களாகக் கருதப்பெறுகின்றன,

குட்டுவன் (178) கிள்ளி (78) தேர்வண்கோமான் (55) மத்தி (58) ஆமூர் (56) தொண்டி (171) கொற்கை முதலிய பெயர்கள் இந்நூலுள் குறிக்கப்பெறுகின்றன.

திணைக்குரிய தெய்வங்களில் முருகனே அகப்பாடல்களில் மிகுதியும் குறிக்கப்பெறுகிறான். முருகனை வேண்டி மழையை யும் மக்களையும் குறிஞ்சியார் பெறுகின்றனர். ஊழ்வினை நம்பிக்கையும் தவமும் மக்களிடம் காணப்பெறுகின்றன. தைந்நீராடலும் இந்திர விழாவும் பாடல்களில் குறிக்கப் பெறுகின்றன. இக்காலத்து யவனர் பொன்னோடு வந்து முத்தோடு பெயர்ந்துள்ளனர். பொன்னணிகள் பற்றி அடிக் கடிப் பாடல்களில் பேசப்படுகின்றது. இழையும் தொடியும் வளையும் மேகலையும் எங்கும் பாராட்டிப் பேசப்படுவனவாம். எண்களில் நூறாயிரத்துக்குமேல் தாமரை வெள்ளம் ஆம்பல் என்னும் எண்கள் கொள்ளப்பட்டுள்ளன. பரிபாடலும் இவற் றைக் குறிக்கின்றது. இறந்த வீரர்க்குக் கல்நாட்டுதல் மரபு (352). வெட்சியில் தொல்காப்பியர் இதுபற்றிக் கூறுகிறார். இக்காலத்துக் கல்லெடுப்பு; நடு (கல்) வீடு எனும் பூசை யறை முதலியவை நடுகல் பற்றிய வழக்கைக் குறிப்பனவே யாகும். சிறு தேருருட்டல்; 'புனலாடுதல்; வண்டலிழைத் தல்; குரவையாடுதல்; பந்தாடுதல் முதலிய விளையாட்டுக் கள் குறிக்கப்பெறுகின்றன. வடமொழியினரின் சொற்களும், புராண வழக்குகளும் நம்பிக்கைகளும் தொகை நூல்களில் மிகச் சிறிய அளவில் இடம்பெற்றுள்ளன.

## குறுந்தொகை :

சுமார் 200 புலவர்களால் பாடப்பெற்ற இந்நூல் பூரிக்கோ என்பவரால் தொகுக்கப்பெற்றது. நம்பிகுட்டுவன்;

பாலை பாடிய பெருங்கடுங்கோ; மாவளத்தான்; கோப் பெருஞ் சோழன்; பாண்டியன் பன்னாடுதந்தான்; தித்தன்; ஆரிய அரசன் யாழ்ப் பிரமதத்தன் முதலோர் அரசப் புலவ ராய் இந்நூற் பாடல்களைப் பாடியுள்ளனர். பெருங் கடுங்கோ ஒரு சிறந்த சேரன்; ஆரிய அரசன் பிரமதத்தனும் கபிலரிடம் குறிஞ்சிப் பாடலைக் கேட்ட ஆரிய அரசன் பிரக தத்தனும் ஒருவனேயாகலாம். பன்னாடுதந்த பாண்டியன் நற்றிணையைத் தொகுத்த பன்னாடு தந்த மாறன் வழுதியே யாகவேண்டும். குழல்தித்தன்; யாழ்ப் பிரமதத்தன்; கண் ணன் கூத்தன் என்ற பெயர்கள் அவர்களின் இசை நாடகப் புலமையைக் குறிக்கும், பசும்பூண் பாண்டியன் (393) ஒருவன் இந்நூலுட் குறிக்கப்பெறுகிறான். ஆதிமந்தியார்; வெள்ளி வீதியார்; காக்கைபாடினி, நச்செள்ளையார்; ஔவை; ஒக்கூர் மாசாத்தி முதலாம் பெண் புலவர்கள் இந்நூலிற் பாடியுள்ளனர். கட்டி; எவ்வி; நன்னன்; அழிசி; அருமன்; அகுதை; விச்சிக்கோ; முதலிய மன்னர்கள் பாடல்களில் குறிக்கப்பெறுகின்றனர். காஞ்சியூர் (10) மரந்தை (மாந்தை?) (34); உறந்தை; முள்ளூர்; குறும்பூர்; முதலிய ஊர்கள் இந்நூலுள் பேசப்படுகின்றன.

கொல்லிப்பாவை (89 - 100) சங்கப் பாடல்களில் மிகுதியாய்ப் பேசப்படுவதும் பாராட்டப் பெறுவதுமாகும். பிற நாட்டவரால் (யவனர்?) இது செய்யப்பெற்றதென்பர். அழகினால் கண்டாரைக் கவரவும் கொல்லவும் செய்வதென் பர் இதனை. கொல்லிமலையிலிருந்ததால் கொல்லிப்பாவையா, கொல்லும் பாவை - யிருந்ததால் கொல்லிமலையா ஆராய வேண்டும். கடவுள் (203) என்பது தமிழர் கண்ட மிக நுட்ப மான சொல்லென்பர். துறக்கம்பற்றி அக்காலத்தில் பேசப் பட்டது (83). காசுமாலைகளும் காலணிகளும் இங்குக் கூறப் படுகின்றன, கழைக்கூத்தும்; கண்ணாடியும் சமூகத்தில் வழங்கின.

பாடலி (புத்திரம்) (75) பற்றிய குறிப்பு மோசிகீரனால் உரைக்கப்படுகிறது. புத்தர் காலத்தில் பெருமையுற்ற இந் நகரக் குறிப்பு இப்பாடல் இடைச்சங்கத்தது என்பதனைக்

குறிக்கலாம். மகளிர் கூந்தலைக் குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை என்றைம்பாலாக்கி அணி செய்தனர் (269).

நாழிகைக் கணக்கர் இரவுறக்கமின்றிக் காலக் கணக்கை அறிவித்து வந்த வழக்கம் இங்குக் காணப்பெறுகின்றது. நக்கீரருடன் நான்காஞ் சங்கத்து வாதிட்ட இறையனுரெழுதிய கொங்குதேர் வாழ்க்கைப் பாடலும் இதனிற்ருன் காணப்படுகின்றது. இத்தகைய பாடல்கள் சங்கச் சார்புக் காலத்தன.

## நற்றிணை:

187 புலவர்களால் பாடப்பெற்றது. பழையன்; அன்னி; வாணன் முதலிய அரசர்கள் குறிக்கப்பட்டுள்ளனர். எட்டுத் தொகையுள் இது முதலாவதாகக் கொள்ளப்பட்டுள்ளது. இரவில் ஊர்க்காவல் முறை இருந்துள்ளது. கோவலர் வாழ்க்கையைப் பற்றிய இந்நூலின் விரிவான குறிப்புக்களை நெடுநல்வாடையுடன் ஒப்பிட வேண்டும். கூடல்; அம்பர்; ஆர்க்காடு; வெண்ணி; குடந்தைவாயில்; ஊறூர் முதலிய ஊர்கள் காணப்பெறுகின்றன. நுண்பூங்கலிங்க ஆடைகள் ஒரு பக்கமும் இலைதளிர் மரப்பட்டைகள் பூங்கொத்துக்கள் ஆகியவற்ருலாய ஆடைகள் ஒருபக்கமும் இருந்துள்ளன. (64 - 204), கடல் வாணிகமும் பண்டமாற்றும் வழக்கிலிருந்தன. சிறியாழ், பேரியாழ் தண்ணுமை, பறை; வள்ளைப் பாட்டு முதலியவை அக்காலத்து வழங்கியுள்ளன. மலைகளில் தவஞ் செய்யும் தவசியரும் படிவ மகளிரும் (ஜைன புத்தர்?) பாடல்களில் பேசப்படுகின்றனர். பொருளின் இன்றியமையாமையும் அதனைப் பலவகையிலும் செலவிட்டுப் பயன்படு நெறியையும் பாடல்கள் வெகுவாகப் பாராட்டுகின்றன.

## அகநானூறு:

தொகுத்த உருத்திரசன்மன் நக்கீரர் சங்கத்தவன். இந்நூற் பாடல்களை சுமார் 150 புலவர்கள் பாடியுள்ளனர். களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக்கோவையென்ற மூன்று பிரிவுகளையுடையது. முதலிரண்டு பெயர்களும் பாடல்களிலேயே குறிக்கப்பெற்றுள்ளன. பாடல்களின்

பொருளமைதிக்கேற்ப இப்பெயர்கள் இடப்பட்டிருக்கக் கூடும். ஒவ்வொரு பத்திலும் 10 - 20 என்னும் கடைசிப் பாடல்கள் நெய்தலையும் 4 - 14 என்ற 4-வது பாடல் முல்லையையும்; 2 - 8 - 12 - 18 என்ற 2 - 8, எண்களை யுடையன குறிஞ்சியையும் 6-என்ற எண்ணுடையன மருதத்தையும், ஒற்றை எண்கள் (1, 3, 5, 7, 9) பாலையையும் பாடியன வாகும். ஆகப் பாலை பற்றி 200-ம் குறிஞ்சிபற்றி 80-ம் மற்ற மூன்று திணைகள் பற்றியும் 40-வீதமும் பாடல்கள் அமைந்துள்ளன.

நந்தர்களைப் (251 - 265) பற்றிக் குறிக்கும் பாடல்கள் இடைச் சங்கத்தவாக இருக்கக்கூடும். மோரியர் படையெடுப்பும் இந்நூலுட் (69 - 281) கூறப்படுகின்றது. கோதை மார்பன், கரிகாலன்; திரையன் முதலோரும் பேசப்படுகின்றனர். மத்தி; எழினி: எருமையூரன்; கங்கன்; கட்டி, கடலன் முதலோரும் கூறப்படுகின்றனர். திரையர் பவத்திரியிலும் காஞ்சியிலுமிருந்து தமிழகத்தை ஆண்டுள்ளனர். தேர்தல் முறையில் ஊராட்சி நடைபெற்றுள்ளது (17). தமிழர் திருமண முறை இந்நூலில் விரிவாகக் கூறப்படுகின்றது (86 - 136). பரங்குன்றம், அலைவாய். மதுரை, கந்தழி முதலியன குறிக்கப்பெறுகின்றன. கார்த்திகை' பங்குனி, உள்ளி விழாக்கள் கூறப்பெறுகின்றன. இவை சற்று பிற்காலத்தனவாகக் கூடும். வடநாட்டுத் தீபாவளியை யொத்தது கார்த்திகை விழாவாகும்.

## பதிற்றுப்பத்து:

சேர மன்னரின் வரலாறாக அமைந்த இந்நூல் பத்துப் பத்தாக நூறு பாடல்களைக் கொண்டது. பத்து அரசரின் புகழ்களைப் பாடுவது. முதல் பத்தும் கடைசிப் பத்தும் கிடைக்கவில்லை. அவை கிடைத்திருந்தால் வரலாற்றிற்கு எவ்வளவோ உதவியாகும். இதற்குச் சிறந்த பழைய உரை யொன்றுள்ளது. முதற் பத்து இமயவரம்பன் தந்தையைப் பற்றியாகலாம். பெருஞ்சோற்று உதியனைப்பற்றி யென்பது பொருந்தாது. அவன் தலைச் சங்கத்தவன். கடைசிப் பத்து

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் பற்றியதென்பர். பாடல்கள் அந்தாதியாக அமைந்த செம்மையான நடையுடையவை. பண்ணோடு கலந்த இசைப் பாடல்கள்.

இமயவரம்பன் அவன் மக்கள் மூவர் ஆகியோர்க்கு நான்கு பத்துக்களும் இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் அந்துவஞ்சேரல், மகன் செல்வக்கடுங்கோ வாழியாதன் அவன் மக்கள் இருவர் ஆகியோர்க்கு நான்கு பத்துக்களும் இப்போது வழக்கிலுள்ளன.

இப்பாடல்களைப் பாடிய புலவர்களுக்குச் சேரர் வரையாது வழங்கி அவர்களைப் புரந்துள்ளனர். தமிழ் மன்னரின் கொடைக்கு இவர்கள் புலவர்க்களித்த ஈகை ஓர் எடுத்துக் காட்டாகும்.

சேரர்கள் காலமும் கடைச் சங்க காலமும் கயவாகுவின் காலத்தைத் தொடர்ந்து வரையறுக்கப்படுகின்றன. ஐந்தாம் பத்துக்குரிய கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் கயவாகு காலத்தவனெனச் சிலப்பதிகாரத்தால் தெரிகின்றது. கி. பி. 113 - 136 கயவாகுவின் காலம். மற்றொரு வகையாலும் கடைச் சங்கத்தை வரையறுக்கக்கூடும். சிலப்பதிகாரம் வஞ்சிக்காண்டம் கூறும் நூற்றுவர் கன்னர் என்பவர் சதகர்னிகள் என்னும் ஆந்திர வரசராவர். சதகர்னிகள் சுமார் கி. மு. 250—கி. பி. 250 ஆண்டெல்லையில் ஆண்டவராவர். புறநானூறும் (385) அக நூல்களும் கூறும் வேங்கடம்புல்லி என்பவன் சதகர்னிகளில் புலிமாயி என்பவனுயின் புலிமாயிகள் மூவர் கி. மு. 15—கி. பி. 21; கி. பி. 130—158; கி. பி. 213—220 என்னும் ஆண்டுகளில் ஆண்டுள்ளனர்.

சேரர் போர்களில் அவர்கள் கடற்கொள்ளைக்காரராகிய கடம்பரை வென்றது சிறப்புடையதாகும். பெரிபுளூஸ் போன்றோரும் இக் கொள்ளைக்காரரைப்பற்றிக் கூறுகின்றனர். ஆரியரையும் யவனரையும் சேரர் வென்றுள்ளனர். எழுமுடி மன்னரை இமயவரம்பன் முதலோர் வென்ற செய்தி பாடல்களில் ஏற்றமுறப் பேசப்படுகின்றது. தும்பை,

உழிஞைப் போர்கள் வெகுவாகக் கற்பனை செய்யப்படுகின் றன. அயிரை மலைக் கொற்றவையும் அனந்தைத் திருமாலும் அன்று மக்களாலும் வீரராலும் வழிபடப்பெற்றுள்ளனர். வேத நெறி நாட்டில் தழைத்தோங்கச் சேரர் பெரும்பணி செய்துள்ளனர்.

## புறநானூறு :

சுமார் 150 புலவரால் இத்தொகை நூல் பாடப்பெற் றுள்ளது. சுமார் 180 அரச மரபினரைப் பற்றிய செய்தி களைக் கூறும் தமிழர் வரலாற்றுக் கருவூலமாக இது திகழ் கின்றது. இதற்குச் சிறந்த பழைய உரை யொன்றுள்ளது. இதிலுள்ள வரலாற்றுச் செய்திகள் மற்ற தொகை நூல்களில் காணும் குறிப்புக்களால் விளக்கவும் உறுதி செய்யவும் பெறு கின்றன. இவற்றுள் இரண்டு பாடல்கள் (267 - 8) கிடைக்க வில்லை. பதினுன்கு பாடல்களின் ஆசிரியர் பெயர்கள் தெரிய வில்லை. சைவ நாயன்மார் போன்று புலவர்கள் பலவேறு பட்ட இனத்தவரும் நாட்டவருமாவர், தமிழுக்கு யாதும் ஊரே யாவரும் கேளிர் என்பது இதனுற் புலனுகின்றது. மகளிரது வீரமும் மன்னரின் போர்களும் வள்ளல்களின் கொடையும் புறநானூற்றிற் கூறப்படும் சிறப்புச் செய்திக ளாகும். அக்காலத் தமிழர் சமுதாயத்தை இத்தொகைநூல் கொண்டு ஒரளவு கற்பனை செய்துவிடலாம். கி. மு. 1000— கி. பி. 600 ஆண்டுகளின் எல்லையுட்பட்ட பாடல்கள் இந் நூலில் இடம்பெற்றுள்ளன என்று கூறலாம்.

இதில் சேரர் 18 பேர்; சோழர் 20 பேர்; பாண்டியர் 13 பேர் சிற்றரசர் சுமார் 50 பேர் ஆகியோரைப் பற்றிய வரலாறுகள் தொகுக்கப்பெற்றுள்ளன. இவர்களைத் தவிர்த்து அகப் பாடல்களில் காணும் அரசர்கள் சங்கச் சார்புக் காலத்தவர் எனக்கொள்ளலாம். இமய நினைவு பாடல்களில் பலவிடங்களில் வருகின்றது. தமிழ்ப் புலவரது மேம்பாடான வாழ்க்கை பலபட விரித்துரைக்கப்படுகிறது. மகளிர் வாழ்க்கையில், தகுதியுடையோர்க்கன்றி அரசர் உயர்ந்தோரென்பதற்காகத் தமிழர் தம் பெண்களை மணஞ் செய்து கொடுத்தலில்லையென்பது புறநானூற்றில் (338-)

உணர்த்தப் பெறுகின்றது. நாட்டுக்காப்பே வீட்டுக்காப்பு என்பதுணர்ந்து தமிழ்ப் பெண்கள் தம்மக்களை வீரமுடைய ராக்கினர். சிவன், முருகன், கண்ணன், பலதேவன் இந்திரன், யமன் ஆசிய தேவர்கள் சமூக வாழ்க்கையில் குறிக்கப் பெறுகின்றனர்,

## கலித்தொகை :

பதிற்றுப்பத்து சேரர் காலத்ததெனில் கலித்தொகையும் பரிபாடலும் பாண்டியர் காலத்திய நூல்களெனலாம், புறநானூறு முதலிய மற்ற தொகை நூல்களில் வரும் அரசப் பெயர்கள் இவற்றில் வருவதில்லை. சில விடங்களில் மாறன், வழுதியென்ற பெயர்களே வருகின்றன, இவையிரண்டும் பழமையாகவரும் நூல் வகைகள். தலைச் சங்கப்பரி பாடலும் இடைச் சங்கக் கலித்தொகையும் நமக்குக் கிடைக்கவில்லை. காமப் பொருளாக வரும் இவை நகைச் சுவையும் கைக்கிளை பெருந்திணைத் துறைமிகுதியும் உடைமைபற்றி இவற்றைச் சிறிது பிற் காலத்தன வெனவும் அறிஞர் கூறுவர். பரி பாடலில் (11) வரும் வான நூற் குறிப்புக்களைக் கொண்டு அதனைச் சில நூற்றுண்டுகள் பின்னுக்குக் கொண்டு செல்வர். இதனில் நான் மாடக் கூடல் வருகின்றது, கடல்கோளொன்று அடிக்கடிப் பேசப்படுகின்றது (104) அதுமணிமேகலை காலத்து கடல்கோளாகலாம் அயலார் நாட்டைக்கொண்டது பற்றிவரும் குறிப்புகள் களப்பிரர் படையெடுப்பைச் சுட்டக் கூடும், சிலப்பதிகாரத்தில் இக்குறிப்பு வருகின்றது. ஐந்திணைகட்கும் 150 பாடல்களை எழுதிய ஆசிரியர் ஐவரல்லர் நெய்தற்கலியைப் பாடிய நல்லந்துவனுரே அனைத்தையும் இயற்றியவர் என்றதோர் கொள்கையுள்ளது. நச்சினுர்க்கினியர் உரையால் நல்லந்துவனுர் கலித்தொகையைத் தொகுத்தவர் என்பது பெறக்கூடும், கடைச் சங்கத்தே பாடியவை போகச் சங்கச் சார்புக் காலத்தில் பாடிய ஒரிரு திணைப்பாடல்களையும் இணைத்து இத் தொகை நூலை அவர் உருவாக்கியிருக்கலாம். முல்லையைப் பாடிய சோழன் நல்லுருத்திரன் பாண்டியனுக் கடங்கியவனுகலாம். இதனுலும், புதிய செய்யுள் மரபுகள், சொல்வழக்குக்கள் வடமொழி புராணக் கதைமிகுதி

வடமொழி மரபுகள் ஆகியவற்ருலும் இத்தொகையைப் பிற்காலத்ததென்பர் பலர். முல்லை நிலத்து ஏறுதழுவுதல் பற்றிய செய்தி விரிவாகக் கூறப்படுகிறது. புலவர் கூடியிருந்து பாண்டிய ஞல்புரக்கப் பெற்றுப் புதுக்கவிகள் புனைவது பற்றியெல்லாம் அடிக்கடிப் புகலப்படுகின்றது. மற்ற தொகை நூல்களில் காணு த புதிய அணி வகையெல்லாம் இங்கு அழகு பெறக் கூறப்படுகின்றன. பிரணவம், காமன் முதலிய வழக்குக்கள் வெளிப்பட்டுத் தோன்றுகின்றன. உச்சிமேற் புலவர்கொள் நச்சினுர்க்கினியர் இதற்குரை கண்டுள்ளார்.

## பரிபாடல் :

25 அடி முதல் 400 அடிவரை இன்பப் பொருளாகக் கடவுள் வாழ்த்துடன் வரும் இப்பாடல் எழுபதில் இருபத்திரண்டே கிடைத்துள்ளன. முருகன், திருமால், வைகைபற்றிய பாடல்களில் வைகை பற்றிய பாடல்கள் சிவனைப் பற்றியனவாக அமைந்துள்ளன. திருமாலிருஞ்சோலை திருப்பரங்குன்றம் ஆகிய ஊர்கள் பெருமைப்படுத்தப்பட்டுள்ளன. மக்களுடைய பேச்சு வழக்குக் கொச்சைச் சொற்கள் இத்தொகுதியில் மிகுதி. பதிற்றுப் பத்தும் கலித்தொகையும் பரிபாடலும் தமிழிசை நலம் உடையனவாய்ப் பாடல்கள் பண்களோடு பாடப்பெற்றுள்ளன. ஒவ்வொரு பாடலுக்கிறுதியிலும் உரிய பண் வகுக்கப்பெற்றுள்ளது. பரிமேலழகர் உரையெனப் பழைய உரையொன்று இந்நூற்குள்ளது. குறளுரை கண்ட பரிமேலழகரோ இவர் என்ற ஐயம் ஏற்படுகின்றது. இதுவும் புதிய தமிழ் மரபுகளும் வடமொழி வழக்கு மிகுதியும் உடைமையின் பிற்காலத்ததென்பர். பத்தாம் பாடலில் வரும் பொலஞ்சொரிவழுதி (127) யென்பது பிற்காலத்தரசனைக் குறிக்குமாயின் அது நான்காஞ் சங்கத்து உக்கிரப்பெருவழுதியைக் குறிக்கலாம். கலித்தொகை 141-ஆம் பாடலும் போர்வல் வழுதியைக் குறிக்கின்றது. நல்வழுதி யென்பாரொருவரே வையைப் பற்றிய பாடலொன்றைப் பாடியுள்ளார், இந்நூலின் 13 ஆசிரியர்களில் நல்லந்துவஞர் முதலோர் கடைச் சங்கத்திற்கும் பலர் சங்கச் சார்புக்கும் உரியராகலாம். தமிழரது கடவுட் கொள்கையை

அறிபவர் பரிபாடலைக்கொண்டு ஓரளவு தெரிந்துகொள்ளலாம். பொன்னும் போகமும் அன்றி அன்பும் அறமுமே அடியோர் இறைவனிடம் வேண்டும் வரங்களாக வுள்ளன. திருமாலைப்பற்றிய பாடல்களில் பகவத்கீதை நினைவு அடிக்கடி வருகின்றது. ஓவியக் கலை பற்றி (21) இந்நூலில் விவரங்கள் கிடைக்கின்றன. காதல், காமம், கற்பு பற்றி (9) இந்நூலில் காணப்படும் இயல்புகள் பலராலும் பேசப்படுவனவாகும்.

## இலக்கிய வரிகள் :

### நற்றிணை :

1. நின்ற சொல்லர்; நீடுதோறினியர் [1]
2. நல்லதற் குரியை வாழியென் னெஞ்சே [16]
3. காமம் கைம்மிகின் தாங்குதல் எளிதோ [39]
4. செறுநரும் விழையும் செம்மலோன் [50]
5. முருகு புணர்ந்தியன்ற வள்ளிபோல [82]
6. கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்<br>கொடுத்த தந்தை கொழுஞ் சோறுள்ளாள் [110]
7. ஒன்றில் காலை அன்றில் போல [124]
8. இளமையின் சிறந்த வளமையும் இல்லை. [126]
9. நினக்குயான் உயிர் பகுத்தன்ன மாண்பினேன் [128]
10. தமது செய்வாழ்க்கையின் இனிய துண்டோ [130]
11. மருந்து பிறிதில்லையான் உற்ற நோய்க்கே [141]
12. முல்லை சான்ற கற்பின் மெல்லியற் குறுமகள் [142]
13. ஓவத்தன்ன இடனுடை வரைப்பு [182]
14. பிறர்க்கென முயலும் பேரருள் நெஞ்சமொடு<br>காமர் பொருட்பிணி போகிய [186]
15. நன்றி விளைவும் தீதொடு வரும் [188]
16. யாறு கிடந்தன்ன அகல் நெடுந்தெரு [200]

17. வானம் வேண்டா உழவின் எம் கானலஞ் சிறுகுடி [254]

18. நிலம்புடைப் பெயர்வதாயினும் கூறிய
சொல்புடை பெயர்தலோ இலரே [289]

19. வழிபடுதெய்வம் கண்கண்டாங்கு, நின் நலமென்
பணைத்தோள் எய்தினம் [9]

20. ஆளில் பெண்டிர் தாளின் செய்த நுணங்கு நுண்
பனுவல் [353]

## குறுந்தொகை :

1. நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவின்றே...... நாடனொடு நட்பே [4]

2. ஆடிப்பாவை போல மேவின செய்யுந்தன்
புதல்வன் றாய்க்கே. [8]

3. சின்மொழி யரிவை [14]

4. உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே [18]

5. உள்ளந் தாங்கா வெள்ளம் [29]

6. பொழுதிடை தெரியிற் பொய்யே காமம் [32]

7. செம்புலப் பெயனீர்போல அன்புடை நெஞ்சம்
தாங்கலந்தனவே [60]

8. இம்மை மாறி மறுமையாயினும் நீயாகியரெங்கணவனை
யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே [49]

9. நல்கார் நயவாராயினும் பல்காற் காண்டலும் உள்ளத்
துக் இனிதே [60]

10. சிலமெல்லியவே கிளவி [70]

11. யாரினு மினியன் பேரன்பினனே [85]

12. அன்னையு மத்தனும் அல்லரோ [93]
நீரோரன்ன சாயல் தீயோரன்ன வென்
உரனவித்தன்றே [95]

உள்ளின் உள்ளம் வேமே யுள்ளா திருப்பினெம்
அளவைத்தன்றே [1-2]

வினையே ஆடவர்க்குயிரே வாணுதல் மனையுறை மகளிர்க்
காடவர் உயிர்; கடப்பாட்டாளன் உடைப்பொருள் [143]

மகிழ்ந்ததன்றலையு நறவுண்டாங்கு விழைந்ததன்றலையு
நீ வெய்துற்றனை [165]

தான்றுழந்தட்ட தீம்புளிப் பாகர் இனிதெனக்
கணவனுண்டலின், நுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதல்
முகனே [167]

கல்லினும் வலியனென்றோழி வலியனென்னாது
மெலியுமென்னெஞ்சே [187]

மாஅயோள்வயின் இன்றையன்ன நட்பின் [199]

காமம் அணங்கும் பிணியுமன்றே [206]

சூலிக்குக் கடனும் பூணாது கைந்நூல் யாவாம்,
புள்ளு மோராம் விரிச்சியு நில்லாம் [218]

சான்றோர் புகழு முன்னர் நாணுப [252]

சிறுமெல்லாகம் ஒரு நாள் புணரப் புணரின் அரை நாள்
வாழ்க்கையும் வேண்டலன் யானே [280]

இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு [283]

இனியனாக வி னினத்தியன்ற இன்னாமையினு மினிதே,
இனிதெனப் படூஉம் புத் தேளுடே [288]

பகைதரு நட்பு [304]

நட்பே அவிழ்த்தற் கரிதது முடிந்தமைந்தன்றே [3:4]

கானமும் இனியவால் நும்மொடு வரினே [388]

ஐங்குறு நூறு:

அரசு முறை செய்க களவு இல்லாகுக [8]

பாணர் நரம்பினும் இன் கிளவியளே [100]

கடவுட்பேணி இரந்தனன் பெற்ற எல்வளைக்
குறுமகள் [257]

தொலைந்தோர் எழுத்துடை நடுகல் [352]
உள்ளம் வாங்க தந்தநின் குணனே [356]
மனைக்கு விளக்காயினள் [405]

## அகநானூறு:

ஓவச் செய்தியின் ஒன்று நினைந்தொற்றி [5]
மழைவளம் தரூஉம் மாவண் தித்தன் [6]
மெய் புகுவன்ன கைகவர் முயக்கம் [11]
இருதலைப் புள்ளின் ஓருயிரம்மே [12]
முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள் [22]
நினையாது கழிந்த வைகல் யாவதும் வாழலென்யான் [29]
தமிழ்கெழு மூவர் [31]
மற்றிவன் மகனே என்றனள் தோழி [69]
ஈதல் இன்பம் வெஃகி (69)
வணங்குறு கற்பு (73)
கற்பினின் வழாஅநற்பல உதவிப் பெற்றோர் பெட்கும்
பிணையை ஆக (86)
அன்பு கலந்து ஆர்வஞ் சிறந்த சாயல் [94]
அழியா விழவின் அஞ்சுவரு மூதூர் (115)
நன்னர் நெஞ்சம் அவர் தளர் அடி தாங்கிய சென்றது [128]
அறன் கடைப்படாஅவாழ்க்கையும் என்றும் பிறன்
கடைச் செலா அச்செல்வமும் [155]
கடவுட் கற்பொடு குடிக்கு விளக்காகிய புதல்வர்ப்
பயந்த நன்னராட்டி [184]
வானம் வேண்டா வறனில் வாழ்க்கை [186]
என்பு நெகிழ்க்கும் கிளவி [225]
நம் மனத்து அன்ன மென்மை [273]
இல்லுறை கடவுள் [282]

நெஞ்சு உடம் படுதலின் ஒன்று புரிந்த டங்கி [312]
குடிநன்கு உடையன் கூடு நர்ப்பிரியலன் [357]
உயிர் குழைப்பன்ன சாயல் [362]
வாய்போற் பொய்ம் மொழி [3]
கயிறு பிணிக்குழிசி ஓலை கொண்மார் பொறிகண்டழிக்கும்
ஆவண மாக்கள் [77]

## புறநானூறு :

உருவும் புகழுமாகி [6]
பாடல் சான்ற விறல் வேந்தன் [11]
முருகற் சீற்றத்து உருகெழு குரிசில் [16]
உண்டி முதற்றே உணவின் பிண்டம், நீர் நிலை பெருகத்
தட்டோ ரம்ம இவண் தட்டோரே [18]
தமிழ்தலை மயங்கிய தலையாலங்கானம் [19]
அறம் துஞ்சும் செங்கோலையே [20]
அறமும் பொருளும் இன்பமும் மூன்றும் ஆற்றும்
பெருமநின்செல்வம் [29]
நகைப்புறனாக நின் சுற்றம் [29]
செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும் வேண்டியது விளைக்கும்
ஆற்றலை [38]
தமது பகுத்துண்ணும் தண்ணிழல் வாழ்நர் [46]
நமர் எனக்கோல் கோடாது பிறர் எனக் குணம்
கொல்லாது [55]
அறநெறி முதற்றே அரசின் கொற்றம் [55]
முருகொத்தீயே முன்னியது முடித்தலின் [56]
உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பு [72]
நீரினும் இனிய சாயல் பாரி [105]
இருள் யாவணதோ நின்நிழல் வாழ்வோர்க்கே [102]

பிறர்க்கீவோர் தமக்கீப [136]

வாழ்தல் வேண்டிப் பொய்கூறேன்மெய் கூறுவல் [129]

வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தலும் [157]

மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர் தம் புகழ் நிறீஇ
தாமாய்ந்தனரே [165]

வையக வரைப்பில் தமிழகம் கேட்பப் பாடுப என்ப
பரிசிலர் [168]

அறிவுடையோனாறு அரசுஞ் செல்லும் [183]

மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் [186]

உண்பது நாழி உடுப்பவை இரண்டே [189]

சான்றோர் பலர் யான் வாழுமூரே [191]

வாழ்தல் இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்
இன்னாதென்றலுமிலமே [192]

அல்லது செய்தலோம்புமின் [195]

தோற்றம் சான்ற சான்றோன் [217]

புகழ் சால்புதல்வன் [222]

உலகு புகத்திறந்தவாயில் பலரொடு உண்டல்
மரீஇயோனே [234]

மெலியர் என மீக்கூறலன் [239]

நீலக் கச்சைப் பூவார் ஆடை [274]

பிறர்க்கு உவமம் தானல்லது தனக்குவமம்
பிறர் இல் என [377]

சேர்ந்தோர் பசிப்பகை கடிதலும் வல்லன் [400]

உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பின் புலவர் [72]

செம்பு புனைந்தியற்றிய சேணெடும் புரிசை [201]

பாலிற்பெய்தவும் பாகிற் கொண்டவும் [381]

பெட்பின் றீதல்யாம் வேண்டலமே [205]

உண்டாலம்ம இவ்வுலகம் – பிறர்க்கென வாழுநர்
உண்மையானே [182]

## பதிற்றுப் பத்து:

பதிபாழாக வேறுபுலம் படர்ந்து, விருந்தின் வாழ்க்கையொடு
பெருந்திருவற்றென [71]
கன்றறியுள்ளத்துச் சான்றோர் (72)
வண்மையு மாண்பும் வளமுமெச்சமும் தெய்வமும் யாவதும்
தவமுடையோர்க்கு (74)
வருநர் வரையாவளம் வீங்கிருக்கை (75)
பெரியோர்ப் பேணிச் சிறியோரை யளித்தி (79)
தொலையாக் கற்ப (80)
பாவையன்ன நல்லோள்; ஈத்த திரங்கான் ஈத்தொறு
மகிழான் (61)
பணியா வுள்ளமொ டணிவரக் கெழீஇ; நிலந்திறம்
பெயருங்காலை யாயினும் கிளந்த சொல்நீ
பொய்ப் பறியலையே (63)
ஆஞக்கொள்கை யாதலின்; பசியுடை யொக்கலை யொரீஇய
இசைமேந் தோன்றல் (64)
நாண்மகிழிருக்கை (65)
நாமமறியா ஏம வாழ்க்கை (68)
புறஞ் சொற்கேளாப் புரைதீர் ஒண்மை (70)
நெஞ்சுமலியு வகையர் (31)
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றி (32)
ஆன்றவிந் தடங்கிய செயிர்தீர் செம்மால் (37)
ஆன்ஞெள் கணவ (55)
வாரா ராயினும் இரவலர் வேண்டித் தேரிற் றந்தவர்க்
கார்பத னல்கும் (55)
சேர்ந்தோர்க் கரணம் (59)
அறாஅ யாணர் (60)

மென்சொற் கலப்பையர் (15)

நண்ணார் தேயத்தும் பொய்ப்பறி யலனே (20)

சொற்பெயர் நாட்டம் கேள்வி நெஞ்சமென்று ஐந்துடன் போற்றி (21)

சினனே காமம் கழிகண்ணோட்டம் அச்சம் பொய்ச்சொல் அன்புமிக வுடைமை அறந்தெரி திகிரிக்கு வழியடையாகும் (22)

பாவையன்ன மகளிர் (88)

நாளின் நாளின் நாடு தொழுதேத்த (89)

ஆறிய கற்பு (90)

## பரிபாடல் :

அறனும் ஆர்வலர்க் களியுநீ (1)

வாய் மொழிப் புலவ (1)

வலியினும் மனத்தினும் உணர்வினுமெல்லாம் வனப்புவரம் பறியா மரபினோயே (3)

அறத்தினுள் அன்புநீ (3)

அருள் குடையாக அறங் கோலாக (3)

வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள (4)

மாற்றோ ருமிலர் கேளிருமிலர் மனக்கோணினக்கென வடிவுவே றிலையே (4)

நீயே வரம்பிற்றிவ்வுலக மாதலின் (5)

பெரும் பெயர் முருக (5)

யாமிரப்பவை பொருளும் பொன்னும் போகமுமல்ல நின்பால் அருளும் அன்பும் அறனும் மூன்றும் (5)

மாசில் பனுவல் புலவர் (6)

புரிநரம்பின் கொளைப் புகல்பாலையேழும் (7)

பரங்குன்றிமயக்குன்ற நிகர்க்கும் (8)

ஆராக்காமம் "ஆர்பொழிற்பாயல் வரையகத்
தியைக்கும் வரையா நுகர்ச்சி முடியாநுகர்ச்சி
முற்ருக் காதல் (ச) காதற்காமம் காமத்துச்
சிறந்தது, விருப்போரொத்த மெய்யுறுபுணர்ச்சி
புலத்தலிற் சிறந்தது கற்பே (9)
பொதியின் முனிவன் புரைவரைக் கீறி [11]
காமங் களவிட்டுக் கைகொள் கற்புற்றென [11]
இன்னியன் மாண்டேர்ச்சி இசைபரிபாடன்
முன்முறை செய்தவத்தி னிம்முறையியைந்தேம் [11]
ஓசனை கமழும் வாசமேனியர் [11]
மூவுருவாகிய தலைபிரியொருவனை [13]
கேள்வியும் அறிவு மறத்தொடு நுண்ணியை [13]
அன்னையென நினைஇ நின்னடி தொழுதேம் [13]
புல்லிய சொல்லும் பொருளும் போலவும் [15]
மேலோர் உறையுளும் வேண்டுநர் யார் [17]
புலத்தினும் போரினும் போர்தோலாக் கூடல் [19]
தகவுடை மங்கையர் சான்ருண்மை சான்றவர்;
இகழினும் கேள்வரை ஏத்தியிறைஞ்சுவார் [20]

## கலித்தொகை

தொடங்கற்கட்டோன்றிய முதியவன் (பா–2)
நிலைஇய கற்பினுள் [2]
பொருளினும் யாமுமக்குச் சிறந்தனமாதலின் [4]
நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன் [7]
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள் அறந்தலை
பிரியா ஆறுமற்றதுவே [8]
வறியவன் இளமைபோல் [10]

காதலாரெவன்செய்ப பொருளில்லாதார்க்கென [14]
வான்றரு கற்பு [16]
ஒன்றன் கூருடையுடுப்பவரே யாயினும் ஒன்றினர்
வாழ்க்கையே வாழ்க்கை [18]
செவ்வியதீவிய சொல்லி [19]
பகலின் விளங்குநின் செம்மல் [19]
இளமுலை பாராட்டினுய் மற்றெம்மார்பின் தளர்
முலைபாராட்டினையோ ஐய [22]
காமவேள் விழவு [26]
கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி
கிளையழிய வாழ்பவன் ஆக்கம்போற் புல்லென்று [34]
மடியிலான் செல்வம்போல் மரன் நந்த [35]
வள்ளிகீழ்வீழா வரைமிசைத் தேன் தொடரா
மலைவாழ்நர் அல்ல புரிந்தொழுகலான் (கு - 3)
அஞ்சுவதஞ்சா அறனிலி யல்லவென் நெஞ்சம்
பிணிக்கொண்டவன் [6]
நட்டார்க்குத் தோற்றலை நாணுதோன்; இன்மை
யுரைத்தார்க்கது நிறைக்கலாற்ருக்கால் தன்
மெய்துறப்பான் [7]
உலகம் புரப்பான் போல்வதோர் மதுகையு
முடையன் [12]
கடைக்கணுற் கொல்வான்போல் நோக்கி [15]
நல்லார் உறுப்பெல்லாங் கொண்டியற்றியாள்
கொல் [20]
இளமுலை நிற்கண்டார் உயிர்வாங்குமென்பதை
உணர்தியோ [20]
மனையாங்குப் பெயர்ந்தாளென் அறிவகப்
படுத்தே [22]

குறித்தது கொள்ளாது போகாக்குணனுடையன் [25]
வேட்பார்க்கினிதாயினல்லது நீர்க்கினிதென்
றுண்பவோ நீருண்பவர் [26]
பண்டுநாம் வேறல்லமென்பதொன்றுண்டால் [26]
செவிசெறுவாக மூதுமொழி நீராப்புலனுவுழவர்
புதுமொழிகூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர (மு.3)
மாயமகிழ்நன் பரத்தமை [10]
அன்புறு காதலர் கைபிணைந்தாய்ச்சியர் இன்புற்
றயர்வர் தழூஉ (மு.6) முன்னின்று சொல்லலோம்
பென்றமையன்றி அவளைநீ புல்லலோம்பு என்ற
துடையரோ [12]
கல்லாது முதிர்ந்தவன் கண்ணில்லா நெஞ்சம்
போல் (நெ-13) பண்பெனப் படுவதுபாடறிந்
தொழுகுதல் [16]

## சங்கச் சார்புக் காலம் அல்லது நான்காஞ் சங்ககாலம்

கி. பி. 3–6 நூற்றுண்டுகளேயே சங்கச் சார்புக் காலம் என்கிறோம். நக்கீரர் கூறிய கடைச்சங்கக் கால அளவு கி. பி. மூன்றும் நூற்றுண்டுடன் முடிந்து விடுகின்றது. அதன்பின் இலக்கியம், அரசியல், சமூகம் முதலியவற்றின் அமைப்புக்களால் வரலாற்றில் இருண்டகால மெனப்படும் இவ்விடைக்காலம் கடைச்சங்கத்தினும் வேறுபாடுடையதாகவே இருக்கின்றது. இலக்கியங்களுள் கி. பி. ஆரும் நூற்றுண்டில் இயன்ற இறையனுர் அகப்பொருளேயும் கடைச்சங்க நூலாகவே நக்கீரர் கருதுகிருர். அதனுலேயே பலர் கி. பி. ஆரும் நூற்றுண்டு வரைப்பட்ட காலத்தையும் கடைச்சங்ககால மாகக் கொள்கின்றனர்.

கலித்தொகையுள் சில திணைகளும் பரிபாடலுள் பல பாடல்களும் கூட இவ்விடைக் காலத்தே தோன்றியிருக்கக் கூடும். கடைச்சங்க நூல்களாகக் கருதப்படும் பத்துப்பாட்டு; கீழ்க்கணக்குகள்; சிலப்பதிகாரம்; மணிமேகலே முதலியனவும் (நக்கீரரால் கடைச்சங்க நூல்களாகக் கூறப்படாமையால்) இக்காலத்தே தோன்றியிருக்கவேண்டும். நான்காஞ் சங்க நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படையைக் கடவுள் வாழ்த்தாக இணைத்துப் பத்துப்பாட்டும் பாரதப் பெருந்தேவனுர் காலத்திலேயே தொகுக்கப்பட்டிருக்கவேண்டும். சிலப்பதிகார மணிமேகலேகளின் பதிகங்களே நம்பலாம். அவற்றின்படி இளங்கோவடிகள் சீத்தலேச் சாத்தனுர் ஆகிய இருவரும் ஒருகாலத்தவர். சீத்தலேச் சாத்தனுர் நான்காஞ் சங்கத் துறுப்பினர். நான்காஞ் சங்கமாகிய இச்சைவ சங்கத்தில் திருக்குறள் அரங்கேற்றப்பட்டதுபற்றிய இலக்கிய ஆதாரம் கல்லாடத்தில் கிடைக்கின்றது. கல்லாடம் திருமந்திரம் பெருந்தேவனுர் தமிழ்ப்படுத்திய மாபாரதம் ஆகியவையும் இக்காலத்து

(கடைசியில் இயன்ற) நூல்களே. பத்துப்பாட்டில் கபிலரது குறிஞ்சிப்பாட்டு போன்றன கடைச்சங்கத்தேயே இயன்றிருக்கலாம். ஆனால் பத்துப்பாட்டு நக்கீரர் காலத்தேயோ அன்றி அதற்குப் பிற்பட்டோ தொகுக்கப்பட்டதால் அதனை அவர் குறிக்கவில்லை. தனியாகச் சில பாடல்களையேனும் அவர் குறித்திருக்கலாம், ஏனோ குறிக்கவில்லை. திருவிளையாடலிற் கூறப்படும் பாண்டியர்கள் இவ்விடைக்காலத்தில் இலங்கியவர்களாகக் கொள்ளலாம். இவர்கள் 'தென் தமிழின் கரைகண்டும்; ஒண்தமிழும் வடமொழியும் பழுதறத் தாளுராய்ந்து பண்டிதரில் மேந்தோன்றியும்' விளங்கியதாகக் (கல்வெட்டுச்) செப்பேடுகள் கூறுகின்றன. இப்புலமையில் எழுந்த பாடல்கள் பலவாக இருந்திருக்க வேண்டும்.

ஒரு கடல்கோளும் 'வேற்றுப் புலத்துப் பகையரசாட்சி' எனப்படுவதொன்றும் இக்காலத்தைக் கடைச்சங்க காலத்தினின்றும் பிரிக்கின்றன. கடல்கோள் மணிமேகலைக் காலத்தேற்பட்டுள்ளது. வேற்று வேந்தரதாட்சியை அவுணரதெனவும் திருவிளையாடலிற் குறிக்கப்பெறும் கருநாடகர (களப்பிரர்) தெனவும் கொள்ளலாம். மற்றும் பல்லவர் கடம்பர் (மயூரசன்மன்) முதலோரும் இக்காலத்தே தமிழகத்தை அசைத்தும் அலைத்துமிருக்கின்றனர். இந்திய வரலாற்றில் வரும் ஹூணரே அவுணர் எனப் பேரகராதி கூறும். யவனரினும் வேருக இவர்கள் பலவிடத்தும் கூறப்படுகின்றனர். கி. பி. 4—5ஆம் நூற்ருண்டுகளிலும் ஆரும் நூற்ருண்டின் தொடக்கத்திலும் ஹூணர்கள் இந்திய அரசியலில் குறிக்கப்படுகின்றனர். குப்தர் முதலோர் அவர்களை வென்றுள்ளனர். அவர்களை முருகன் கொற்றவை முதலிய கடவுளர் அழித்ததாகக் கூறப்படும் இலக்கியக் குறிப்புக்கள் இந்த ஹூணரைப்பற்றியவேயாம். எனவே இக்குறிப்புடைய இலக்கியங்களைத் தெளிவாக

கி. பி. 5ஆம் நூற்றுண்டுக்குப் பிற்பட்டவாகவே கருத வேண்டும். அவுணக் குறிப்புக்கள் முருகாற்றுப்படை, பரி பாடல்; சிலப்பதிகாரம் ஆகியவற்றில் அதிகமாகக் காணப் பெறுகின்றன. பகையரசுபற்றிக் கலித்தொகையிலும் சிலப் பதிகாரத்தும் செப்பப்பெறுகின்றது. கடல்கோளேப்பற்றிக் கலித்தொகை குறிப்பிடுகின்றது. இன்னும் இந்நூல்களில் பிற்காலக் குறிப்புக்கள் பலபலவிருக்கின்றன. சிலப்பதிகா ரத்துக் காணும் திருவரங்கத் திருமால் கோயில் கி. பி. 5—6ஆம் நூற்றுண்டுகளிலேயே தோற்றுவிக்கப்பட்டதாக வரலாற்றினல் தெரிகின்றது. எனவே சிலப்பதிகாரம் கி. பி. 2-3ஆம் நூற்றுண்டு நிகழ்ச்சிகளேக்கொண்டு கி. பி. ஆரும் நூற்றுண்டில் இளங்கோவடிகளால் இயன்ற காவியமாகும்.

### நான்காம் சங்கம்:

சங்கம் என்ற அமைப்புடன் நிலவியது இந்தவொரு சங்கம்தான். இது கி. பி. ஆரும் நூற்றுண்டிலும் (ஏழாம் நூற்றுண்டின் தொடக்கத்திலும்)' இலங்கியிருந்ததெனலாம். மணிமேகலேச் சீத்தலேச் சாத்தனுரும் பாரதம் பாடிய பெருந்தேவனுரும் இதில் உறுப்பினர்கள். திருக்குறள் இத னில் அரங்கேறியுள்ளது. இறையனுர் அகப்பொருள் உரை இங்குக் கண்டதுபற்றி நம்பி திருவிளேயாடல் கூறுகின்றது. கல்லாடரும் திருமூலரும் கூட இதன் உறுப்பினர்களாக உணரவிருக்கின்றது. 'கொங்குதேர் வாழ்க்கையஞ்சிறைத் தும்பி' என்ற பாடல்பற்றிய விவாதம் நக்கீரருக்கும் இறையனுருக்குமிடையே இதனிற்முன் நிகழ்ந்திருக்கின் றது. மாபாரதம் தமிழ்ப்படுத்தியதுடன்அப் பெருந்தேவனுர் தொகை நூல்களேத் தொகுத்துக் கடவுள் வாழ்த்துப் பாடி யிருக்கிருர்.

'நன்பாட்டுப் புலவனுய்ச் சங்கமேறி நற்கனகக் கிழி தருமிக்கருளினேறன் காண்' என நாவுக்கரசரும் 'அந்தண்

மதுரைத் தொகை யாக்கினுனும்' எனச் சம்பந்தரும் பொய் யடிமையில்லாத புலவர் எனச் சுந்தரரும் இதனை முதலில் குறிக்கின்றனர். சின்னமனூர்ச் செப்பேடுகள் 'மாபாரதம் தமிழ்ப்படுத்தியும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்' என்பதில் இதுபற்றிப் பேசுகின்றது. எனவே பாரதம் பாடிய பெருந் தேவனுர் காலத்துத் தோன்றியுள்ளது. நக்கீரர் இறைவ னுடன் வாதிட்ட இதனை அறிஞர் பலர் கி. பி. 475ல் மதுரை யில் தோன்றிய வச்சிரநந்தியின் ஜைனசங்கமாகக் கருது கின்றனர். அது முழுவதும் ஜைனர்களாலேயே ஜைன வளர்ச்சிக்காகவே ஏற்பட்டதென வரலாற்ருளர் கூறுவர். பௌத்தர் சிலரும் கலந்தது. பெரிதும் சைவர் களால் சைவ வளர்ச்சிக்கென ஏற்படுத்தப்பட்டது. இதன் தோற்றத்தைத் திருவிளையாடல் பேசுகின்றது. வச்சிர நந்தி சங்கத்திற்கெதிராகச் சைவத்திற்காக இயன்றதோர் தனிச் சங்கமாகலாம் இதுவெனப் பி. டி. சீனிவாசய்யங்கார் போன்ருேர் கருதுவது பொருத்தமாகலாம். அவர்களுக் கெனத் தனிச் சங்கமிருந்ததால் இதில் ஜைனர்களில்லை. கீழ்க்கணக்கு நூல்கள் பலவற்றை யியற்றிய ஜைனர்கள் வச்சிரநந்தி சங்கத்தவராகலாம். நான்காம் சங்கம் சமயப் பொதுமையும் அமைதியும் நிலவியகாலத்துத் திகழ்ந் துள்ளது.

கி. பி. ஆரும் நூற்ருண்டின் பிற்பகுதியில் சிறந்த பல்ல வரும் பாண்டியரும் ஆண்டுள்ளனர். அதனுல் நாட்டில் ஒரு நல்ல அமைதி ஏற்பட்டு இலக்கிய வளர்ச்சிக்கும் சங் கத்தோற்றத்திற்கும் இடமேற்பட்டிருக்க வேண்டும். திரு விளையாடலால் 49 புலவர்கள் இச்சங்கத்திருந்ததாக அறி கிருேம். திருவள்ளுவ மாலையில் பாடியுள்ள புலவர்களில் இந்த 49 பேரும் அடங்கியுள்ளனர். திருவள்ளுவமாலை நம் பற்குரியதே. ஒரு சில கற்பனைகளைத் தவிர அதில் உள்ளன உண்மையாகலாம். 'உலகெலாம்' என இறைவன் அடி

யெடுத்துக் கொடுத்தான் என்பதால் பெரியபுராணத்தை வரலாறன்றெனத் தள்ளிவிடுவதில்லை. திருவள்ளுவமாலையில் அசரீரி, நாமகள் பாடல்களும் பெருந்தேவனுர் போன்ருேர் இயற்றியிணைத்த கற்பனைகள். இதில் பாடிய 53 புலவரில் அசரீரி நாமகள்; இறையனுர் உருத்திரசன்மர் முதலோர் பாடல்களை நீக்கிவிட்டால் 49 புலவர்களாகிவிடுகின்றனர். பல பிரதிகளில் இச் சங்கத்திருந்த கபிலபரணர் முதலோரைக் கபிலதேவ நாயனுர் பரணதேவ நாயனுர் நக்கீரதேவ நாயனுர் கல்லாடதேவ நாயனுர் குலபதி நாயனுர் என்றே குறிப்பிடக் காண்கிருேம். எனவே இவர் பிற் சைவ நாயன்மார் வாழ்ந்த 6 – 7ஆம் நூற்ருண்டுகட் கண்மையாக விளங்கியவர்களாக அறியலாம். எனவே இவர்களைக் கடைச் சங்கப் புலவர்களுடன் குழப்பிவிடலாகாது. அவர்கள் பெயர் பலவற்றை இக்காலத்திலும் அப்படியே தரித்துள்ளனர். 'தரணியிற்பொய்ம்மையிலாத் தமிழ்ச் சங்கமதிற் கபிலர் பரணர் நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது பல்புலவோர் என நம்பியாண்டார் இச்சங்கத்தையும் புலவரையும் பற்றிக் கூறுகிருர். இறையோன் பொருட்குப் பரணர் முதல் கேட்ப பெருந்தமிழ் விரித்த – புலவனும் நீயே எனக் கல்லாடம் பரணர் முதலிய இச்சங்கப் புலவரைப் பேசுகின்றது. இப்புலவர்கள் பிற்காலத்தவர்கள் கி. பி. ஆரும் நூற்ருண்டிற்குரியவர்கள் என்பதற்குரிய சான்றுகள் நக்கீரரது 11ஆம் திருமுறைப் பாடல்களில் கிடைக்கின்றன. பதினேராம் திருமுறைப் பாடல்கள் இச்சங்கத்தில் பாடப்பெற்றனவென்பதற்குத் திருவிளையாடற் புராணமும் கல்லாடமும் சான்றுபகர்கின்றன. கைலைபாதி காளத்திபாதி அந்தாதியில் நக்கீரர் வியாக்ரபாதரைக் குறிக்கிருர். பதஞ்சலி வியாக்ரபாதர் முதலோர் கி. பி. 5 – 6ஆம் நூற்ருண்டினர். திருமூலர் திருமந்திரத்தில் இவர்களைக் குறிக்கிருர். நக்கீரர் கோபப் பிரசாதத்தில் கோச்செங்கணுன்;

சாக்கிய நாயனுர்; சண்டேசர் முதலோரைப் பாராட்டு கிருர். வரலாற்ருசிரியர் கோச்செங்கணுனை கி. பி. ஆரும் நூற்ருண்டிற்குரித்தாக்குவர். பொய்கையாழ்வாரால் களவழியில் பாடப்பெற்றவன் இவனுயின் பொய்கையாழ்வாருக்குரிய ஆரும் நூற்ருண்டினன்.

கண்ணப்பரும், சண்டேசரும்; சாக்கியரும் ஆரும் நூற்ருண்டை யொட்டிக் கி. பி. 4 – 5ஆம் நூற்ருண்டுகளில் வாழ்ந்தவர்களாகவே சைவர்களும் வரலாற்ருளரும் ஒப்புவர். இவர்கள் 1–2 நூற்ருண்டுகளில் வாழ்ந்திருப்பின் தொகை நூல்களில் குறுப்பில்லாமற் போகாது. எனவே சாக்கியர் சண்டேசர் கோச்செங்கணுன் வியாக்ரபாதர் முதலியோருக்குப்பின் விளங்கிய நக்கீரர் முதலிய நான்காஞ் சங்கப்புலவர்கள் கி. பி. ஆரும் நூற்ருண்டில் வாழ்ந்திருந்தனரென்பது உண்மையாகலாம். புறநானூற்றில் கோச்செங்கணுன் சேரமான் கணைக்காலிரும்பொறை ஆகியோரைப் பற்றிய 74ஆம் பாடலை அச்சேரனே பாடியுள்ளான். இவரிருவரையும் கடைச்சங்கப் புலவரெவரும் பாடாதது குறிக்கத்தக்கது.

திருவிளையாடலில் வங்கிய சூடாமணி என்பவன் காலத்தில் நக்கீரர் வாதம் நிகழ்ந்திருக்கிறது. திருவிளையாடல் பாண்டியர்களுக்கு ஒரு காலவரிசை (Generology) கணிக்கமுடிகின்றது. அதன்படி இவ்வங்கிய சூடாமணி சுமார் கி. பி. ஆரும் நூற்ருண்டில் ஆண்டிருக்கிருன். வரலாற்றின்படி பாண்டியன் அவனி சூளாமணி 7ஆம் நூற்ருண்டுத் தொடக்கத்தில் ஆண்டிருக்கிருன். இவ்விரு சூளாமணிகளும் ஒருவராளுல் இச் சங்ககாலம் ஓரளவு உறுதிப்படுகின்றது. வேள்விக்குடிச் செப்பேடுகளும் சின்னமனூர்ச் செப்பேடுகளும் பாண்டியரின் பரம்பரையை விவரிக்கின்றன. வேள்விக்குடிச் செப்பேடு பல்யாகசாலை முதுகுடுமி

யிலிருந்து தொடங்கிக் கி. பி. ஆறும் நூற்ருண்டுப் பிற்பகுதி யிலிருந்த கடுங்கோனைக் குறித்து மேலே செல்கின்றது. கடுங்கோன் காலம் திருவிளையாடல் அவனி சூளாமணிக்கு முற்பட்ட காலம். திருவிளையாடல் குலசேகர பாண்டிய னிடத்திருந்து தொடங்குகின்றது. அவனைப் பல் யாகசாலை முதுகுடுமியாகக் கருதினல் அவனையடுத்த சுந்தரபாண்டி யன் உக்கிரபாண்டியன் ஆகியோரைச் செப்பேடு குறிக்கும் புதன் புரூரவன் ஆகியோருடன் ஒப்பிடலாம்.

புறநானூற்றுப் பாண்டியருள் புதனும் புரூரவனும் தலை யாலங்கான நெடுஞ்செழியனுகவும் உக்கிரப் பெருவழுதி யாகவும் கருதப்படுவர். திருவிளையாடல் உக்கிரபாண்டிய னுக்கும் வங்கிய சூடாமணிக்கும் இடையில் 13 தலை முறைப் பாண்டியரைக் குறிக்கின்றது. வரலாற்று மரபில் ஓரரசனுக்களிக்கும் 25 ஆண்டுகள் வீதம் பதின்மூவருக் கும் 325 ஆண்டுகள் ஆகின்றன. உக்கிரபாண்டியன் காலம் கி. பி. 300 ஆனல் வங்கிய சூடாமணியின் காலம் கி. பி. 625 ஆகின்றது. இது மிகவும் பொருத்தமான கணக் கீடாகலாம்.

வரலாற்றில் இஃதிருண்ட காலமெனப்படினும் இலக்கி யத்தைப் பொறுத்தமட்டில் ஒளியுடையதெனலாம். பொற் காலமெனப்படும் குப்தருடைய காலம் இவ்விடைக்கால நூற்ருண்டுகளிற்ருன் நிகழ்ந்துள்ளது. தமிழிலக்கியத்திற் கும் இதனைப் பொற்காலமெனில் தவறில்லை. திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, கீழ்க்கணக்குகள் முதலாம் சிறந்த இலக்கியச் செல்வங்கள் இக்காலத்துத் தோன்றி யுள்ளன. எதிலிருந்து எது வந்தது என்பதுபற்றி நோக் காமல் இந்திய வரலாற்றில் வடக்கிலும் தெற்கிலும் (தமிழி லும்) ஒரே மாதிரி இலக்கியங்கள் இலக்கிய முயற்சிகள் ஏற் பட்டுள்ளன. குப்தர் காலம் இலக்கியத்திலும் தத்துவத்தி

லும் அறிவியலிலும் மிகவும் மேம்பட்டிருந்துள்ளது. கணிதம், வானநூல், மருத்துவம் முதலிய அறிவியல் துறைகளெல்லாம் அங்கு வளர்ந்தன. வராகமிஹிரன் போன்றவான நூலார் இருந்தனர். பரிபாடல் சிலப்பதிகார முதலியவற்றில் வானநூற் குறிப்புக்கள் பலவாகவுள்ளன. குப்தர் காலச் சிற்ப வளர்ச்சி கோச்செங்கணுன், பல்லவசிம்ம விஷ்ணு ஆகியோர் ஆட்சியில் காணப்படுகின்றது. பஞ்ச தந்திர கதைக் குறிப்புக்கள் கீழ்க் கணக்குகளில் உள்ளனவாகக் கூறப்படும். ஓவிய வளர்ச்சி மணிமேகலையில் உணரப்படுகின்றது. திக்நாகரின் புத்த தத்துவங்கள் மணிமேகலையிலும் யோக, சைவ தத்துவங்கள் திருமந்திரத்திலும் காணப்படுகின்றன. பிரகஸ்பதி (வியாழன்) நூல் கலித்தொகையில் குறிக்கப்படுகின்றது. புராணங்கள் உபபுராணங்கள் ஆகியவற்றின் கதைகள் பரிபாடல் கலித்தொகை சிலப்பதிகாரம் ஆகியவற்றில் கூறப்படுகின்றன. காளிதாசன்; விசாகதத்தன்; பாசன்; சூத்ரகன், பாரவி, தண்டி, சுபந்து ஆகிய உயர்ந்த நாடகாசிரியர்கள் இக் காலத்தேதான் இலங்கியுள்ளனர், சிலப்பதிகாரம் மணிமேகலை போன்ற நாடகக் காப்பியங்கள் இங்கே தோன்றியுள்ளன. அங்கே வடமொழிக்களிக்கப்பட்ட ஆக்கமும் ஊக்கமும் இங்கே தமிழுக்களிக்கப்பட்டன.

அடியார்க்கு நல்லார்கூறும் இசை நாடக நூல்கள் பல இப்போதே இயன்றிருக்கக் கூடும். குப்தர் காலத்தில் நாரதர் ஒருவர் குறிக்கப்பெறுகிருர். இங்கோர் நாரதர் பஞ்சபாரதீயம் இயற்றியிருக்கக்கூடும். இந்நூலின் ஒரு பாடலை அடியார்க்கு நல்லார் வேனிற்காதையுரையில் மேற்கோளாகக் காட்டுகிருர். அறிவனுரின் பஞ்சமரபிலிருந்தும் ஒரு சூத்திரத்தை அவர் எடுத்துக் காட்டுகிருர். பரதமும் ஆதிவாயிலாரது பரதசேனுபதியமும் இப்போதே

இயன்றிருக்கக்கூடும். இரண்டும் அடியார்க்கு நல்லாரால் அறிவிக்கப்படுவனவேயாம். நச்சினார்க்கினியரும் சிந்தாமணியுரையில் பரதசேனாபதியப் பாடலை எடுத்துக் காட்டுகிறார். நூல் என்ற நாடகத் தமிழ்பற்றி நக்கீரர் மயிலைநாதர் ஆகியோருடன் அடியார்க்கு நல்லார் சில சூத்திர மேற்கோளுடன் கூறக் காண்கிறோம். இவற்றுள் இடைச் சங்கத்தும் கடைச்சங்கத்தும் இயன்றன சிலவும் இருக்கக் கூடுமோ தெரியவில்லை. வடமொழிப் பரதசாத்திரம் கி. பி. 2–3 நூற்றாண்டுகளில் பேசப்படுகின்றது.

பத்துப்பாட்டு

கடைச்சங்க நூல்களுள் இதனை நக்கீரர் இணைக்காமையாலும் திருமுருகாற்றுப்படை நான்காம் சங்கத்ததாகலானும் அவுணர் குறிப்பு அதனுள் வருதலானும் இத்தொகுதி சங்கச்சார்புக் காலத்துக் குரியதாயிற்று. பாடல்கள் சங்கத் தனிப்பாடல்களிலும் நெடுமையானவை, பரிபாடல் போன்றவை. வஞ்சிப் பாடல் நடையன இவற்றுட் பலவாம். ஆற்றுப்படை இலக்கியம் இங்கு விரிவும் விளக்கமுமடைந்துள்ளது. ஆற்றுப்படையுள் தமிழ் வள்ளல்கள் புகழ்மட்டுமன்றிப் புலவர்தம் பெருமையும் வகைமையும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. மலைபடுகடாமாகிய கூத்தராற்றுப்படையுடன் ஆற்றுப்படைகள் ஐந்தாம். இவை புறமெனில் குறிஞ்சிப்பாட்டு முதலாம் ஐந்தும் அகத்திணையின் பாற்படும். குறிஞ்சி முதலிய திணைகள் இவ்வைந்து பாடல்களிலும் தனித்தனியே விளக்கப்பெற்றுள்ளன. கடைச் சங்கத்தினுட் சிறந்த கரிகாலன்; நெடுஞ்செழியன், இளந்திரையன் முதலியோரைப்பற்றியெல்லாம் பாடல்கள் அமைந்துள்ளன. சேரரைப்பற்றிய பாடல் எதுவும் இதில் இல்லாமை நோக்கத் தக்கதாம்.

முருகாற்றுப் படையைப் பாடிய நக்கீரரே நெடுநல்வாடையைப் பாடினரா கடைச்சங்க நக்கீரரா நோக்க வேண்டும். நச்சினார்க்கினியரே பாட்டுடைத் தலைவனைத் தலையாலங்கான நெடுஞ்செழியனென்கிறார். பாடற்குறிப்பில்லை. நெடுஞ்செழியனென்ப துண்மையானால் நக்கீரர் கடைச்சங்கத்தவரே.

பாடலில் உள்ள வானநூற் குறிப்பும் காலக் கணிப்பிற் குதவக்கூடும். கடியலூர் உருத்திரங்கண்ணனார் பட்டினப் பாலையில் கரிகால் வளவனையும் பெரும்பாணாற்றுப் படையில் இளந்திரையனையும் பாடிய பாடல்கள் இரண்டுடன் அவர் பாடல்கள் அகநானூற்றில் ஒன்றும் குறுந்தொகையில் ஒன்றும் உள்ளன. மதுரைக்காஞ்சியில் தலையாலங்கான நெடுஞ்செழியனைப்பாடிய மாங்குடி மருதனார் புறநானூறு, அகநானூறு, நற்றிணை குறுந்தொகை ஆகியவற்றிலும் பாடியுள்ளார். குறிஞ்சிப் பாடற் கபிலர் அகம் புறம் அனைத்துப்பாடல்களிலும் பாடியுள்ளார். மற்றவர்கள் பத்துப் பாட்டுப் பாடல் ஒவ்வொன்றனையே பாடினர். கரிகாலனைப்பற்றிய பொருநராற்றுப் படையை முடித்தலைக் கண்ணியாரும் நல்லியக்கோடனைப்பற்றிய சிறுபாணாற்றுப் படையை நல்லூர் நத்தத்தனாரும் முல்லைப்பாட்டினை நப்பூதனாரும் நன்னன்சேய் நன்னனைப்பற்றிய மலைபடு கடாத்தை இரணியமுட்டத்துப் பெருங்குன்றத்துப் பெருங்கௌசிகனாரும் பாடினர். இவை 103 முதல் 782 அடிகள் வரைப் பட்ட அளவைகளையுடையவை. முல்லைப்பாட்டு போன்றவை கி. பி. மூன்றும் நூற்றாண்டுப் பிற்பகுதியிலும் இயன்றிருக்கக்கூடும்.

### 1. திருமுருகாற்றுப்படை

அன்பரை ஆண்டவனிடம் ஆற்றுப்படுத்துதல் தொல்காப்பிய ஆற்றுப்படை இலக்கணத்திற்கு வேறானது.

நக்கீரர் 11ஆம் திருமுறை திருவலஞ்சுழி மும்மணிக் கோவையில் சிவனிடத்தில் அன்பரை ஆற்றுப்படுத்தும் பாடலொன்று பாடுகிறுர். அவரே இங்குத் திருமுருகாற் றுப் படை பாடுகிறுர். வள்ளலிடம் பரிசுபெற்றுவரும் புல வன் எதிரில்வரும் புலவனிடம் தான் பெற்ற பெருவளங்க ளைக் கூறி அந்தப் புலவனையும் அவ்வாறே பெறுமாறு வள் ளலிடம் வழி கூறி அனுப்புதலே ஆற்றுப்படை. அருட் செல்வத்தைப் பெருமாறு முருகாற்றுப்படுத்தலே இவ்வாற் றுப்படையின் நோக்கம். அவுணர்; பழமுதிர்சோலை முதலிய படைவீடுகள்; முப்பத்துமூன்றும் பதினெட்டுமாகிய தேவர்கள் (167_8) ஆகியன இந்நூலைப் பிற்காலத்திற்குரிய தாக்குவனவாம். முருகனது பிறப்பு பரிபாடலினும் வேருக முருகாற்றுப்படையில் காணப்படுகின்றது.

317 அடிகளைக்கொண்ட இப்பாடல் முருகனது பரங் குன்றம் திருச்சீரலைவாய் ஆவினன்குடி திருவேரகம் குன்று தோருடல் பழமுதிர்சோலை முதலிய படைவீடுகளையும் அங்கு முருகன் அமர்ந்துள்ள தோற்றங்களையும் பாராட்டு கின்றது. சூரரமகளிரும், அஞ்சுவரு பேய்மகளும் செய்யும் இருவேறு வகைப்பட்ட வழிபாடுகளும் அழகுற வருணிக்கப் படுகின்றன. முருகனின் ஆறுமுகங்களும் பன்னிரு கைக ளும் கொண்ட செயல்கள்; வழிபாடியற்றும் முனிவரின் உயர்மனிதத் தோற்றம்; அழகுறு முருகனின் மணங்கமழ் தெய்வத்திள நலம் முதலியவை அமைதிபெற இதனில் கற் பனை செய்யப்பெறுகின்றன. சங்கப் பாடல்களில் முருகன் இளமைக்கும் முன்னியது முடிக்கும் ஆற்றலுக்கும் இடமாக அப்பாடல்களில் பேசப்பெறுகிருன். முதல் ஆறுவரிகளில் மொழியப்பெறும் முருகனது இயல்புகள் முதல்வணுகிய கடவுளியல்புகளை மொய்ம்புற வடித்துக் காட்டுகின்றன. இடையிடையே நகரங்களின் இயல்புகள் அருள்நெறிக்குகந் தனவாக அமைத்துரைக்கப்பெறுகின்றன. 'முருகாற்றுப்

படுத்த உருகெழுவியநகர்' என ஒவ்வொரு நகரமும் ஊரும் முருகனெறியில், கடவுணெறியில் இயங்கத் தொடங்குகின்றது. அடியார் வேண்டுநர் வேண்டியாங்கெய்தித் தவப் பயனை யடைகின்றனர்.

## பொருநராற்றுப்படை

248 அடிகளையுடையது. கரிகாலனைப்பற்றி முடத்தாமக் கண்ணியார் பாடியது. யாழின் அமைப்பும் இசை, (கலை) அருளின் மாறுபாடுகளை யெல்லாம் அகத்தினின்றும் அகற்றி அமைதிசெய்யு முறையும், கரிகாலன் காவிரி யாகியோர் சிறப்பும் ஐவகை நிலங்களின் உணவு வகைகளும் இதனில் விரித்துரைக்கப்படுகின்றன. பாடினியின் அழகினைக் கற்பனை செய்தலும் யாழ் உறுப்புக்களை விவரித்தலும் இப்பாடலின் சிறந்த பகுதிகளாகும். பட்டினப் பாலையுடன் இப்பாடலும் கரிகாலனைப்பற்றி யறிந்துகொள்ளுதற்குதவுவது. இவ்வாசிரியர் இதனைத்தவிர வேறெப் பாடலையும் பாடவில்லை.

## சிறுபாணாற்றுப்படை

269 அடிகளில் ஓய்மாநாட்டு நல்லியக்கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது. இடைக்கழிநாடு செங்கற்பட்டு மதுராந்தகக் கடற்கரைப் பகுதியாகும். ஓய்மானாடு திண்டிவனப் பகுதியாகும். கடைவள்ளல்களைப்பற்றியெல்லாங் கூறி நல்லியக்கோடன் அவர்கட்குப் பின் வள்ளலாய் வாழ்ந்தவன் என்கிறது பாடல். குமணனும் இவ்வாறே வள்ளல்கட்குப் பின் வாழ்ந்தமையைப் புறநானூறு கூறும். மூவேந்தர் வள்ளல்கள் ஆகியோரது நாடுகளைப்பற்றியும் ஆட்சியைப் பற்றியும் சுருக்கமாகவும் அழகாகவும் இதனில் கூறப்படுகின்றது. தமிழரது விருந்தோம்புந்திறன் நன்கு வருணிக்கப்படுகின்றது. சீறி

யாழின் இசைநயமும் நல்லியக்கோடனின் தலைமையியல்பு களும் நன்குணர்த்தப்படுகின்றன. பத்துப்பாட்டில் இவன் ஏறுமாநாட்டு நல்லியக்கோடன் எனப் பெறுகிறுன். ஓய் மாநாட்டு நல்லியக்கோடனையும் இவனையும் அறிஞர் ஒன் ருகக் கருதுகின்றனர். இவன்குடி ஓவியர்குடியென்ற அழ கிய பெயரையுடையது. ஆமூர், வேலூர் முதலிய ஊர்கள் இப் பாடலில் பாராட்டப்பெறுகின்றன. நத்தத்தனுர் இஃ தொன்றனுக்கே ஆசிரியராகக் காணப்பெறுகிருர்.

### பெரும்பாணுற்றுப்படை

500 அடிகளைக் கொண்ட இப்பாட்டுக்கு கடியலூர் உருத்திரங்கண்ணனுல் தொண்டைமான் இளந்திரையன் மீது பாடப்பெற்றது. பேரியாழ் அமைப்பு, நல்லாட்சியுள்ள நாட்டின் அமைதிநிலை, செல்வார்க்குப் பாதுகாப்புடைய நாட்டுப் பெருவழிகள், தமிழ்ப் பெண்டிரின் அஞ்சாமை; பாலை குறிஞ்சி முதலிய பண்களின் அமைதி, அந்தணருள் ளிட்ட பல திறமக்களின் உணவுமுறை; தமிழரது கட்டிடக் கலை, தொண்டையர் ஆட்சித்திறன் முதலியன இப்பாட் டில் சீர்மையுடன் செப்பப் பெற்றுள்ளன. ஆற்றுப் படை களுள் புலவரை அரசர் போற்றிப் பொன்னும் பிறவும் அளிக்குமுறை கூறப்பெற்றுள்ளது. கலையையும் கல்வியை யும் வளர்த்தல் அரசன் கடன் என்பது இதனுல் புலனுகின் றது. அதனுலேயே வள்ளுவர் 'கல்வியை' அரசியலில் அமைத்துள்ளார்.

இக்கடியலூர் உருத்திரங்கண்ணரே பட்டினப்பாலை யையும் பாடினுர். எனவே இளந்திரையனும் கரிகாலனும் ஒரு தலைமுறையினரெனத் தெரிகின்றது. இவ்வாசிரியரே அகநானூற்றில் ஒன்றும் குறுந்தொகையில் ஒன்றுமாகிய பாடல்களைப் பாடியுள்ளார். உருமுமுரருது அரவும் தப்பாது என்ற வரிகள் (43) சிலப்பதிகாரப் புரஞ்சேரியிறுத்த

காதையை (7) நினைவூட்டுகின்றன. இதிற் சிறப்பு, பாட்டுடைத் தலைவனாகிய இளந்திரையனே கவியரங்கேறியவன். நற்றிணையிலும் புறநானூற்றிலும் நான்கு பாடல்கள் பாடியிருக்கிறான். அரசியற் பொறுப்புப்பற்றிய புறப்பாடல் மிக அழகாக அமைந்தது.

## முல்லைப்பாட்டு

நப்பூதனார் இப்பாடலை 103 வரிகளிற் பாடினார். பத்துத் பாட்டுள் மிகச் சிறியது இதுவாகும். முல்லைசான்ற (தமிழகக்) கற்பொழுக்கம் பற்றியது. ஆற்றியிருத்தலே அகவாழ்க்கையின் சிறப்பெனக் கருதியதால் கற்பினை முல்லை சான்ற கற்பென்றனர். அகப்பகுதியை விடப் புறமாகிய பாசறைப் பகுதி இதனில் மிகவாக வருணிக்கப் பெறுகின்றது. பெரும்பாலான முல்லைப்பாடல்களைப் போல இதுவும் தலைவன் முல்லைவழிகளில் தேரூர்ந்து வருதலைத் தெரிவிக்கின்றது. முல்லை நிலம், யவனர் மிலேச்சர் ஆகியோரது செயல்கள் முதலியன நன்கு தீட்டப் பெறுகின்றன. புறவாழ்வே அக வாழ்வை ஆக்கவல்லது அதனால் அகவாழ்விலேயே ஆழ்ந்து புறவாழ்வை மறந்துவிடலாகா தென்பதனையே முல்லைப்பாட்டிலும் நெடுநல்வாடையிலுமுள்ள பாசறை நிலைகள் புலப்படுத்துகின்றன. தலைவி அகத்தே தனித்திருக்கையிலேயே தலைவன் பாசறையில் தனித்துக் கடமைக்காகப் பிரிந்திருக்கிறான். நப்பூதனார் பாடல் இஃதொன்றேயாகும்.

## மதுரைக்காஞ்சி

782 அடிகளையுடைய பெரும்பாடல் தலையாலங்கானத்து வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்மீது பாடப்பெற்றது. அகநானூறு புறநானூறு நற்றிணை குறுந்தொகை ஆகிய நூல்களிலும் இவர் பாடல்கள் உள்ளன.

நில்லாவுலகில் நிலையுதல் குறித்த மக்களுக்கு நில்லாதன யாவை எனக் கூறுதலே காஞ்சி. பாண்டியனின் மரபு, பல் வகை வெற்றிகள் ஆகியவற்றைக் கூறும் வரலாருக இப் பாடல் அமைந்துள்ளது. மதுரை நகரைப்பற்றிய செய்தி கள் இதனில் அழகுபெறக் கூறப்பெற்றுள்ளன. மதுரை நகரச் சிறப்பை இங்கும், சிலப்பதிகார நகரச் சிறப்புக்க ளுடன் ஒன்ருக விருக்கக் காண்கிருேம். அகத்தியர் குறிப்பு இதனிற் (41) காணப் பெறுகின்றது. நிலந்தரு திரு விற் பாண்டியனும் பல்யாகசாலை முதுகுடுமியும் குறிக்கப் பெறுகின்றனர். பாணவரசரைப்பற்றியும் பரசுராமன் வழி யினர் தென்னகத்தே பரவியதுபற்றியும் அறங்கூறவை யமும் நான்மொழிக் கோசத்து நாள்பெருங் குழுவும் அல்லங் காடியும், ஓண நன்னுள்விழாவும் இதனில் பேசப்படுகின் றன. இப்பாட்டுடைத் தலைவன் நெடுஞ்செழியனே புறநா னூற்றில் பாடியதொரு பாட்டில் மாங்குடி மருதனையும் புல வர் பாடும் புகழ் பெறுதலையும் பாராட்டியிருக்கிருன். மாங் குடி மருதனின் பாடல்கள் மிக்க பயனும் செம்மையு முடையன. புறத்தில் பாடிய இவரது பாடல்கள் பலவும் நெடுஞ்செழியனைப்பற்றியவே. அரிய குறிப்புக்கள் பல வற்றை அகத்தே கொண்டன இவருடைய பாடல்கள்.

## நெடுநல்வாடை

188 அடிகளில் இப்பாடலை நக்கீரர் பாடியுள்ளார். தலையாலங்கான நெடுஞ்செழியன் மீதென பத்துப்பாட்- டுரையாசிரியர் நச்சினுர்க்கினியர் கூறுகிருர். பகை மேற் சென்ற பாண்டியனை நினைந்திருக்கும் தலைவிக்கு ஆறுதல் கூறிக் கொற்றவையைப் பரவுவ தாக அமைந்ததிப் பாடல். பத்துப்பாட்டுள் ஒன்றிரண் டிற்குத் தவிர மற்றவற்றிற்கு நல்லாராய்ச்சிகள் இந்நூற் ருண்டைய தமிழ்ப்புலவராலும் அறிஞராலும் நிகழ்த்தப்பெற் றுள்ளன. கூதிர்கால நிலை; தமிழர்தம் சிற்பக் கட்டிடக்

கலைகள்; அரசனது பாசறை நிலை ஆகியவை அழகுறக் குறிக்கப் பெற்றுள்ளன. நெடுநல்வாடை என்பதற்கு நச்சினார்க்கினியர் கூறும் விளக்கம் அழகும் பொருத்தமும் உடையதேயாகும். பாலையது புறனாகிய வாகைத்திணையாக இதனையாக்கி அதற்குரிய கூதிர்ப்பாசறையில் இப்பாடலிற் கூறப்படும் பாசறையை உளப்படுத்துகிறார். பிரிந்திருக்கும் தலைவியின் தனிமையைப் போக்குவான் வேண்டி வீட்டிலேயே தங்கிவிடாமல் அரசியல் பாரந்தாங்கும் கடமையிற் றவறாது பாசறையின்கண் நின்றமையின் காமத்திடத்து வெற்றி (வாகை) யாயிற்றென்கிறார் நல்லுரையாசிரியர். அளவாய, நெறியாய காம நுகர்ச்சியே வாழ்க்கைக்கு வெற்றியாகும்.

## குறிஞ்சிப்பாட்டு

குறிஞ்சித் திணையைப் பற்றிய இப்பாடல் கபிலரால் பாடப் பெற்றது. 261 அடிகளைக் கொண்டது. குறிஞ்சித் திணையைப் பாடுவதில் கபிலர் தனித்திறமையை வளர்த்திருந்தார். பாலைப் பெருங்கடுங்கோ, புறத்திணை நன்னாகனார் என ஒவ்வொரு துறையிலும் தனித்திறனை வளர்த்திருந்தனர் புலவர். இதனால் இலக்கியம் வளர்ச்சியும் தெளிவும் அழகுமுற்றது. ஆரியவரசன் பிரகதத்தன் என்பானுக்குத் தமிழ் அறிவிப்பான் இப்பாடலைக் கபிலர் பாடினார். தமிழ் எனில் அகத்திணைக் குறிஞ்சியொழுக்கம் என்பதிதனால் புலனாகின்றது. வற்புறுத்தலாகவும் வேண்டா வெறுப்பாகவுமில்லாமல் மணக்கப்போகும் ஆண் பெண்கள் தாம் விரும்பியபடியே மணத்தல்தான் சிறந்தது என வற்புறுத்துவதே களவியல் குறிஞ்சியின் பாற்பாட்ட அறத்தொடு நிற்றல் என்னும் துறையாகும். இத்துறையை விளக்குவதே குறிஞ்சிப்பாடல். கலித்தொகையில் தான் விரும்பியவனுக்கு மணஞ்செய்து கொடுக்காததால் நாட்டில் வள்ளிக்கிழங்கும் தேனும் விளைதலில்லை, இயற்கையே பயன்தர மறுக்கிறது

என்றதோர் பாடலுள்ளது. வீட்டிலமைதியே நாட்டில் அமைதி. அதற்கு வீட்டிலிருக்கும் ஆண் பெண் இருவர் உள்ளத்தும் அமைதி இருக்கவேண்டும். அதற்கு அவர்கள் வாழ்க்கைத் தொடக்கம் அல்லது மணம் 'இருவேம் ஆய்ந் ததாகத்' 'தாம் வீழ்வதாக' (இருவரும் உளமார விரும் பியதாக) இருக்கவேண்டும்.

தலைவி பாங்கிக்கும் பாங்கி செவிலிக்கும் அறத்தொடு நிற்கும் நிலைகள் அழகுபெற வருணிக்கப்பெற்றுள்ளன. இப் பாடலின் சிறப்பு, தமிழகத்தின் 99 பூக்கள் இதனுள் குறிக் கப் பெற்றுள்ளன. இவற்றை விளங்கிக்கொண்டால் தமிழ் இலக்கியப் பூக்களும் தமிழ்நாட்டுத் தாவர இயலும் ஒருவாறு புரியக்கூடும். காதலரின் முதற்காட்சி இப்பாடலில் கை புனைந்தியற்றுக் கவின்பெறத் தீட்டப் பெற்றுள்ளது. காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே தோன்றும் தமிழ்மகன தஞ்சாமையும் இங்கு நன்கு புலனுகின்றது.

### பட்டினப்பாலை

301 அடிகளைக் கொண்டது. கரிகாலனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனுர் பாடியது. (காவிரிப்பூம்) பட்டினத் துச் சிறப்பொடு கூடிய பாலைத்திணை என்பது இதன் உட் பொருளாகும். பொருள் வயிற்பிரியும் தலைவன் பட்டினத் திலும் சிறந்த தலைவியின் அருமையையும் அன்பினதகலத் தையும் இளமைய தருமையையும் நினைத்துப் பிரிவைக் கைவிட்டதாகக் கூறுவது பாடல். கரிகாலன் வரலாறு; நகர வாணிபம்; தமிழர்தம் கடல் வாணிபம்; நீர்வளம் ஆகியவை இதிற் கூறப் பெறும் சிறப்புச் செய்திகள். சிலப் பதிகாரத்தை உடன் வைத்து இப்பாடலைப் படிக்கவேண் டும். என்றும் நினைக்கத்தக்க இலக்கியவரிகள் இதனிற் பலவுள. பூதசதுக்கங்கள்; தொல்லாணை நல்லாசிரியர் உறழ்வு குறித்தெடுத்த கொடிகள்; தவப்பள்ளித் தாழ்காவு

கள்; பாடலோர்த்து நாடக நயந்தும் மாஅகாவிரி மணங் கூட்டுந் தூஉவெக்கர்த்துயின் மடிந்தும் மகிழுமக்கள் ஆகியவை பற்றிய பகுதிகளை இளங்கோவடிகள் அப்படியே எடுத்துக் கொண்டார்.

### மலைபடுகடாம்

583 அடிகளையுடையது. இரணியமுட்டத்துப் பெருங் குன்றூர்ப் பெருங் கௌசிகனுர் நன்னன் சேய்நன்னனைப் பாடியது. கூத்தராற்றுப் படையெனவும் இது வழங்கப்படும். மதுரை ஆனைமலை அழகர்மலைப் பகுதிகள் இரணியமுட்டமாகும். மலைக்கு யானையை உவமித்து அதன்கண் பிறந்த ஓசையைக் கடாம் என்றதால் இப்பாடல் மலைபடுகடாம் என்ருயிற்று. வடஆர்க்காட்டு சவ்வாது மலைப்பகுதிகள் நன்னனுக்குரியவாகும். செங்கண்மாவென்னும் அவனது நகரையும் அதனைச் சுற்றிய நாட்டுமக்கள் பண்பையும் விருந்தோம்பு மேன்மையையும் கூறுவது பாடல். இவ்வாசிரியர் பாடிய பாடல் இஃதொன்றேயாகும். பாடலின் பலவரிகளும் பகுதிகளும் சிலப்பதிகார நினைவையூட்டுதலைக் காணலாம். இங்குக் கூத்தர்க்குரிய பெருவழிச் சிலப்பதிகாரத்து மதுரைப் பெருவழியை யொத்திருக்கின்றது. பத்துப்பாட்டில் தமிழகத்தின் பூகோள அறிவியல் மிக நன்ருக விவரிக்கப்பெற்றுள்ளதெனலாம். புறநானூறு முதலிய கடைச்சங்கப் பாடல்களில் உறையூரே மிகுதியாகப் பேசப்படுகின்றது. புகாரைப்பற்றிய குறிப்பு இல்லையென்றே கூறலாம். புகாரைப்பற்றிய சிலப்பதிகாரக் கற்பனைகள் அடிக்கடி பத்துப்பாட்டுள் வருதலால் சிலப்பதிகாரத்தைப் போலப் பத்துப்பாட்டுள் பல பாடல்கள் 2–3ஆம் நூற்ருண்டு நிகழ்ச்சிகளையும் வரலாறுகொண்டு இரண்டு நூற்ருண்டுகள் கழித்துப் புலவர்களால் நினைத்தும் தொகுத்தும் எழுதப்பட்டனவோ ஆராயவேண்டும்.

திருமுருகாற்றுப்படை

1. உலகமுவப்ப வலனேர்பு திரிதரு, பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாஅங்கு
ஓவறவிமைக்கும் சேண்விளங் கவிரொளி
செறுநர்த்தேய்த்த செல்லுறழ் தடக்கை; மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
2. கைபுனை ந்தியற்றாக் கவின்பெறு வனப்பின்
3. மறுவில் கொற்றத், தெய்யா நல்லிசைச் செவ் வேற் சேய்
4. தாவில் கொள்கைத் தந்தொழில்
5. உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீரலைவாய்
6. மாசற விமைக்கும் உருவினர்; இகலொடு செற்ற நீக்கிய மனத்தினர் யாவதும்
கற்றோரறியா வறிவினர், கற்றோர்க்குத் தாம் வரம் பாகிய தலைமையர் காமமொடு கடுஞ்சினங் கடிந்த காட்சியர், இடும்பை யாவதுமறியா இயல்பினர்
7. நோயின்றியன்ற யாக்கையர்
8. முருகாற்றுப்படுத்த உருகெழுவியனகர்
9. வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
10. பலர்புகழ் நன்மொழிப் புலவர்
11. பெரியோரேத்தும் பெரும் பெயரியவுள்
12. மணங்கமழ தெய்வத்திளநலம் காட்டி

பொருநராற்றுப்படை

1. அருஅயாணர் அகன்றலைப் பேரூர்
2. பருகுவன்னவருகா நோக்கமோ, டுருகுபவைபோ லென்பு குளிர்கொளீஇ
3. மழையென மருளும் மகிழ்செய் பாடம்
4. நில்லாவுலகத்து நிலைமைதூக்கி
5. அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்

சிறுபாணாற்றுப்படை

1. முல்லைசான்ற கற்பின் மெல்லியல்
2. தமிழ்நிலைபெற்ற தாங்கரு மரபின், மகிழ்நனை மறுகின் மதுரை
3. செய்ந்நன்றி யறிதலும் சிற்றின மின்மையும் இன்முகமுடைமையும் இனியனாதலும்
4. கருதியது முடித்தலும் காமுறப் படுதலும்

பெரும்பாணாற்றுப்படை

1. அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்
2. யானை தாக்கினும் அரவுமேற் செலினும், நீனிற விசும்பிற் வல்லேறு சிலைப்பினும் சூன்மகண் மாறு மறப்பூண் வாழ்க்கை
3. செம்பூத்தூஉய செதுக்குடை முன்றில்
4. சுடுமணோங்கிய நெடுநகர் வரைப்பு
5. மலர்தலையுலகத் துள்ளும் பலர்தொழ விழவு மேம் பட்ட மூதூர்
6. நயந்தோர் தேஎம் நன்பொன்பூப்ப
7. நூலோர் புகழ்ந்த மாட்சிய

முல்லைப்பாட்டு

1. யாழிசை இனவண் டார்ப்ப

மதுரைக்காஞ்சி

1. கண்டுதண் டாக் கட்கின்பத்து
2. பொய்யறியா வாய்மொழியார் புகழ்நிறைந்த நன்மாந்தர்
3. பேருலகத்து மேஎந்தோன்றிச் சீருடைய விழுச் சிறப்பின்

4. அரியவெல்லாம் எளிதினிற் கொண்டு
5. கெடாது நிலையியர் நின்சேண் விளங்கு நல்லிசை
6. பயனறவறியா வளங்கெழு திருநகர் 7. மாசற விளங்கிய யாக்கையர்
7. நன்றும் தீதும் கண்டாய்ந்தடங்கி யன்புமறனும் ஒழியாது காத்து
8. மன்றுதொறு நின்ற குரவை சேரிதொறும் உரையும் பாட்டுமாட்டும் விரைஇ
9. முருகியன்றன்ன உருவினையாகி
10. அரியதந்துகுடியகற்றிப் பெரியகற்றிசைவிளக்கி
11. நாளும் மகிழ்ந்தினி துறைமதி பெரும, வரைந்து நீ பெற்ற நல்லூழியையே

நெடுநல்வாடை

1. பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென
2. ஆறுகிடந்தன்ன அகனெடுந்தெரு
3. பீடுகெழு சிறப்பிற் பெருந்தகை

குறிஞ்சிப்பாடல்

1. வேறுபல்லுருவிற் கடவுட் பேணி
2. இருவேமாய்ந்த மன்றல் இதுவென நாமறிவுருவிற் பழியுமுண்டோ
3. கொடுப்பினன் குடைமையும் குடிநிரலுடைமையும் வண்ணமும் துணையும் பொரீஇ யெண்ணாது, எமியேந் துணிந்த ஏமஞ்சாலருவினை
4. ஆகமடைய முயங்கலின்
5. வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு விருந்துண்டெஞ்சிய மிச்சில் பெருந்தகை நின்னோ டுண்டலும் புரைவது

6. இளமையி னிகந்தன்றுமிலனே வளமையிற்
றன்னிலை தீர்ந்தன்றுமிலனே

பட்டினப்பாலை

1. புனல் பரந்து பொன்கொழிக்கும் விளைவருவியன் கழனி
2. கலங்குபகையறியாக் கொழும் பல்குடிச் செழும் பாக்கம்
3. பெறற்கருந்தொல் சீர்த்துறக்கம்
4. பலகேள்வித்துறை போகிய தொல்லாணை நல்லாசிரியர்
5. கொலை கடிந்தும் களவு நீக்கியும்
புண்ணியமுட்டாத் தண்ணிழல் வாழ்க்கை
6. மலையகழ்க்குவனே கடல்தூர்க்குவனே
வான்வீழ்க்குவனே வளிமாற்றுவனெனத்
தான்முன்னிய துறைபோகலின்
7. கோயிலொடு குடிநிறீஇ
8. வேலினும் வெய்ய கானமவன், கோலினும்
தண்ணிய தடமென் றோளே

மலைபடுகடாம்

1. தொலையா நல்லிசை யுலகம்
2. வல்லாராயினும் புறமறைத்துச் சென்றோரை
சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி
நல்லிதி னியக்குமவன் சுற்றத் தொழுக்கமும்
3. பராவரு மரபிற் கடவுள்
4. பதியெழவறியாப் பழங்குடி
5. புகழொடுங் கழிகநம் வரைந்த நாள்

**பதினெண்கீழ்க் கணக்குகள் :**

நான்காஞ் சங்ககாலம் பதினெண்மொழிகள் தமிழகத்து வந்து வழங்கிய காலம்; பதினெண் புராணங்களைப் பற்றிய பேச்சு மிகுந்த காலம். எனவே இலக்கியங்களை 18 என்ற எண்ணிக்கையில் மேற்கணக்கு கீழ்க்கணக்கு எனப் பிரித்திருக்கக்கூடும். சுருங்கிய அடிகளில் அறம் பொருளின்பங்களைக் கூறுவது கீழ்க்கணக்கு. இவற்றுள் அறநூல்களும் அகப்புறநூல்களும் உள்ளன. ஐந்திணை 50 திணைமாலை முதலியன அகநூல்கள். களவழி முதலியன புறநூல்கள். பல நூல்கள் 40–100 பாடல்கள் அளவிலேயே அமைந்துள்ளன. சங்கப்பாடல்களினும் வேருக இவை வெண்பா யாப்பினுலியன்றன. எனவே பரிபாடல் முதலியவற்றுள் காணப்படும் பண்ணிசைத் தொடர்பு குறைந்துள்ளதெனலாம்.

திருக்குறள்; நாலடியார்; பழமொழி; நான்மணிக் கடிகை; முதுமொழிக்காஞ்சி; இன்னு நாற்பது; இனியவை நாற்பது; கார் நாற்பது; களவழி நாற்பது; ஆசாரக் கோவை; திரிகடுகம்; ஏலாதி; சிறுபஞ்சமூலம்; இன்னிலை; திணைமாலை 50; திணைமாலை 150; ஐந்திணை 50; ஐந்திணை 70 என்பன கீழ்க்கணக்குகள். இவற்றுள் திருக்குறள், பழமொழி முதலியன பழமையானவை எனப் பலராலும் ஒப்புக்கொள்ளப் பெறுபவை; இன்னு நாற்பது களவழி நாற்பது முதலியவற்றின் ஆசிரியர்களை ஓரளவு அடையாளங்காண முடிகின்றது. பல விநாயக வணக்கத்துடன் தொடங்குதலால் இச் சைவசங்ககாலத்தவாகக் கருத விருப்பவையாகும். பல ஜைனர்களால் இயற்றப்பட்டவாதலால் கி. பி. 4-5ஆம் நூற்ருண்டுகட்குப் பிற்பட்டனவாகலாம். நக்கீரர் இவற்றைத் (திருக்குறளைக் கூடக்) கடைச்சங்க நூல்களில் கணக்கிடவில்லை.

வடமொழித் தர்ம சாத்திரங்களும் நீதி சாத்திரங்களும் அமரகோசம் பஞ்சதந்திரம் முதலிய நூல்களும் மிகவாகப் பெருகிய காலமிதுவாகலான் அவற்றுடன் தொடர்பை இந்நூல்கள் பலவற்றுடன் இணைத்துக் காட்டுவர் பலர். இவ்வகையில் ஒருண்மையை மனங்கொள்ளவேண்டும். எந்த நூல் முதலிற்றேன்றியதென வரலாற்றுதாரங்களுடன் முதலில் தெளிவுபடுத்த வேண்டும். வடமொழித் தமிழ் நூல்களை அவ்வாறு தெளிவுபடுத்தலருமையாகும். ஒரு குறிப்பிட்ட காலச் சமூக வமைப்பில் ஒருவகையான கருத்துக்கள் அறிஞர் உள்ளத்தே தோன்றுதல் இயல்பேயாகும். வடமொழி நூல்களுக்கடியான கதைகள் ஒரு காலத்தில் தமிழகத்தும் வழங்கியிருக்கலாம்.

கடைச்சங்க நூல்கள் அரசியல் கால நூல்களெனில் கீழ்க்கணக்கு நூல்களைச் சமயகால நூல்கள் என்னலாம். பேராசிரியர் முதலிய உரையாசிரியர்கள் கீழ்க்கணக்கு நூலாசிரியர்களைப் பிற்சான்றேர் (கடைச்சங்கத்திற்குப் 'பிற்காலச்' சான்றேர்?) என்றே குறிக்கின்றனர். 'பிற சான்றேர்' எனவும் இதற்கோர் பாடமுண்டு. பிற் சான்றேர் பத்துப் பாட்டிற்குப் பிற்பட்டவர் என்பது நச்சினார்க்கினியர் குறிப்பது (செய். 175). அச்சுப் படிகள் சிலவற்றில் கீழ்க்கணக்கு நூல்களைச் சங்கமருவிய நூல்கள் எனக் குறித்துள்ளனர். ஒரு பழைய ஏட்டில்,

> மாபுலவரெல்லாரும் மாக்கூடற் கண்ணிருந்து
> பாற்படுத்த தென்றமிழின் பாநான்கின் - வாய்ப்
> புடைத்தாய்ப்
> பண்பாய்ந்துரைத்த பதினெட்டுக் கீழ்க்கணக்கும்.

என்றிருக்கிறது. திரிகடுக நூலிறுதியில்

> திரிகடுகமென்னும் திகழ் தமிழ்ச்சங்கம்
> மருவு நல்லாதன் மருந்து' என்ற பாடலுள்ளது.

இவற்ருல் கீழ்க்கணக்குகள் (பல) கடைச்சங்கத்திற்குப் பின் தமிழ்ச்சங்கமொன்றில் இயற்றப் பெற்றவெனத் தெளியலாம். வச்சிரநந்தி சங்கத்தில் கீழ்க்கணக்கு நூல்கள் பலவற்றை யியற்றிய ஜைன ஆசிரியர்கள் இலங்கியிருக்கக் கூடுமென அறிஞர் கருதுவர். வச்சிரநந்தி சங்கம் ஜைனர்களுக்கேயுரிய சங்கமாதலால் மற்ற கீழ்க்கணக்கு நூல்களின் சைவ வைணவ ஆசிரியர்கள் இந் நான்காஞ் சங்க காலத்தில் இருந்தவர்களாகவேண்டும். அதில் உறுப்பினர்களாகவே இருந்திருக்கவேண்டு மென்பதில்லை. அதனில் பௌத்த சீத்தலைச் சாத்தனுர் போன்ற பிற சமயத்தவரும் இருந்துள்ளனரென்பது இக்கருத்தை வலியுறுத்தும். எனவே கீழ்க்கணக்குகள் பெரிதும் இக்காலத்திலேயே இயற்றப் பெற்றிருக்கலாம். கி. பி. 8–9 ஆம் நூற்றுண்டுகட்கு இவற்றைத் தள்ளிச் செல்லவேண்டியதில்லை. பழமொழி நூலின் பாடல் கடைச்சங்கப் பேகன் கொடையைத் 'தொல்லையளித்தார்' என்பதால் கீழ்க்கணக்குகள் கடைச்சங்கத்திற்குப் பிற்பட்டன என்பது போதரும். மனுநீதிச் சோழன்; பொற்கைப் பாண்டியன்; தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் வரலாறுகளெல்லாம் இந்நூல்களில் காணப்படுகின்றன. கடைச்சங்கப் பாடல்களில் இவையில்லை. சிலப்பதிகாரத்துக் கிடைக்கின்றன. பழமொழி முதுமொழிக் காஞ்சி முதலியவற்றின் காலத்தைக் கருதும் பொழுது கி. பி. 3–6க்கு இடைப்பட்ட 4–5 ஆம் நூற்றுண்டுகளில் கீழ்க்கணக்கு நூல்கள் பல இயற்றப் பெற்றிருக்கக் கூடுமெனத் தெரிகின்றது.

### திருக்குறள்

திருவள்ளுவ தேவ நாயனுர் உலகிற்களித்த தமிழ் மறையும் பொதுமறையுமாகிய திருக்குறள் நான்காம் சங்கத்தில் அரங்கேற்றப்பட்டது. கீழ்க்கணக்குகளுள் சிறப்பால் முதலாகிய நூல் இதுவாகும். கல்லாடத்தில் வள்ளு

வன் தனக்கு வளர்கவிப் புலவர்முன் முதற்கவி யளித்த முக் கட் பெருமான்' என்பதனுல் திருவள்ளுவமாலை சைவ சங்கப் புலவர் அளித்த பாராட்டுப் பாடற்றெகுதி யெனவும் அது நம்பத்தக்க தெனவும் புலனுகின்றது. மணிமேகலை யாசிரியரான சீத்தலைச் சாத்தனுர் இச்சங்கப் புலவராக விருந்திருக்கிறுர். அவர் மணிமேகலையில் அறவண அடி களைக் குறிக்கிறுர். அறவணவடிகள் நலாந்தா பல்கலைக்கழ கத் துணைவேந்தராகவிருந்த காஞ்சி–தர்மபாலர் (அறவணர் —தர்மபாலர்) என்பவராக அறிஞரால் கருதப் பெறுகிறுர். அறவணர் தர்மபாலர் இருவர் வாழ்க்கை வரலாறுகளும் ஒன்ருகவே யிருத்தலால் இது நம்பற்குரியதாகும். தர்ம பாலர் கி. பி. 6ஆம் நூற்ருண்டின் இறுதியில் இலங்கியவ ராவர். அவர் மாணவர் சிலாபத்ரன் என்பவர் கி. பி. 630ல் இவான்சுவாங் நலாந்தாவிற்குச் சென்றபோது அங் குத் துணைவேந்தராக இருந்திருக்கிறுர்.. 'தெய்வம் தொழா அள் கொழுநற் றெழுதெழுவாள் பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப் பொய்யில் புலவன்' என இலக்கியத் துள் முதலில் வள்ளுவரைப் பாராட்டியவர் சாத்தனுர் ஆவார். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் பாடிய பாடலில் செய்திகொன்ருேர்க்கு உய்தி இல்லென அறம்பாடிற்றே' எனவரும் வரியில் 'அறம்' என்பது திருக்குறளைக் குறிக்கும் என்பர் அறிஞர் பலர். அறம் பாடின்றே எனவும் இதற்கோர் பாடமுள்ளது. அவ்வாருயின் இஃதோர் நூலைக் குறிக்காது. மற்றும் அக் காலத்து அறம் என்பது திருக்குறளைத்தான் குறித்ததென்ப தற்கு ஆதாரமில்லை. அக்காலத்து ஏதோவொரு தமிழ் அற நூல் பாடியதைக் குறித்த அவ்வரிகளை அப்படியே வள்ளுவர் எடுத்தாண்டிருக்கலாம். புலாலுண்ணுமை; பொருட் பெண்டிரை விழையாமை முதலியவற்றுள் குறள் கடைச் சங்க நூல்களினும் பெரிதாக வேறுபடுகின்றது. செய்யு

ளமைப்பிலும் சொற்களிலும் வேற்றுமை மிகவுடையது; எனவே சீத்தலைச் சாத்தனர் காலத்திற் கண்மையதாகத் திருக்குறள் இயற்றப்பட்டிருக்கலாம். திரு. பி. டி. சீனிவாசய்யங்கார் போன்ருேர் ஆரும் நூற்ருண்டுக் கொள்கையினர். (அன்றிக் கி. பி. 4–5–6ஆம் நூற்ருண்டுகளில் ஒரு காலத்தில் இயற்றப்பெற்று நான்காம் சங்கத்தில் அரங்கேற்றத்திற்கு மட்டும் வந்திருக்கலாம். இவ்விடைக்கால நூற்ருண்டுகளில் தோன்றிய பாடல்களைத் தொகுப்பதும் தோன்றிய நூல்களை வெளிக்கொணர்வதும் இச்சங்கத்தின் செயலாக இருந்திருக்கின்றது). சங்க வரலாறெழுதிய நக்கீரரே திருவள்ளுவ மாலையில் குறளுக்குப் பாராட்டுரைத் திருக்க இதனைக் கடைச்சங்க நூலாக அவர் எண்ணுமையைப் புறக்கணிக்கவியலாது.

தேவை, வள்ளுவன் என்பானேர் பேதை எனத் திருவள்ளுவமாலை கூறுதலால் இவர் கீழ்க்குலத்தில் தோன்றிய மேலோராகலாம். 'யாளி கூவற்றூண்டும் ஆதப் புலைச்சி' என்ற ஞானமிர்த வரிகளும் இவர் பிறப்பினைக் குறிப்பனவாகப் பலர் கருதுவர். மறைமுகமாகப் பெற்ருேரை நினைத்தே 'ஆதிபகவன்' என நூலைத் தொடங்கினரென்பர். இழைநக்கி நூல்நெருடும் ஏழையறிவேனே குழைநக்கும் பிஞ்ஞகன்தன் கூத்து' என இவர் பாடியதாகத் தனிப்பாடல் ஒன்று காணப்படுதலால் இவர் பிற்காலத்தே நெசவுத் தொழிலைச் செய்ததாகக் கொள்ளலாம். நீசராய்ப் பிறந்தோர் நெய்தலைச் செய்யலாகாதென் றெங்குமில்லை. கங்கர் 'வரலாற்றில் திரு. M. V. கிருஷ்ணராவ் அவர்கள் திருவள்ளுவரைப்பற்றி :வழங்கும் ஜைன மரபொன்றைக் குறிக்கிருர். அதனில் ஏலாசாரியர் என்னும் திருக்குறளாசிரியர் பாடலிபுத்திரத்தில் (திருப்பாதிரிப்புலியூர்) இருந்த திரவிட சங்கத்திருந்தவர் எனவும் அவர் பல்லவ (சிவகுமாரன்-?) இளவரசனுக்கு ஆசிரியரெனவும் உணர்த்

தப்பெறுகின்றது. அவ்வாருயின் வள்ளுவர் (என்ற பெயர்ப் பொருளொன்றற்கேற்ப) அரசியல் உட்படு கருமத் தலைவரா கக் (அரண்மனைப் பதவியொன்றில் இருந்தவராக) கூறப்படு வதில் உண்மையிருக்கலாம். வாழ்க்கையின் பல காலங்க ளில் பல தொழில்களை ஒருவர் செய்திருத்தல் இயல்பேயாக லாம். இவ்வகையில் அவர் பல்லவர்க்குரிய மயிலாப்பூரில் பிறந்தவராகவும் (புலவராகவும் குறளை அரங்கேற்றுபவராக வும்) மதுரையில் பலகாலம் இருந்தவராகவும் இருக்கலாம்.

இறைவன் (சிவபிரானின்) திருநடம் கண்டீரோ என் ருர்க்கு விடையாகவே முற்குறித்த இழைநக்கி நூல் நெரு டும் ஏழையென்ருர். இதனுல் இவர் பிறப்பில் (இளமையில் பெற்ருேர்க்குரிய) சைவராக இருந்திருக்கலாமெனத் தெரி கின்றது. பின்பு (சித்தராய் - ஒரு சமயமுமின்றி) சமணச் சார்பு (கோட்பாடுகளைமட்டும் பாராட்டுதல்) மிகுதியுடைய வராய் இருந்திருக்கலாம். அதனுற்ருன் குறளில் ஜைனக் கோட்பாடுகள் மிகவாகக் காணப் பெறுகின்றன. இளங் கோவடிகள் நெறியும் இதேபோன்றதுதான். அதனுற்ருன் சைவ சங்கத்தில் இவர் குறளுக்கு இடமளித்தனர். நீல கேசி உரையாசிரியர் குறளை 'எம்மோத்து' என்பதும் குற ளில் காணப்படும் ஜைனச் சார்பு மிகுதியாற்ருன். இவரது பொதுமை நோக்கினைக் கண்டே 'எப்பாலவர்க்கும் இயை பவே வள்ளுவர் முப்பால் மொழிந்த மொழி' எனச் சங்கப் புலவர் பாராட்டினர். உலகில் எச்சமயத்தவர்க்கும் எம் மொழியினர்க்கும் எவ்வினத்தவர்க்கும் இந்நூல் பொது வாகும். உலகத்தத்துவ ஞானி (Philosophy) களுள் வள்ளு வர் ஒருவர். அறம் பொருள் இன்பம்பற்றிய அடிப்படை யுண்மைகளை (அறங்களை) அவர் குறளில் கூறியதால் இதனை அறநூல் என்பர். உலகில் சமயதத்துவங்கள் பொரு ளியல் தத்துவங்கள் Philosophy of Religion; Philosophy of Economics என எப்பொருளைப் பற்றியும் உள்தத்துவங்களை

எழுதுவர். அதுபோலக் காமம் பொருள் இல்லறம் துறவறம் ஆகிய பொருள்களைப்பற்றிய தத்துவங்கள் 'குறள்' என வந்தது. தமிழில் அறம் அறிவு என்பன ஓரடிப்படையி லிருந்து வந்த சொற்கள். அறுதி (எல்லை) வரையறுத்தல் என்பதே அவ்வடிப்படை. தமிழரின் பண்பெல்லை அறிவு; வரையறையுடையது அறம். அவ்வறமே வள்ளுவர் திருக் குறளில் கூறிய அறம்.

இடைச் செருகல்கள் ஏற்படாதவாறு 133 அதிகாரங் களில் 1330 குறள்களை அழகுற அமைத்த பெருமை வள்ளு வர்க்குரியது. உரையாசிரியர்கள் அதிகாரத்தின் பத்து குறள்களையும் தமக்கேற்றவாறு முன்பின்னுக்கினர். பாட பேதங்கள் மிகச் சொற்பமாகவே அமைந்தன. சமூகத்திற் கடிப்படை அறமே என்பதனை நிறுவ அறத்துப்பாலை முத லாக்கினர். அறவாழியந்தணன் என்றே இறைவனைக் கரு துகிறர். அறத்திற்கும் இன்பத்திற்கும் இன்றியமையாமை யின் பொருளை இடையிலாக்கினர். பொருளிருந்தால் மட்டும் போதாது இன்பத்திற்கு அறமும் வேண்டும் என்ப தற்காகக் கடைசியில் இன்பம் வைத்தார். மனிதனின் முடிந்த குறிக்கோள் இன்பமென்பது. காதலின்பமே கடவு ளின்பமும் என்பதனைத் தாமரைக் கண்ணுன் உலகு என்றுர். அறம் பொருளின்பம் வீடென நான்கின் திறம்தெரிந்து செப்பிய தேவு எனத்தான் திருவள்ளுவமாலை கூறுகின்றது. வாழ்வாங்கு வாழும் இல்லறவியலும் துறவறவியலும் 'வீட் டிற்கு' வழிகோலுகின்றன.

இல்லறவியல் துறவறவியல் ஊழியல் என மூன்று வகை களாக அறத்துப்பால் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இல்லறத் தார்க்குரிய செல்வத்திற்கும் துறவறத்திற்குரிய அறிவிற்கும் ஊழ்பொதுவும் காரணமுமாயதென்பதுபட அதனைக் கடை சியில் வைத்தார். முதல் நான்கு அதிகாரங்களும் பாயிர

மெனப்படும். அவையும் வள்ளுவராற் பாடப்பெற்றனவே யென்பதற்குத் திருவள்ளுவமாலை சான்றுபகர்கின்றது. முப்பால்களுக்கும் பாயிரம் பொதுவெனப்படும். அறத்தார்க்கும் அரசர்க்கும் அமைச்சர்க்கும் சான்றோர்க்கும் காதலர்க்கும் இறையுணர்வு இன்றியமையாதது. மனிதன் இறைவன் இயல்புகளை (எண்குணங்களை) அடையவோ அன்றி இறைவனாகவோ ஆகவேதான் எச்சமயமும் முயல்கின்றது. அதற்கு அறம்பொருளின்பங்கள் துணையாவன. திருக்குறளை ஒரு காவியமெனில் வான்சிறப்பு நாட்டு வளமாகவும் நீத்தார் பெருமை அறன்வலியுறுத்தலாகியவை நகர் வளமாகவும் கொள்ளப்படலாம். வான் சிறப்பு வளத்தைக் குறிப்பது. முப்பால்களுக்கும் செல்வவளம் எவ்வளவு இன்றியமையாததென்பதனை அது குறிக்கும்.

முப்பாலுக்குமுரிய உண்மையான மனிதன், சான்றாகிய மனிதன் எவ்வாறிருக்க வேண்டுமென்பதற்காக நீத்தார் பெருமை கூறப்பட்டது. ஆசைகளையும் தனக்கென வாழ்தலையும் நீத்தவனே மனிதன். இல்லறத் துறவறத்தாரும் அரசரும் காதலரும் பிறர்க்கென வாழும் பெற்றியினராக வேண்டும். இவ்வாழ்க்கைக்குத் துணையாவது மாசிலதாகிய மனம். அஃதே அறன் வலியுறுத்தலில் வலியுறுத்தப்படுவது. இதற்கு முதலாவது பொருளன்று அறமேயாவது என்பதற்காக அறம் வலியுறுத்துபட்டது இவை நான்கும் அறத்தார்க்கும் அரசர்க்கும் காதலர்க்கும் பொதுவானவை.

இல்லறத்திற்குரிய இயல்புகளில் முதலாக அன்பினையும் துறவறமுதலாக அருளையும் அமைக்கிறார். அன்பு குடும்பத் தொடர்புடையாரிட்மும் அருள் தொடர்பில்லாத (சாதி நிற மொழி நாடெனும் வேறுபாடற்ற வகுப்புவாதமற்ற) உலகினர் அனைவரிடமும் கொள்ளப்படுவது. யாதும் ஊரே யாவரும் கேளிர், உலவுமுயிர் உடலனைத்தும் ஈசன்கோயில் என

அனைவரையும் தன் அன்புக்கைகளால் அணைப்பது. இல்லறத்தின் முதல் அன்புச் செயலாக விருந்தோம்பலை வைத்தார். விருந்தினர் உலகில் நமக்குப் புதியராகிய பிறநாட்டவர் யாவரும். அவருக்கெல்லாம் நம் வீட்டிலும் சமூகத்திலும் விளைந்தவளனைப் பகுத்துண்டு பல்லுயிரோம்புதலே விருந்தோம்பலாம். உலகில் உயரும் ஒவ்வொரு நாட்டின் இல்லமும் உலகின் மற்ற இல்லத்தாரெல்லாம் தம்போல் உண்ணவேண்டும் உடுக்கவேண்டும் மகிழவேண்டும் என உளமாரக் கருதுவதே விருந்தோம்பல். அடக்கமுடைமையில், துறவறத்தார்க்கு மட்டுமன்றி ஆமைபோல் ஐந்தடக்கல் இல்லத்தார்க்கும் வேண்டும் என்கிருர். ஈகை ஒப்புரவுகளால் நில்லாவுலகத்து நிலையிய புகழை அடைவதே இல்லறப்பயனென்பார் போலப் புகழைக் கடைசியில் வைக்கிருர். அழுக்காறவா வெகுளி இன்னச்சொல் ஆகிய நான்கனுள் அழுக்காறு இன்னச்சொல் ஆயவற்றை இல்லறத்திலும் அவர் வெகுளிகளை துறவறத்திலும் அமைக்கிருர். புலால் மறுத்தல், கொல்லாமை, கள்ளாமை வாய்மை முதலியவற்றை ஏனே துறவறத்தில் கூறியுள்ளார்.

அரசனியல், அரசியல் ஆகாமல் அஃது எந்த சிறந்த அரசியலமைப்பும் ஆகும். குடியரசு பொதுவுடமை முதலாம் அரசியல்களுக்கும் அரசியல் அதிகாரங்கள் பொருந்தும். குடும்பம், தொழில், கல்வி முதலிய எவ்விடத்திலும் தலைமையுடைய எவர்க்கும் இவ்வதிகாரங்கள் பொருந்தும். நாட்டில் கல்வியும் அறிவு வளர்ச்சியும் அரசியலின் பொறுப்புக்கள் என்கிருர். உலகில் எவ்வினையையும் செய்தற்குரிய கருவிகளையும் துணைகளையும் மனவமைப்பையும் பலவதிகாரங்களிலும் கூறுகிருர். பொச்சாவாமையும் இடுக்கணழியாமையும் செயலாற்றலில் ஒருவர்க்கிருக்கவேண்டிய இன்றியமையாவியல்புகளென வற்புறுத்துகிருர். அமைச்சியலில்,

வினைத்திட்பத்திற்குச் சொல்வன்மை வேண்டுமென்கிறார். பரத்தமை; கள்; சூது ஆகியவற்றைத் தடுத்தல் அரசியல் சட்டங்களால் ஆகவேண்டும். மருந்து (நோய்த்தடுப்பு) அரசியலுக்குரியதென அரசின் பொறுப்பை வற்புறுத்தும். படை, கூழ், நட்பு அரண் ஆகியவை பொதுவாக அங்க வியலுள் பேசப்படுகின்றன. ஒழிபியலைக் குடி (மக்கள்) யியல் எனத் திருவள்ளுவமாலை கூறுவதுபோல் கொள்வதே சிறந்தது. படைகுடி எனவே குறள் கூறுகின்றது. ஆயின், அரசியல் அமைச்சியல் பொதுமக்கள் இயல் எனவாகும். சமூகத்தில் வளரும் பண்பாடு, மானம் பெருமை சான் ருண்மை முதலியன இங்குப் பேசப்பெறுவன. இரத்தலும் கயமையும், நல்குரவும் பண்பாடுயரும் சமூகத்திற்காகா என்பதற்காக அவற்றைக் கடைசியில் வைத்து அவற்றைக் கடைப்பட்டவாகக் கருதவைத்து அகற்றச் செய்கிறார்.

களவியல்—கற்பியல் 25 அதிகாரங்களை குறிஞ்சி முதலிய ஐந்திணைகட்கும் ஐயைந்தாகப் பிரிப்போரும் உளர். மணத்திற்கு முற்பட்டது களவு; பிற்பட்டது கற்பு. களவு உணர்ச்சி, கற்பனை, துடிப்பு முதலியவற்றையுடையது. கற்பு மன அமைதி நினைவு ஆயவற்றையுடையது. களவில் அழகுக்கும் கற்பில் மனப்பண்பிற்கும் முதலிடம் அளிக்கப் படக் காண்கிறோம். கற்பில் பிரிவும், ஊடலும் பின் கூடலுந் தான். பல பொறுப்புக்களுக்காகவும் தலைவன் பிரிகையில் அதனைப் பொறுத்திருத்தலே முல்லைசான்ற கற்பு என வாகும்.

***நாலடியார்***

நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி. இப்பொழுது நாலடி யார் பயிற்சி மாணவரிடைக் குறைந்துவிட்டது. குறளைப் போல அவ்வளவு வெற்றியை யடையவில்லை நாலடியார். இரண்டடிகளில் சுருக்கமாகவும் விளக்கமாகவும் இனிமை

யாகவும் இருப்பதால் குறள் நிலைத்துவிட்டதெனலாம். பால் அமைப்பும் அதிகார அமைப்பும் குறளில் மேம்பட்டுள்ளன. நிலையாமையில் வற்புறுத்தலும் காமத்துப்பாலில் வெறுப்பும் நாலடியாரில் காணப்படுகின்றன. காமத்துப் பாலுக்கு குற ளின் 25 அதிகாரங்கட்கெதிராக இரண்டதிகாரங்களே தரப் பட்டுள்ளன. நிலையாமை குறளில் ஓரதிகாரத்திலிருக்க நாலடியாரில் மூன்றதிகாரங்களில் வற்புறுத்தப்படுகின்றது. குறளில் கடவுளுக்குக் கொடுத்த முதலிடத்தை நாலடியா ரில் நிலையாமைக்குக் கொடுத்துள்ளனர். 40 அதிகாரங் களில் 13 அறத்துப்பாலுக் களிக்கப்பட்டன. வறட்டுத் துற விகள் எழுதிய பாடல்களென்பது மெய்யாகின்றது. எந்த அதிகாரத்திலும் வேறு அதிகாரங்கட்குரிய பாடல்கள் கலந் திருத்தலால் பல புலவர்கள் பாடிய பாடல்கள் இவை என் பது உணரவிருக்கின்றது. ஏதோவொரு பஞ்சகாலத்தில் பிற நாட்டிற்குப் பிரிந்துசென்ற சமணப்புலவர்கள் பாடிய பாடல்களின் தொகுதியே நாலடியார் என் ஓர் மரபுள்ளது. அவ்வாருயின் அது இறையனூர் அகப்பொருள் உரையில் கூறப்படும் பஞ்சமாக வேண்டும். எனவே இறையனூர் கள வியல் தோன்றிய காலத்ததாகலாம் நாலடியார். அன்றி கி. பி. ஏழாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் நின்றசீர் நெடு மாறன் காலத்தில் சமணர் பாண்டி நாட்டைவிட்டுக் கங்க நாடு முதலியவற்றிற்குச்சென்றுவிட்டனர்; அக்காலத்ததாக லாம். நின்ற சீர் நெடுமாறர் சிறந்த தமிழ்ப்புரவலராகவு மிருந்திருக்கிருர். அவர் காலம் வரையில் நான்காம் சங்கம் ஊக்கத்துடன் உயர்ந்திருக்கலாம். கி.பி. 9ஆம் நூற்ருண்டில் கூட நம்மாழ்வார் காலத்தில் மதுரைச் சங்கம் ஒன்று குரு பரம்பரையில் பேசப்படுகின்றது. பாண்டியர் முதலிலிருந்து தாமிருந்தவரைச் சங்கத்தை உயிர்ப்பித்துக் கொண்டே யிருந்துள்ளனர். பெருமுத்தரையர் குறிப்பும் இதனை ஏழாம் நூற்ருண்டுக்குரியதாக்குகின்றது. முத்தரையர் ஆரும் நூற்

றுண்டில் இச்சங்க காலத்திற்கூட இருந்திருக்கலாம். பொது வாகப் பெரும்பாலான கீழ்க்கணக்கு நூல்களை ஆறும் நூற் றுண்டுக் குட்பட்டனவாகக் கொள்ளலாம்.

பொதுக் கடவுள் வாழ்த்துக் கூறிய குறளுக்கெதிராகச் சமணக்கடவுள் வாழ்த்துடன் தொடங்குகிறது நாலடி யார். உடலழகினையும் பெண்ணழகினையும் வெறுத்தலைத் தூய்தன்மை என்றோர் அதிகாரமாக்கியுள்ளார். திருமூலரும் துறவிதான் அவர் உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே என்கிறார். குறளும் நாலடியாரும் ஒன்றையொன்று பார்த் துப் பாடியவைபோல் அதிகாரங்களை அமைத்துள்ளன. வச் சிரநந்தி சங்கத்திலும் திரமிள சங்கத்திலும் இருந்தவர் களோ இவ்வாசிரியர்கள் தெரியவில்லை. வச்சிரநந்தி சங்கம் 25 ஆண்டுகளே இலங்கியுள்ளது. மற்றபடி சமணரின் திர மிள சங்கம் முதலிய கூட்டுறவுகள் தொடர்ந்திருந்திருக்க லாம். பாடல்கள் தெளிவும் செஞ்சொற்களும் பாடலமைப் பும் உடையவென்பதில் தடையில்லை. தெரிந்த உவமைகளை மிகவாகப் பயன்படுத்திக் கருத்துக்களை விளக்குகின்றன பாடல்கள்.

பழமொழி நானூறு

ஒவ்வொரு வெண்பாவிலும் ஒரு பழமொழி கலந்த இந் நூல் முன்றுறையரையனால் இயற்றப்பெற்றது. கடவுள் வாழ்த்து கொண்டு இவர் ஜைனரெனத் தெரியும். பாண்டிய மன்னர் இவரென்பர் அறிஞர். கீழ்க்கணக்குகளுள் இதனைப் பழமையானவற்றுள் ஒன்றென்பர். நாலடியாரும் இதுவும் 400 எனத் தொகுக்கப்பட்டிருத்தலால் 400 என நூல்களைத் தொகுத்த இந்நான்காஞ் சங்ககாலத்ததாகும் எனத் தெரிய லாம். மற்றும் சிலப்பதிகாரத்தில் வரும் மனுநீதிச் சோழன் பொற்கைப்பாண்டியன் முதலியோர் வரலாறுகள் இதனிலும் குறிக்கப்பெறுகின்றன. பாரி முதலியோரைப் பழமையோர்

என்கின்றதோர் பாடல். உயிர்ப்பலியைத் தடுக்கிறது ஒரு வெண்பா. பழமொழிகள் பல இக்காலத்து வழக்கிலில்லா தவை. கல்வியில் தொடங்குகிறது நூல். அதிகாரத்திற் குப் பத்துப்பாடல் என்ற வரையறையில்லை. வீட்டு நெறிக் கும் மறைபிறரறியாமைக்கும் தனியதிகாரங்கள் வகுத்துள் ளார். மறையறியாமையைக் குறளில் ஓரிரு பாடல்களே வற்புறுத்துகின்றன. மற்றனவெல்லாம் குறளில் காணும் அதிகாரப் பெயர்களே யெனலாம். நட்பு; நல்லினம்; வினை செயல்; அரசு; அமைச்சு எனச் சில பொருள்களை விரிவா கப் பேசுகிறதிந்நூல் இல்லறத்துக்கும், உறவினர்க்கும் இடந்தந்து காமத்துப்பாலை அறவே விட்டுவிடுகின்றது. இவ்வகையிற்றான் குறளுக்கும் இவற்றிற்கும் வேறுபாடு புலப்படுகின்றது. பழமொழியுடன் வருதலால் பாடற் பொருள் மனதில் நன்கு பதிந்து விடுகின்றது. பழமொழி களைத் தொகுத்த இந்நூல் இலக்கிய வளர்ச்சியில் ஒரு நல்ல கட்டத்தையறிவிப்பதாகும். மணிமேகலையில் வரும் கடிஞை; குறளில் வரும் - பாக்கு (அடுபாக்கு (309); சனங் கள்; அப்பம்; முதலிய சொன்மரபுகளை இதனில் காண் கிறோம்.

### முதுமொழிக்காஞ்சி

ஐங்குறுநூறு தொகுத்த கூடலூர் கிழாரால் பாடப்பெற் றது. சேரமான் யானைக்கட்சேய் காலத்தவராகிய ஒருவர் கடைச்சங்கத்திறுதிக் காலத்தவர். நான்காஞ் சங்கப் பெயர்கள் சில கடைச்சங்கப் புலவர் பெயர்களாகவேயுள் ளன. அவர்கள் பெயரை அப்படியே பின்னவரும்கொண்டு வழங்கியிருக்கலாம். கூடலூர் கிழார் கடைச்சங்கத்தவரே யாயின் அவர் குறுந்தொகையிலும் புறநானூற்றிலும் பாடி யுள்ளார். இக்கூடலூர் கிழார் வேறெனவே டாக்டர் ஐயர வர்கள் கருதுகிறார்கள். இவ்வாசிரியர் சமயம்பற்றியொன்றும் தெரியவில்லை. குறட்டாழிசையாலாகிய (ஒருவரிப்பாடல்

கள்) பாடல்கள் பப்பத்து வரிகளைக்கொண்டு தொகுக்கப் பெற்றது இந்நூல். 10 அதிகாரங்களில் 100 வரிகள் உள் ளன. அவற்றுள் பொன்போன்ற வரிகள் பலவுள்ளன. ஆசாரம், முறையிலரசு பற்றிய தொடர்கள் இதனில் காணப்பெறுகின்றன. அறிவுப்பத்து,; சிறந்தபத்து; பொய்ப்பத்து; அல்லபத்து; இல்லைப்பத்து போன்ற அதி காரத்தலைப்புக்கள் வகுக்கப்பெற்றுள்ளன. நிலையாமை (காஞ்சி) யறிந்த முதியோர் மொழியென இதனை விளக்கக் கூடும்.

## நான்மணிக்கடிகை

விளம்பிநாகனாரென்ற வைணவரால் பாடப்பெற்றது. ஒவ்வொரு பாடலிலும் நான்குண்மைகள் கொண்டமையால் நான்மணிக் கடிகையாயிற்று. கடிகையென்பது கடகம். விளம்பி ஊர்ப்பெயராகலாம். இவரும் கொலைதீது ஊனுண் டல் செய்யாமை செல்சார் வுயிர்க் கென்கிறார். ஆசாரம் காலேயம் முதலிய சொற்கள் இதனுட் காணப்பெறுகின் றன. இளமையதருமை தாய்தந்தையரைப் போற்றல் ஆகிய கருத்துக்கள் பதினெண் கீழ்க்கணக்குகளில் அடிக் கடி வற்புறுத்தப் பெறுவன. அவையிரண்டும் இந்நூலிற் காண்கின்றன.

## இன்னா நாற்பது

கபிலதேவர் இதன் ஆசிரியர். 400 என்ற பாடற்றொகை சுருங்கி நாற்பதெனப் பத்தின் பங்காக இச்சங்க காலத்தாகி யுள்ளது. இவ்வாசிரியர் திருவள்ளுவமாலையிற் பாடியவராக லாம். முக்கட்பகவனையும் சத்தியானையும் சக்கரத்தானை யும் பலராமனையும் இவர் கடவுள் வாழ்த்தில் பாடுகிறார். சத்திக்குறிப்பு பிற்காலத்தைக் காட்டும். அந்தணர் இல் லிருந் தூணின்னா என்பதால் இவர் அந்தணரல்லர் எனப் பெறப்படும். கள்ளுண்பான் கூறும் கருமப்பொருளின்னா

இன்னு, ஒத்தில்லாப் பார்ப்பானுரை என்னுந் தொடர்கள் திருக்குறள் நினைவைக் கொண்டுவருகின்றன.

**இனியவை நாற்பது**

இன்னு நாற்பதின் காலமாகலாம். ஒத்த கருத்துடைய பாடல்கள் திரிகடிகம் பழமொழியாகியவற்றில் காட்டப்பெறு கின்றன. மும்மூர்த்திகளையும் ஆசிரியர் பூதஞ்சேந்தனர் வணங்கி நூலைத் தொடங்குகிருர். இச்சங்க காலம் சமயப் பொதுமையுள்ள காலம். பிரம்மனை வணங்குதல் இதனில் புதுமையாகக் காணப்பெறுகின்றது. எனவே ஆசிரியர் அந்தணராகலாம். ஆவோடு பொன்னீதலந்தணர்க்கு முன் னினிதே என்கிருர். இளமை, தாய்தந்தையர் ஆகியோ ரைப் போற்றல் இங்கும் வற்புறுத்தப் பெறுகின்றது. பொலிசை முதலிய சொற்கள் (40) பிற்காலத்த வென்பர் அறிஞர்.

**கார் நாற்பது**

பொருகடல் வண்ணனை ஆசிரியர் மதுரைக் கண்ணங் கூத்தனர் பாராட்டியிருத்தலால் வைணவராகலாம். தரு பாக்கு என்ற சொல்லமைப்பு குறள்கால நினைவைக் கொண்டு வரும். கார்காலத்தையும் முல்லைத்திணையையும் அழகுற வருணிக்கிருர் புலவர். கார்த்திகை விளக்குப்பற்றிய குறிப்பு இந்நூலில் (26) வருகின்றது. கார்த்திகை விழா தமிழர்க்குரியது. இவ்விழாவே பிற்காலத்தில் தீபாவளி யாகியிருக்கவேண்டும். முடிவில் இரண்டும் நிலைத்துவிட்ட னவாகலாம். திணைமொழியம்பதிஞசிரியர் கண்ணன் சேந்தனரும் இவரும் கண்ணன் என்பாரின் மக்களாய் அண் ணன் தம்பிகள் எனக்கருதுவர் அறிஞர் சிலர்.

**களவழி நாற்பது**

பொய்கையார் சோழன் செங்கணனைப்பாடியது. சோழன் சேரனை வென்ற சிறப்பினைப் பாடுவது இந்நூல்.

இவரைப் பொய்கையாழ்வாரெனக் கருதுவார் பலர். பொய்கையார் பாடலாகப் பொய்கையாழ்வார் பாடலை யாப்பருங்கலம் எடுத்துக்காட்டுதலால் இது பொருந்தலாம். சோழன் சேரரையும் கொங்கு நாட்டையும் வென்றபின் ஆசிரியர் தொண்டியில் வாழ்ந்திருக்கலாம். செங்கணன் திருமாலுக்கும் கோயில் கட்டியதாகத் தெரிதலால் திருமங்கையாழ்வார் போன்றவர்கள் அவனைப் பாராட்டுகின்றனர். எனவே பொய்கையாழ்வாரும் அவனைக் களவழிப்பாடிப் பாராட்டியதில் வியப்பில்லை. கணைக்காலிரும்பொறையைச் செங்கணன் வென்றதுபற்றிய பாடலொன்றே புறநானூற்றிற் காணப்படுகிறது. அஃதிக்காலத்துப் பாடலேயாகும். குலோத்துங்க சோழனுலா உரையாசிரியர் களவழி விசயாலய சோழன்மீது கி. பி. 9ஆம் நூற்றாண்டில் பாடப்பெற்றதென்பர். மற்ற யாரும் இக்குறிப்பினைச் சொல்லவில்லை. விசயாலய சோழன் பாட்டுடைத் தலைவன் என்பதற்கும் ஏதும் குறிப்பில்லை. எனவே இக்கருத்து பொருந்துமாறில்லை. கார்த்திகைத் திருவிழாவைப்பற்றி நூல் கூறுவதால் கார் நாற்பதுடன் காலத்தால் தொடர்புடையதாகலாம். செங்கண்மால் எனச் செங்கணனைத் தெளிவாகக் குறிக்கின்றது நூல். வஞ்சிக்கோவை யட்டதுபற்றியும் விளம்புகின்றது. சைவச் சோழனைத் திருமால் எனக் குறிக்குமளவு சமயப் பொதுமை 9-ஆம் நூற்றாண்டில் இருந்ததில்லை.

### திரிகடுகம்

நல்லாதன் என்ற வைணவர் இந்நூலின் ஆசிரியர். இது நூறு பாடல்களையுடையது. சுக்கு மிளகு திப்பிலி என்பன திரிகடுகம். இலிங்கிகளாகிய போலிச் சைவரைப்பற்றி ஓர் பாடல் கூறுகின்றது. நாயன்மார் காலத்துச் சில போலி வேடச் சைவர் இருந்துள்ளனர். அதனை நினைவூட்டுவதிக் குறிப்பு. கீழ்க்கணக்குள் பல நூல்களுக்கு இது வழிகாட்டி

யாயிருந்ததென்பர் அறிஞர். உயிர்க்கொலையையும் கள்ளுண்டலையும் தவிர்க்கிறதொரு பாடல். இது நாலடியாருக்கும் பிற்பட்டதென்ற கருத்தொன்றுள்ளது. பெய்யெனப் பெய்யுமழை; ஐங்குரவர் என்ற தொடர்கள் இதனுட் காணப்படுகின்றன. சில ஆசாரங்களும் பாடல்களில் உணர்த்தப்படுதலைக் காண்கிறோம்.

### ஏலாதி

கணிமேதையார் இந்நூலின் ஆசிரியர். திணைமாலை நூற்றைம்பதன் ஆசிரியரும் இவராகவே கருதப்பெறுகிறார். இவர் சமணராகக் கருதப்பெறுதலுமுண்டு. இது சிறு பஞ்ச மூலத்துடன் மிக்க தொடர்புடையதாகக் கருதப்படுகிறது. இவ்வாசிரியரும் சிறுபஞ்சமூல ஆசிரியர் மாக்காரியாசானும் மாக்காயனாருடைய மாணவரென்பர் அறிஞர். ஏலம் முதலிய ஆறு பொருள்களைப்போல ஆறு உண்மைகளைப் பாடலிற் கொண்டது ஏலாதி. நாவலந்தீவு பெருவயிற்றுத்தீ என்பன மணிமேகலை நினைவையூட்டும். புத்தகம் என்பது பதினோராம் திருமுறையில் நக்கீரர் முதலோர் பாடல்களில் வழங்குவது. இந்நூல் 80 பாடல்களையுடையது.

### சிறுபஞ்சமூலம்

மாக்காயனார் மாணாக்கர் காரியாசான் என்பவராலியற்றப்பெற்றது. இவர் ஜைனர். துர்நாமகன் என்ற பெயர் (76) கி. பி. 700க்குரிய அட்டாங்க இருதயம், அமரகோசம் ஆகியவற்றில் வருவதாகவும் ஆகவே அவ்வழக்கினையாளும் நூல் 700க்குப் பின் செல்லவேண்டுமென்றும் அறிஞர் கூறுவர். ஒரு சொல் இலக்கியத்தில் வருமுன் வழக்கில் இருந்திருக்கவேண்டும். அது ஆறாம் நூற்றாண்டிலும் இருந்திருக்கலாம். இவ்வாசிரியர் சிறந்த வள்ளல் எனவும் ஒளவை ஒருவரின் காலத்துடன் தொடர்புடையவரெனவும்

உணரப்பெறுகின்றது. குழவி பலிகொடுத்தல் என்ற நாயன்மார் காலக் குறிப்பொன்று இங்குத் தெரிகின்றது. பல்லவர் என்ற பெயர் மறைமுகமாக உணர்த்தப்பெறுகின்றது. இந்நூல் 97 வெண்பாக்களையுடையது.

### ஆசாரக்கோவை

பெருவாயின் முள்ளியார் என்பவர் ஆசிரியர். இவர் சைவரென்பது கடவுள் வணக்கத்தால் தெரிகின்றது. உண்டல்; உறங்கல்; நாட்கடன் செய்தல் முதலியவற்றைப் பற்றிய ஆசாரங்களை 100 பாடல்களில் கூறுவது. பஞ்சாங்கம்; ஐங்குரவர் ஆகிய கருத்துக்களும் கீழ்க்கணக்குகளுள் காணும் புதுக் கருத்துக்கள். இவை இந்நூலுள் வருகின்றன. தர்ம சூத்திரம், கிருஹ்ய சூத்திரங்களின் கருத்தொற்றுமை இந்நூலிற் பேசப்படுகின்றது. இச்சூத்திரங்களின் கருத்துக்கள் ஆறும் நூற்றாண்டிற்கு முன்பும் வழக்கிலிருந்துள்ளன. அறியாத்தேசத்து ஆசாரம் பழித்தலைப் பற்றிய செய்தி முதுமொழிக் காஞ்சியிலும் இதனிலும் வருகின்றது.

### திணைமொழி ஐம்பது

திணைமொழி திணைமாலை முதலிய நான்கு நூல்களும் அகப்பொருள் பற்றியன. இன்னிலை அறமுதல் நான்கும் பற்றியது. கண்ணஞ்சேந்தன் இதனாசிரியர். இவரைப் பற்றி முன்பும் கூறப்பட்டது. திணைக்குப் பத்துப் பாடலாகச் செய்யப் பெற்றது. குறிஞ்சிப் பாடல்கள் வரைகபடாதல் துறையையே மிகுதியாகவுடையன.

### ஐந்திணையம்பது

மாறன் பொறையனாலும் ஐந்திணையெழுபது மூவாதியாராலும் திணைமாலை நூற்றைம்பது கணிமேதாவியாலும்

இயற்றப் பெற்றன. மாறன் பொறையன் என்பதில் பாண்டியனையும் பொறையன் என்பது சேரனையும் குறிக்கலாம். ஐந்திணையைம்பதில் திருமால் சிவன் முருகன் ஆகியோர் வணக்கம் கூறப்பட்டுள்ளது. ஐந்திணையெழுபதில் விநாயக வணக்கம் கூறப்பட்டுள்ளது. விநாயக வணக்கம் கி. பி. ஆறும் நூற்றுண்டிலேயே தொடங்கியிருக்கலாம். திணைமாலை நூற்றைம்பதில் ஒருவந்தம் (103) முதலிய குறள் காலச் சொற்கள் வழங்கியுள்ளன. இவ்வகத்திணைப் பாடல்கள் தொகை நூல்கட்கெதிராக நிற்கமுடியவில்லை.

## இன்னிலை

இதன் ஆசிரியர் சைவரெனத் தெரிகின்றது. ஆசிரியர் பொய்கையார் என்பதற்குப் பல பிரதிகளில் இவர் பெயர் காணப் பெறவில்லை. எனவே ஆசிரியர் பெயர்க்குப் போதிய ஆதாரமில்லை. ஐந்திணைகட்கும் 12 பாடல்கள் வீதம் இந் நூலில் இசைக்கப்பெற்றுள்ளன. இன்னிலையே இந்நூலின் பெயர் என்பர் பலர். 'இன்னிலைய காஞ்சியோடேலாதி யென்பதூஉம் கைந்நிலையுமாகுங்கணக்கு' என்ற பாடலால் கைந்நிலை என்பது தான் வலிமையுடையதாகத் தோன்றுகின்றது. நான்காஞ் சங்கத்தில் ஏதோ குறிப்பிட்ட காலத்தில் வள்ளுவமாலையில் காணும் 49 புலவர் இருந்துள்ளனர். அதே காலத்தில் வெளியிலிருந்த புலவர்களோ அடுத்த காலங்களில் அச்சங்கத்திருந்த புலவர்களோ கீழ்க்கணக்குகளை இயற்றியிருக்கவேண்டும்.

## இலக்கிய வரிகள்:

### திருக்குறள் : அறத்துப்பால்

1. வேண்டுதல் வேண்டாமை இலான்
2. குணமிலவே, எண்குணத்தான் தாளை வணங்காத் தலை.

3. பொறிவாயிலைந்தவித்தான் பொய்தீரொழுக்க நெறிநின்ருர் நீடுவாழ்வார்.

4. உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்

5. செயற்கரிய செய்வார் பெரியர்

6. அழுக்கா றவாவெகுளி இன்னுச் சொல் நான்கும் இழுக்கா வியன்ற தறம்.

7. வீழ்நாள் படா அமை நன்ருற்றின்

8. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்ருங்கு ஐம்புலத்தாருேம்பல் தலை.

9. தற்கொண்டான் வளத்தக்காள் வாழ்க்கைத் துணை

10. இல்லதென் இல்லவள் மாண்பானுல்

11. தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகை சான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

12. தம்மின் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க் கெல்லாமினிது.

13. அன்புற் றமர்ந்த வழக் கென்ப வையகத் தின் புற்ருர் எய்தும் சிறப்பு.

14. இன்சொலால், செம்பொருள் கண்டார் வாய்ச் சொல்.

15. நெஞ்சத்துக்கோடாமை சான்றேர்க்கணி.

16. ஒன்ருனும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின் நன்ருகா தாகிவிடும்.

17. ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும்

18. பொறுத்தார்க்குப் பொன்றும் துணையும் புகழ்.

19. இலமென்று வெஃகுதல் செய்யார்.
20. பயனில் சொல் பாராட்டுவானை மகனெனல்
21. ஈத்துவக்கு மின்பம்
22. ஒன்றுவுலகத் துயர்ந்த புகழ்
23. தோன்றிற்புகழொடு தோன்றுக
24. பொருளில்லார்க் கிவ்வுலக மில்லாகியாங்கு
25. அருளற்றார் அற்றார்.
26. உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
27. ஒளிவிடும், துன்பம் சுடச்சுடநோற்கிற்பவர்க்கு
28. பொய்யாமை யன்ன புகழில்லை; பொய்யா விளக்கே விளக்கு.
29. தன்னைத்தான் காக்கிற் சினம் காக்க.
30. நோய் செய்யார் நோயின்மை வேண்டுபவர்.
31. நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும் வாள்.
32. யானென தென்னும் செருக்கறுப்பான்.
33. காம வெகுளி மயக்க மிவைமூன்றன் நாமம்கெடக் கெடும் நோய்.
34. ஆராவியற்கை அவா; அவா வில்லார்க்கில்லாகும் துன்பம்.

பொருட்பால் :

35. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கிறை
36. யாதானு நாடாமால் ஊராமால் என்னொருவன் சாந்துணையும் கல்லாதவாறு

37. தாமின்புறுவ துலகின் புறக்கண்டு காமுறுவர் கற்றறிந்தார்.

38. தீதொரீஇ நன்றின்பாலுய்ப்ப தறிவு; மெய்ப் பொருள் காண்பதறிவு.

39. சார்பில்லார்க்கில்லை நிலை; தம்மிற் பெரியார் தமரா யொழுகுதல்

40. இனத்தியல் பதாகுமறிவு.

41. செய்தக்க செய்யாமையானும் கெடும்;

42. கேடில்லை, போகாறகலாக் கடை

43. குணநாடிக் குற்றமும் நாடி; தத்தம் கருமமே கட்டளைக்கல்.

44. பொச்சாப் பார்க்கில்லை புகழ்மை; தீதே சிறந்த உவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

45. குடிதழீஇக்கோலோச்சு மன்னவன்.

46. அருஞ்செவ்வி இன்னு முகத்தன்

47. உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்; உள்ளத்தனைய துயர்வு

48. முயற்சி திருவினையாக்கும்; அருமையுடைத் தென்றசாவாமை வேண்டும்; ஊழையும் உப் பக்கம் காண்பார்;

49. இடுக்கண்வருங்கால் நகுக; இன்னுமை இன்ப மெனக் கொளின்;

50. மதிநுட்பம் நூலோ ருடையார்;

51. செயற்கை யறிந்தக் கடைத்தும் உலகத் தியற்கை யறிந்து செயல்

52. விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது சொல்லுதல் வல்லார்ப்பெறின்

53. ஒருவுதல் வேண்டும் புகழோடு நன்றி பயவா வினை

54. அறிவுரு ஆராய்ந்த கல்வி மூன்றன் செறிவுடையான்

55. ஒளியார் முன் ஒள்ளியராதல்;

56. உறுபசியும் ஓவாப் பிணியும் செருபகையும் சேராதியல்வது நாடு

57. நாடென்ப நாடாவளத்தன.

58. பொருளென்னும் பொய்யா விளக்கம்;

59. கூற்றுடன்று மேல்வரினும் கூடி யெதிர்நிற்கும் ஆற்றல்

60. சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்; புரந்தார் :கண்ணீர் மல்கச் சாகிற்பின்

61. நகுதற் பொருட்டன்று நட்டல்; உள்ளற்க உள்ளஞ் சிறுகுவ

62. மனைக்கெழீஇ மன்றிற் பழிப்பார் தொடர்பு முகநட்டக நட்பொரீஇ விடல்

63. அறிவின்மை இன்மையுளின்மை; உலகத்தாருண்டென்பதில் லென்பான்;

64. இகலென்னும் துன்பத் துட் டுன்பம்.

65. வலியார்க்கு மாறேற்றலோம்புக; பகையென்னும் பண்பிலதனை; அஞ்சுக கேள்போல் பகைவர் தொடர்பு.

65. பெண்ணேவல் செய் தொழுகும் ஆண்மை; மனைவிழைவார் மாண்பயனெய்தார்

66. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்.

67. உட்கப்படா அர் ஒளியிழப்பர்

68. பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
69. அற்றல் அளவறிந்துண்க ; மிகினும் குறையினும் நோய் செய்யும்
70. நகையீகை இன்சொல் இகழாமை ; ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின்.
71. குன்றுவர் குன்றுவ குன்றியனைய செயின்
பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்; பெருமை பெரு மிதமின்மை
72. தோல்வி துலையல்லார் கண்ணும் கொளல்
பிறர்தீமை சொல்லா நலத்தது சால்பு
73. பண்புடையார்ப் பட்டுண்டுலகம்; நகல் வல்ல ரல்லார்க்கு
74. கொடுப்பதூவும் தூய்ப்பதூவு மில்லார்
75. பிறர்பழியும் தம்பழியும் நாணுவார்
76. குடிசெய்வார்க்கில்லை பருவம்; ஆள்வினையும் ஆன்றவறிவும்
77. தொல்வரவும் தோலும் கெடுக்கும்; அறஞ்சாரா நல்குரவு
78. இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றியான்
78. அச்சமே கீழ்களதாசாரம்; ஒன்றுற்றக்கால்
விற்றற்குரியர்

காமத்துப்பால்

79. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின்
ஊடல் உணர்தல் புணர்தல்
80. உடம்பொடுயிரிடை யென்ன
வாழ்தல் உயிர்க்கன்னள்
81. மறப்பறியேன் ஒள்ளமர்க் கண்ணாள் குணம்
இன்பக் கடல் மற்றுக் காமம்

82. தாம்வீழ்வார் தம்வீழப்பெற்றவர்; கள்ளினும் காமமினிது
83. செற்றுரெனக்கைவிடலுண்டோ; கலந்துணர்த் தும் காதலர்
84. பன்மாயக் கள்வன் பணிமொழி; கண்ணிறைந்த காரிகை
85. காணுங்காற் காணேன் தவறுய; பேணுதுபெட் பவே செய்யினும்; மலரினும் மெல்லிது காமம்
86. புலவியும் வீழுநர் கண்ணேயினிது; இம்மைப் பிறப்பிற் பிரியலம்
87. ஊடலிற்ருேற்றவர் வென்ருர்; அதற்கின்பம் கூடி முயங்கப் பெறின்
88. தாம்வீழ்வார் மென்ருேட் டுயிலின் இனிதுகொல் தாமரைக் கண்ணுன் உலகு.

நாலடியார்

1. யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம் பெற்ற யாக்கையாலாய பயன் கொள்க
2. வருந்தி உடம்பின் பயன்கொண்டார் கூற்றம் வருங்காற் பரிவதிலர்
3. கொன்னே கழிந்தன்றிளமையும்
4. உரனுடையாளன், பொறுக்கும் பொறையே பொறை
5. பண்பிலார்க்கு அற்றம் அறிய உரையற்க
6. நடுக்குற்றுத்தற்சேர்ந்தார் துன்பம் துடையார்
7. நடுவணதெய்த இருதலையு மெய்தும்
8. கல்வியழகே அழகு, கல்வி கரையில கற்பவர் நாள்சில
9. அறிவுநூற்கல்லாது உலகநூல் ஓதுவதெல்லாம், தடுமாற்றம் போஒந்துணையறிவாரில்

10. திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்; வசைதீர எண்ணுவர் சான்றோர்
11. பெரியவர்கட் செல்லாது வைகிய வைகலும் படாவாம் பண்புடையார்கண்
12. அசையாது நிற்பதாம் ஆண்மை
13. பெயர்பொறிக்கும் பேராண்மை
14. நட்டான் மறைகாவா விட்டவன் செல்வுழிச் செல்க
15. தென்னாட்டவரும் சுவர்க்கம் புகுதலால் (25)
16. தன்னைத் தலையாகச் செய்வானும் தான்
17. புத்தகமே சாலத்தொகுத்தும் பொருள் தெரியார்
18. அவத்தமே வாழ்நாளைப் போக்குவார் புல்லறிவினார்
19. ஒருநன்றி செய்தவர்க் கொன்றி யெழுந்த பிழைநூறும் சான்றோர் பொறுப்பர்
20. மகனறிவு தந்தையறிவு
21. கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவாள்

பழமொழி

1. ஆற்றவும் கற்றார் அறிவுடையார்
2. ஞாயிற்றைக் கைம்மறைப்பாரில்
3. முற்பகல் கண்டான் பிறன்கேடு தன்கேடு பிற்பகல் கண்டுவிடும்
4. நாய்கவ்வின் பேர்த்துநாய் கவ்வினாரில்
5. தலைமகன் தன்னொளி நூறாயிரவர்க்கு நேர்
6. காடுறை வாழ்க்கைக் கருவினை மாக்களை நாடுறைய நல்கினும் நன்கொழுகார்
7. பனியால் குளநிறைதலில் (127) ஒருவர் பொறை இருவர் நட்பு
8. தமக்கு மருத்துவர்தாம் (149)

9. அம்புவிட்டாக் கறக்குமாறு (166) இனங்கழு வேற்றினுரில் (188)
10. தீநாள் திருவுடையார்க்கில்; இல்லை உயிருடை யார் எய்தாவினை

நான்மணிக் கடிகை

1. பறைபட வாழா அசுணமா; எல்லாம் பொருளிற் பிறந்துவிடும்
2. பறைநன்று பண்ணமையா யாழின்; தனக்குப்பாழ் கற்றறிவில்லா வுடம்பு
3. மொய்சிதைக்கும் ஒற்றுமையின்மை
4. கற்பக் கழிமடமஃகும், அஃகப் புற்கந்தீர்ந்திவ் வுலகிற்கோளுணரும் கோளுணர்ந்தாற் றத்துவ மான நெறிபடரும்
5. இளமையோ டொப்பதுமில்; தந்தையெனப்படு வான் தன்னுவாத்தி
6. அரசனும் இல்வாழ்வா னில்வழியில்
7. உருவோ டறிவுடையாள் இல்வாழ்க்கைப் பெண் ணென்ப
8. ஈன்ருளோடென்ன கடவுளு மில்
9. பாட்டுள்ளும் பாடெய்தும் பாட்டேயுள
10. ஒப்புரவினுனறிப சான்ருண்மை; கெடுப்பின் வெகுளி கெடுத்துவிடல்
11. வாரி சிறிதாயிற் பெண்ணூரும்

இன்னு நாற்பது

1. ஆர்த்த மனைவி அடங்காமை நன்கின்ன
2. இன்னுமுலையில்லாள் பெண்மை விழைவு; இன்ன கலத்தல் குலமில்வழி
3. ஏமமில் மூதூர் இருத்தல் மிகவின்ன

4. தன்னைத்தான் போற்றுதொழுகுதல் நன்கின்னு
5. இன்னு அழகுடையான் பேதையெனல்

இனியவை நாற்பது

6. பிச்சைபுக்காயினும் கற்றல் மிகவினிது
7. ஏவதுமாறு இளங்கிளைமை முன்னினிதே
8. குழவி பிணியின்றி வாழ்தலினிதே
9. இருமுதுமக்களைக் கண்டெழுதல் காலையினிது
10. வெல்வதுவேண்டி வெகுளாதானேன் பினிதே
11. கடன்கொண்டுஞ் செய்வன செய்தல் இனிதே
12. பத்துக் கொடுத்தும் பதியிருந்து வாழ்வினிதே

கார் நாற்பது

1. பொச்சாப்பிலாத புகழ்வேள்வித் தீப்போல
2. இளநலம் போலக் கவினி
3. நலமிகு கார்த்திகை நாட்டவரிட்ட தலைநாள் விளக்கில்

களவழி நாற்பது

1. செங்கண்மாறப்பியாரட்ட களத்து (5)
2. கார்த்திகை சாற்றிற் கழிவிளக்கைப் போன்றனவே
3. காவிரிநாடன் கழுமலங் கொண்டநாள்

முதுமொழிக் காஞ்சி

1. ஓதலிற் சிறந்தன் றொழுக்கமுடைமை
2. முற்பெருகலிற் பின் சிறுகாமை சிறந்தன்று
3. சொற்சோர்வுடைமையின் எச்சோர்வு மறிப
4. அறியாத் தேசத்து ஆசாரம் பழியார்
5. தாரமாணுதது வாழ்க்கையன்று
6. உணர்விலனுதலிற் சாக்காடில்லை
7. மக்கட்பேற்றின் பெறும்பேறில்லை

8. பேரறிவினேன் இனிது வாழாமை பொய்
9. சிறுமை நோனுதோன் பெருமைவேண்டல் பொய்
10. இன்பம் வெய்யோர்க்குத் துன்பம் எளிது
11. வாழ்க்கை வேண்டுவோன் சூழ்ச்சி தண்டான்.

**ஏலாதி**

1. அற்ருர்க்கு, உண்டியுறையுள் உடுக்கையிவை
   யீந்தார் பண்டிதராய் வாழ்வார் பயின்று
2. பண்போலும் சொல்லார்க் கருமறை சோராமை
3. உரையான் பொருளொடு வாழ்வாயுள்
4. கூத்தும் விழவும் மணமும் கொலைக் களமும்
   ஒத்தும் ஒழுக்கு முடையவர் செல்லாரே.

**சிறுபஞ்சமூலம்**

1. கற்புடைய பெண்ணமிர்து
2. செந்தமிழ் தேற்ருன் கவிச்செயலும்
3. நூற்கியைந்த சொல்லின் வனப்பே வனப்பு
4. தாவாக் குடியுயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயரும்
5. தான் பிறரால், சாவவென வாழான் சான்ருேரால்
   பல்யாண்டும் வாழ்கவென வாழ்தல் நன்று
6. புகழும் மனத்திறனுகும் மதி
7. பஞ்சப் பொழுதகத்தே பாத்துண்பான்

**ஆசாரக்கோவை**

1. பிறப்புநெடு வாழ்க்கை செல்வம் வனப்பு
   நிலக்கிழமை மீக்கூற்றம் கல்வி நோயின்மை
   இலக்கணத் தாலிவ் வெட்டுமெய்து வென்ப
   ஒழுக்கம் பிழையாதவர்
2. தந்தையும் தாயும் தொழுதெழுக
3. அரசனுவாத்தியான் தந்தை தாய் தம்முன்
   தேவரைப் போலத் தொழுதெழுக

4. உண்ணுங்கால் நோக்கும் திசை கிழக்கு
அந்திப் பொழுது கிடவார்
5. வேண்டார் பலர்தொடும் நீர்க்கரையும் நீடுநிலை
6. ஈன்ருள் மகள்தன் உடன்பிறந்தாளாயினும்
சான்ருர் தமித்தா உறையற்க ஐம்புலனும்
தாங்கற் கரிதாகலான்
7. தன்னுடம்புதார மடைக்கலம் தன்னுயிர்க்கென்று
உன்னித்துவைத்த பெரும்பொருளோ டிவை
நான்கும்
பொன்னினைப்போல் போற்றிக் காத்துய்க்க

ஐந்திணையம்பது

1. கொண்கண் பிரிந்த குளிர்பூம்பொழில் நோக்கி
உண்கண் சிவப்ப அழுதேன் ஒளிமுகம்
கண்டன்னை எவ்வம்யா தென்னக் கடல்வந்தென்
வண்டல் சிதைத்த தென்றேன்
2. புடையெலாம் தெய்வங் கமழும் தெளிகடல்
தண்சேர்ப்பன்

திணைமாலை நூற்றைம்பது

1. ஈடிலா இன்றமிழால் யாத்த திணைமாலை

திரிகடுகம்

1. பகைமுன்னர் வாழ்க்கை செயலும், சாவவுறுவான்
தொழில்
2. தாளாளனென்பான் கடன்படா வாழ்பவன்
3. வருவாயுட் கால்வழங்கி வாழ்தல்
4. வைத்த அறப்புறங் கொன்ருனும்
5. பழகினும் பார்ப்பாரைத் தீப்போலொழுக
6. சீர்பயவாத் தன்மையிலாளர் அயலிருப்பும்,
நன்மை பயத்தலில

7. உடுத்தாடை யில்லாதார் நீராட்டும்
8. அறநெறி சேர்தற்குச் செய்க பெருநூலை
9. எழுத்தினை ஒன்றுமுணராத ஏழையும் பிறந்தும் பிறவாதவர்
10. ஐங்குரவர் ஆணைமறுத்தலும், நற்புடையிலாளர் தொழில்.

*சிலப்பதிகாரம்; மணிமேகலை*

இவ்விரட்டைக் காப்பியங்களும் இக்காலத்தேயே தோன்றின. கண்ணகி; மணிமேகலைக் கதைகள் கி. பி. இரண்டாம் நூற்றுண்டிற்குரியவாகலாம் ஆனல் அவற்றைப் பற்றிய காப்பியங்கள் 2–3 நூற்றுண்டுகள் தள்ளியே இயற்றப் பெற்றிருக்கவேண்டும். கி. பி. 5–6 நூற்றுண்டைய சமய அரசியல் நிலைகளே அவற்றுள் மிகவாகக் காணப்பெறு கின்றன. இக்காப்பியங்களின் பதிகம் கூறுகிறபடி இளங் கோவடிகள் சீத்தலைச் சாத்தனுர் இருவரும் ஒருவர் காப்பி யத்தை மற்றவர் கேட்டனர் என்பது உண்மையாகலாம். இரண்டன் அமைப்புக்களும் ஒன்றையொன்று விளக்குவ தாகவே அமைந்துள்ளன. எண்ணற்ற தொடர்களும் பொருள்களும் இரண்டிலும் ஒன்றையொன்று நினைவூட்டு கின்றன. ஆயின் இரண்டும் ஒரு காலத்தனவேயாக வேண்டும்.

சிலப்பதிகாரத்தில் வரும் அவுணர் குறிப்பு உறுதியாக அக்காப்பியத்தைக் கி. பி. ஐந்தாம் நூற்றுண்டுக்குப் பின்ன தாக்கும். பௌத்த ஜைன சமய விரிவுகளும் கி. பி. இரண் டாம் நூற்றுண்டுகளில் இக்காப்பியங்களில் காணப்பெறு மளவு இல்லை. நான்கைந்தாம் நூற்றுண்டுகளிலேயே தென் னகத்தில் இச்சமயங்கள் இத்தகைய விரிவினையடைந்தன. கி. பி. 5–6ஆம் நூற்றுண்டுகளில் தோன்றிய மகாவம்சம், இவான்சுவாங் குறிப்புக்களிலேயே இத்தனைச் சமய விரிவு

கள் பேசப்படுகின்றன. சிலப்பதிகாரத்தில் சாத்தனுர் வெள்ளியம்பலத்திருந்த காலையில் கண்ணகிமுன் மதுராபதி தோன்றியதாகக் கூறுகிருர். திருவிளையாடலில்தான் வெள்ளியம்பலத் தோற்றம் கூறப்படுகின்றது. பதஞ்சலிமுன் வெள்ளியம்பலத்துக் கால்மாறி யாடியது கி. பி. 5ஆம் நூற்ருண்டுக்குப் பிற்பட்ட செய்தியாகும். மணிமேகலையிற் காணும் பௌத்தத்தின் சாவகப் (Java) பரவலும் வரலாற்றின்படி கி. பி. 5ஆம் நூற்ருண்டுக்குப் பின்னரேயாம். சதுக்கப்பூதங்கள்; இந்திரவிகாரம் ஏழு; ஐம்பெருங்குழு எண்பேராயம்; 64 கலைகள்; பலவகையான தேவர்ப்பிரிவு பதினெண் பாடை மாக்கள் தமிழகத்திற் கலந்தது; பரத சாத்திரம்; பதினேராடல்; நாரதயாழ்; இசைபற்றிய விரிவுகள் ஆகிய யாவும் இரண்டு காப்பியங்களிலும் ஒரே மாதிரி கூறப்படுகின்றன. இவையும் இக்காப்பியங்களைப் பிற்காலத்திற் குரியவாக்கும்.

செங்குட்டுவனைப் பற்றியதாகக் கூறப்படும் பதிற்றுப்பத்தில் கனகவிசயரை வென்றதோ கண்ணகிக்குச் சிலையெடுத்ததோ காணப்பெறவில்லை. பதிகத்தில் மட்டும் காணப் பெறுவது போதிய ஆதாரமாகாது. வரலாற்றுடன் இணையும்போதே பதிகம் பயன்பெறும். ஒன்பது மன்னரை ஒருவழிப்படுத்ததும் பதிற்றுப்பத்தில் இல்லை. பதிற்றுப்பத்தில் வரும் எழுமுடித்தாயம் கொண்டது வேளிரை வென்றது முதலியன சிலப்பதிகாரத்தில்லை. செங்குட்டுவன் காலத்தில் பாண்டியனைப் புறநானூற்றில் தெளிவாகக் குறிக்கமுடியும். சிலப்பதிகாரத்தில் பாண்டியன் பெயரே குறிக்கப்பெறவில்லை. கீழ்க்கணக்குகளுள் வரும் தூங்கெயில் எறிந்த தொடித்தோள் செம்பியன்; மனுநீதிச் சோழன் பொற்கைப் பாண்டியன் முதலோர் கதைகள் இக்காப்பியங்களுள் வருகின்றன. கடைச்சங்கப்பாடல்களுள் அவை அமையவில்லை.

ஆனால் சிலப்பதிகாரக் கடைசியில் தன் வரலாற்றினை இளங்கோவடிகள் செங்குட்டுவனுடன் இணைத்துக் கொள்கிறார். வஞ்சிக்காண்டத்திலும் மணிமேகலைச் சாத்தனாரைத் தண்டமிழ் ஆசான் சாத்தன் எனக் குறித்துப் பாராட்டுகிறார். இவற்றை இலக்கியக் காலவழு (Anacronism) எனவே கொள்ளவேண்டியுள்ளது. அன்றி 5 — 6ஆம் நூற்றாண்டுகளில் வேறொரு செங்குட்டுவனோ கயவாகுவோ இருந்தனரா எனவும் ஆராயவேண்டும்.

இருவரும் 30 காதைகளில் தம் காப்பியங்களை இயற்றியிருப்பது பதிகத்தினால் தெரிகின்றது. எனவே 29வது தவத்திறம்பூண்டு தருமம் கேட்ட காதையைப் பிற்சேர்க்கையென்னவியலாது. அக்காதையிற் கூறப் பெறும் தருக்கவாதக் குறிப்புக்கள் திக்நாகரின் நூலைப் பின்பற்றியன என்பது உறுதியாகின்றது. திக்நாகர் கி. பி. 4ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவர். அவரையடுத்து தர்மபாலர் தோன்றினார். அவர் ஆறாம் நூற்றாண்டினர் எனவும் மணிமேகலையில் வரும் அறவணர் (தர்மபாலர்) அவரேயெனவுன் முன்னரே கூறப்பெற்றது.

முடிகெழுவேந்தர் மூவர்க்குமுரியதாதலின் நடுவுநிலையுடனேயே சிலப்பதிகாரத்தை எழுதினார் இளங்கோவடிகள். மூந்நாடுகளையும் ஓரளவு இணைத்துக் காஞ்சியையும் சிறப்பித்தார் சாத்தனார். சோழரது கலைவளர்ச்சியையும் பாண்டியரது தமிழ்நீதியையும் சேரரது தென்தமிழாற்றலையும் எடுத்துப் பேசியது சிலப்பதிகாரம். புகார்க் காண்டத்தில் இன்பச்சுவையையும் மதுரைக் காண்டத்தில் அவலச் சுவையையும் வஞ்சிக் காண்டத்தில் வீரச்சுவையையும் வருணிப்பதில் சிலப்பிதிகாரம் நெஞ்சையள்ளுவதாகவே அமைந்துவிட்டது. முதலில் மாதவி இரண்டாவதாகப் பாண்டிமாதேவி மூன்றாவதாகக் கண்ணகி ஆகியோர் கற்பினை விளக்

கும் வகையில் தமிழகப் பெண்களின் பெருமையை விளக்கு வதாகின்றது சிலப்பதிகாரம். மணிமேகலைக் காவியமும் மணிமேகலை என்ற பெண்ணின் பெருமையையே பேசு கின்றது. மற்றும் இவ்விரு காவியங்களும் தமிழ்க்கற்பரசிகள் எழுவர், ஆதிரை ஆகியோரது கற்பினைத் தனிச்சிறப்புடன் வெளிப்படுத்துகின்றன. தமிழிசை நாடகம் ஆகியவற்றின் ஒப்பற்ற கருவூலமாகச் சிலப்பதிகாரம் திகழ்கின்றது. அக் காலத் தமிழையும் தமிழகத்தையும் விளக்கிக் காட்டுவதில் சிலப்பதிகாரம் ஓர் உயர்வுடைக் காவியமாக நிற்கின்றது. அக்காலச் சமய நிலையையும் தத்துவ நிலையையும் தனித் திறமையுடன் மணிமேகலை தொகுத்துரைக்கின்றதெனலாம். காளிதாசனுக்கும் ஷேக்ஸ்பியருக்கும் ஈடான தமிழ்க் கவிஞன் ஒருவன் இளங்கோவடிகள் என்னலாம். அதனற்றான் பாரதி இளங்கோவைப்போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை யென்கிறார். சிலப்பதிகாரம் ஒரு துன்பியல் நாடகமாக அமைந்தது. அதற்குரிய ஒப்பற்ற தலைவனைக் கோவலனை எவ்வளவு திறமையுடன் இளங்கோவடிகள் படைத்தாரோ அவ்வளவு திறமையுடன் பெண்களில் ஒப் பற்றவளாக மணிமேகலையைச் சாத்தனார் படைத்திருக்கி றார். இருவரும் சிறந்த கலைஞரும் பிறர்க்கென வாழும் பேரரு ளாளருமாவர். தமிழக முனிவர்களாக ஆண்களில் அறவ ணரையும் பெண்களில் கவுந்தியடிகளையும் இருவரும் எடுத் துக் காட்டினர். இந்தியாவில் சக்தி வழிபாடு பெருகிய காலம் சிலப்பதிகார காலம். தமிழகத்திற்கேயுரிய ஒரு பெண் (சக்தி) தெய்வத்தைக் கற்புத் தெய்வத்தைத் தந் தார் இளககோவடிகள். சாத்தனாரும் ஒரு மணிமேகலைத் தெய்வத்தைத் தந்தாரென்னலாம். இருவரும் தென் தமிழ்ப் பாவைகள். இரு காப்பியங்களும் ஊழ்வினையை உலக வாழ்க்கைக்குரிய அடிக்காரண மாக்குகின்றன; அரசியல் பிழைத்தால் அனைத்தியலும் பிழைக்கும் என்ற கோட்பாட்

டினை நிறுவிக் காட்டுகின்றன.

**கண்ணகி கதை**

காவிரிப்பூம்பட்டினத்தில் மாநாய்கன் என்ற வணிகன் மகள் கண்ணகிக்கும் மாசாத்துவான் மகன் கோவலனுக்கும் இருபெருங்குரவரின் விருப்பத்திற்கிணங்க மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத் திருமணம் நடைபெறுகின்றது. இருவரும் தனி மனையறப்படுத்தப்பட்டு இன்பியல் வாழ்க்கையை இசைவாக நுகர்கின்றனர். சோழனது அவையில் ஆடலரங்கேறிய மாதவி யென்னும் நாடகக் கணிகை தான் பரிசால் பெற்ற மாலையினைக் கோவலனிடம் 1008 கழஞ்சு பொன்னுக்குக் கொடுத்து அவனையும் தன் வயமாக்க, அவளிடம் நீங்காவின்பம் துய்த்து நெடிதுநாள் தங்கிவிடுகிறான் கோவலன். புகார் நகரில் இந்திரவிழா இருபத்தெட்டு நாட்கள் நடைபெறுகின்றது. முடிவில் நகரமக்களனைவரும் கடலாடச் செல்கின்றனர். கோவலனும் கண்ணகியும் சென்று புன்னையின் கீழே புதுமணலில் தங்கி இருவரும் கானல்வரிப் பாடுகின்றனர். பாடல்களில் இருவரிடமும் ஒருவற்கொருவர் மனவேறுபாட்டுக் குறிப்பு காணப்படலால் கோவலன் மாதவியைப் பிரிந்துவிடுகிறான். மாதவி விடுத்த தூதினையும் கோவலன் மறுத்தனுப்பிவிட்டுத் தீக்கனா கண்ட பாங்கியுடனிருந்த கண்ணகியிடம் சென்று குலந்தருவான் பொருள் குன்றம் தொலைத்து வறுமொழியாளரொடும் வம்பப் பரத்தரொடும் காலங்கழித்தமையைக் கூறி இரங்கிக் கண்ணகி தந்த காற்சிலம்பை மதுரையில் விற்றுப் பொருள் தேடுதற்காக அவளையும் உடன் கூட்டிக்கொண்டு மதுரைக்குப் புறப்படுகிறான். கவுந்தியடிகளின் துணையுடன் அரிய வழிகளையெல்லாம் கடந்து ஐயை கோட்டமொன்றில் தங்கி அவ்விடத்தே மாதவியின் முடங்கலொன்றைப் பெற்று அவள் குற்றமற்றவள் என்பதனை யுணர்ந்துப்பின் மதுரையடைந்து மாதவி வீட்டில் அடைக்கலம் புகுந்தனன். கண்

ணகியால் அடிசிலாக்கி யுபசரிக்கப் பெற்ற கோவலன் அவள் சிலம்பொன்றைப் பெற்றுக்கொண்டு பல தீக்குறிகளை யும் கருதாது கடைவீதியிற் சென்றகாலைப் பணியாளர் நூற்றுவருடன் வந்த பொற்கொல்லனைக் காண்கிருன். அவன் அரசமாதேவிக்காகும் அச்சிலம்பென்று கூறிக் கோவலனை ஓரிடத்தில் நிறுத்திவிட்டுத் தான் அரசியின் சிலம்பைத் திருடியதற்கு மாற்ருக இதனைக் காட்டிவிடலா மெனக் கருதி அரசனிடம் சிலம்பைக் கன்றிய கள்வன் கை யகப்பட்டானென்று கூறக் கொன்றச் சிலம்பினைக் கொணர்கவெனப் பாண்டியனும் பணிக்கவும் ஏவலாளர் பலர் கோவலன் குற்றமற்றவன் என மறுத்தபோதும் அவர் களைத் தன் சொல்லாற்றலால் மயக்க, அவருள் ஒருவன் வாளால் கோவலன் வெட்டுண்டு வீழ்ந்தான்.

தீக்குறிகண்ட இடைச்சேரியில் குரவைக் கூத்து நிகழ் கின்றது. கோவலன் கொலையைக் கேட்ட கண்ணகி பல வாருகப் புலம்பிக் கதிரவனுல் அவன் கள்வனல்லன் எனக் கேள்விப்படுகிருள். உடனே இறந்துகிடந்த கணவனைக் கண்டு அவன் எழுந்து தன் கண்ணீரை மாற்றியிருக்கக் கண்டு கலங்கிப்போய் பாண்டியனிடம் வழக்குரைத்துத் தன் காற்சிலம்பு மணியுடையரியேயென நிறுவுகிருள். தன் சிலம்பு முத்துடையரியெனக் கண்ட பாண்டியன் யானே கள்வனென வீழ்ந்து இறக்கிருன். பாண்டிமாதேவியும் உடன் வீழ்ந்திறக்கிருள். பின் கண்ணகி வஞ்சினங் கூறி தன் முலையொன்ருல் மதுரை நகரையே தீக்கிரையாக்கு கிருள். மதுராபதி தெய்வம் கண்ணகி கோவலன் ஆகியோ ரின் முற்பிறப்பினை யுணர்த்துகின்றது. பின் கண்ணகி வைகைக் கரைவழியே வஞ்சிநாடு சென்று ஓர் வேங்கை மர நீழலிலிருந்து வானவருடன் வந்த விமானத்தில் கோவ லனும் தானும் விண்ணுலகடைந்தனள்.

அதனைக் கண்ட குன்றவர் குரவையாடி அச்செய்தியை மலைவளங் காண வந்திருந்த செங்குட்டுவனிடம் கூறினர். சேரமா தேவியார் கருத்துப்படிக் கண்ணகிக்குக் கோயி லொன்று காணும்பொருட்டுக் கல்லெடுப்பதற்காக இமயம் புறப்படுகின்றது சேரர் படை. நூற்றுவர் கன்னரது துணை யுடன் வடநாடு சென்று கனகவிசயரை வென்று கண்ண கிக் கல்லை அவர் முடிமீதேற்றி வந்து வஞ்சியில் கண்ணகிக் கோயிலெடுத்து வழிபாடாற்றுகிறான். அங்குக் கண்ணகி யின் தோழி தேவந்தியின்மேல் ஆவேசித்த தெய்வத்தினால் அவர்கள் பழம் பிறப்பையெல்லாம் உணர்கிறான். அங்கு வந்திருந்த ஆரிய மன்னரும் மாகதவேந்தரும் இலங்கைக் கயவாகுவும் பத்தினிவழிபாட்டைத் தம் நாட்டிற்கும் கொண்டு செல்கின்றனர். பாண்டியரும் சோழரும் தமிழ் நாட்டில் கண்ணகிக்குக் கோயிலெடுத்து வழிபடுகின்றனர்.

### மணிமேகலைக் கதை

தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியயன் அகத் தியர் கட்டளைப்படித் தொடங்கிய இந்திரவிழா புகார்நக ரத்தில் 28 நாட்கள் கொண்டாடப் பெறுகின்றது. விழாக் காலத்தே மாதவி மணிமேகலை ஆகியோரது ஆடல் பாடல் களை நுகராமல் நகரமாந்தர் அலர்தூற்றுகின்றனர். ஆனால் மாதவி மணிமேகலையைத் துறவறத்தில் செலுத்தி தானும் அறவணர் அறிவுரைப்படித் துறவியாகிறாள். சுதமதியுடன் மணிமேகலை மலர்வனஞ் சென்று அங்கு உதயகுமரனால் தொடர்ப்பட்டுப் பளிக்கறையுட்புக்குத் தப்பிக்கிறாள். சுத மதியின் கருத்துரையால் உதயகுமரன் நீங்குகிறான் அங் குள்ள புத்த பீடிகையைத் தொழவந்த மணிமேகலா தெய் வத்தின் சொற்படி மணிமேகலையும் சுதமதியும் சக்கரவாள கோட்டம் அடைகின்றனர். அங்கு இருவரும் உறங்குகை யில் மணிமேகலா தெய்வம் மணிமேகலையை மணிபல்லவத்

தில் கொண்டு சேர்த்துவிட்டுத் திரும்பிவந்தி சுதமதியிடம் சொல்லுகிறது. மணிபல்லவத்துத் துயிலெழுந்து துயருற்ற மணிமேகலை புத்த பீடிகையைக் கண்டுத் தன் பழம் பிறப்பையறிகிருள். அங்கு மீண்டும் வந்த மணிமேகலை தெய்வத்திடம் உதயகுமரன் முற்பிறப்பில் தன் கணவனே யென்பதை யுணர்கிருள். பின்னர் அத்தீவிலுறையும் தீவதிலகையால் அமுதசுரபியைப்பற்றி யறிந்து அப்பாத்திரத்தையும் அப்போதடைகிருள். பசியகற்றவும் வானிற் செல்லவும் உரிய மந்திரங்களைப் பெற்றுப் புகார் நகரம் வந்து அறவணரைத் தொழுது பழம் பிறப்புணர்கிருள். அடிகளிடமே அமுதசுரபிக்குரிய ஆபுத்திரன் வரலாறு முழுமையையும் அறிகிருள். அவளுக்குச் சிந்தா தேவியால் அட்சயபாத்திரம் கிடைத்ததையும் கேட்கிருள். ஆபுத்திரன் சாவகநாட்டு மக்கள் பசியைப் போக்க கலத்திற் செல்கையில் இடையில் மணிபல்லவத்தில் விடப்பட்டு விடுகிருன். அங்கே அமுதசுரபியைப் பொய்கையிற் போட்டு விட்டுத் தான் உயிர்துறக்கிருன். அவனே தன்னை முதலிற் போற்றிய ஆவானது சாவகத்தில் மறுபிறவியுற்றிருக்க அதன் வயிற்றில் மீண்டும் பிறந்து அரசனல் எடுத்து வளர்க்கப் பெற்றுப் புண்ணியராசன் என்றும் பெயர் பெற்ருன்.

இங்கு மணிமேகலை ஆதிரை யென்னும் கற்புடை மங்கையிடம் முதலிற் பிச்சையேற்றும் அதுமுதற் குறையாத சோற்றுத்திரளை உலகவறவியென்னும் அம்பலத்திற்சென்று அனைவர்க்கும் வழங்கினள். அதனையுண்ட காயசண்டிகை யென்னும் வித்யாதரப் பெண் யானைத்தீயென்னும் பசிப்பிணி நீங்கப் பெற்ருள் அங்குச் சித்திராவதியால் ஏவப்பட்ட உதயகுமரன் வந்து மணிமேகலையைப் பலவாருகத் தொல்லைப்படுத்துகிருன். அவனுக்குப் பல நல்லுரைகளைக் கூறி மணிமேகலை காயசண்டிகையின் உருவங் கொள்கிருள்.

அவ்வுருவத்துடன் ஓர் முறை உதயகுமரனுடன் பேசிக் கொண்டிருக்கையில் காயசண்டிகையைத் தேடிவந்து வித்யாதரன் உதயகுமரன் தன் மனைவியுடன் காமமுற்றவனாகக் கருதி அவனை வாளால் வெட்டி வீழ்த்திவிடுகிறான். தன் கந்திற் பாவையால் உண்மையுணர்ந்து தன் ஊர் திரும்பி விடுகிறான். இந்நிலையுற்று வருந்திய மணிமேகலைக்குக் கந்திற்பாவை உதயகுமரனின் வீழ்ச்சிக்குரிய முற்பிறப்பு வரலாற்றைக் கூறி விடுக்க அரசமாதேவியால் மணிமேகலை சிறையிலிடப் பெற்றுப் பின் விடுவிக்கப் பெறுகிறாள்.

பின்னர் மணிமேகலை சாவகமடைந்து புண்ணியராசனைக் கண்டுப்பின் இருவருங் மணிபல்லவ மடைகின்றனர். தீவதிலகை காவிரிப்பூம்பட்டினம் கடல் கொள்ளப்பட்டதையும் அதன் காரணத்தையும் கூறுகிறாள். புண்ணியராசனைச் சாவகம் அனுப்பிவிட்டு மணிமேகலை வஞ்சியடைகிறாள். கண்ணகியைத் தொழுது மதுரையை அழித்ததன் காரணத்தைக் கேட்டு நகருட்சென்று பல பல சமயத்தவர் கோட்பாடுகளையும் கேட்டாள். மாசாத்துவானையும் கண்டாள். அறவணரும் மாதவியும் கச்சி சென்றதறிந்து தானும் அந்நகர் சென்று மணிமேகலா தெய்வத்திற்குக் கோயிலமைத்து அமுதசுரபி கொண்டு ஆருயிர்கட்கெல்லாம் அமுது வழங்கி அறவணரிடம் புத்தகொள்கைகளையெல்லாம் கேட்டுத் தவம் செய்துகொண்டிருந்தாள்.

புகார்க் காண்டத்தின் மங்கல வாழ்த்துப் பாடல் திங்களைப் போற்றுதும் எனத் தண்மையுடன் தொடங்கிறது. காவியக் கலைக்குச் சிறப்பளிக்கும் கலைமதியாகத் திங்கள் போற்றப்படுகின்றது. திங்களும் ஞாயிறும் மாமழையும் கொடிநிலை கந்தழி வள்ளியெனத் தொல்காப்பியர் கூறிய கடவுள் வாழ்த்தொடும் கண்ணியவருஉம் வாழ்த்துக்க

ளாகக் கருதப்படுகின்றன. நச்சினர்க்கினியர் போன்ருேர் கொடிநிலை முதலியவற்றைத் திங்கள் முதலியவாகவே பொருள் செய்கிருர். திருக்குறள் வான்சிறப்பு நீத்தார் பெருமை அறன் வலியுறுத்தல் மூன்றையும்கூட இவ்வாறே பொருள் செய்பவர் பலர். கடவுளுக்கடுத்த கடவுள்களாகக் கருதப்பெற்ற இயற்கை சக்திகளை இவ்வாறு வணங்கினர் முன்னேர். சூரியனைத் தனியாகக் கோயில்கட்டி வணங் கினர் ஹர்ஷன் காலத்தவரும் சிலப்பதிகார காலத்தவரும். இவ்வழிபாட்டின் விரிவே பிற்காலத்து நவக்கிரக வழிபா டெனலாம். சிறந்த நகரையும் சிறந்த ஆண்பெண்களையும் உலக வளர்ச்சிக்குரிய ஆண் பெண் இணைப்பாய மணத்தை யும் இக்காதையுள் அறிமுகம் செய்கிருர் ஆசிரியர். உலகம் ஆண் பெண்களாலும் அவர்கள் கலப்பாலும் உயர்வதென வும் அவர்கள் நடத்தும் சிறந்த நகரவாழ்க்கையால் ஆவது நாகரிகமெனவும் இம்முதற்காதை உணர்த்துகின்றது. 16 வயது ஆணும் 12 வயது பெண்ணும் இருபெருங் குரவர்தம் விருப்பப்படி மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட மணக் கின்றனர். இவ்வழக்கு கடைச்சங்க காலத்திற்குப் பிற் பட்டதென்பது இதனுலறியப்படும். இதனைக் காதல் (களவு) மணமெனச் சிலர் வீணே வாதாடி நிற்பர். வானூர் மதியம் சகடணைய மணந்தவரைக் காதலற்பிரியாமல் கவவுக்கை நெகிழாமல் தீதறுக என வாழ்த்தியதே நாடக முன்னம் (Dramatic irony) என்பர். பின்னல் நிகழப்போகும் பிரிவு நிகழ்ச்சிகளை யெல்லாம் ஆசிரியன் இதனுல் குறிப்பித்துவிடு கிருன். செருமிகு சினவேல் செம்பியன் என்பது தூங்கெயில் யில் எறிந்த தொடித்தோட் செம்பியனைக் குறிப்பதா என ஆராயவேண்டும். மணிமேகலை முதற்காதையிலும் இவன் குறிக்கப் பெறுகிருன். பொதியிலாயினும் இமயமாயினும் என இந்தியா முழுவதையும் ஏதோவொரு வகையில் காவி யம் இணைத்து விடுகின்றது. நகரமும் (நாடும் மக்களும்)

என்றும் எந்தச் சூழலிலும் நடுக்கின்றி நிலையியவாக இருத்தல் வேண்டுமென இவ்விலக்கியம் எடுத்தியம்புகின்றது.

மணையறம் படுத்த காதையில் கோவலன் கண்ணகி இருவரும் தனிக்குடும்பம் நடத்துமாறு செய்யப்படுகின்றனர். தமிழர் பண்பு ஆண் மகன் தன் மணத்திற்கு வேண்டிய பொருளைத்தானே உழைத்துத்தேடி மணக்கவேண்டுமென வற்புறுத்துவது. அதேபோலக் குடும்பத்தையும் தான் தேடிய பொருளால் நடத்தவேண்டுமென்பது. தன் பெற்றோர் அல்லது மனைவியின் பெற்றோர் தேடியபொருளால் குடும்பம் செய்தல் நன்றன்றென்பது. இதனால் சொந்தத் திறமையும் தன்னம்பிக்கையும் காதலர்க்குரிய தனிமையும் கிடைக்கின்றன. கோவலனின் நெடுநிலை மாடம் உத்தரகுருவின் ஒப்பத் தோன்றுகின்றது. உத்தர குருவென்பது புறநானூறு முதலாம் இலக்கியங்களிலும் பேசப்படுகின்றது. இந்தியாவின் வடகோடியில் இருந்ததொரு இன்பமயமான தேவருலகம். தாமரைக் கண்ணான் உலகு என வள்ளுவர் கூறும் உலகம் இதுபோன்றதாகலாம். தேவதச்சனாகிய மயனும் இங்குக் குறிக்கப் பெறுகிறான் இக்கதையில் அகப்பொருள் நன்கு கற்பனை செய்யப்பெறுகின்றது. கோவலன் பிரிவதற்கு முன் புணர்ந்திருத்தலும் நலம்பாராட்டலும் நன்கு இயம்பப் பெறுகின்றன. வேனில் தோற்றமும் இளங்கோவின் உவமையழகும் இக்காதையில் ஏற்றம்பெறுகின்றன. கண்ணகியின் (தமிழ்மகளின்) கை புனைந்தியற்றாக் கவினை நன்கு எடுத்துக்காட்டுகிறார். மாசறு பொன்னே வலம்புரி முத்தே காசறு விரையே கரும்பே தேனே எனக் கண்டு கேட்டு உண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலவின்பத்தினை உணர்த்துகிறார் ஆசிரியர். அறப்பரிசாரமும் விருந்து புறந்தருதலும் கூடிய இற்பெருங்கிழமை வாழ்க்கையில் இருவர்க்கும் யாண்டு சில கழிந்தன. பலர் கருதுமாறுபோல மணமானதும் உடனே கோவலன் கண்ண

கியைப் பிரிந்துவிடவில்லை. தொலையாத இன்பமெலாம் துன்னினுர் என்றே சிலப்பதிகாரம் கூறுகின்றது.

முத்தமிழ்க் குறிப்புகட்கோர் கருவூலமாக விருப்பது அரங்கேற்று காதை. தமிழகத்திற்கும் தமிழுக்கும் இளங்கோ தந்த இலக்கிய ஒப்புரவு அரங்கேற்று காதையெனலாம். மற்ற இலக்கியங்களிற் காணும் இசை நாடகக் குறிப்புக் கள் இக்காதையால் உண்மையும் உறுதியுமடைகின்றன. தெய்வமால்வரைத் திருமுனியாகிய அகத்தியர் சாபமுற்ற இந்திர சிறுவனேடு கூடிய தலைக்கோல் இக்காதையின் தொடக்கத்தில் பேசப்படுகின்றது. பதினேர் ஆடலும் ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வியின் ஓரேழ் பாலையும் யாழும் குழலும் சீருமிடறும் தாழ்குரல் தண்ணுமை இசைந்த பாடல் இசை விளக்கமும் இதன்கண் விவரிக்கப் பெறுகின் றன. கடலாடு காதையில் பதினேராடலும் விளக்கப் பெறு கின்றன. இசைக் குறிப்புக்கள் கானல்வரி; வேனிற்காதை; புறஞ்சேரியிறுத்த காதை முதலிய விடங்களில் விரவிக் கிடக்கின்றன. இசைப்பாடல்களை யெழுதும் புலவன் தமிழ் முழுதறிந்த தன்மையனுகவேண்டும். இசைக்கு எம்மொ ழிப் பாடலானுல் என்ன என்ற மூட வாதத்தை இவ்வரி முறி யடிக்கிறது. ஒரு மொழிக் குரியோர்க்கு அவர் மொழிப் புலமை நிறைவால் வந்த பாடல்களே பண்ணுடன் பொருந் தும். பண்ணென்னும் பாடற்கியைபின்றேல் என்ற வள்ளு வர் கருத்தும் அதனையே வலியுறுத்தும்; பாடல் பொருளில் உள்ள உணர்ச்சியுடன் பண் பொருந்துவது. 'பாடலோடணை தல் இசையென்றுர்' என்பது பண்டையோர் பாடல். அதற் குப் பாடற் பொருளுணர்ச்சி இன்றியமையாதது. தமிழ் முழுதறிந்த என்ற தொடர் இத்தமிழிசை யியக்கத்தையே ஆதரிப்பதாகும். குழல்வழியாழும் யாழ்வழித் தண்ணுமையும் பின் முழவும் ஆமந்திரிகையுமாக அக்காலத்து இசைக் கச் சேரிகள் இலங்கிநின்றன. பேரியாழ் (21 நரம்புகள்) மகர

யாழ் (17) சகோடயாழ் (11) செங்கோட்டியாழ் (7) முத லிய இங்குக் குறிக்கப் பெறுவதாக உரையாசிரியர் கருது கிறார். செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை என்பன ஏழுபாலைகள். யாழாசிரியனமைதியில் பன்னிரு பாலையினுரு தொண்ணூற்ருென்றும் பன்னிரண்டுமாய்ப் பண் கள் நூற்றுமூன்ருதற்காம் காரணங்களை அடியார்க்கு நல் லார் காட்டுகின்ருர். குரல், துத்தம், விளரி, கைக்கிளை, இளி, உழை, தாரம் என்பன ஏழிசையிடங்கள். கண்கூடு வரி, கானல்வரி, உள்வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சி வரி, காட்சிவரி எடுத்துக்கோள்வரி என்பன எட்டுவகை வரிகள்.

ஆடலரங்கேறிய மாதவிக்கு 1008 பொன்னையளித்து அவட்குத் துணையாய கூனியின் பின்னே சென்று மாதவி யிடம் மயங்கினன் கோவலனென்றே காதை முடிகின்றது. இராமாயணத்தும் இராமன் பிரிவிற்கோர் கூனி வந்தாள். இங்கும் (பின்னல்) கோவலன் பிரிவிற்கோர் காரணமாகக் கூனி வருகிருள்.

அந்திமாலைச் சிறப்புச் செய்காதையில் அரைசு கெடுத் தலம் வரும் அல்லற்காலைப் புலப்படவிருந்த விருந்தின் மன் னர் பற்றிய உவமை வருகின்றது. இதுவோர் காலக் குறிப் பாகலாம். வேற்றரசுகள் தமிழகத்துப் புகுந்த வரலாற்றை இது குறிக்கக் கூடும். பிரிந்தோர் புணர்ந்தோர் பற்றிய அகப்பொருள் விளக்கம் அடுத்த காதைகட்குத் துணைசெய் வதாக இருக்கின்றது.

இந்திரவிழவூரெடுத்த காதையில் புகார் நகரவருணனை அக்காலத் தமிழக நகர அமைப்பு, வாணிபம் ஆகியவற்றை விவரிக்கிருர் ஆசிரியர். இசைப்புலவர்க்கும் நுண்தொழி

லர்க்கும் தனியிருக்கைகள் இருந்துள்ளன என்பது இங்குக் குறிக்கத் தக்கதாகும். தேவர் கோமான் ஏவலின் வந்த காவல் பூதம் இங்குக் குறிக்கப் பெறுகின்றது. திருமாவள வன் இமயம்வென்று பெயர்ந்த காலை வச்சிரநாட்டாரசளித்த கொற்றப் பந்தரும் மகத நாட்டாரது பட்டிமண்டபமும் அவந்தி வேந்தனது தோரணவாயிலும் இங்கெடுத்துப் பேசப்படுகின்றன. கடைச்சங்கக் கரிகாலன் பாடல்களில் இக்குறிப்புகள் இல்லை. வம்பமாக்கள் தம் பெயர் பொறித்த கண்ணெழுத்துப்படுத்த எண்ணுணில் பல்பொதி என்பதில் கண்ணெழுத்து என்பது வம்பமாக்கள் எழுத்தாகுமா என்ப தனை ஆயவேண்டும். அரைசுகோல் கோடினும் அறம்கூற வையம் கோடினும் பாவை நின்றழூஉம் பாவை மன்ற முத லிய ஐவகை மன்றங்கள் இங்குக் கூறப்படுகின்றன.

இந்திரவிழா ஐங்குறு நூற்றிலும் குறிக்கப் பெறுகின்றது. நிலந்தரு திருவிற்பாண்டியன் இடைச்சங்கத்துக் கடற் றெய்வத்திற்கு விழாவெடுத்ததாகிய குறிப்பு இந்திரவிழா வுடன் தொடர்புடையதோ அறியக்கூடவில்லை. ஆனல் கடைச் சங்கத்திற்குப் பின் தூங்கெயிலெறிந்த தொடித் தோட் செம்பியன் இவ்விழாவினைத் தொடங்கியதாக மணி மேகலை தெரிவிக்கின்றது.

தென்றல் வருணனை இக்காதையில் இனிமையாகச் செல்கின்றது. விழாக்காலங்களில் விஞ்சையரின் போக்கு வரத்து தமிழகத்தில் பெருகிக் காணப்பெறுகின்றது. இந் திர விழாவில் காமக் கடவுட்கும் அவுணரைத் தொலைத்த பூதங்கட்குமெல்லாம் நல்விருந்துகள் இடப் பெறுகின்றன. விஞ்சை வீரன் ஒருவன் உஞ்சையம்பதியைக் கண்டு தமிழ கத்திற்கு வந்ததாக ஒரு செய்தியுள்ளது. உஞ்சையென்பது உஜ்ஜயினி. முத்தொள்ளாயிரத்தும் இந்நகரம் குறிக்கப் பெறுகின்றது. குப்தர்களின் தலைநகரம் இது; பிற்காலக் குறிப்புக்களில் இதுவும் ஒன்றுகக் கூடும்.

கடற்கரையில் வைகறைக் காட்சிகளில் ஒன்ருக மொழி பெயர் தேயத்தோர் ஒழியா விளக்கம் இருக்கின்றது. கானல் வரிப்பாடல்கள் கற்பனையழகும் யாப்பமைதியும் இசையும் இலக்கிய நயமும் உடையவை. இருவரும் ஒருவரையொரு வர் புண்படுத்த விரும்பவில்லை. ஆனல் பாடல்கள் அவ்வா ருக அமைந்துவிட்டன. அதனையே ஊழ்வினையென ஆசிரி யர் கருதுகின்ருர். யாழ் மீட்டுமுறை இனிதாக விவரிக்கப் படுகின்றது. தாழிசை வகையான பாடல்கள் கருத்திற்குக் குழைவையும் ஓசையையும் தருகின்றன.

மாக்கடல் தெய்வம் இங்குப் பாடல்களில் பரவப்படுகின் றது. ஆனல் அதன் பெயர் குறிக்கப் பெறவில்லை. வேனில் காதையில் நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவ மும் தமிழக எல்லைகளாக இருந்தனவென்பது தெரிகின்றது. வசந்தமாலையை மாதவி தூதனுப்புதலும் கோவலனதனை மறுத்தலும் இக்காதையில் வருகின்றன. அரங்கேற்று காதையில் குறிக்கப்பெற்ற எண்வகை வரிகள் இங்கு விவ ரிக்கப் பெறுகின்றன. 'ஊடினீர் எல்லாம் உருவிலான் தன் ஞணை கூடுமின் என்று குயில் சாற்ற' என்ற இனிய வரிகள் இக்காதையில் வருகின்றன.

கனுத்திறம் உரைத்த காதையில் இந்திரன் சம்பந்த மான பலவகைக் கோயில்கள் ஞாயிறு திங்கள் ஆகியோர்க் குக் கோயில்கள் முதலியன குறிக்கப் பெறுகின்றன. பிணந் தின்னும் பேய்கள் இரண்டு காப்பியங்களிலும் இடம் பெற் றுள்ளன. தெய்வம் தொழாள் கொழுநற் றெழுதெழுவாள் என்னும் கற்புநெறி இங்கு வெளியாகின்றது. சோமகுண் டச்சூரிய குண்டத்துறை மூழ்கிக் காமவேள் கோட்டம் தொழுதலைப் பீடன்று என அடக்கத்துடன் ஆனல் உறுதி யாக மறுத்துவிடுகிருள் கண்ணகி.

சலம்புணர் கொள்கைச் சலதியோடாடிக் குலந்தரு வான் பொருள்குன்றம் தொலைத்த இலம்பாடு நாணுத்தருமெ னக்கென்று குற்றத்தையுணர்ந்தவனுய்க் கோவலன் தான் ஒப்புயர்வற்ற காவியத் தலைவன் என்பதை இங்குப் புலப் படுத்தி விடுகிறுன். அங்கும் நலங்கேழ் முறுவல் நகை முகங் காட்டுகிருள் நல்வாழ்க்கைத்துணை. இச்சிறு குறையே அவனை நாடகத்தில் கீழ்நிலைக்குக் கொண்டு செல்கின்றது.

நாடுகாண் காதையில் சமயச் சாரணர்களின் போக்கு வரத்து மிகுதியாகக் காணப்படுகின்றது. பெருமகன் திரு மொழி பிறழா நோன்பினராக இங்குக் கண்ணகியும் கோவ லனும் காட்சியளிக்கின்றனர். எனவே தெய்வந்தொழாத வளல்லள். முதலில் தெய்வத்தைத் தொழாமல் கணவனைத் தொழுபவள் பின்னர்த் தெய்வம் போற்றுபவள் என்பது கருத்து. அன்னையும் பிதாவும் போலக் கணவனை முன்னறி தெய்வமாகக் கருதும் தமிழ்நெறி இங்கும் புலனுகின்றது. தமிழகத்தின் பூகோள அமைப்பு (ஐவகை நிலஅமைப்பு) இக்காதையுள் நன்கு விளக்கப் பெறுகின்றது. சிந்தை விளக்கு (கலைமகள்) இங்கும் மணிமேகலையிலும் அடிக்கடிக் குறிக்கப் பெறுகின்றது. அருகதேவனுடைய பலபெயர்கள் இங்குச் சாரணரால் ஓதப்பெறுகின்றன. பகவன் எண் குணன் என்பனவும் அவற்றுள் அடங்குகின்றன. இறைவ னின் 1008 திருநாமங்கள், ஐந்தெழுத்து எட்டெழுத்து முதலாம் மந்திரங்கள் இக்காப்பியத்துள் பயிலுகின்றன. இவையும் பிற்காலக்குறிப்புக்குரியன. விஞ்சையருஞ்சாரணர் களும்அந்தரம் ஆருப்பறக்கும் ஆற்றல்பெற்றிருந்தனர். மணி மேகலையிலும் காணப்பெறும் இவ்வாற்றல் யோக வலிமை யைச் சார்ந்த மனித ஆற்றலேயாகும். இவ்வாற்றல் இப் போது இல்லாமலே ஆய்விட்டது. கடைசியில் தூர்த்தர் களைக் கவுந்தி சபித்தது ஒன்னுர்த்தெறலும் உவந்தாரை யாக்கலுமாகிய தவத்தினதாற்றலை மெய்ப்பிக்கின்றது.

மதுரைக்காண்டம் கோவலனைக் கொன்ற அவலச் சுவை நிரம்பியதாகும். சிலப்பதிகாரம் அவல நாடகம் என்பது இங்குப் புலனாகின்றது. காடுகாண் காதையில் மாங்காட்டு மறையோன் பாண்டியனை வாழ்த்து முகமாகத் தமிழக வரலாறு சிலவற்றைக் கூறுகிறான். பஃறுளியாற்று டன் பன்மலையடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள வடதிசையிமயமும் கங்கையும் கொண்டு தென் திசையாண்ட தென்னவராகிய பாண்டியர்தம் திருவிளையா டற் புராண வெற்றிகள் சிலவற்றையும் குறிக்கின்றது சிலப் பதிகாரம். இந்திரன் ஆரத்தையும் முடியையும் பறித்தது, மேகங்களைச் சிறையிட்டது முதலியன அக்குறிப்புக்கள். திருவரங்கம் திருமால் கோயிலாகக் குறிக்கப்பெறுகின்றது. திருவரங்கம் கி. பி. 5—6 ஆம் நூற்றாண்டுகளில் தோற்று விக்கப்பெற்றமை அதன் வரலாற்றாலேயே தெரிகின்றது. கோயிலொழுகென்ற வரலாற்றுக் குறிப்புக்களும் இதனை வலியுறுத்தும்.

ஐந்திர வியாகரண அறிவு இக்காலத்தில் பாராட்டப் பெற்றுள்ளது. வைதிக சமயத்தினர் மேற்கொள்ளச் சமணர் இதனை மேற்கொள்ளவில்லையெனத் தெரிகின்றது. கப்பத் திந்திரன் காட்டியநூல் விண்ணவர் கோமான் விழுநூல் எனவெல்லாம் அது பாராட்டப்பெற்றது. வரோத்தமை போன்ற வரையர மகளிரும் நீராமகளிரும் தமிழகத்தின் தத்துவங்களையும் பண்புகளையும் அறியும் வேட்கையுடன் பலவிடங்களில் தங்கியுள்ளனர். ‘இம்மைக்கு இன்பமும் மறுமைக்கின்பமும், இம்மையுள் மறுமையுமிரண்டுமின்றி யோர் செம்மையில் நிற்பதும் செப்புமின்’ எனத் தமிழரை அவர்கள் கேட்டுள்ளனர்.

மதுரை செல்லும் வழியில் ஐயைக் கோட்டத்தை அடைகின்றனர் கோவலன் கண்ணகி கவுந்தி மூவரும்.

வேட்டுவவரியுள் கொற்றவை வழிபாடு கூறப்படுகின்றது. நவசக்திகளின் வழிபாடு செழித்த காலம் இது. அமரி, குமரி எனப் பல சக்திகளாகவும் நிற்கும் கொற்றவையின் கோலம் இங்குப் பரவப்பெறுகின்றது. இட்டுத்தலையெண்ணும் எயினர் (பாலைநிலத் தமிழர்) வாழ்க்கை இங்கு எடுத்தியம்பப் பெறுகின்றது. இங்குத்தான் கண்ணகி 'ஒருமாமணியாய் உலகிற்கோங்கிய திருமாமணி, தென்தமிழ்ப் பாவை' யென்றெல்லாம் ஏத்தப் பெறுகிருள். இவளும் வீரபத்தினித் தெய்வமாயினமையின் கொற்றவையைப் போற்றுமிடத்துப் போற்றப் பெறுகிருள். புறஞ்சேரியிறுத்த காதையில் பாண்டியனது செங்கோன்மை பேசப்பெறுகின்றது. இடியும் புலியுமனைய இயற்கை சக்திகளும் இடுக்கண் செய்யாவாயின தமிகத்தில். இக்காதையில் மூவரும் மதுரையை யடைகின்றனர். இடையில் கோவலனிடம் மாதவி முடங்கல் கிடைத்து அவள் குற்றமற்றவள் என்பதனை உணர்கின்ருள். எனவே மதுரையில் அவனைப் புகுத்தியது ஊழ்வினையே என்பதனைக் காவியம் தெளிவுபடுத்திவிடுகின்றது.

ஊர்காண் காதையில் (தமிழக) மதுரை நகர அமைப்பு விரிவாகக் கூறப்படுகின்றது. அறத்துறை விளங்கிய அறவோரைத்தவிர்த்த மற்றையோர் வாழ்க்கைநெறி 'பெண்டிரும் உண்டியும் இன்பமென்றுலகில் கொண்டோர்' நெறியெனக் குறிக்கின்றது காவியம் ஓரிடத்தில். பலவகைப் பருவங்களிலும் பலவகை மக்களும் இன்பமாகப் பொழுது போக்கும் அகத்துறை விளக்கம் இக்காதையில் அழகுறக் கற்பனை செய்யப் பெறுகின்றது. பத்துப்பாட்டு (பட்டினப் பாலை) நினைவுகள் அடிக்கடிச் சிலப்பதிகாரத்து வருகின்றன. காலமன்றியும் கருங்கறி மூடையொடு கூலங் குவித்த கூலவீதிகள் நாடாவளத்ததாகிய நாட்டுவளத்தைக் கூறுகின்றன.

அடுத்துவரும் கொலைக்களக் காதைக்கு முன்பாக இவ் வடைக்கலக் காதையில் கோவலனின் தலைமைப் பண்புகளும் ஆண்மையும் ஒப்புரவாண்மையும் பேசப்படுகின்றன. ஒப்புயர்வற்ற தலைவனின் வீழ்ச்சிபற்றிய நாடகவிலக்கியத்திற்கு இஃதோர் நிறைவைத் தருகின்றது. முதுமறையோனைத்தன் உயிரையும் கருதாது மதயானையிடமிருந்தும் காத்த கோவலனின் கருணை மறத்தையும் கீரியைக்கொன்ற பார்ப்பனியின் துயர்தீர்த்தமையையும் பூதம் கொன்ற தீயோனின் குடியைக்காத்தமையையும்இக்காதை எடுத்துக் காட்டுகின்றது. 'இன்றுணை மகளிர்க்கின்றியமையாக் கற்புக் கடம்பூண்ட இத்தெய்வமல்லது பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்' எனக் கண்ணகியின் ஒப்பற்ற தலைமைப் பண்பும் இங்கு ஓங்கி நிற்கின்றது.

தமிழர் போர்முறையில் ஒரு சிறந்த கட்டம் இங்குக் காணப்பெறுகின்றது. உயர்வகலம் திண்மை அருமையெனும் நான்கனுள் அரணின் அணுகுதற்கரிய அருமை அதனையுடைய பல்வகைப்பொறிகள் இங்குக்கூறப்பெறுகின்றன. வளைவில் பொறியும் கல்லுமிழ்கவணும் கல்லிடு கூடையும் அவற்றுள் சிலவாகும். கொலைக்களக் காதையில் மாதவியிடம் அடைக்கலமாகிய கண்ணகி கணவனுக்குப் புதிதாக உணவாக்கி அருத்துவது கூறப்படுகின்றது. முளிதயிர்ப் பிசைந்த எந்த குறுந்தொகைப் பாடலில் அன்புடன் காதலி அமைத்தது எப்படிப்பட்டதாயினும் இனிதெனக் கணவனுண்டலின் காதலியின் முகம் மகிழ்ந்தது எனக் கூறப்படுகின்றது. அதே அன்பின் பெருக்கம் இங்குக் கண்ணகியின் விருந்துபசாரத்திலும் காணப்படுகின்றது. தமிழகத்தின் உணவு வகைகளும் முறைகளும் இங்குத் தெரிகின்றன. பெண் இங்கு மனைக்கு விளக்கு (விழுமந் தீர்த்த விளக்கு) எனப் பெயர் பெறுகிருள். சிறுமுது குறைவிக்குச் சிறுமை செய்த தவற்றைத் தலைவன் (கணவன்)

இங்கு மனமார உணர்ந்து வருந்துகிருன். இந்நிலே குடும்ப வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாதது. பெண்ணின் பெருங் குணங்களெல்லாம் இங்குப் பேசப்படுகின்றன. இக் காதையில் 'கட்டத்தை'த்திறம்பட அமைத்திருக்கிருர் ஆசிரியர். கோவலன் ஊழ்வினையால் வீழ்தற்கு என்னவெல்லாம் அமைக்க வேண்டுமோ அனைத்தையும் செய்துவிடுகிருர் ஆசிரியர். கேட்டார்ப் பிணிக்கும் தன்மையவாய ஆசிரியரின் சொற்கள் பொற்கொல்லனிடம் காணப்பெறுகின்றன. களவுக்கெனத்திட்டமான கல்வியும் நூலும் அக்காலத் திருந்தமை இக்காதையால் தெரிகிறது.

அடிக்கடி ஆசிரியர் ஆய்ச்சியர் குரவையையும் வேட்டுவ வரியையும் குன்றக் குரவையையும் இடையிட்டுச் சொல்லுகிருர். இவை நாடக அமைப்பிற்கு நற்றுணை புரிகின்றன. இன்பமும் துன்பமும் இணைந்தும் இரட்டித்தும் வருதலை உணர்த்துதற்குப்போலும் இக்கட்டங்கள். கலித் தொகை முல்லைக்கலி நினைவுகளைக்கொண்டு வருகின்றன குரவைப் பாடல்கள். ஏழிசைக்கும் குரவைக்கும் கூறப் பட்ட இணைப்புக்கள் தமிழ் இசை நாட்டியங்களின் பழமையை யுணர்த்துவனவாகும். மூவேந்தர்க்கும் நடுவாயது போலவே ஆசிரியர் நோக்கு சைவ வைணவம் ஜைனம் முதலிய முச்சமயங்களுக்குக்கூட நடுவாகவே இருக்கின்றது. குரவை - வரிப்பாடல்களில் சைவ வைணவச் சிறப்பு மிகவாக உயர்ந்து நிற்கின்றது. மூவுலகும் ஈரடியான் முதலிய இசைப்பாடல்கள் மிகவும் இனிமையும் நயமும் உடையன.

துன்ப மாலையில் நாடகக் கட்டம் உணர்ச்சியும் வியப்புமுடையதாகச் செப்பம் செய்யப்பட்டுள்ளது. பாய் திரை வேலிப் படுபொருள் நீயறிதி காய்கதிர்க் செல்வனே கள்வனே என்கணவன்' எனக் கண்ணகி கேட்கையில் கதிர

வனின், உலகிற்கே பொதுவாக என்று மாதங் கடவுட் டன்மை புலனாகின்றது. இனி என்ன நிகழுமோ என்ற ஏக் கத்தைக் கட்டம் ஏந்தி நிற்கின்து. ஊர் சூழ்வரியில் நாட கக் காட்சி நன்கு அமைந்துள்ளது. கண்ணகி கண்டதும் கோவலன் வானுலகேகலும் கண்ணகி அரண்மனை வாயிற் கேகலும் கண்முன் நிகழ்வனபோலவே உள்ளன. வழக் குரை காதையில் கண்ணகியின் வீரக்கற்பு புலனாகின்றது. கள்வனோ என் கணவன் என்றாள், கணவன் இறந்தான் என்பதற்காகவன்றி கள்வனாகக் கருதப்பட்டானே என்பதற்காகவே கலங்குகிறாள். அவன் கள்வனல்லன் என்பதனை மெய்ப்பிக்கவே வழக்குரைக்கிறாள் தனக்காக இல்லாதபோது உண்மைக்காக உரத்திப் பேசுவதும் பெண் மைக்கிழுக்காகாது கடமையே என்பதனைக் காட்டவே கண்ணகி வாதாடுகிறாள். பொய்மையை வெல்லுமாறு விட் டுத்தான் கோழையாய் அடங்கியொடுங்கிவிடல் பெண்மை யாகாது. தமிழ்ப்பெண் மறமும் உடையவள்; அம்மறத்திற் கது அழகுமன்று. மனுநீதிச் சோழன் நீதியைக் கண்ணகி யெடுத்துரைக்கிறாள். அக்கதை பிற்காலக் குறிப்பாகும்.

வஞ்சின மாலையில் முற்பகல் செய்தான் பிறன்கேடு என்ற தொடர்கள் குறள் நினைவினைக் கொண்டுவரும். தமிழகக் கற்புடை மங்கையர் எழுவர் வரலாறு இங்கு மொழியப்பெறுகின்றது. தமிழகத்தின் தனிப்பண்பினை இளங் கோவடிகள் எழுதிக் காட்டும்போதெல்லாம் சிலப்பதிகாரம் நெஞ்சையள்ளக் காண்கிறோம். பத்தினிப் பெண்டினர் கைவிட்டுத் தீத்திறத்தார் பக்கமே சேர்க எனத் தீக்கட வுட்கு ஆணையிடுகையில் கண்ணகி நாட்டில் கற்பிலாப் பெண்டிர் அழிதலைப் பற்றியும் கவலைப்படவில்லை யெனப் புலப்படுத்துகிறாள். வஞ்சினத்தில் ஒருமுலையிழத்தல் கடைச் சங்கப்பாடல்களிலும் புத்தக்கதைகளிலும் வருகின்றது. தியா கத்தின் உயர்நிலையைக் குறிக்கிறது. காதலன் போய்விட்

டான் காதலுக்கிடமான கொங்கையை யிழப்பதில் கற்புடையவள் தயங்கவில்லை.

அழற்படுகாதையில் நால்வருணப் பூதங்களும் நீங்கியமையில் சமூக முழுவதும் ஆட்டங்கண்டுவிட்ட நிலை தெளிவாகின்றது. மறவோரும் மடந்தையரும் இல்லற மகளிரும் நாடக மடந்தையரும் நடுங்க, நகரில் நாட்கடன்களெல்லாம் நடவாதொழிகின்றன. மதுராபதி தெய்வமே கண்ணகிமுன் தோன்றிவிடுகிறாள். இல்லத்தை காப்பவள் பெண்ணானால் நகரைக் காப்பதும் அவள்தானே ஆக வேண்டும்.

கட்டுரை காதையில் பாண்டியனது நீதி புலப்படுத்தப் பெறுகின்றது. பொற்கைப் பாண்டியன் கதை காலக் குறிப்பாகலாம். கோவலன் முதற்பிறப்பு வரலாறு தெளிவாகின்றது. இவ்விரு காப்பியங்களும் மக்களின் முற்பிறப்பு பிற்பிறப்புக் கதைகளால் வாழ்வில் ஓர் அமைதியையும் நம்பிக்கையையும் ஊட்டுகின்றன. சேரருள் மாந்தரஞ்சேரல் இவருள் குறிக்கப் பெறுகிறான். சிறைப்படு கோட்டம் சீமின் என வார்த்திகன் கதையில் வருகையில் மணிமேகலைக் காவியநினைவு வருகின்றது.

மதுரையை நீங்கித் திருச்செங்கோடு சென்ற கண்ணகியைத்து வாழ்வாங்கு வாழ்பவர் அடையும் பயனாய் வானுறையும் தேவர்களால் வாழ்த்தி வானுலகிற் கழைத்தேகப் பெறுகிறாள்.

தமிழர் வீரத்தை விளக்கிக் காட்டும் வஞ்சிக்காண்டத்தைக் குன்றக்குரவையுள் கண்ணகி மலை நாட்டவரால் குரவைப்பாடிப் பரவப் பெறுகிறாள். இவள் போலும் நம் (தமிழ்) குலக்கோர் இருந்தெய்வம் இல்லை யென்கின்றனர் வஞ்சியர். செங்கோடும் வெண்குன்றமும் முருகன் கோயில்

களாகின்றன. குன்றுதொருடல் என்ற விடத்தே நக்கீரர் இவ்விரு குன்றுகளையும் நினைக்கிருராகலாம். கண்ணகியை யும் களவியல் இன்பப் பகுதியையும் கூட்டி ஆசிரியர் காட்டும் கற்பனை இங்கு இலக்கியத்திற்கோர் ஒப்பற்ற விருந்தாக நிற்பதாகும்.

காட்சிக் காதையில் மலைவளங் காணவந்த செங்குட்டு வன் கண்ணகியைப்பற்றிக் குறவரால் கேள்விப்பட்டு வேண்மாளின் விருப்பப்படி அவட்கோர் கோயிலெடுக்கக் கருதிக் கல்லை இமயத்திலிருந்தே எடுத்துவர முடிவு செய் கிருன். ஓர்முறை செங்குட்டுவனுடன் பொருத அரசர்களில் கொங்கணர், கலிங்கர், கொடுங்கருநாடர், பங்களர், கங்கர் பல்வேறகட்டியர் வடவாரியர் ஆகியோர் குறிக்கப் பெறுகின்றனர். பங்களர் பல்வேறகட்டியர் ஆகியோரைப் பற்றியாய்ந்தால் செங்குட்டுவன் காலம் ஓரளவு தெரியக் கூடும். தென்தமிழாற்றல் அறியாதுரைத்த ஆரிய மன்னரை அடக்கி வணங்கியது பற்றியது கால்கோட்காதை. பால குமரராகிய கனகவிசயர் இருவரும் உத்தரன் விசித்திரன் உருத்திரன் வைரவன் முதலியவருடன் வந்து பொருகின்ற னர். இந்திய வரலாற்றில் இவ்வரசர் யாரென அரிய வேண்டும்; கனிஷ்கர், ஹூவிஷ்கர் பரம்பரையாகக்கூடும். கண்ணெழுத்தைப்பற்றி முன்பும் கூறப்பட்டது. கண்ணெ ழுத்தைப்பற்றி கண்ணெழுத்துப்படுத்தன கைபுனை சகடம் என்ற விடத்துக் கண்ணெழுத்து தமிழெழுத்துக்களின் பண்டைய வடிவம் என்பார் கருத்தையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

நீர்ப்படைக் காதையுள் வடவாரியரைப் பதினெட்டுக் கடிகையில் செங்குட்டுவன் வென்றது கூறப்பட்டது. செங் குட்டுவன் வடவரை வென்றது ஒரு கற்பனை எனச் சிறந்த வரலாற்றறிஞர் சிலரும் கூறுவர். இராசேந்திரனது படை

யெடுப்புக்களை யெல்லாம் மறுக்கமுடியாத வரலாற்றறிஞர் இதனை மட்டும் ஏன் மறுக்கவேண்டும், தெரியவில்லை! மாதவி, கோவலன், கண்ணகி தாய்தந்தையர் துறவு பூண்டமைபற்றியெல்லாம் இக்காதை எடுத்துரைக்கும்.

செங்குட்டுவன் வஞ்சிநகர்க்குத் திரும்புகிருன். நான்கு நிலமக்களும் ஆடிப்பாடி அவனை வரவேற்கின்றனர். அவருள் குறிஞ்சி, மருதம், முல்லை என மூன்று நிலத்தவரும் கூறப்பட்டபின் நெய்தல் நிலத்தவர் பாடச் செங்குட்டுவன் வஞ்சியுள் புகுந்தனன் என்றிருப்பதால் வஞ்சி இங்கு நெய்தல் நிலத்தது மேற்குக் கடலோரத்தது என்பது போதரும். பலர் கருதுமாறு அது கரூர் வஞ்சியன்று. மற்றும் வடக்கே செல்கையில் செங்குட்டுவன் புணரிசூழ் நெறியில் படைகளை செலுத்திச் சென்ருன் என்பதிலும் வஞ்சி கடலோரத்ததெனவாகும். இன்றேல் கரூர் வஞ்சியாயின் மாடலன் சென்ற திருவரங்கம், திருவேங்கடம் முதலியவற்றின் வழியாக அவன் வடக்கே சென்றிருக்கலாம்.

நடுகல் காதையில் மாலைக்காலம் நன்கு வருணிக்கப்பட்டுள்ளது. பத்தினிக் கல்கண்ட மகிழ்ச்சி மக்களிடைச் சிறப்பாக வெளிப்பட்டுள்ளது. சோழ பாண்டியர் மீதேற்பட்ட சினத்தை மாடலன் தணித்து மறக்களவேள்வி செய்ததுபோதும் அறக்களவேள்வி செய்க என்கிருன். அசோகன் கலிங்கப் போருக்குப்பின் போர்தவிர்ந்தது இங்கு நினைவுக்கு வருகின்றது. பாடலில் நிலையாமையுணர்வு உள்ளத்தில் நன்கு நிறுத்தப்பெறுகின்றது. வேள்வியும் விழாவும் நாள்தொறும் வகுத்துக் கடவுள் மங்கலம் செய்விக்கிருன் செங்குட்டுவன்.

வாழ்த்துக் காதையில் கண்ணகியின் தோழியர் முதல் யாவரும் அங்கு வந்துவ்ளனர். கோவலன் இழப்பால் துறவு

பூண்ட பலர் வரலாறுகளும் இங்குவெளிப்படுகின்றன. வரிப் பாடல்களைப் பாடிய வாழ்த்தொலி முழக்கத்தின் இறுதியில் பத்தினித்தெய்வம் செங்குட்டுவனை வாழ்த்துகின்றது.

வரந்தருகாதையில் தெய்வமுற்றதேவந்தி மணிமேகலை யின் துறவினை வருணிக்கிருன். பத்தினிக்கோட்டத்தில் நாள் வழிபாடாற்றத் தேவந்தியையே சேரன் அமர்த்து கிருன். கொங்கரும், மாளுவரும், இலங்கைக் கயவாகுவும் கண்ணகி வழிபாட்டைத் தம் நாட்டிற்கும் கொண்டு செல் கின்றனர். பத்தினிக்கோட்டத்தில் இளங்கோவடிகளின் துற வைக் கண்ணகித் தெய்வம் பாராட்ட இளங்கோவடிகளின் அறவுரையுடன் வஞ்சிக்காண்டமும், காவியமும் முடிகின் றன. இங்கு இளங்கோவின் தொடர்பு இலக்கியக்காலவழு (Anacronism) என முன்பும் மொழியப்பெற்றது.

## மணிமேகலைக் காவியம்

விழாவறை காதையுடன் தொடங்குகின்றது. விழாக் கள் மக்களுள்ளத்தே மகிழ்ச்சியையும் சமூகத்திலும், வீட்டி லும் தூய்மையையும் கொண்டு வருகின்றன. எங்கும் பழ மணல் மாற்றிப் புதுமணல் பரப்புகின்றனர். பகைவருடனும் சீற்றமும் கலாமும் செய்யாதகலுமின் என்கிறது சமயநெறி. விழா உள்ளத் தூய்மைக்கும் காரணமாகும். சமயத்துறு பொருள் வாதிகள் பட்டிமண்டபமேறுவர். ஏழாம் நூற்றாண் டில் அப்பர் முதலோர் காலத்தில்தான் சமய வாதங்கள் பேசப்படுகின்றன. நாட்டில் பசியும், பிணியும், பகையும் நீங்கி வசியும் வளனும் சுரக்குமாறு வாழ்த்தி மக்கள் சூளெ டுத்துக் கொள்ளும் காலமாகவும் விழாக்கள் அமையும்.

ஊரலர் உரைத்த காதையில் விழாவில் ஆடல், பாடல் களிற் சிறந்த மணிமேகலை கலந்துகொள்ளாமை கண்டு நகர மாந்தரெல்லாம் கலங்குகின்றனர். 64 கலைகள் பற்றியெல் லாம் இங்குப் பேசப்படுகின்றது. காவியத்திற்குரிய மணி

மேகலையும், அறவணரும் இங்கறிமுகம் செய்யப்படுகின்றனர். பரத்தையர் இனத்தையே பண்புடைக் கற்பரசிகளாக மாற்றும் புரட்சிக்காவியமாக மிளிர்வது மணிமேகலை. இதற்குரிய கால்கோள் இக்காதையில் செய்யப்பெறுகின்றது.

மலர்வனம்புக்க காதையில் மணிமேகலையின் தோழி சுதமதி வரலாறு தெளியப்படுகின்றது. புகாரிலுள்ள ஐந்து வனங்களைப்பற்றிய செய்தியில் இயற்கைச் சூழலில் நகரங்களும் நல்லோரும் அன்று உறைந்தமை தெரியவரும். ஒரு வனத்தில் பளிக்கறையும் அதனுள் புத்த பீடிகையும் உள்ளது. அது வருவோரால் வியத்தக்கதாய் வணங்கத்தக்கதுமாய இடமாக இருந்துள்ளது. மனமறிந்து செய்யும் செயல்களும் பூசனையுமே பயன்தரும் என்பதனை இப்பீடிகையுணர்த்தி நின்றது. மலர் கொய்யச் சென்ற மணிமேகலை கண்ட காட்சிகளுள் ஆடையில்லாதலையும் அமணன்பற்றியதொன்று. அவனை இளித்து நகை செய்கிறார் ஆசிரியர். இளங்கோவடிகட்குப் பௌத்தரிடம் இத்தகு பான்மையில்லை. சிலப்பதிகாரத்துக் காணும் பதினோராடலுள் பேடுக்கூத்தொன்று. பொதுமக்கள் மன்றங்களுள் மிகுதியாகப் பயின்றது போலும் இது. ஓவியக்காட்சி மற்றொன்று. சுடுமண் மனைதொறும் வெண்சுவர்களில் ஓவியந்தீட்டி வீட்டை அழகுசெய்யும் கலை அன்றிருந்துள்ளது.

பளிக்கறைபுக்க காதையில் மலர்வனத்தின் இயற்கைக் காட்சி நன்கு வருணிக்கப் பெறுகின்றது. கோவலற்கு வறுமொழியாளரும் வம்பப்பரத்தரும்போல இங்கு உதயகுமரற்கு எட்டிகுமரன் நிற்கிறான். முருகனன்ன திறனுடைய ஒப்பற்ற அக்காவியத் தலைவனை மணிமேகலையின் எட்டிகுமரனே செலுத்துகிறான்.

மணிமேகலையை வயப்படுத்தவந்த உதயகுமரனுக்கு அறிவுரை கூறும் சுதமதியின் சொற்களில் (சாத்தனரின்) ஆற்றல் தோன்றுகிறது. மக்கள் யாக்கையின் இயல்பை எழிலுடன் எடுத்துக் காட்டுகிருர்.

மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதையில் ஜைனரைப் பொலன்றி பௌத்தர்கள் தனக்கென வாழாமல் பிறர்க்குரியாளராக வாழ்ந்தமையையும், புத்தப் பெரியவர் களின் இயல்புகளையும் கடைசியில் புகார் நகரில் அந்தி மாலைக் காட்சியையும் அருமையுற வருணிக்கிருர் ஆசிரியர். புத்தரை அவர் வாழ்த்துவது மிக நன்றாகின்றது.

சக்கரவாளக் கோட்டத்தை ஆசிரியர் வருணிப்பது இயல்பும் ஏற்றமும் உடையதாகும். தாந்தே முதலியவர்கள் நரகவருணனையை அறிஞர் பெரிதும் பாராட்டுவர். அத்தகு பாராட்டினை சக்கரவாளகோட்டச் சாத்தனுர்க்கும் அளித் தல் தகும். இக்கோட்டம் பறந்தலைக் காட்சியையெல்லாம் கூறி நிலையாமை யுணர்த்தும் ஆசிரியரது காவியநோக்கு சிறந்ததாகும். கோதமை மகன் இறப்பின் மூலம் உலகில் எத்தகையராயினும் அவரைச் சாவு தவிர்த்தலில்லை; இறந் தவரை எழுப்புதல் எவராலுமாகாது என்ற உண்மை வற் புறுத்தப் பெறுகின்றது.

இக்காதையில் மணிமேகலா தெய்வம் மணிமேகலையை மணிபல்லவத் தீவில் கொண்டு சேர்க்கின்றது. அத்தெய் வம் உதயகுமரனிடம் மன்னுயிரெல்லாம் மண்ணுள்வேந்தன் தன்னுயிர் என்று அறிவுறுத்துகின்றது. சிலப்பதிகாரத்துக் காணுத பல்வகை இராக்கால நகர நிகழ்ச்சிகள் இக்காதை யில் எடுத்துக் காட்டப்பெறுகின்றன. சிலப்பதிகாரத்தில் மாடலமறையோனையும் மணிமேகலையில் கந்திற்பாவையை யும் ஆசிரியர்கள் திறம்பெறப் புனைந்துள்ளனர். புகாரில் விடி

யல் நிகழ்ச்சிகளைச் சிலேடை நயம்பெற செப்புகின்றார் சாத்தனார்.

மணிபல்லவத் தீவில் தனித்துக் கலங்கிய மணிமேகலை முன் தெய்வக்காட்சியாகத் தேவர்கோனிட்ட தருமபீடிகை தெரிய நின்றது. பெருந்தவ முனிவன் இருந்தறமுரைக்கும் இடம் அது. அங்கு மணிமேகலை தன் முற்பிறப்பு வரலாற்றையறிகிறாள். உதயகுமரனே முற்பிறப்பில் தன் கணவன் எனவும் உணர்கிறாள். முக்காலமுணரும் ஆற்றல் அறநெஞ்சுடையோர்க்காகும் என்பது இக்காதையில் தெரியும்.

மந்திரம் பெற்ற காதையில் சாது சக்கரன் அறவணர் ஆகியோரால் சமயச் சான்றோர் தம்பெருமையுணரவைத்து மணிமேகலைக்கு இரும்பசியறுக்கும் மந்திரம் கிடைத்ததை யறிவிக்கிறார் ஆசிரியர். பசிக்கவலை இல்லாதது பீடுடை அறவோர் நெறியென இக்காதை கூறும்.

11. இக்கதையில் தீவதிலகையின் சொற்படிக் கோமுகிப் பொய்கையிலிருந் தெழுந்த அமுத சுரபியை மணிமேகலையடைகிறாள். வாங்குநர் கையகம் வருத்தல்லது தான் தொலைவில்லாதது அப்பாத்திரம், உலகில் மக்கள் போதும் போதும் என்னுமளவு உணவளிக்கும் நிலை வரவேண்டும் என்பதனை இது குறிக்கிலாம். பசியின் கொடுமையை இங்கு ஆசிரியர் நன்கு எழுதிக்காட்டுகிறார். நாடு நீக்கவேண்டிய மூன்றனுள் முதலாவது உறுபசியென்றே வள்ளுவர் உரைக்கிறார். பசியின்றேல் உயிர் நிலைக்கும். உயிர் நிலைத்தால் உலகில் ஒருவன் எய்தாததில்லை. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே என்கிறது காப்பியம்.

12. இங்கு அறவணரிடம் மாதவி - சுதமதி வரலாற்றையும் புத்த தேவனது தோற்றத்தையும் புத்த நெறியில் நிலவும் உலகம் எவ்வாறியங்கும் என்பதையும் மணிமேகலை

கேட்கிருள். ஒரு நல்ல நாட்டைப்பற்றிய ஆசிரியர் கற்பனை இங்குச் சிறப்படைகின்றது.

13. இக்காதையில் அமுத சுரபிக்குரிய ஆபுத்திரனுல் கதை கூறப்படுகின்றது. சாதியுயர்வு தாழ்வு என்னும் வேறுபாட்டினை ஆபுத்திரன் கதை இங்குத் தகர்த்தெரிவ தாகின்றது. பௌத்த ஜைன மதங்கள் அந்தணரே மக் களுள் உயர்ந்தோர் என்பதை எதிர்த்துத்தானே தோன் றின! ஒரு நல்ல சமூகத்திற்கு இனவேறுபாடுகள் ஈடிலாத் தடையாகும்.

14. பாண்டிநன்னுடு பன்னீரியாண்டு மழைவளமின்றி பஞ்சத்தால் வாடியது. மக்கள் அப்பட்டினியைப் போக்கச் சிந்தாதேவி ஆபுத்திரனிடம் அளித்த பாத்திரமே அமுத சுரபி. அதைக்கொண்டு உலகை உண்பித்தலைப் பொருத இந்திரன் மழைபெய்வித்து நாட்டை வளமாக்குகிருன். இது கண்டு சாவகநாட்டில் பஞ்சம் இருத்தலைக்கேட்ட ஆபுத் திரன் சாவகம் செல்லும்வழியில் மணிபல்லவத்தில் விடுக் கப்பெறுகிருன். அங்கேயே கோமுகியில் அமுதசுரபியை விட்டுயிர்நீங்கிச் சாவகத்தில் ஆவயிற்றிற் பிறக்கிருன். இறையனுர் களவியல் உரையில் குறிக்கப்பெறும் பாண்டி நாட்டுப் பஞ்சமாகவே இப்பஞ்சம் இருந்திருக்கவேண்டும். இது கடைச்சங்கத்திற்குப் பிற்பட்டதாகும். தென்னகம் வளர்தலைக்கண்டு பொருத வடநாட்டிந்திரனே மழையைப் பெய்வித்தவன். திருவிளையாடலில் வரும் தேவேந்திர பாண்டிய போராட்டங்களை இந்நிகழ்ச்சிகள் குறிக்கலாம்.

15-16. முதலில் கற்புடையாரிடம் பிச்சையேற்றல் இனிதென்று கேட்ட மணிமேகலை ஆதிரையென்ற பொழி மழைதரூஉம் பத்தினியிடம் பிச்சையேற்கிருன். பாரகமடங் கலும் பசிப்பிணியறுகென அவளும் ஆருயிர் மருந்தை யளிக்கிருள். அவள் கணவன் சாவகன் நாகர்வாழ் மலை

யில் அகப்பட்டு அவர்களைக் கள்ளும் ஊனும் கைவிடுமாறு திருத்திவிடுகிறான். அவ்வகையில் அவர்களைப் பெண்டிரும் உண்டியும் என்ற பீடிலா நெறியினின்றும் விலக்குகிறான்.

17. பத்தினிப் பெண்டிர் இட்ட உணவுதான் தொலைவில்லாமல் வளர்ந்தது. இல்லத்தில் பத்தினியர் இருக்கின் அவ்வீட்டில் பசியும், பஞ்சமும் இல்லையென்பதனை ஆசிரியர் இங்கு வற்புறுத்துகிறார். அடங்கா உறுபசியாகிய யானைத் தீயால் பல்லாண்டுகளாக அல்லற்பட்டிருந்த காயசண்டிகைக்கு உணவிட்டு மணிமேகலை அவள் நோயை அகற்றினாள். அவள் முன்பு சாபமுற்ற ஒரு விஞ்சையன் ஆகலின் அவள் விடுதலைபெற்றுத் தன்னாடு சென்றாள்.

அடுத்தகாதைகளில் உதயகுமரன் காஞ்சனனால் கொல்லப் பெறுகிறான். சிலப்பதிகாரத்துக் கோவலன் கொல்லப் படும் கட்டங்களை இவற்றுடன் ஒப்பிட வேண்டும். ஒப்புயர்வற்ற காவியத் தலைவன் கீழ்நிலையடையும் துன்பியல் நாடகக் காவிய அமைப்பு இங்கும் தோன்றுகின்றது. கொலைக்குரிய கட்டங்களைத் திறம்பெற அமைத்துச் செல்லும் இளங்கோவடிகளின் காவியத்திறமை இங்குச் சாத்தனாரிடமும் கவின் பெறுகின்றது. காம வெகுளி மயக்கம் இவை மூன்றன் காரணமாகக் கீழ்நிலையுறுதலைச் சித்தரிக்கின்றன இக்காவியங்கள். அவற்றுள்ளும் முதலாய காமத்தால் கீழ்நிலையுற்றோர் இவ்விரு காப்பியத் தலைவராய கோவலனும், உதயகுமரனும். சிலப்பதிகார மதுரைக் காண்டம் 'மயக்கத்தால்' உலகம் கீழ்நிலையுறுதலையும் வஞ்சிக்காண்டம் வெகுளியால் உலகம் கீழ்நிலையுறுதலையும் ஒருவகையில் காட்டுவன வென்னலாம். இங்குச் சித்திராபதியுடன் பொற்கொல்லனை இணைத்துப் பார்க்கவேண்டும்.

இக்காதையில் காணும் மற்றொரு புரட்சி, மணிமேகலை சிறைக் கோட்டங்களை யெல்லாம் அறக் கோட்டங்களாகச்

சோழனைக்கொண்டு செய்வித்தமை. சிறை காக்கும் காப்பு பெண்கட்காக மட்டுமன்றி மக்கள் இனத்திற்கே வேண்டா மென ஒரு பெண் வாதாடுகிருள். மக்கள் நிறைகாக்கும் காப்பே தலையென்கிருள். உலகமெல்லாம் குற்றவாளிகள் என இழிவாக நோக்கப்படுவோரிடம் பரிவும், இரக்கமும் காட்டுகிருள் பெண். அவர்கள் உள்ளத்தை யெல்லாம் அற மயமாக்கி அவர்க்கெனத் தனிச் சிறையொன்றிருத்தலாகா தெனக் கனவு காண்கிருள். அக்கனவைத் தன் கண்ணெ திரே நனவாக்கிய புரட்சியையும் செய்துவிட்டாள் தமிழ் மகள்.

இங்கு மணிமேகலையின் துறவு நெறியிலிருந்து காமத் தைக் கடந்து அதுவும் இளமைப் பருவத்தில் அருள் நெறி யைப் பின்பற்றுதலில் எவ்வளவிடையூறுகள் வருகின்றன வென்பதையும் அவற்றைக்கடந்து மேற்செல்லுதல் 'செயற் கருஞ் செயல்' என்பதனையும் அறிகின்ருேம்.

உற்றநோய் நோன்றலாகிய பொறுத்தல் உயர்ந்தோர்க் குரிய தவப்பண்பு என்பதனை இங்கு மணிமேகலை விளக்கு கிருள். தன்னைக் கொல்லச்சூழ்ந்த சோழமாதேவியையும் பொறுக்கிருள் தவச்செல்வி. உதயகுமரனைக் கொன்றவ னுக்கும் தீங்கிழைக்கவில்லை. இரண்டு காப்பியங்களிலும் அரசகுமரரையும், அரசரையும் கொல்லக்காரணம் நாட்டில் குற்றங்களை யெல்லாம் நலிக்க வேண்டிய அரசினரே குற்ற மிழைத்தால் உலகம் என்னுவது என்பதை எடுத்துக் காட்டு வதேயாகும்.

மகதவினைஞரும், மராட்டக் கம்மரும், அவந்திக்கொல் லரும், யவனத்தச்சரும் தண்டமிழ்வினைஞர் தம்மொடுகூடிச் செய்த மண்டபங்கள் இங்குக் காட்சியளிக்கின்றன. மணி மேகலை சாவகம்சென்று மீண்டு வஞ்சிமாநகர்சென்று காஞ்சி யடைகிருள். பின் புழுக்கறைச் சிறையிலடைத்தபின் தன்

தவவலிமையுணர்ந்த சோழமாதேவிக்குப் பஞ்சமாபாதகங்களினின்றும் விடுபடுமுறையை யுரைக்கிருள். மன்பதைக்கெல்லாம் அன்பு ஒழியார் துன்பமறுக்கும் துணிபொருளுணர்ந்தோரென ஞான நன்னீர் நன்கனம் தெளிக்கிருள்.

பின்னர் மணிமேகலை சாவகம் அடைகிருள். ஜாவாவில் வரலாற்றின்படிப் பௌத்தம்பரவியது கி.பி. 4-5 நூற்றுண்டுகளிற்ருன். மணிமேகலைக் காலத்துச் சோழ நாட்டில் இந்திரவிழா மறக்கப்படுகின்றது. பீலிவளையிடம் மயங்கிய சோழன் கிள்ளி அவ்விழாவினை மறக்கிருன். நாகநாட்டு நங்கை பீலிவளை. அவளைச் சோழன் கூடியதும் அவள் தன்னூடு சென்று ஒரு மகனைப்பெற்று அக்குழந்தையை அலைவழியாக அனுப்பிவிட்டு அங்கேயே தங்கிவிடுகிருள். அவனைத் தேடுமுயற்சியில் சோழன் விழாவினை மறக்கிருன். புகார் அழிவுபற்றிய வரலாற்றினை இக்கதை குறிக்கலாம். விழா மறதியைக் கோபித்த மணிமேகலா தெய்வம் கடற்பெருக்கில் காவிரிப்பூம்பட்டினத்தை உண்டுவிட்டாளென்பர். கடலில் மிதந்துவந்த சோழன்மகனுக்கும் தொண்டைமான் இளந்திரையனுக்கும் காலத்தால் ஒற்றுமை காணப்படவில்லை. சாவகம் சென்ற மணிமேகலை அந்நாட்டு மன்னன் (ஆபுத்திரனுகிய) புண்ணியராசனுடன் மணிபல்லவம் அடைகிருள். விவேகாநந்தர் சமயத்தொண்டுபற்றியெல்லாம் பாராட்டும் தமிழகம் பண்டைக் காலத்திலேயே சாவகம் வரை சென்று சமயத்தைவளர்த்த ஒரு பெண்மணியைப் பெற்றது. ஈடிணையற்ற ஆண்களையும், பெண்களையும் பெற்றது தமிழகம்.

பின்னர் மணிமேகலை வஞ்சிமாநகர் சென்று கண்ணகி தெய்வத்தின் வாயிலாகப் பலவரலாறுகளைக்கேட்டு வஞ்சிப் புறஞ்சேரியில் அறஞ்செய் மாந்தர் அன்றிச்சேராத அவ்

விடத்தில் பல்வகைச் சமயக் கணக்கர் தம் கோட்பாடுகளை யும் கேட்கிறாள்.

அளவைவாதி; சைவன்; வைணவன்; வேதவாதி; ஆசீவகன்; நிகண்டவாதி; சாங்கியன்; வைசேடிகன்; பூதவாதி முதலிய பலர் கருத்துக்களையும் கேட்டாள் மணி மேகலை.

கலை உருவினோனும் தன்னில் வேறு தானொன்றிலோனு மாகிய இறைவன் சிவன் என்கிறான் சைவவாதி. ஆசீவக வாதி நால்வகை யணுவினாலாகும் நானிலத் தோற்றத்தை யறிவிக்கிறான். ஆகாய முதலிய ஐம்பெரும் பூதங்களுடன் இருவினையாலாகும் பிறப்புவீடு எனுமிவை பற்றி இயம்பு கிறான் நிகண்டவாதி. எல்லாப்பொருளும் தோற்றுதற்குரிய முக்குணமாய மூலப்பகுதியும் தத்துவங்கள் இருபத்தைந்தும் புருடனுமாகிய பொருள்களைப் பற்றிச் சாங்கியவாதி கூறு கிறான். சித்தம் புத்திகளிடமிருந்து பூதங்களும், புலன்க ளும் வாக்குபாணிமுதலியவும் பூதங்களிலிருந்து மலைமர முத லிய உலகமும் தோன்றிப் பிரளயம் வரை ஒன்றாய்ப் பரந்து நித்தியமாய் நிற்பன என்பது அச்சாங்கியன் கருத்து.

(மஞ்சளும், சுண்ணம்பும் கலக்க மற்றோர் சிவப்பு நிறம் தோன்றுதல் போல) பூதச்சேர்க்கைகளின் பல்வகை வேறு பாட்டுத் தோற்றமே உலகம். பூதச்சேர்க்கையில் உணர்வு தோன்றும். சேர்க்கை யழிவில் உணர்வழியும். கண்டதே காட்சி. கருத்தளவைகள் பொய். இம்மையே மெய். மறுமை யெல்லாம் பொய். இவ்வாறு கருதினன் பூதவாதி யெனப் படும் உலகாயதன்.

இவ்வாறு பௌத்தம் தவிர்த்த ஐவகைச் சமயங்களின் அமைதிகளை யெல்லாம் அறிந்தாள் மணிமேகலை. மற்ற தாகிய பௌத்தரின் நியாய வாதத்தையும், சமயக் கோட்

பாடுகளையும் தவத்திறம் பூண்டு தருமம் கேட்ட காதையிலும் பவத்திற மறுகெனப் பாவைநோற்ற காதையிலும் காணலாம்.

கச்சிமாநகர்புக்க காதையில், வஞ்சிசென்ற மணிமேகலை அறவணர் மாதவி சுதமதி முதலோர் கச்சி சென்றதறிந்து தானும் கச்சி சென்று அங்கோர் மணிபல்லவமும் புத்த பீடிகையும் அரசனால் அமைத்துக் கொடுக்கப் பெற்றுப் பஞ்ச நிலையிலிருந்த பல்வகை மக்கட்கெல்லாம் உணவளித்தார்.

காஞ்சியில் அறவணரிடம் மணிமேகலை புத்தமத நியாய வாதத்தைக் கேட்கிருள். அறவணர் கூறியது அவருக்காசிரியர் அல்லது ஆசிரியர்க்கு அண்மை வரிசையில் நின்ற ஆசிரியர் கி. பி. 4 – 5 ஆம் நூற்ருண்டுகளில் வாழ்ந்த சிறந்த புகழுடைய திக்நாகர் என்பாரின் நியாயமெனத் திட்டமாகக் கருதப்படுகின்றது. காவியமுழுவதுடன் இக்காதை தொடர்புடையதாகலின் இதனை இடைச்செருகல் என்பார் கருத்து ஏற்கவியலாததாம். உலகில் மெய்யும் பொய்யும் இத்திற விதியால் ஐயமின்றி அறியும் வகைகளையெல்லாம் இந்நியாயத்தால் உணர்ந்தாள்.

கடைசி காதையில் அறவணரிடம் பௌத்தத்தின் பல வகையாய அறவுண்மைகளையெல்லாம் அறிகிருள். பேதைமை முதலிய பன்னிரண்டையுமறிந்தோர் பெரும் பேற்றையும், அறியாதார் ஆழ்நரகையுமடைவர். தெய்வம் மக்கள் விலங்கெனப் பிறப்பை மூன்ருக்குவர் பௌத்தர். துன்பம் தோற்றம் பற்றே காரணம்; இன்பம் வீடே பற்றிலி காரணம். எப்பொருளுக்கும் ஆன்மா இலையென உணருதலே வீட்டியல்பாம். அனைத்திற்கும் காமவெகுளி மயக்கம் காரணம். அநித்தம் துக்கம் அநான்மா அசுசி எனத் தனித்துப் பார்த்துப் பற்றறுக்க வேண்டும். மைத்திரிகருணை முதிதை என்றறிந்த நல்லுணர்வால் செற்றம் அறுத்துச் சுருதி சிந்

தனு பாவனை (சுருதி அனுபவம்) ஆகியவற்றால் மயக்கம் கடிந்து இந்நூல் வகையால் மனத்திருள் நீக்கலே ஞானதீப மாகும். இத்தகு நல்லுரைகளைக் கேட்டதே மணிமேகலை தவத்திறம் பூண்டு தருமம் கேட்டது.

**இலக்கிய வரிகள்**

***சிலப்பதிகாரம்***

1. பதியெழுவறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகார் (1–15)
2. மண் தேய்த்த புகழினன் (1–36)
அரைசு விழைதிருவின் பரதர் (2–1)
3. குழலும் யாழும் அமுதும் குழைத்த நின் மழலைக்
கிளவி (2–58)
4. மாசறு பொன்னே வலம்புரிமுத்தே காசறு
விரையே கரும்பே தேனே (2_73)
5. இளையராயினும் பகையரசு கடியும் செருமாண்
தென்னர் (3 21)
6. குழலினும் யாழினும் குரல்முதல் ஏழும்
வழுவின்றிசைத்து வழித்திறம் காட்டும்
அரும்பெறல் மரபின் பெரும்பாண் இருக்கையும்
(5–35)
7. பாரதி யாடிய பாரதி அரங்கத்து உமையவள் ஒரு
திறனாக வோங்கிய
இமையவன் ஆடிய கொடுகொட்டி யாடலும்
பாரதியாடிய வியன் பாண்டரங்கமும்
அஞ்சனவண்ணன் ஆடிய ஆடலுள் அல்லித்
தொகுதியும்
அவுணன் கடந்த மல்லின் ஆடலும்,
சூர்த்திரம் கடந்தோன் ஆடிய துடியும், அவுணர்
பையுள் எய்த அவர் முன் ஆடிய குடையும், நீள்
நிலம் அளந்தோன் ஆடிய குடமும் காமன் ஆடிய

பேடியாடலும், மாயவன் ஆடிய மரக்கால் ஆடலும் திருவின் செய்யோள் ஆடிய பாவையும், அயிராணி மடந்தை ஆடிய கடையமும், பதினோராடலும் (6-39)

8. பிழையா மரபின் ஈரேழ் கோவையை
உழைமுதல் கைக்கிளை இறுவாய் காட்டி (8-32)

9. காதலின் தோன்றிய் கண்கூடு வரியும் (8-87)

10. சலம்புணர் கொள்கைச் சலதியோடாடி, குலம் தருவான் பொருள் குன்றம் தொலைத்த இலம்பாடு நாணுத்தரும் எனக்கென்ன (9-69)

11. உருவும் குலனும் உயர்பேரொழுக்கமும்
பெருமகன் திருமொழி பிறழா நோன்பும் (10-36)

12. மறவுரை நீத்த மாசறு கேள்வியர் அறவுரை (10-56)

13. இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர் (10-149)

14. குறைவில் புகழோன் குணப்பெருங் கோமான் (10-185)

15. தென்தமிழ்ப்பாவை; செய்த தவக்கொழுந்து
ஒரு மாமணியாய் உலகிற்கோங்கிய திருமாமணி (11-48)

16. அரவும் சூரும் இரைதேர் முதலையும்
உருமும் சார்ந்தவர்க் குறுகண் செய்யா
செங்கோல் தென்னவர் காக்கும் நாடு (13-7)

17. பெண்டிரும் உண்டியும் இன்பமென்றுலகில்
கொண்டோர் உறூஉம் கொள்ளாத்துன்பம் 14-19

18. எண்ணெண் கலையோர் இருபெரு வீதியும் (14-17)

19. காலமன்றியும் கருங்கறி மூடையொடு
கூலம் குவித்த கூலவீதியும் (14-210)

20. கடக்களிறடக்கிய கருணை மறவ (15-53)

21. இம்மைச் செய்தன யானறி நல்வினை, உம்மைப்
பயன் கொல் ஒரு தனியுழந்து (15-91)
22. கற்புக் கடம்பூண்ட இத்தெய்வமல்லது
பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்
வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீள்நில வேந்தர் கொற்றம் சிதையாது,
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு (15-143)
23. செய்யாக் கோலமொடு வந்தீர்க்கு (25-60)
24. தூமணி வண்ணனை விழுமம் தீர்த்த விளக்கு
(16-50)
25. அறவோர்க் களித்தலும் விருந்தெதிர் கோடலும்
(16-71)
26. போற்ரு வொழுக்கம் புரிந்தீர் யாவதும்
மாற்ருவுள்ள வாழ்க்கையேன் (16-81)
27. முற்பகல் செய்தான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகல் காண்குறூஉம் பெற்றியகாண் (21-3)
28. தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுவாளைத்
தெய்வம் தொழும் தகைமை திண்ணிதால்
29. இவள்போலும் நம்குலக்கோர் இருந்தெய்வம்
இல்லை (24-10)
30. வானகம் போற்ற வானகம் பெற்றனள் (25-60)
31. நாளைச் செய்குவம் அறமெனின் இன்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும் (28-179)
32. அருந்திறல் அரசர் முறைசெயினல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச்சிறவாது
28-208
33. தெய்வம் தெளிமின் தெளிந்தோர்ப் போற்றுமின்
அறவினை காமின் (30-187)

மணிமேகலை

1. அமரமுனிவன் அகத்தியன் தனது
கரகம் கவிழ்த்த காவிரிப்பாவை (பதிகம்)

2. கோள்நிலை திரிந்து கோடைநீடினும்
தான்நிலை திரியாத் தண்டமிழ்ப் பாவை (பதிகம்)
3. பிறந்தோர் உறுவது பெருகியதுன்பம்
பிறவார் உறுவது பெரும்பேர் இன்பம்
பற்றின் உறுவது முன்னது பின்னது
அற்றோருறுவதறிக (2-64)
4. அருளும் அன்பும் ஆர்உயிரோம்பும்
ஒருபெரும் பூட்கையும் ஒழியா நோன்பும் (3-59)
5. வினையின் வந்தது வினைக்கு விளைவாயது
புனைவன நீங்கின் புலால் புறத்திடுவது (3-113)
6. புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன் (5-98)
7. கழிபெருஞ் செல்வக் கள்ளாட்டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களின் சிறந்த மடவோருண்டோ (6-102)
8. காமன் கையறக் கடுநவை யறுக்கும்
மாபெருந் தவக்கொடி (7-36)
9. ஆதிமுதல்வோன் அறவாழியாள்வோன் (10-61)
10. தீமொழிக் கடைத்த செவியோய் (11-67)
11. குடிப்பிறப் பழிக்கும் விழுப்பம் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாண் அணிகளையும் மாண் எழில் சிதைக்கும்
புண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவி (11-76)
12. ஆற்றுநர்க் களிப்போர் அறம்விலை பகர்வோர்
ஆற்று மாக்கள் அடும்பசி களைவோர்
மேற்றே உலகின் மெய்ந்நெறி வாழ்க்கை
மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம்
உண்டிகொடுத்தோர் உயிர்கொடுத்தோரே 11-92
13. சிந்தாவிளக்கின் செழுங்கலை நியமம் (13-106)
14. பாடல்சால் சிறப்பின் பரதத் தோங்கிய நாடகம் (18-57)

15. இறைவனும் இல்லை இறந்தோர் பிறவார்
அறனொடு என்னை என்றறைந்தோன் (21-103)
16. மண்டிணி ஞாலத்து மழைவளம் தரூஉம்
பெண்டிராயின் பிறர் நெஞ்சு புகாஅர் (22-45)
17. தெய்வம் தொழாள் கொழுநற்றொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை (22-59)
18. கள்ளும் பொய்யும் களவும் கொலையும், தள்ளாத
தாகும் காமம் (22-171)
19. மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனின் இன்றால் (22-108)
20. செற்றம் செறுத்தோர் முற்ற உணர்ந்தோர்
மல்லல்மா ஞாலத்து வாழ்வோர் (20-131)
21. மறவாதிதுகேள் மன்னுயிர்க் கெல்லாம்
உண்டியும் உடையும் உறையுளும் அல்லது
கண்டதில் (25-228)
22. பாங்குறும் உலோகாயுதமே பௌத்தம்
சாங்கியம் நையாயிகம் வைசேடிகம்
மீமாஞ்சகமாம் சமய ஆசிரியர் (27-78)
23. மொய்த்த மூவறு பாடை பாக்களில் (28-221)
24. புத்த தன்ம சங்கமென்றும் முத்திறமணி (30-3)
25. குற்றமூன்றும் முற்ற அறுக்கும் வாமன் (30-12)
26. சுருதி சிந்தனை பாவனை தரிசனை
கருதி யுய்த்து மயக்கம் கடிக (30-258)
27. தோற்றம் சார்பின் மூப்பு பிணி சாக்காடு
அவலம் அரற்று கவலைகையா றெனத்
தவலில் துன்பம் தலைவரு மென்ப, ஊழின்
மண்டிலமாச் சூழும் இந்நுகர்ச்சி (30-115)
28. பல்லுயிர் அறுவகைத் தாகும்
மக்களும் தேவரும் நரகரும் பிரமரும்
தொக்க விலங்கும் பேயுமென்றே (30-56)

*திருமந்திரம்*

திருமந்திர ஆசிரியர் திருமூலர் நான்காஞ் சங்கத்து உறுப்பினராக இருந்திருக்கவேண்டுமெனத் தெரிகின்றது. சம்பந்தர் திருவாவடுதுறைக் கோயிலுக்குச் சென்றபோது கொடிமரத்தின் கீழே திருமந்திர ஏடு இருந்ததாக ஒரு மரபுண்டு. மூவருக்கு முந்தியவர் திருமூலர்: தொடர்களும் கருத்தும் எண்ணற்ற வகைகளில் ஒற்றுமையாக இருத்தலால் திருக்குறள் அரங்கேற்றப்பட்ட காலத்துத் திருமூலர் இருந்திருக்கலாம். அதிகாரத் தலைப்புக்கள் பல நாலடியாரையும் திருக்குறளையும் பின்பற்றியனவாகக் காண்கிறோம். மாமூலனார் என்ற திருவள்ளுவமாலைப் பாடல் ஆசிரியரே திருமூலர் ஆவார். யாப்பருங்கல உரையாசிரியர் திருமூலர் பாடல்களைக் கொடுத்து அவற்றின் ஆசிரியரை மாமூலர் என்கிறார். ஆகவும் கெடவும் பாடும் ஆரிடச் செய்யுட்களைப் பாடுவோர் வரிசையில் மாமூலரை வைக்கிறார் அவ்வுரையாசிரியர்.

தமிழிலுள்ள சைவசித்தாந்த நூல்களில் முதன்மையானது திருமந்திரம். ஆகம நெறியைத் தமிழில் விளக்கவந்த நூல்களில் திருமந்திரம் சிறந்தது. வேதநெறியிலும் ஒரு வகையில் வேறுபாடுடையது ஆகமநெறி. அது தென்னாட்டிற்குரியதென்பர் அறிஞர். 28 ஆகமங்களுள் 9 ஆகமங்களைத் தம் நூலில் விளக்குவதாகத் திருமூலர் குறிக்கிறார். தமிழ் நாட்டுச் சித்தர்களில் திருமூலர் முதல்வராகலாம். அவர் காலத்தில் திருவிளையாடலில் குறிக்கப்பெறும் அகத்தியர் இருந்திருக்கலாம். பதஞ்சலி; காரைக்கால் அம்மையார் முதலியவர்களுடன் இறைவன் திருநடத்தைக் கண்டவர்களுள் திருமூலரும் ஒருவர். பதஞ்சலியின் வரிசையில் தம்மையும் கூட்டி எழுவர் என்கிறார் திருமூலர். இதிலிருந்து இவர் பதஞ்சலி காலத்தவரானால் கி. பி. 5—6ஆம் நூற்றாண்டினராவர்.

சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகியவற்றுட் கூறப்படுவதும் அறங்களையெல்லாம் திருமந்திரம் கூறும். விஞ்ஞானகலர்; பிரளயாகலர்; சகலர்; சரியை முதலிய நான்கு பசுபதி பாசம்; இலிங்கங்கள்; சிவதரிசனம்; திருக்கூத்து; திருநீறு; மும்மூர்த்திகள்; திருக்கோயில்; வீரட்டங்கள்; சைவங்கள்; சகமார்க்கம் முதலிய நால்வகை நெறிகள்; யோகநெறிகள் பற்றியெல்லாம் பேசுவது திருமந்திரத்தை ஒரு உயர்ந்த சைவதத்துவ நூல் என்பதனைக் காட்டும். இதனுள் கூறப்படும் யோகநெறிகள் ஔவைக்குறள் சித்தர் பாடல்கள் முதலியவற்றில்தான் ஓரளவு காணப்பெறும். ஆனால் இவை தெளிவும் வரையறையும் விரிவுமுடையன. தமிழர் கண்ட யோக நெறியைக் (சித்துநெறியைக்) காட்டக்கூடிய முறைப்பட்ட தமிழ் நூல் திருமந்திரம் ஒன்யேயாகும். இந்நெறி இனித்தமிழகத்தில் மிகுதியும் பரவவேண்டும். தமிழர்தம் உடலும் உள்ளமும் வலிமையும் தூய்மையுமடைய அந்நெறி பெரிதும் பயனுகும். உடம்பினையாமிருந்தோம்பும் வகையைத் தெளிவுடன் கூறுகிருர் திருமூலர். இல்லத்திலிருந்து கொண்டே துறவியாய்; போகஞ் செய்கையிலேயே யோகஞ் செய்யும் வகையையெல்லாம் கூறுகிருர் இந்நூலில். மனையாளுடன் மயங்கிக் கூடிப் புணருங் காலையிலும் விந்தினை வீணே விரயஞ் செய்யாமல் (காந்தியடிகளைப் போலக்) கட்டியடக்கும் வகை கூறி அதனுல் உடல்நலத்திற்கேற்படும் உறுதியையெல்லாம் உரைக்கிருர். இத்தகைய யோகநெறி சித்துநெறி யாகியவற்றை விஞ்ஞான நெறியாகத் தமிழர் பயிலும்நாள் வரவேண்டும்.

திருமந்திரத்தில் நிலையாமை, கொல்லாமை, குருநெறி முதலிய அதிகாரங்கள் இல்லறத்தார் முதலனைவர்க்குமுரியன. இவற்றையொரு வரிசைப் படுத்தி யோகத்தைப் பற்றிய அதிகாரங்களை ஒரு வரிசைப்படுத்திப் பயிலவேண்டும். திருமூலர் செய்யுட்கள் உருக்கமும் ஒருவகையுணர்ச்சியுறுத்

தலும் உடையன. சுருக்கென மனத்துட்டைக்கும் தொடர்கள் அவரிடம் பலவுண்டு. 3000 எனப்படும் இந்நூற் பாடல்களுடன் இப்போது பல பாடல்கள் பிற் சேர்க்கைகளாகக் காணப் பெறுவனவாகும்.

### கல்லாடம்

இதன் ஆசிரியராகிய கல்லாடரும் சிறந்த சைவர்; இதுவும் இச்சங்ககாலத்ததேயாகும். திருவள்ளுவமாலையில் இவர் பாடலும் உள்ளது. இதனுள் கூறப்பெறும் திருவிளையாடல் கதைகள் சிலவற்றைப் பிற்காலத்தார் சம்பந்தர் முதலோர் வரலாற்றுடன் இணைத்துவிட்டனர். சம்பந்தர் முதலோர் பெயர்கள் இதனுள் காணப்பெருமையின் இம்முடிபினைக் கொள்ள இடமுள்ளது. நாயன்மார்களுள் நான்கைந்து பெயர்களைப்பற்றிய வரலாறே இதனுட் காணப்பெறும். ஆசிரியப்பாவிலமைந்த சிவபிரானைப்பற்றிய நூறு பாடல்களில் அகத்துறை விளக்கங்களும் அவற்றினூடே திருவிளையாடற் கதைகளும் சிவனைப்பற்றிய புராணக்கதைகளும் இடம் பெற்றுள்ளன. சங்கப் பாடல்களைப் போன்ற அகத்துறை அமைவுடையவல்ல இப்பாடல்கள். ஆராய்ச்சிக்கின்றியமையாக் குறிப்புக்கள் பல இதனில் உள்ளன. கற்பார்க்குறுதிபயக்கும் தன்மையால் போலும் கல்லாடம் படித்தவனுடன் மல்லாடாதே என்ற பழமொழி வழங்குகின்றது. ஆறு சமயங்கள்; பதினெண் மொழிகள் ஐந்தெழுத்து, முத்தமிழ், நாரதயாழ்முதலியன எல்லாம் திருமந்திரம் கல்லாடம் ஆகியவற்றுள் காணப்பெறும் இந்நான்காஞ் சங்ககாலக் குறிப்புக்களாகும். திருக்குறளைப் பற்றிய அகச்சான்றுய குறிப்புக்கள் பல இந்நூலில் காணப்பெறுகின்றன. பதினேராந்திருமுறையில் கண்ணப்பதேவர் திருமறம் பாடிய கல்லாடரும் இவரேயாகலாம். 38 அடிகளையுடைய இவ் ஆசிரியப்பா கண்ணப்பரின் மறத்தை எளிமையும் அமைதியு

முற விவரிக்கின்றது. இதே காலத்தில் நக்கீரர் கண்ணப்பர் திருமறம் பாடியுள்ளார்.

நக்கீரர்

சைவத் தொடர்பு கருதித் திருவள்ளுவ மாலையில் பாடிய நக்கீரரும் பதினோராந் திருமுறையிற் பாடியவரும் ஒருவரெனவே கருதவேண்டியுள்ளது. திருவிளையாடற் புராணங்கள் நக்கீரர் அந்தாதி பாடியது பற்றித் தெரிவிக்கின்றன. நக்கீரர்க்கு அகத்தியர் இலக்கணம் உபதேசித்தது பற்றியும் அப்புராணம் உரைக்கின்றது. இவரே திருமுருகாற்றுப்படைப் பாடியவர் என முன்பும் மொழியப்பட்டது. முருகாற்றுப்படை பதினோராந் திருமுறையில் இடம்பெற்றிருப்பதும் இங்குக் குறிக்கத் தகும்.

கண்ணப்பர் திருமறம் 157 வரிகளில் விறுவிறுப்பும் எடுப்பும் செஞ்சொல் தொடுப்பும் உடைய நடையில் அமைந்துள்ளது. மறம் இங்குக் கற்போருள்ளத்தை அஞ்சச் செய்யாமல் கனியச் செய்கின்றது. கயிலைபாதி காளத்திபாதியந்தாதி 100 பாடல்களில் இறைப்பற்றினை இனிதெழுப்புவதுடன் பல வரலாற்றுக் குறிப்புக்களையுடையது. ஈங்கோய் மலையெழுபது வருணனையும் கற்பனையுமிகவுடையது. திருவலஞ்சுழி மும்மணிக்கோவையில் இறைவனிடம் ஆற்றுப்படுத்தும் இவரது பாடல் உள்ளது. இதுவே நச்சினார்க்கினியர் ஆற்றுப்படை யிலக்கணம்பற்றிய புத்துரைக்கு ஊற்றாயிருக்கவேண்டும்.

திருவெழு கூற்றிருக்கையில் சொல்லாற்றலும் அறுசமயம் இறைவன் நடம்பற்றிய குறிப்புக்களும் உள்ளன. கோபப்பிரசாதத்தில் சைவப்பற்றும் பழமையும் புலனாகின்றன. போற்றிக் கலிவெண்பாவும் போற்றித் திருவகவலாக அமைந்த பெருந்தேவபாணியும் அருந்தமிழ்க்கீரன் எனக்

கல்லாடம் இவரைப் பாராட்டுதல் பொருத்தமேயென எடுத்துக் காட்டும்.

நக்கீரர்க்காக இறைவனிடம் வேண்டிக்கொண்ட கபில பரணரே பதினோராந் திருமுறையிலும் திருவள்ளுவ மாலையிலும் பாடியவராவர். கபிலதேவ நாயனார் பரண தேவ நாயனாரெனவே வள்ளுவ மாலைத் தலைப்புக்கள் இவர்களைக் குறிக்கும். விநாயகரை மூத்த நாயனாராகக்கொண்டு கபிலதேவர் இரட்டை மணிமாலை பாடியுள்ளார். எனவே கி. பி. ஏழாம் நூற்றாண்டில் பரஞ்சோதி காலத்திலன்றி அதன் முன்பு ஆறும் நூற்றாண்டிலேயே விநாயக வணக்கம் தமிழகத்தில் தோன்றிவிட்டதென்னலாம். மற்றும் சிவபெருமான்மீது இரட்டைமணிமாலையும் அந்தாதியும் இவர் இயற்றியுள்ளார். பரணதேவரும் சிவபிரான்மீதோர் அந்தாதி இயற்றியுள்ளார். இரண்டிலும் அக்காலத் தமிழகத் திருக்கோயில்கள் குறிக்கப்பெறுகின்றன. இக்காலத்து கோச்செங்கணான் எம்பிராற்கெடுத்த எழுபது கோயில் இப்பாடல்களுள் இடம் பெற்றிருக்கும் போலும். பாடல்கள் தெளிவும் அமைதியுமுடையவை. பதினோராந் திருமுறையிற் பாடியுள்ள இளம்பெருமானடிகளும் அதிராவடிகளும் இக்காலத்தவரேயாகலாம். அவர்கள் விநாயகரைப் பற்றியும் சிவபிரானைப் பற்றியும் பாடியுள்ளனர்.

திருவள்ளுவ மாலைப் பாடல்கள்: இச்சங்கத்தில் திருக்குறள் அரங்கேற்றத்திற்கு வந்தபோதே பாராட்டாகப் பாடப் பெற்றன. பாடியுள்ள 53 புலவருள் அசரீரி நாமகள் இறையனார் உருத்திரசன்மர் எனும் நால்வரைத் தவிர்த்த 49 பேர் இச்சங்க உறுப்பினராவர். இறையனார் அச்சமயத்துத் தோன்றித் தன்னை இறைவனாகக் கூறிக்கொண்டதொரு புலவரேயாவர். குருக்களையும் இறைவனாகவே கருதிய காலமது வென்பது திருமந்திரத்தால் அறியப்படும். அசரீரி

நாமகள் ஆகியோர் பாடல்களைப் பெருந்தேவனுர் போன்ருெருவர் பாடியிருக்கக்கூடும். உலகெலாம் என்ற தொடரை இறைவன் எடுத்துக்கொடுத்தான் என்பது கொண்டு பெரிய புராணத்தையே பொய்யெனக் கூறிவிடுவதில்லை இவ்விரு பாடல்களும் அவ்வகையினவேயாகும். ஆறுசமயம், முத்தமிழ் போன்ற கருத்துக்கள் இப்பாடல்கள் இக்காலத்திற்கு உரியவெனக் காட்டும். வேறெக்காலத்தும் எந்நூற்கும் இத்தனை பெருமை புலவர்கள் இணைந்து இசைந்து இயற்றித் தந்ததில்லை.

இறையனுரகப் பொருள் :

இச்சங்கத்தரங்கேற்றப்பட்டதுதான். நம்பி திருவிளையாடல் இதன் ஐந்தாம் பாடலுக்கு நக்கீரர் உரைகண்டது பற்றி யுரைக்கின்றது. கல்லாடம் (66) குறுமுனிக்கும் 49 புலவர்க்கும் அகப்பொருள் விளக்கம் அருளியதுப்பற்றிக் குறிப்பிடுகின்றது. இக்காலத்துத் தொல்காப்பியக் கல்வி சிறிது வீழ்ந்து வடமொழி யிலக்கணவறிவு வளரத் தொடங்கியுள்ளது. நக்கீரர்க் கிலக்கணம் உபதேசித்ததும் இக்கருத்தினையே வலியுறுத்தும். தமிழர் அகவாழ்வில் களவியலே சிறந்ததெனக் குறிஞ்சிப்பாட்டிலும் கூறப்படுகின்றது. அதே கருத்தினை வற்புறுத்தியே சுமார் 60 சூத்திரங்களும் கற்பியலுக்காக 20 சூத்திரங்களும் சேர்த்து ஆக 80 சூத்திரங்களில் இந்நூல் இயற்றப்பெற்றது. மணிமேகலையிற் குறிக்கப்பெறும் பஞ்சம் இந்நூல் தோற்றத்திற்கும் ஒரு வகைக் காரணமாகியுள்ளது. நக்கீரர் உரையுடன் கலந்து இந்நூல் இன்றுகாறும் நின்று நிலவுகின்றது. களவு காந்தர்வம் பற்றிய முதற் பாடலுக்கு நக்கீரர் கொண்ட உரை முற்றிலும் தமிழ்ப் பண்பிற்கு ஏற்றம் தருவதாகின்றது.

ஞானமிர்தம் :

சைவசித்தாந்தத்தத்துவ நூலாகிய இதுவும் இக்காலத்தியன்றதேயாகவேண்டும். யாளி கூவற்றூண்டும் ஆதப்

புலேச்சி என்ற திருவள்ளுவர் பிறப்பைப் பற்றியதாகக் கருதப்படும் குறிப்பு இந்நூலிலேயே உள்ளது. 75 பாடல்களும் ஆசிரியப்பாவால் அமைந்தவை. வாகீச முனிவர் என்பவர் இதன் ஆசிரியர். கல்லாடம் திருமந்திரம் போன்று பதிபசு பாசம் முதலிய சைவ தத்துவங்களைப்பற்றிக்கூறுவது. உவமைகளை அடுக்கிக் கூறுவது இவ்வாசிரியரின் இலக்கியச் சிறப்பென அறிஞர் பாராட்டுவர். இது பிற்காலத்த தென்பதற்குரிய குறிப்புக்களோ ஆதாரங்களோ இந்நூலில் காணப்பெறவில்லை. தேவார மூவருக்கு முந்திய சைவத்தை விளக்கிய சித்தாந்த நூல்கள் இவையேயாகவேண்டும்.

திருமந்திரம்

1. ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் 2066
2. சிவனோடொக்குந் தெய்வம் தேடினும் இல்லை (4)
3. அவனன்றி மூவரால் ஆவதொன்றில்லை 5
4. எப்பரிசாயினும் ஏத்துமின் ஏத்தினல்
அப்பரிசீசன் அருள் பெறலாமே (36)
5. அரனடி சொல்லி அரற்றி அழுது 43
6. மணியுள் இருந்தவர் மாதவர் ஒப்பர் 47
7. நவ ஆகமம் எங்கள் நந்தி பெற்றனே 72
8. ஆகமன் ஒன்பான் அதிலான நாலேழு 74
9. வேதாந்தமாவது வேட்கை ஒழிந்திடம் 79
10. கல்லா அரசனும் காலனும் நேரொப்பர் 95
11. வேடநெறிநில்லார் தம்மை விறல் வேந்தன்
வேடநெறி செய்தால் வீடதுவாகுமே 97
12. ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின் 107
13. செல்வம், வட்டி கொண்டீட்டியே மண்ணின்
முகந்திடும் பட்டிப் பதகர் பயனறியாதே 117

32. காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்கும் குறியது வாமே 553

33. நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமும் இல்லை, மனைக்கு மழிவில்லை 584

34. தன்வழியாகத் தழைத்திடும் வையகம் 658

35. உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவுமாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாய மறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே 704

36. உடம்பினை முன்னம் இழுக்கென்றி ருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண்டான் என்று
உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே 705

37. சீற்றம் ஒழிந்து சிவயோகாய் நின்று 1450

38. சன்மார்க்க சாதனம்தான் ஞானஞேயமாம் 1456

39. ஞானம் விளக்கிய நாதன் என்னுள் புகுந்து
ஊனை விளக்கி யுடனிருந்தானே 1502

40. கமையறிந்தாருட் கலந்துநின்றானே 1525

41. ஒன்றது பேரூர் வழியாறதற்குள 1533

42. சித்தம் இறையே சிவகுருவாமே 1548

43. சிவனே சிவஞானி 1555

44. பிரானருள் உண்டெனில் உண்டு நன்ஞானம் 1618

45. நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம் 1651

46. தானற்ற தன்மையும் தானவனுதலும் 1647

47. அருளதுவாவதற்கும் தவமும் 1761

48. உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பாலயம் 1792

49. நடமாடக் கோயில் நம்பர்க் கொன்றீயின்
படமாடக் கோயில் பகவற்கங்காமே 1021

50. யோகமவ்விந்து ஒழியா வகை புணர்ந்து
ஆகம் இரண்டும் கலந்தாலும்...

51. கிளரிந்திரியம் அடக்கலுறுமவன்தானே
யமரன் 1994

52. விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம் 1998

53. பெறுதற்கரிய பிறவியைப் பெற்றும் 2052

54. உடம்பொடுயிரிடை நட்பறியாதார்
மடம்புகு நாய்போல் மயங்குகின்ருரே 2109

55. தானே தனக்குப் பகைவனும் நண்பனும் 2188

56. பரத்தை மறைத்தது பார்முதற்பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற்பூதமே 2251

57. தன்னினில் தன்னை யறியும் தலைமகன் 2310

58. பொய்கலந்தார் முன்புகுதா ஒருவனை 2554

59. தினைப்பிளந்தன்ன சிறுமையரேனும்
கனத்த மனத்தடைந்தாருயர்ந்தாரே 2618

60. எங்குஞ் சிதம்பரம் எங்கும் திருநாமம் 2674

61. புலைநின்ற பொல்லாப்பிறவி கடந்து
கலைநின்ற கள்வனிற் கண்டுகொண்டேனே 2801

62. அரிந்தேன் வினையை அயில்மனவாளால் 2920

63. அறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம்
இன்பம் 2976

கல்லாடம்

1. சமயக் கணக்கர் மதிவழி கூருது
உலகியல் கூறிய பொருளிதுவென்ற

வள்ளுவன் தனக்கு வளர்கவிப் புலவர்முன்
முதற்கவி பாடிய முக்கட்பெருமான் 14

2. தேரான் தெளிவெனும் திருக்குறள் புகுத்து 62

3. ஐந்திணை வழுவாது அகப்பொருளமுதினை
குறுமுனி தேறவும் பெறுமுதல் புலவர்கள்
ஏழேழ் பெயரும் கோதறப் பருகவும் 67

நக்கீரர் 11ஆம் திருமுறை

1. சொல்லும் பொருளுமேதூத் திரியும் நெய்யுமா
நல்லிடிஞ்சில் என்னுடைய நாவாக
(க. பா. கா. பா. 1)

2. நமக்கிசைந்தவா நாமும் ஏத்திஞல் நம்பர்
தமக்கழகு தாமே அறிவர் 22

3. யானென்று தானென் றிரண்டில்லை 55

1. அந்த இளமாக்குழவி ஆயம் பிரிந்ததற்குக்
கொந்தவிழ்தேன் தோய்த்துக் குறமகளிர்-சந்தின்
இலைவளைக்கை யாற்கொடுக்கும் ஈங்கோய்-
(ஈங்கோய் எழுபது 2)

1. அறுவகைச் சமயமும் நெறிமையில் வகுத்தனை
(திருவெழுகூற்றிருக்கை)

1. மானுடனுகிய சண்டியை வானவனுக்கியும்
(கோபப்பிரசாதம் 10)

2. கொச்சைத் தேவரைத் தேவரென்றெண்ணிப்
பிச்சரைப்போல 82

1. காலன் உரத்தில் உதைத்த உதைபோற்றி 7

1. திருக்கண்ணப்பன் செய்தவத்திறத்து
விருப்புடைத்தம்ம விரிகடல் உலகே
(கண்ணப்பர் மறம்) 1

2. மறப்புலி கடித்த வன்திரள்முன்கை ,, 17

1. மெய்யன் விரும்புவார்க் கெஞ்ஞான்றும்
(கபிலதேவர் 99)

1. பேச்சுக் கடந்த பெருவெளி - பரணதேவர் 9

2. செல்லுமளவும் சிதையாமற் சிந்தீமின் 70

3. உருபு பல கொண்டாடுவாய் நின்றூர் 93

## இறையனூர் அகப்பொருள்

1. அன்பின் ஐந்திணைக் களவெனப்படுவது
அன்பின் அருமறை மன்றல் எட்டனுள்
கந்தர்வ வழக்கம் என்மனூர் புலவர்...

## திருவள்ளுவமாலை

1. என்றும் புலரா தியாணர் நாட்செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்
இறையனூர்

2. நன்றெ‌ன, எப்பாலவரும் இயையவே வள்ளுவனூர்
முப்பால் மொழிந்த மொழி கல்லாடர்

3. எல்லாப் பொருளும் இதன்பா லுளவிதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால் -
மதுரைத் தமிழ்நாகனூர்

4. சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினிய -
கவுணியனூர்

5. தெள்ளமுதம், உண்டறியார் தேவர் உலகடைய
உண்ணுமால் வண்டமிழின் முப்பால் மகிழ்ந்து -
ஆலங்குடி வங்கனூர்

6. அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தரித்த குறள் - ஔவையார்

## 7 ஆம் நூற்றுண்டு

இந்நூற்றுண்டு முதல் பல்லவர்காலம் எனவும், முற்பட்ட சங்கச்சார்புக்காலத்தைக் களப்பிரர்காலம் எனவும், 10ஆம் நூற்றுண்டுமுதல் சோழர்காலம் எனவும், 15ஆம் நூற்றுண்டு முதல் நாயக்கர்காலம் எனவும் இலக்கிய வரலாற்றைச் சிலர் பிரிப்பர். இந்நூற்றுண்டு இலக்கிய வரலாற்றில் ஒரு புது யுகத்தைத் தொடகுகிறது எனலாம். பக்திநெறியானது சைவ வைணவ சமயங்களின்வழியாகத் தமிழக முழுவதும் பரவியது. சமய அடியார்களாகிய கடவுள் புலவர்களால் ஆயிரக்கணக்கான பக்திப் பாடல்கள் இலக்கியத்துள் எழுந்தன. இவற்றுள் பிற நாட்டுப் புதிய கலாச்சார பண்பாட்டுப் பரவல்களும் இந்நாட்டில் ஏற்பட்டன.

பாண்டிய பல்லவர்களில் சிறந்த வேந்தர்கள் தமிழுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தனர். காவியங்களும் நிகண்டுகளும் இலக்கணங்களும் இந்நூற்றுண்டில் இயற்றப்பெற்று இலக்கியத்தில் ஒரு நல்ல எழுச்சி காணப்பெற்றது.

ஜைனசமயம் இக்காலத் தமிழகத்தில் நல்ல விளக்க நிலையில் இருந்துள்ளது. நூற்றுண்டின் பிற்பகுதியில் அதன் விளக்கம் மங்கத் தொடங்கியுள்ளது. இச்சமயத்தில் ஜைனர்கள் கங்கநாடு முதலிய இடங்களுக்குச் சென்று உள்ளனர்.

ஆசிரியநடை மாறி விருத்தப்பா வகை இலக்கியத்தில் மேற்கொள்ளப்பெற்றுள்ளது. காப்பியங்கள் பல முன்பே இயற்றப்பெற்றிருந்தன. எட்டுத்தொகை நூல்கள் முன்பே தொகுக்கப்பெற்றிருந்தன. கீழ்க்கணக்குள் பெரிதும் இயற்றப்பெற்றிருந்தன. அகத்தையும் அரசர்களையும் பாடுவது சிறிது மாறி ஆண்டவனைப் பாடுதல் மிகுந்தது.

கி. பி. ஏழாம், எட்டாம் நூற்றுண்டு ஆழ்வார்காலக் கணிப்பில் இந்திய ஒப்பீட்டுப் பஞ்சாங்கம் (Indian ephemeris) பயன்படுத்தப் பெற்றுள்ளது. இஃதொரு புதிய முயற்சியாகும். ஆனுல், முற்றிலும் புதுவதன்று. ஒப்பீட்டுப் பஞ்சாங்கத் தொகுப்பிற்குப் பெருங்காரணமாயிருந்த இராவ் பகதூர் கண்ணுசாமி பிள்ளையவர்களே ஆழ்வார்கள் பிறந்த நாட்களை இம்முறையில் கணக்கிட்டு ஒரு பட்டியலைத் தந்துள்ளார். நம்மாழ்வார் முதலிய ஓரிரு ஆழ்வார்களின் பிறந்த ஆங்கில (ஒப்பீட்டு) தேதிகளை டாக்டர் கிருஷ்ணசாமி அய்யங்கார் போன்றவர்கள் குறித்தும் ஓரளவு ஒப்புக் கொண்டும் உள்ளனர். ஆனுல், இலக்கிய வரலாற்றுளர் பலர் ஏதோ ஒரு சமயப்பற்றின் காரணமாக இத்தேதிகளை வெளிப்படுத்தவும் ஒப்புக்கொள்ளவும் மறுத்துள்ளனர். வேறு வரலாற்று ஆதாரங்களைக்கொண்டே ஆழ்வார் காலங் களை ஆராய்ந்துள்ளனர். நூற்றுண்டு எனும் எல்லையளவில் பிறர் கருத்துக்களுக்கு இந்நூலின் ஆராய்ச்சி எவ்வகையி லும் வேறுபடவில்லை. மேலும், குறிப்பிட்ட ஒரு ஆங்கில-ஆண்டு, தேதி ஆகியவற்றை இது குறிப்பிடுகின்றது. வைணவர்கள் பரம்பரைகளைப் போற்றிப் பாதுகாத்துவந் துள்ளனர். பெருமுயற்சியுடன் ஆழ்வார்களின் பிறந்த நாட்களை ஒப்பீட்டுப் பஞ்சாங்கத்துடன் ஒத்துக் கணக்கிட்டு ஆங்கிலமுறையில் இந்நூல் குறித்துள்ளது பெருமளவு பிற் காலத்தில் உண்மை என உணரப்படலாம். குருபரம்பரை மூவாயிரப்படியை எழுதியவர் வேதாந்ததேசிகரின் மாணவ ருள் ஒருவரான பிரமதந்திரயதீந்திரர் என்பவர். சுமார் 500 ஆண்டுகட்கு முற்பட்ட ஆழ்வார்களின் வரலாற்றினை அஃது உரைப்பதால் அதனை நம்பக்கூடும்.

### அப்பரும் சம்பந்தரும்

ஏழாம் நூற்றுண்டிற்குப் பின் வளர்ந்த சைவத்திற்கு அடிப்படையிட்ட அடியார்களுள் அப்பரும் சம்பந்தரும் ஒப்

பற்றவராவர். ஜைனத்தை எதிர்த்தும் சைவத்தை நிலை நாட்டியவர்கள் இவர்கள். ஒரு முதியவரும் ஒரு இளையரு மாகிய இவர்தம் பாடல்கள் சைவ சமயத்தின் முதுமையை என்றும் இளமையாகவே வைத்துள்ளன. அப்பர் 81 ஆண்டு களும் சம்பந்தர் 16 ஆண்டுகளும் இவ்வுலகில் இலங்கிய வர்களாக வரலாறுகள் கூறும்.

அப்பர் திருமுனைப்பாடி நாட்டுத் திருவாமூரிற் பிறந்த வர். முதலில் சமணராய்த் தருமசேனர் என்ற தலைவராய் வீற்றிருந்து சிவபெருமானின் அருளால் சூலை நோயுற்றுச் சைவத்திற்குத் திரும்பினர். ஜைனராகிய பல்லவன் இவ ரைக் கொல்வதற்காம் சூழ்ச்சிகள் பலவும் செய்ய இறைவ னருளால் அவற்றையெல்லாம் வென்று பல்லவனையும் தம் பக்கலாக்கினர். தென்னட்டுச் சிவபதிகளையெல்லாம் கண்டு வணங்கிச் சம்பந்தர் முதலியோருடன் நட்பு கொண்டு சைவனுகிய மாறிய பாண்டியனையுங்கண்டு விந் தைகள் பலவும் புரிந்து கடைசியில் சிவநிலையுற்றனர்.

சம்பந்தர் சீகாழிப் பதியில் தோன்றியவர். இளமையி லேயே சிவஞானம் கைவரப் பெற்றுத் திருக்கோயில்கள் பலவற்றையும் கண்டு பாண்டிய நாட்டில் ஜைனருடைய எதிர்ப்பையெல்லாம் அடக்கி விந்தைகள் புரிந்து நல்லூரில் திருமணக் கோலத்துடன் நம்பன் திருவடியுற்றவர்.

இருவரும் சிறுத்தொண்டராகிய பரஞ்சோதியார் பல் லவ I நரசிம்மனுக்குப் படைத்தலைவராய் வாதாபி போரை வென்றவர். கி. பி. 642-க்குப் பின்பு வாழ்ந்தவர்கள். வர லாற்றறிஞர் பலர் கருத்துப்படியும் நின்றசீர் நெடுமாறன் அல்லது கூன்பாண்டியனுகிய அரிகேசரி மாறவர்மன் கி. பி. 670ல் ஆண்டிருக்கிறுன் அவனை இவர்களிருவரும் கண்டுள்

ளனர். ஆக இவர்கள் 640 - 670க்குள் வாழ்ந்துள்ளனர். இக்காலத்தில் சம்பந்தரின் முழுவாழ்க்கையும் அப்பரின் பிற்பகுதியும் இயன்றுள்ளன.

இவர்தம் தேவாரத்துள் சம்பந்தர் முதல் மூன்று திருமுறைகளையும் பாடினர். சம்பந்தர் 384 பதிகங்களையும் அப்பர் 312 பதிகங்களையும் சுமார் 8000 பாடல்களில் பாடியுள்ளனர். மனித அனுபவம் நிறைந்தவை அப்பர் பாடல்கள். சம்பந்தர் பாடல்கள் இயற்கை அழகுகள் நிறைந்தவை. இன்றுவரை தமிழகத்தைத் தட்டி எழுப்பி, இறைநெறியில் என்றும் எண்ணமருமல் செய்வன. தமிழ் இசைக்கும் பண்களுக்கும் தட்டாக் கருவூலங்களாக இருக்கும் இவை பிற்கால விருத்தப்பாக்களுக்கு எல்லாம் நல்வழிகாட்டிகளாயின எனலாம். சொற்குறுதிக்கு அப்பர் என்பதே பழமொழி. ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிவன தேவாரங்கள். தேவாரம் என்ற பெயர் தெளிவாகப் பதினைரும் நூற்ருண்டில் சைவ எல்லப்ப நாவலாராசிரியரால் மூவர் பாடல்களைக் குறித்து வழங்கியது எனலாம். அதற்குமுன்பு எல்லாம் வழிபாடு என்ற பொருளில் வழங்கியுள்ளது. தொல்காப்பியத்தும் சிலப்பதிகாரத்தும் வாரப்பாடல்பற்றிய குறிப்புகள் உள்ளன. தேவனைப்பற்றிய வாரப்பாடல் வகைப்பட்ட பாடல்கள் என்பதே தேவாரம் என்பதற்குப் பொருளாகக்கொள்ளல் சீரியதாகும். அப்பர் பலவகை பாக்களுக்கும் உரமும் ஊக்கமும் அளித்துள்ளார். அவை பிற்காலத்துச் சமய அடியார்களாலும் பின்பெற்றப்பெற்றுள்ளன.

**சுந்தரமூர்த்திகள்**

தேவார ஆசிரியருள் மூன்ருமவரும் தம்பிரான் தோழருமாக விளங்கியவர் சுந்தரமூர்த்திசுவாமிகள். பரவையார்,

சங்கிலியார் என்ற இருவரை மணந்ததன்மூலம் சமூகத்தில் நல்ல சீர்திருத்தத்தைக் கண்டவர். தொண்டர் சீரைப் பரவித் திருத்தொண்டத்தொகை பாடிப் பெரிய புராணத்திற்கு வழிகாட்டியவர். திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் பிறந்து அக்காலப்பல்லவன் நரசிங்கமுனையரையனால் எடுத்து வளர்க்கப்பெற்றவர். 18 ஆண்டுகள் இவ்வுலகில் இவர் இலங்கியதாகக் கூறுவர். இளமையிலேயே திருமணக்கோலத்தில் இறைவனால் தடுத்தாட்கொள்ளப்பட்டுப் பல பதிகளையுங்கண்டு வணங்கி சேரமான்பெருமாளுடன் நட்புகொண்டு இருவரும் திருக்கைலாயம் சென்றனர் என்பர்.

கடல்சூழ்ந்த உலகெல்லாம் காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற்சிங்கங்கள் அடியேன் என இவர் நிகழ்காலத்தில் பல்லவனைக் குறித்தலால் இவர் கழற்சிங்கன் என்ற பல்லவன்காலத்தில் இருந்திருக்கிறார் எனத் தெரிகின்றது. இப்பல்லவன் 9ஆம் நூற்றாண்டு நந்திவர்மன் எனச் சிலர் கூறினர். ஆனால், இன்றைய ஆராய்ச்சியில் அவன் ஏழாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த இராசசிம்ம பல்லவன் என்றே தெரிகின்றது. சிம்மன் சிங்கன் என்ற பெயருடைய பல்லவர் 7ஆம் நூற்றாண்டிலேயே இருந்துள்ளனர் என்பது ஒரு வலிய ஆதாரம். இராசசிம்மனும் கடல் சூழ்ந்த உலகை எல்லாம் ஆண்டிருக்கிறான். பல்லவர்க்குத் திறை கொடாதநிலை ஒன்றையும் சுந்தரர் குறிக்கிறார். அந்நிலை முதல் நரசிங்கவர்மனுக்கும் இராசசிம்மவர்மனுக்கும் இடைப்பட்ட பல்லவர்காலத்தில் இருந்துள்ளது. பொடியாடுதிருமேனி நெடுமாறன் என அவர் தேவாரத்தில் குறிப்பது அவர் 7ஆம் நூற்றாண்டின் அரிகேசரி நெடுமாறன் காலத்தவர் என்பதை உணர்த்தும் என்பர். சுந்தரர் 100 பதிகங்களில் ஆயிரத்துக்குமேற்பட்ட தேவாரங்களைப் பாடியுள்ளார். நயத்துக்குச் சுந்தரர் என்பது ஒரு பாடல்.

சேரமான்பெருமாள் திருக்கைலாய ஞான உலாவும், பொன்வண்ணத்தந்தாதியும் பாடினர். உலா பிரபந்தத்துள் இவர்தம் கைலாயவுலாவே முதன்மையும் தூய்மையும் உடையதாகும். தலைவன் ஊர்வலம் வருவதாகவும், அவனை ஏழு பருவமுடைய பெண்கள் எல்லாம் பார்த்துக் காமுறுவதாகவும் பாடப்பெறுவது உலா. தலைவன் புகழையும் பெதும்பைப் பருவத்தையும் பாடுவதே உலாக்களில் சிறப்பு.

## முதல் ஆழ்வார்கள்

ஆழ்வார்கள் பன்னிருவருள் பொய்யார், பூதத்தார், பேயார் ஆகிய மூவரும் முதலாழ்வார்கள் எனப் பெறுவர். முதல் ஆழ்வார்கள் முதலில் தோன்றியவர்கள் என்பது கருத்து. தேவார மூவர்போல இவரும் ஆழ்வாருள் சிறந்தவர். இவர் மூவரும் முறையே காஞ்சி, மல்லை, திருமயிலை ஆகிய இடங்களுள் தோன்றினர். மூவரும் ஒரே ஆண்டில் (சித்தார்த்தி) ஐப்பசி மாதத்திலேயே தோன்றினர் என்பது பரம்பரை. மூவரும் நூருண்டுகளுக்கு மேலும் நீண்டகாலம் வாழ்ந்திருக்கக்கூடும் என்பர் அறிஞர். மூவரும் குணபரன் என்னும், முதல் மகேந்திரவர்மன்காலத்துத் திருமழிசையாரைக் கண்டிருத்தலாலும், பொய்கையார் 6ஆம்நூற்றுண்டினனெனக் கருதப்பெறும் கோச்செங்கணன்காலத்தவராகத் தெரிதலாலும் இவர்கள் கி. பி. 6ஆம் நூற்றுண்டின் இடைக்காலந்தொட்டு ஏழாம் நூற்றுண்டிலும் வாழ்ந்திருப்பர்.

குருபரம்பரை மூவாயிரத்தின்படி ஒரு குறிப்பிட்ட ஆண்டில் (துவாபர யுகம் 862962 சித்தார்த்தி) ஒரே (ஐப்பசி) மாதத்தில் ஒருவர் மற்றவர்க்கு ஒரு நாள் தள்ளிப் பிறந்துள்ளனர். (பொய்கையார்: திருவோணம். பூதத்தார் அவிட்டம். பேயார் : சதயம்). இந்திய ஒப்பீட்டுப் பஞ்சாங்கத்தின்படி (Ephemeris) இந்நாட்கள் கி. பி. 539

ஆகஸ்டில் நிகழ்ந்திருக்கக்கூடும். கி. பி. 539இல் ஒரு சித்தார்த்தி ஏற்பட்டுள்ளது. (மாதக்கணக்கீட்டில் மட்டும் இக்கால இந்திய-ஆங்கில ஒப்பீட்டிற்கும் கி. பி. 6 முதலிய முந்தைய நூற்றுண்டுகளின் ஒப்பீட்டிற்கும் வேறுபாடு இருக்கலாம் எனத் தோன்றுகிறது).

இவர்கள் திருப்பதிதோறும் சென்று பெருமாளைப் பாடி வழிபட்டுவருகையில் திருக்கோவிலூரில் ஒரு வீட்டுத் திண்ணையில் தங்கி நெருக்குண்டுத் திருமால் காட்சியைப் பெற்று ஞானச்சுடர் விளக்கேற்றி அவனைக் கண்டவர்கள்.

பொய்கையாழ்வார் விண்ணகரம் என்ற தொடரைப் பயன்படுத்தியுள்ளார். பல்லவப்பரமேசுவரவர்மனின் 7-8ஆம் நூற்றுண்டைய விண்ணகரத்தையே இது குறிக்குமென்பர் பலர். 6ஆம்நூற்றுண்டில் 1ஆம் நந்திவர்மன் காலத்தேயே விண்ணகரம் இருந்ததனைக் எடுத்துக்காட்டுவர் அறிஞர்.

பூதத்தாழ்வாரின் 'மல்லை' என்ற தொடரைக்கொண்டு மாமல்லனுகிய முதல் நரசிங்கவர்மனின்காலத்தில் மல்லை ஏற்பட்டிருக்கவேண்டும் எனவும் ஒருசாரார் ஆசிரியர் கூறுவர். முதல் மகேந்திரவர்மன்காலத்தேயே மல்லை அமைக்கப் பெற்றிருக்கக்கூடும் என்ற குறிப்பில் ஹீராஸ் பாதிரியார் எழுதுகிருர்.

இயற்பா நூற்றினுல் இயன்ற அந்தாதிப் பாடல்களை ஒவ்வொருவரும் இயற்றினர். அவை அன்பே தகளி, வையம் தகழி, திருக்கண்டேன் எனத்தொடங்கும். சமயப் பொதுமைக்குச் சிறப்புப் பெற்றவை இவர்தம் பாடல்கள். வெண்பாக்களாலாகிய அந்தாதிப் பிரபந்தங்களென இவற்றைக் கூறலாம். 8-ஆம் நூற்றுண்டுவரைப்பட்ட வைணவசமயத்தை இவர்தம் பாடல்களே ஏற்றமுறச் செய்தன.

களவழி 40 என்ற கீழ்க்கணக்கு நூலினை ஒரு பொய்கை யார் கோச்செங்கணனுடைய சேர வெற்றியைப் பாராட்டி எழுதியுள்ளார். இவர் ஆழ்வாராகவே இருக்கவேண்டு மென்பது பலர் துணிவு. கோச்செங்கணன் சிவனுக்குமட்டு மன்றித் திருமாலுக்கும் கோயிலைக் கட்டியதாகக் கல்வெட்டு கள் கூறுதலாலும், களவழியில் அரசனைத் திருமாலுக்கொப் பிட்டு அடிக்கடிப் பாடுதலாலும் நூல் ஆசிரியர் ஆழ்வாரா கவே இருக்கக்கூடும். வரலாற்றினர் கோச்செங்கணன் காலம் 9 ஆம் நூற்றுண்டேயென்பர்.

ஆனால் இன்னிலை யென்ற கீழ்க்கணக்கு நூலும் பொய்கையாழ்வாரதென்பர் சிலர். அஃதோடு தொகுப்பு நூலெனவும் தொகுத்தவர் மதுரையாசிரியர் என்றிருப்பதாக வும் கழகப் பதிப்பில் ஆசிரியர் பெயரே குறிக்கப்பட வில்லை யெனவும் கூறி இக்கருத்தினை மறுப்பர் ஆசிரியர்.

*திருமழிசையாழ்வார் :*

திருமழிசையிற் பிறந்ததாற் பெயர்பெற்ற யோகியா வார். முதல் மூவருக்கடுத்தவராகக் கருதப்படுபவர் இவ ராவர். பிருகு முனிவருக்குப் பிறந்தவராகக் கூறப் படும் இவர் கீழ்க்குலத்தவனிடம் வளர்ந்து வேதியர்களையும் சைவர்களையும் வென்றனரெனத் தெரிகின்றது. கணிகண் ணன் என்பாரை அடியவராகக் கொண்டு காஞ்சியில் இருந்துப் பின் குடந்தையிலும் யோகியராயிருந்து நீண்ட காலம் இவ்வுலகில் இலங்கியிருந்திருக்கிறுர்.

தம்பாடலில் பெருமாளைக் 'குணபரனே' என இவர் அழைக்கிறுர். இது I மகேந்திரவர்மன் பெயராகலின் அவனை மறைமுகமாய்ப் பாராட்டு முகமாய் ஆழ்வார் இவ் வாறு குறிக்கிறுரென்பர் அறிஞர். இது பொருத்தமாகலாம் எனவே இவர் I மகேந்திரன் காலத்து வாழ்ந்திருக்கலாம்.

முதலாழ்வர்ர்கள் பிறந்த அதே ஆண்டில் இவரும் பிறந்தா ரெனத் தெரிதலால் இவரும் 6–7 ஆம் நூற்றுண்டுகளில் இருந்தவராவர். குருபரம்பரை மூவாயிரத்தின்படி இவரும் முதலாழ்வார்கள் பிறந்த அதே (கி. பி. 539) ஆண்டில் பிறந்தவர். ஆனுல் மாதமட்டும் தை.

இவர்தம் பிரபந்தங்களுள் நான்முகன் திருவாந்தாதி 96 பாடல்களும் திருச்சந்த விருத்தம் 120 பாடல்களும் கொண்டவை. சந்தப் பாடல்களில் மிக முற்பட்ட காலத்தில் இயன்றவை இவையெனலாம். பெருமிதநடையில் தெளிவான கருத்துக்களையுடையவை இவர்தம் பாடல்கள்.

முத்தொள்ளாயிரம் :

பாடல்தொகையாற் பெயர்பெற்ற நூல்களுள் இதுவு மொன்று. மூன்று தொள்ளாயிரங்களா அன்றி மூன்றும் சேர்ந்து ஒரு தொள்ளாயிரமா எனவெல்லாம் இத்தொடர் பொருள்செய்யப் பெறுகின்றது. ஆனுல் உரையாசிரியர் கள் இதனை ஒரு தொள்ளாயிரம் என்றேயுரைப்பர். சேர, சோழ, பாண்டியர்மேல் பாடப் பெற்றது. ஒரு ஆசிரியரா லேயே இயற்றப் பெற்றதென்பதே கருத்து. இப்போது கிடைப்பன சுமார் 150 வெண்பாக்களே.

49 ஆவது பாடலில் மாக்கடுங் கோனைப் பாராட்டுகிற திந்நூல். இவன் பாண்டியன் மாக்கடுங்கோன் ஆயின் அவன் காலம் கி. பி. 570–600 ஆகும். 620 வரை என் பாரும் உளர். ஏழாம் நூற்றுண்டின் தொடக்கமாகும். இத்தகைய பாடல்கள் புறத்திரட்டிலும் தொகுக்கப் பெற் றுள்ளன.

வெண்பாக்கள் செம்மையும் அழகுமுடைய நடையில மைந்தன. அகத்துறைப் பாடல்களும் அமைவுறப் பாடப்

பெற்றுள்ளன. இப்பாடல்களுள் பல பிற்கால உலாப் பிரபந்தத்திற்கு வழிகாட்டியாயிருக்கலாமெனக் கருதப்படுகின்றது. நீதி நூற்கோவையெனவும் கூறுவர்.

**சூளாமணி :**

சிறு காப்பியம் ஐந்தனுள் சிறந்த இதனைச் செய்தவர் தோலாமொழித்தேவர் என்ற ஜைனர். திவட்டன் என்னும் அரசகுமாரன் கதையைச் சொல்வதிக் காவியம். சேந்தன் என்ற அரசன் தலைமையில் இஃதியற்றப்பட்டதாக நூல்கூறும். திவாகரத்தை இயற்றிய சேந்தனும் இவனும் ஒன்றாக இருக்கலாம். அவ்வாறாயின் இந்நூற்றாண்டைச் சேர்ந்ததே இக்காவியம். இதனைச் சங்க காலத்திற்குரியதாக்குவர் அறிஞர் பலர்.

பத்தாம் நூற்றாண்டின் சிரவணபெல்கோலா கல்வெட்டொன்று சூளாமணி என்ற காவியம் ஸ்ரீவர்த்தரால் இயற்றப் பெற்றது, பலராலும் படிக்கப் பெற்றது என்கிறது. ஆனால் கங்கர் வரலாறெழுதிய திரு. கிருஷ்ணராவ் ஸ்ரீவர்த்தர் பூஜ்யபாதருக்குமுன் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவரென்கிறார். தோலாமொழியும் ஸ்ரீவர்த்தரும் ஒருவராகார். ஆயின் தமிழ்ச்சூளாமணி ஸ்ரீவர்த்தரின் வடமொழி சூளாமணியின் மொழிப்பெயர்ப்பு அல்லது தழுவலாக இருக்கலாம். 12 காண்டங்களையும் 2131 பாடல்களையும் உடையதிக்காவியம். சிந்தாமணியை யொத்த பாடல் இனிமையும் அருமையுமுடையதிந்நூல். பெருங்காவியங்களோடு வைத்தெண்ணத்தக்க மதிப்புடையது.

**சீவகசிந்தாமணி :**

திருத்தக்கத்தேவர் என்ற ஜைன முனிவரால் இயற்றப் பெற்றது. இவர் ஒரு சோழ இளவரசராய் வஞ்சியில் தங்கியிருந்தாரென்பர். மதுரைச் சங்கத்தார் துறவிகள் காமத்

தைப் பாடும் திறமுடையரோ என்ற வாதத்திற்கெதிராக ஆசிரியர் இக்காவியத்தைச் செய்து அவர்தம்பாராட்டினைப் பெற்றுர் என்பர். இவர்பாடிய மற்றொரு நூல் 51 பாடல்களில் நிலையாமையைப் பாடிய நரிவிருத்தம்.

ஜினசேனர் என்பவர் மகாபுராணம் இயற்றினர். அவர் மாணவர் குணபத்திரர் அப்புராணத்தின் உத்தரபாகத்தை எழுதினர். அப்பாகத்தில் சீவகன் கதையுள்ளது. அதனைக் கொண்டே தமிழில் சிந்தாமணி இயன்றிருக்கவேண்டும். குணபத்திரர் அகாலவர்ஷன் காலத்தில் (898 கி. பி.) இருந்ததாகத் தெரிதலால்இக்காவியம் 10ஆம் நூற்றுண்டின தாகலாம் என்பர் ஆராய்ச்சியாளர்.

கங்கவரலாற்று ஆசிரியர் திரு. கிருஷ்ணராவ் அவர்களின் கருத்துப்படி சிந்தாமணி ஆசிரியர் ஸ்ரீவர்த்தருக்கு முந்தியவராவார். ஸ்ரீவர்த்தர் 7ஆம் நூற்றுண்டினரென முன்பு கூறப்பட்டது. எனவே, திருத்தக்க முனிவரும் 7ஆம் நூற்றுண்டினரேயாகலாம். அப்பர் 'நரி விருத்தமதாகுவர் நாடரே' என்று குறித்த நரிவிருத்தம் தேவருடையதனைக் குறிக்குமாலுல் இவ்வாசிரியர் ஏழாம் நூற்றுண்டினர் என்பது உறுதிப்படலாம்.

சிந்தாமணி பல்லவதேயத்தைக் குறித்தலால் பல்லவர் சிறந்திருந்ததோர்காலத்து அஃது இயன்றிருக்கவேண்டும். 'பொய்யா மொழி புகழ் திருத்தகுமுனிவன்' எனப் பாயிரம் கூறும் பொய்யாமொழி (903-950)ல் ஆண்ட கங்கன் சத்திய வாக்கியனைக் குறிப்பதுஎன்பர். இப்பெயர் கங்கர்வரலாற்றுள் பல வகையிலும் பயின்றுள்ளமையால் 7ஆம் நூற்றுண்டிலும் சத்திய வாக்கியன் ஒருவன் இருந்திருக்கலாம். அன்றிப் பொய்யாமொழி 'திருவள்ளுவர்' (திருக்குறள்) எனக் குறிக்குமாலுல் நிறைந்த குறட்பாக்களைத் தேவர் தம்

காவியத்துள் ஆண்டிருக்கிருர்; தேவர் திருவள்ளுவர் காலத்து வாழ்ந்தவர் என்ற மரபுகளுடன் அது பொருந்தி வரலாம்.

திருத்தகு மாமுனிவர் விருத்தகவித்திறம் என்பது இக் காவியத்திற்குப் பின்னவர் அளித்த பாராட்டு. கம்பர்க்கும் சேக்கிழார்க்கும் எல்லாம் இக்காவியம் பெருந்துணையாகவும் ஊக்கம் ஊட்டுவதாகவும் இருந்துள்ளது.

13 இலம்பகங்களையும், 3145 பாடல்களையும் உடைய இப்பெருங்காவியம் அரசர்தம் வாழ்க்கையை அழகுபடக் கற்பனை செய்வதன் மூலம் 'மனித வாழ்வையே' மறைவாக உருவகஞ்செய்வது எனலாம். மனிதனின் இளமை, வீரம், கலை, இன்பியல், துறவு முத்திநிலை' ஆகியவற்றை அப் பட்டமாகப் படம் பிடித்துக் காட்டுவது இக்காவியத்தின் நோக்கம். தேவாரங்கள் எல்லாம்கூட இப்பா வகையி லேயே இயன்றுள்ளன.

ஏமாங்கதநாட்டரசன் சச்சந்தன் மகனுகிய சீவகன் பகைக்கு அஞ்சிச் சுடுகாட்டருகில் தப்பித்திருந்த விசயைக் குப் பிறந்தவன். கந்துக்கடன் என்ற வணிகனுல் வளர்க் கப்பெற்று கலைகளில் எல்லாம் தேர்ந்து கோவிந்தை காந்தர்வதத்தை முதலாம் ஒன்பது பெண்களை மணந்து எதிரி கட்டியங்காரனையும் வென்று மக்கள் பலரையும்பெற்று அறங்கேட்டு வீடடைந்தவன்.

பெருங்கதை :

இக்காவியத்தை இயற்றியவர் கொங்குவேளிர் என்ற கங்க அரசன். பெருங்காவியத் தகுதியுடைய இதனை மாக் கதை என்றே சான்ருேர் பாராட்டலாயினர்.

கோசாம்பி நகரத்தரசன் உதயணன் கதையைக் கூறு வதிக் காவியம், உதயணன் உயர்குடிப் பிறப்பினன். வில்லி

லும் யாழ் முதற்கலைகளிலும், யானை ஏற்றத்திலும் வல்லவன். யாழால் யானையை அடக்கியவன். ஆசானென அழைக்கத் தக்க கல்வி கேள்வி உடையவன்.

வடமொழியில் இக்கதை (பிருகத் கதை) (550-600)ல் ஆண்ட கங்கன் துர்வினீதன்காலத்து இயன்றது. அந்தக் காலத்தேயே தமிழ்வடிவமும் ஆகியிருக்கலாம் என்பர் அறிஞர். அகவலால் இயன்றிருத்தலால் இக்காவியம் இக் காலத்ததாகலாம் என்பர்.

நாலடியார் குறட்பாடல்களை நிரம்ப இந்நூல் எடுத்து ஆளுகின்றது. ஜைனராகிய இவ்வாசிரியர் இக்காவியத்தைக் கவினும் கற்பனையும் கெழுமப் பாடியுள்ளார். சிலப்பதி காரம் மணிமேகலை முதலிய காவியங்களுடன் பலவகையில் இஃது ஒப்பாகின்றது.

இப்போதுள்ளப்படிச்சுமார் 16000 வரிகளையுடைய இக் காவியம் 6 காண்டங்களில் அமைந்தது. இப்போது கடைசி காண்டம் பற்றிய பகுதி கிடைக்கவில்லை. மற்றவற்றிலும் குறையும் மறைவும் உடைய வரிகள் மிகப் பல உள்ளன.

பாண்டிக்கோவை

ஆசிரியர் பெயர்அறியப்பெருத இக்கோவைப் பிரபந்தம் இறையனுர் அகப்பொருள் உரையில் மேற்கோளாக அமைந் துள்ளது. இக்காலத்து இயன்றிருக்கலாம் எனக் கருதப் படுவது. 360 பாடல்களைக்கொண்ட இந்நூல் ஒரே ஆசிரிய ராலேயே இயன்றிருக்கவேண்டுமென ஆசிரியர் பலர் கருதுவர்.

அரிகேசரி நெடுமாறன், பராங்குசன் ஆகிய பாண்டியர் இதனுள் பாராட்டப்பெறுகின்றனர். இவர்கள் இக்காலத் திற்கு உரியவர்கள். எட்டாம் நூற்ருண்டின் நெடுஞ்செழிய

னது விழிஞப்போரும் இதில் குறிக்கப்படுவதாகக் கருதுவார் சிலர். விழிஞப்போர் தொடக்கம் முன் நூற்ருண்டிலும் இருந்திருந்தால் இந்நூல் இந்நூற்ருண்டின் நிகவ்ச்சிகளையே குறிப்பது எனலாம். முதலில் நக்கீரரால் கூறப்பட்ட இந்த உரை செவிவழியாகச் சென்று 7ஆசிரியத்தலைமுறைகளைக் கடந்துகடைசி ஒருவரால் இம்மேற்கோள் பாடல்கள் உரையில் இணைக்கப்பட்டிருக்க வேண்டும். நக்கீரர் 6ஆம் நூற்ருண்டில் நான்காம் (சைவ) சங்கத்தில் இருந்து உரை எழுதியவர். உரை ஏழு தலைமுறைகளை அடையச் சுமார் 150 ஆண்டுகளாக இருக்குமாஞல் ஏழாம் நூற்ருண்டுக் கோட்பாடு இந்நூற்குப் பொருத்தமாகலாம்.

கோவை என்பது 400 பாடல்களால் அகத்துறைகளை எல்லாம் அமைத்துப் பாடும் அகப்பொருள் இன்பப்பாடல் களால் ஆவது. தொல்காப்பியம் முதலியவற்றுள் கூறப் பெறும் அகத்துறைப் பகுதிகளை எல்லாம் அழகுற வடித்துக் காட்டுவது; யாராவது ஒருசிறந்தவனைப் பாட்டுடைத்தலைவ ராகக் கொண்டு இயற்றுவது.

புறப்பொருள் வெண்பாமாலை:

புறத்தைப்பற்றிச் சிறந்த வெண்பாக்களால் இயன்ற இச்சிறந்த புறப்பாடல் பிரபந்தம் ஐயஞரிதஞர் என்ற சேர மன்னஞல் செய்யப்பெற்றது. தமிழர்தம் போர்முறை, அரசியல், சமூகம் முதலியவற்றைச் செம்மையுறப் பாடலில் தீட்டுவது புறம்.

விநாயகரையும் சிவனையும்பற்றிக் கடவுள் வாழ்த்து அமைந்திருப்பதால் விநாயக வணக்கம் தமிழகத்தே முதலில் தொடங்கிய இக்காலங்களில் இஃது இயன்றிருக்க லாம். காஞ்சி, பாசூர் ஆகிய நகரங்களை நூலில் ஆசிரியர் பாராட்டுகிருர். இக்காலப் பல்லவர்காலத்தேயே பாசூர்

போன்ற நகரங்கள் பெயர் பெற்றவாகவேண்டும். சம்பந்தர் பாசூரைப் பாடுகிருர்.

அகத்தியரின் பன்னிரு மாணவர் இயற்றிய பன்னிரு படலத்தைக் கொண்டே இதனை இயற்றியதாக ஆசிரியர் கூறுகிருர். நான்காம் சங்ககாலத்தில் ஒரு அகத்தியர் இருந்து நக்கீரர்க்கு இலக்கணம் கற்பித்ததாகத் திருவிளை யாடல் கூறும்.

361 வெண்பாக்களுடனுய 12 படலங்களை உடையது இப்பிரபந்தம். அகத்தினைப் பாடல் சிலவும் இதனுள்அடங்கி உள்ளன. சாமுண்டிதேவநாயனுர் என்பவர் இதற்கு உரை வகுத்துள்ளார். ஒவ்வொரு வெண்பாவுக்கும் ஒரு கொளு அமைந்துள்ளது. தொல்காப்பியத்துக்கும் இதற்கும் வேறு பாடுகள் பல உள்ளன.

**திவாகரமும் பிங்கலமும் :**

நிகண்டுகளில் மிகப் பழமையானவை இவை இரண்டு மாகும். ஆசிரியர் பெயரால் ஆகிய பெயரை உடையனவாக இவை இரண்டும் கருதப்படும். திவாகரன் பயந்த பிங்கலன் மகன் பிங்கலர் எனக் கூறும். சூடாமணி நிகண்டின் பாயிரத்தால் திவாகரத்தை இயற்றியவர் திவாகரரே சேந்த னல்லன் எனத் தெரிகின்றது. சேந்தன் இந்த நூலின் பாட்டுடைத்தலைவன். அவனும் சூளாமணி காவியத்திற்குக் காரணமான சேந்தனும் ஒருவனே ஆகலாம்.

சேந்தன் என்பவன் அவ்வையால் புகழப்பட்ட காவிரி நாட்டவன் (சோழன்), பௌத்தமதத்தினன் என எல்லாம் திவாகரப் பாடல்கள் கூறும். ஓர் அவ்வை ஏழாம் நூற்ருண் டில் சேரமான்பெருமான் காலத்தில் இருந்ததாகத் தெரி கின்றது. அவர் திருவள்ளுவமாலைக் கடைசியில் பாடியவ ராக இருக்கலாம்.

சாளுக்கிய வேந்தரைத் திவாகரம் குறிப்பிடுகின்றது. அவர்கள் சிறந்திருந்த காலம் ஏழாம் நூற்றுண்டாகலாம் என வரலாற்றினர் கூறுவர். பல்லவரைப் பிங்கலர் குறிப்பிடுகின்றுர். எனவே, அவர் சிறிது பிந்தியவராகலாம்.

சூடாமணி நிகண்டு 9ஆம் நூற்றுண்டில் இயன்றது. அதற்கும் இந்நூல்களுக்கும் வேறுபாடும் வளர்ச்சியும் பெரிதாக இருப்பதால் இவை ஓரிரு நூற்றுண்டுகள் முன் இயன்றன எனல் பொருத்தமே ஆகலாம்.

பழமையான வழக்குகளைஎல்லாம்அறிந்துகொள்ளுதற்கு இந்நிகண்டுகள் உதவும். தேவர், மக்கள், மரம், விலங்கு, இடம் ஆகிய பிரிவுகளில் இந்நூற்கள் சொற்களை விளக்குகின்றன. திவாகரம் 12 பகுதிகளில் 2256 சூத்திரங்களையும், பிங்கலந்தை 10 பகுதிகளில் 4124 சூத்திரங்களையும் உடையது. நிகண்டு எனில் தொகுப்பு எனப் பொருளாகும். தமிழ் கற்போர் இவற்றையே அளவை நூல்களாகக் கற்கும் பழக்கமுற்றிருந்தனர். பிற்கால நிகண்டுகட்கு எல்லாம் வழிகாட்டியாயின இவை எனலாம்.

## 8-ஆம் நூற்றுண்டு.

இந்நூற்றுண்டின் இலக்கியங்கள் முழுவதும் சமயத்தைச் சார்ந்தனவாகவே உள்ளன. வைணவ ஆழ்வார்களில் பலர் இக்காலத்தில் இலங்கியுள்ளனர். பல்லவர்களும் பாண்டியர்களும் இக்காலப் பாடல்களுக்குப் பேருக்கமூட்டியுள்ளனர்.

II நந்திவர்மனும் பராந்தகநெடுஞ்சடையனும் பரம வைணவர்கள். எனவே வைணவத்தின் உச்சநிலை இந்நூற்றுண்டில் எட்டப்பெற்றுள்ளது. ஜைன பௌத்தங்கள் அதே சமயத்துமங்கிய நிலையுற்றுள்ளன.

ஆண்டாள், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியார் முதலியோர் புதிய பாவகைகளைக் கடவுட் பாடல்களில் தொடங்கியுள்ளனர்.

குலசேகராழ்வார்: கொல்லியிற் பிறந்த இவர் திருவரங்கம் திருப்பதி முதலிய தலங்களுக்குச் சென்று பிரபந்தம் பாடி வழிபட்டவர் கடைசியில் மன்னுர் கோயிலில் இருந்து திருநாட்டுக்கெழுந்தருளினுர்.

குலசேகரர் தொண்டரடிப்பொடி என்ற தொடரை தம் பிரபந்தத்தில் ஆளுகிருர். அது தொண்டரடிப் பொடியாழ்வார் நினைவுடன் ஆளப்பட்டிருக்குமானுல் இவர் தொண்டரடிக்குப் பிற்பட்டவர். ஆண்டாளின் திருமணகாலத்தில் குலசேகரர் திருப்பாணுழ்வார் முதலோர் உடனிருந்தனர் என்ற திவ்யசூரிசரிதை மரபு உண்மையாகலாம். அவ்வாருயின் இவர் ஆண்டாள் பெரியாழ்வார் முதலியவர்களின் காலத்தவராவர்.

இவர் தில்லைச் திருச்சித்திரகூடத்தைப் பாடியுள்ளார். சித்திரகூடம் கி. பி. 750-ல் கட்டப்பட்டதெனவே அக் காலத்திற்குப் பின் இவர் வாழ்ந்திருக்கலாம் என்பர் பலர். எப்படியும் இவர் 8-ஆம் நூற்றுண்டுக்குரியவர் முற்குறித்த குருபரம்பரைப்படி இவர் ஒரு பராபவ, மாசி, சுக்லபட்சம், துவாதசி, புனர்பூசம், வெள்ளிக் கிழமையன்று பிறந்துள்ளார். இந்திய ஒப்பீட்டுப் பஞ் சாங்கப்படி இது கி. பி. 707 ஜனவரி 29 ஆகும். 105 பாடல்களடங்கிய பெருமாள் திருமொழியே இவர் பாடி யதாகும். முகுந்தமாலை யென ஒன்றும் இவர் பாடிய தாகக் கூறுவர். அது வடமொழியிலான தெனச் சில குருபரம்பரைகள் கூறும்.

திருப்பாணுழ்வார் : உறையூர்ப் பஞ்சமகுலத்தில் பிறந்த இவர் திருவரங்கம் கோயிலுக்குட்போகாமல் காவிரிக்கரையிலிருந்தே பெருமாளைப் பாராட்டிக் கொண்டிருந்தனர். அப்போதரங்கன் ஆணையால் உலோகசாரங்கர் என்ற அந்தணர் ஆழ்வாரைத்தோ ளில்சுமந்துபோய் கோயிலுள்விட்டனர். இவரும் 8ஆம் நூற்றுண்டில் குலசேகரர் காலத்தவரென மேலே கூறப் பட்டது. இவர் பாடியன அமலனுதிப்பிரான் என்ற 10 பாடல்களாகும். இவற்றின் நயமுணர்ந்து வேதாந்த தேசிகரே இவற்றிற்கோர் உரையெழுதினுர். குருபரம் பரைப்படி இவர் துன்மதி கார்த்திகை, கிருஷ்ணபட் சம், திவிதியை, ரோகிணி புதன் (கி.பி. 781 நவம்பர் 7) அன்று பிறந்தார்.

பெரியாழ்வார் : பல்லாண்டு பாடியதாலோ ஆழ் வார்களிற் பெரியாழ்வார் ஆனுர். விஷ்ணு சித்தராகிய

அவர் ஸ்ரீவில்லிபுத்தூரினர். நந்தவனம் வைத்துப் பெருமாளுக்கு மாலைகட்டிச்சாத்தும் பணியினைச்செய்து வந்த இவர் ஆண்டாளை மகளாகப் பெற்றார். பின் பாண்டியன் கட்டிய பொற்சிலையையறுத்து வைண வத்தை நிலைநாட்டி ஆண்டாளை அரங்கர்க்கு மண முடித்துக் கொடுத்தபின் அழகர்கோயிலில் திருநாட் டுக்கெழுந்தருளினார். குருபரம்பரை இவரைச் சீவல் லப பாண்டியன் காலத்தவரென்பது பொருத்தமே யாகும். சீவல்லபன் 9-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி யில் இருந்தவன். இவர் பாராட்டும் பாண்டியன் நெடுமாறன் அறிஞர் கருதுவதுபோலப் பராந்தக நெடுஞ்சடையனானால் இவர் 8-ஆம் நூற்றாண்டிலும் இருந்தவராவர். குருபரம்பரைப்படி இவர் குரோதன, ஆனி, சுக்லபட்சம், ஏகாதசி, சுவாதி ஞாயிறு (27-மே 725) அன்று பிறந்தார். இவர் திவ்யப்பிரபந்தத் தில் பாடியவை திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியுமாகிய 473 பாடல்களாகும். இறைவ னிடம் இரக்கமும் அன்பும் பெருகுதற்குரிய பாடல்கள் பிற்காலத்தே பல புதிய பிரபந்தங்களுக்கு வழி காட் டியவென்னலாம்.

ஆண்டாள் : நந்தவனத் துளசிச்செடியின் கீழே தோன்றிப் பெரியாழ்வாரால் வளர்க்கப்பெற்ற நாயகப் பெண்பிள்ளை இச்செல்வியாவார். இவரும் சீவல்ல பன் காலத்திருந்ததாகப் பரம்பரைகூறும். குரு பரம் பரைப்படி இவர் நள, ஆடி, சுக்லபட்சம், சதுர்த்தி, பூரம், செவ்வாய் (25-6-776 கி.பி.) அன்று பிறந்த வர். இவருடைய திருப்பாவை முப்பதும் நாச்சியார் திருமொழி 143ம் திருக்கோவையார் போல அருளா

ளர்கள் பாடிய அகத்துறைக் கனிகள் என்னலாம். இன்பச்சுவையும் இறைச்சுவையும் சொட்டச்சொட்டப் பாடிய கவிகள் இவருடையவாகும். திருவெம்பாவைக் கீடானவை திருப்பாவைப் பாடல்கள். ஆண்டாள் ஆண்டுதோறும் நினைக்கப்படுபவராக ஆய்விட்டார் இப்பாடல்களால்.

திருமங்கையாழ்வார் : அரசபரம்பரையைச் சேர்ந்த ஆழ்வார்களுள் திருமங்கையாரும் ஒருவர். திருமங்கையென்ற ஊரினராகிய இவர் நீலன் என்னும் பெயர் உடையவர். திருவாலி நாட்டில் சோழன் பிரதிநிதியாயாண்டு கொண்டிருக்கையில் பகுதிப் பணம் கட்டமுடியாமல் காஞ்சிக்குச் சென்று ஆற்றிலிருந்து பொருளெடுத்தளித்தவர். பெருமாளையும் தேவியையுமே கொள்ளையடிக்கமுயன்று திருமால் அருளுணர்ச்சிப்பட்டவர். நாகைப் பொன்புத்த உருவத்தைக் கொண்டு திருவரங்கம் கோயிற்பணிகளை நிறைவேற்றியவர். 105 ஆண்டுகள் இருந்தவராகக் கூறப்படுமிவர் நாலு கவிப்பெருமாளென நற்பெயரும் தாங்கியவர்.

தம்பிரபந்தத்தில் வைரமேகன் என்பவனைப் பாடுகிருர் ஆழ்வார். பல்லவ நந்திவர்மனுக்கும் (775-825) இராட்டிரகூட தந்திதுர்கனுக்கும் வைரமேகன் என்ற சிறப்புப் பெயருண்டு. பெரியவாச்சான் பிள்ளையின் பேருரைப்படி இவன் பல்லவனுகவே காணப்படுகிருன். இவர் நம்மாழ்வாருக்குப் பின்பும் வாழ்ந்து அவர்தம் உருவத்தை வணங்கிக் கொண்டிருந்தவர். குருபரம்பரைப்படி இவர் நள, கார்த்

திகை, கார்த்திகை நட்சத்திரம், பௌர்ணமி, வியாழன் (கி. பி. 31-அக்டோபர்-776) அன்று பிறந்தவர் எனத்தெரிகின்றது. பெரிய திருமொழி (1084 பாடல்கள்) திருக்குறுந்தாண்டகம் (20) நெடுந்தாண்டகம் (30) திருவெழுகூற்றிருக்கை (1) திருமடல்கள் (118) ஆகிய ஆறு பிரபந்தங்களுக்கிவர் ஆசிரியர். மாறன் வகுத்த தமிழ்மறைக்கு மங்கையர் கூறிய ஆறங்கங்கள் இவையாம். எளிய சொற்களாலாய நாட்டுப் பாடல் வகைகளை இந்நூற்றாண்டிலக்கியங்களில் காணலாம்.

தொண்டரடிப்பொடியாழ்வார்: திருமணங்குடியினராகிய இவ்வாழ்வார் பெருமாளுக்குப் பூமாலைப் பணி செய்துகொண்டு துறவியாகவிருக்கையில் தேவதேவி என்பவள் நட்பால் காதல்வாழ்வினைக் கைக்கொண்டார். திருமங்கை மன்னன் திருவரங்க மதில் கட்டியபோது இவர்தம் குடிசை குறுக்கிட அதனை ஆழ்வார் இருப்பிடமென மதிலை ஒதுக்குக் கட்டியதாகவும் அதுகண்டு தொண்டரடிபொடியாழ்வார் உவந்ததாகவும் பரம்பரை. இவரும் 105 ஆண்டுகள் வாழ்ந்தாரென்பர். குருபரம்பரைப்படி இவர் பிரபவ, மார்கழி, கிருஷ்ணபட்சம், சதுர்த்தசி கேட்டை, செவ்வாய் (கி. பி. 16-12-727) அன்று பிறந்துள்ளார்.

திருப்பள்ளி யெழுச்சியும் (10 பாடல்கள்) திருமாலையும் (45) இவருடைய பிரபந்தங்கள் மாணிக்கவாசகரின் திருப்பள்ளியெழுச்சியுடனேயே இதனை இணைத்துப் படிக்கவேண்டும். பூமாலை மணங்கண்ட இவர் (திருமாலை) கொண்டு திருமாலைப் பாமாலையால் வழிபட்டார்.

## 9-ஆம் நூற்றுண்டு

சைவ வைணவ அடியார்களுள் தத்துவஞ்சிறந்த மாணிக்கவாசகரும் நம்மாழ்வாரும் மற்றும் நந்திக் கலம்பக ஆசிரியரும் இந்நூற்றுண்டில் இலங்கினர். பாண்டியர்களும் பல்லவர்களும் இக்காலப் புலமைக் காக்கம் அளித்துள்ளனர். இந்நூற்றுண்டின் பிற்பகுதியில் சோழன் விசயாலயன் தஞ்சையில் பிற்காலச் சோழப்பேரரசுக்கு அடியிட்டான்.

இராட்டிர கூடர்களும் நல்லிலக்கியக் காவலராக இருந்து மண்டலபுருடர் முதலியோருக்காதாரமளித்துள்ளார். கலம்பகத்துடன் பாரதவெண்பாவும் இக்காலத்து நந்திவர்மன் பேரிலேயே யாக்கப் பெற்றது.

நம்மாழ்வார் : ஆழ்வார் பன்னிருவருள் ஆசாரியரெனப் பாராட்டப் படுபவர். திருவாய்மொழியாகிய தமிழ் மறையால் இன்கவிபாடும் பரமகவிகள். திருநெல்வேலித் திருக்குருகூரிற் பிறந்தவர். இளமையிலேயே யோகியாய்ப் புளியமரத்தடியில் அமர்ந்து சடகோபன் என்னும் பெயர்பெற்றவர். மதுரகவியாழ்வாருக்காக வேதங்களைத் தமிழால் நான்கு பிரபந்தங்களாக அருளியவர். இவர் 35 ஆண்டுகள் வாழ்ந்தனரென்றும் 50 ஆண்டுகள் வாழ்ந்தனரென்றும் இரு கருத்துகள் உள்ளன.

இவர் சீவரமங்கலத்தைப் பாடியுள்ளார். வேலங்குடி என்ற ஊரைச் சீவரமங்கலமென மாற்றி ஓர் அந்தணனுக்குக் கொடையாக அளித்ததுபற்றிய பாண்டிய பராந்தக நெடுஞ்சடையனின் 8-ஆம் நூற்றுண்டைய

கல்வெட்டே இவர்காலத்திற்குப் போதிய சான்ருகும். வரகுண மங்கலத்தையும் இவர் பாடியுள்ளார். அது 9-ஆம் நூற்ருண்டில் பாண்டியன் வரகுணன் பேரால் அமைந்த தென்பதே பொருத்தம். எனவே இவர் 9-ஆம் நூற்ருண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவராவர். குருபரம்பரைப்படி இவர் வெகுதானிய, வைகாசி, சுக்லபட்சம், பௌர்ணமி, விசாகம், கடகம் வெள்ளி (4-5-798 கி. பி) அன்று பிறந்தவராவார்.

இவர் பிரபந்தங்களில் திருவிருத்தம் 100 பாடல் களையும் திருவாசிரியம் 7 பாடல்களையும் திருவாய் மொழி 1102 பாடல்களையும் பெரிய திருவந்தாதி 87 பாடல்களையும் உடையது. மாணிக்கவாசகரின் பாடல்களும் நம்மாழ்வாரின் பாடல்களும் காலத் தாலும் வேறு தத்துவங்களாலும் ஒப்புமையுடையன. இவருடைய பாடல்களில் திருவாய் மொழிக்கு ஏற் பட்ட பேருரைகள் போல வேறு எந்நூலுக்கும் இயன்ற தில்லை. ஆசாரிய இருதயம் என்ற தனித்தத்துவநூலே திருவாய்மொழியின் பெருமையைப் பாராட்ட எழுந்த தாகும்.

மதுரகவியாழ்வார்: நம்மாழ்வாரின் நன்மாணுக்க ராவார். 11 பாடல்களால் ஆகிய கண்ணினுள் சிறுத் தாம்பு என்பது நம்மாழ்வார் மீது இவர் பாடியதாகும். எம்பெருமானையும் பாடாமல் ஆசாரியாரையே பாடிய வர் இவர். நம்மாழ்வாருக்குப் பின்பும் இவர் இலங்கி யுள்ளார். குருபரம்பரைப்படி இவர் ஈசுவர, சித்திரை, சித்திரை நட்சத்திரம், சுக்லபட்சம், சதுர்த்தசி (கி. பி. 14 ஏப்ரல் 797) அன்று பிறந்தவர்.

மாணிக்கவாசகர்: தேனினும் இனிக்கும் திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் இயற்றிய மணிவாசகத்தையுடையவர் மாணிக்கவாசகர் சைவக் குரவர் நால்வருள் நான்காமவர். இவர் பாடல்கள் எட்டாம் திருமுறையுள் வைக்கப்பட்டுள்ளன.

திருவாதவூரில் தோன்றியவர் மாணிக்கவாசகர். இளமையிலேயே எல்லாக்கலைகளையும் கற்றுப் பாண்டியனிடம் அமைச்சராகிப் பின் அவன் தந்த பொருளைப் பெருந்துறைக் கோயிற்பணிக்குச் செலவிட்டுப் பெருந்துறைப் பெருமானே குருவாகவர அவனிடமே ஞான போதத்தைக் கேட்டனர். பின் பாண்டியன் பொருள் கேட்டுப் பலவாருகத் துன்புறுத்த நரியைப் பரியாக்கியும், வையையில் நீரைப் பெருக்கியும் இவருக்காக இறைவன் பல அருட்செயல்களை நிகழ்த்தினன். பின் பாண்டிநாட்டிலிருந்து தில்லைசென்று புத்தரை வாதில் வென்று திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் இயற்றியருளினர். இரண்டையும் சிற்றம்பலத்திறைவனே எழுதியதாகப் பரம்பரை கூறும்.

திருக்கோவையில் இவர் வரகுணனைக் குறிக்கிருர். வரலாற்றுப்படி வரகுணன் 9ஆம் நூற்ருண்டில் வாழ்ந்தவன். 11ஆம் திருமுறையில் பட்டினத்தார் மூவருக்குப் பின்பே இவர் பெயரைக் குறித்துப் பாராட்டுகிருர். இவர் மூவருக்கு முந்தியவராக இருப்பின் ஒன்பதாம் திருமுறை ஆசிரியர்கள் மூவரைக் குறிப்பிடுகையில் இவர் பெயரை முதலில் குறித்திருப்பர். அவர்கள் அவ்வாறு செய்யவில்லை.

திருவாசகம் 662 பாடல்களையும், திருக்கோவை யார் 400 பாடல்களையும் உடையது. திருக்கோவை இவராலேயே பாடப்பட்டதென்பதற்கு நம்பியாண்டா ரின் வருவாசகத்தினின் என்ற பாடலுள் திருவாதவூர் சிவபாத்தியன் செய்பொருளார் தரு திருக்கோவை என்ற அடிகளே சான்றாகும்.

வாதவூரர் கனிவில்; திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார் என்பன பழமொழிகள். திருக்கோவை கோவைகளிலேயே கடவுட்டன்மை உடையதாகும்.

நந்திக்கலம்பகம்: கலம்பகத்துள் முதலாய இது மூன்றும் நந்திவர்மன்மீது ஒன்பதாம் நூற்றாண்டில் பாடப்பட்டது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. தெள்ளாற்று வென்ற நந்தி என இந்நூல் குறிப்பது இந்நந்தியையே ஆகும். பல்லவரைப்பற்றிய ஒரு நல்ல வரலாற்று நூலாக இதனைக் கொள்ளலாம். பாடல்கள் மிக்க எளிமையும் இனிமையும் உடையவை. இதன் சுவையில் தன் உயிரையும் பறிகொடுத்தான் நந்தி என்பர். நூறாவது பாடலைச் சிதையடுக்கி அதன் மேலிருந்து கேட்கவேண்டும் என்பது திட்டம். அதன் படியே கேட்டு உயிர்விட்டானும் நந்தி. வானுறு மதியை அடைந்த துன்வதனம் வையகமடைந்த துன் கீர்த்தி கானுறுபுலியை அடைந்த துன் வீரம் கற்பகம் அடைந்த உன் கைகள், என்பது அப்பாடல். நாட்டுப் பாடல்கள் வகையைச் சேர்ந்தது எனலாம் இப்பிரபந்தவகையை. பலவகைப்பட்ட பூக்களால் தொகுக்கப்பட்ட மாலைபோல் பலவகைப் பா வகை களால் ஆவது கலம்பகம்.

பாரத வெண்பா: இதுவும் பெருந்தேவனுர் என்றதோர் புலவரால் வெண்பாவில் ஆக்கப்பெற்றது இடையிடை உரையிட்டுச் செய்தது. தெள்ளாற்று நந்தியையே இதுவும் பாடும். பல்லவர்கள் பாரதப் பரவலுக்கு நாட்டில் நல்ல மான்யங்களைத் தந்துள்ளனர். வில்லிபாரதத்தின்முன் இவை எல்லாம் நிற்க முடியவில்லைபோலும்.

சூடாமணிநிகண்டு: புகழும் பயனும் படைத்த இந்நிகண்டு மண்டலபுருடரால் இயற்றப்பெற்றது. அவர் ஒரு ஜைனர். குணபத்ரரின் மாணவர்; திருநறுங்குன்றை அல்லது (பெருமண்டூர்) இவரது ஊர் என்பர்.

கிருஷ்ணராயன் என்பானது கொடையை இந்நூல் மிகவாகப் பாராட்டுகின்றது. இந்த ராயன் 16ம் நூற்றுண்டில் வீற்றிருந்த கிருஷ்ணதேவராயன் என்ற விசயநகரத்து அரசன் என்பர். இவர் ஆசிரியர் குணபத்ரர் என்பவர் இராட்டிரகூடகிருஷ்ணன் இரண்டாம் காலத்தேதான் வாழ்ந்தவர் ஆதலால் இவ்வாசிரியர் காலமும் அதுவேயாகும். இதற்குக் கங்கர்வரலாறு எழுதிய திரு. கிருஷ்ணராவ் அவர்களும் பேராதரவு தருகிருர்கள்.

விருத்தப்பாவில் இயன்ற இந்நிகண்டு முன்னைய திவாகர பிங்கல நிகண்டுகளிலும் விரிவும்பயனும் உடையது. பிற்கால நிகண்டுகட்கு எல்லாம் பெருந்துணையாயது. 1196 பாடல்களில் 12 பகுதிகளையுடையது. திருப்புகழ்ப்புராணம் என்பதோர் புராணத்

திற்கும் இவர் ஆசிரியர் என்கிறது நூலின் பாயிரம். அருகதேவனின் புராணம் ஆகலாம் இது என்பர் அறிஞர்.

## 10, 11ஆம் நூற்றுண்டுகள்

சைவ வைணவ இலக்கியங்களைத் தொகுத்த நூற்றுண்டுகள் என இவற்றைக் கூறலாம். ஒன்பதாம் திருமுறை ஆசிரியர்கள் பலர் இக்காலத்தே இலங்கியுள்ளனர். நாதமுனிகளும் நம்பியாண்டாரும் இப் பணிகளைச் செய்துள்ளனர்.

வீரசோழியர் யாப்பருங்காலம் முதலிய இலக்கணங்கள் இக்காலத்தே தோன்றியுள்ளன. பெரிதும் இக்காலப் புலவர்கள் இருநூற்றுண்டுகளிலும் வாழ்ந்து இருப்பதாலும் அன்றி, இன்ன நூற்றுண்டினர் எனக் குறிப்பிட்டுச் சொல்ல இயலாமையாலும் இவ்விரு நூற்றுண்டுகளையும் ஒன்ருக்கியிருக்கிறேம்.

சோழப்பேரரசில் தோன்றிய சீரிய அரசர்கள் நாட்டில் ஒரு நல்லமைதியை ஏற்படுத்தினர். பெரும் போர்களால் அமைதி அடிக்கடிக் குலைந்தாலும் முடிவில் அமைதி ஏற்பட்டுள்ளது. உரைநூல்களும் சமயதத்துவநூல்களும் தோன்றற்குரிய முன்னேற்பாடு

கள் நிகழ்ந்துள்ளன எனலாம். சமயப்பொறை இக்காலத்தில் பிற்பகுதியில் ஏற்படத் தொடங்கிவிட்டது.

ஜைனர்களுடைய தூண்டுதலாலோ வைணவர்கள் மணிப்பிரவாளத்தில் ஒரு தனி நடையைத் தோற்றுவித்துப் பிரபந்தப் பேருரைகளையும் சமய நூல்களையும் எழுதத் தொடங்கினர்.

குணபத்ராச்சாரியார் பட்டினத்தார் முதலியோர் இக்காலத்தே இலங்கியுள்ளனர். கந்தபுராணம் இக்காலத்தே எழுதப்பட்டது. ஒரு குறிக்கத்தக்க நிகழ்ச்சியாகும்.

ஒன்பதாம் திருமுறை ஆசிரியர்கள்: என்பது அடியார்களால் ஆக்கப்பட்ட சைவக்கடவுட்பாடல்களே ஒன்பதாம் திருமுறையாக்கப்பட்டது. சேந்தனர், திருமாளிகைத்தேவர், கருவூர்த்தேவர், கண்டராதித்தர், பூந்துருத்திக்காடவநம்பி, வேணாட்டடிகள், திருவாலியமுதர், புருடோத்தமநம்பி, சேதிராயர்என்போரே அவர்கள்.

இவர்களில் கருவூர்த்தேவர் இராசராசேச்சுரம் கங்கைகொண்டசோழேச்சுரம் ஆகியவற்றைப் பாடி இருத்தலால் அக்கோயில்களைக் கட்டிய இராசராசன் இராசேந்திரன் ஆகியோர்காலத்தும் இருந்தவராவர். இராசராசேச்சுரம் கட்டும்பொழுது கருவூர்த்தேவர் இருந்ததுபற்றிய ஒரு கதை உள்ளது.

முதல் இராசராசன் கல்வெட்டு ஒன்றால் செயந்தன் திருமாளிகைத்தேவர் என்பவர் திருக்கோயிலுக்கு ஒரு

நந்தாவிளக்கு வைத்ததாகத் தெரிகிறது. இது கொண்டு சேந்தனுரையும் திருமாளிகைத்தேவரையும் ஒருவரே என்போர் உளர். இவ்வடியார் பெயர்களைத் தரும் பாடல் ஒன்று இருவரையும் வேறு வேருகவே கூறுகிறது. மற்றும் திருமுறையில் பாடல்களும் தனியாகவே விவரிக்கப்பட்டுள்ளன. தம் பாடல்களில் சேந்தனுர் தம்பெயரைக் குறிப்பிடுகிருர். திருமாளிகைத் தேவர் பாடல்களில் ஒரு குறிப்பையும் காணவில்லை. மற்றும் இருவரைப்பற்றிய வரலாற்றுக் கதைகளும் வேறு வேருகவேயுள்ளன. திருமாளிகைத்தேவர் கருவூர்த்தேவர்காலத்து இருந்ததாகக் கதையுள்ளது. சேந்தனுர் பல்லாண்டு பாட அவருடன் திருமாளிகையும் சேர்ந்து தில்லையில் அசையாத தேரை ஓடச்செய்தனர் என்றும் மரபுள்ளது. சேந்தனுர் பட்டினத்தடிகளிடம் அமைச்சராய் இருந்தபின் விலகித் தில்லையில் விறகு விற்று இறைவனை வழிபட்டுவர ஓர் நாள் இவர் அளித்த கூழையே இறைவன் உண்டு மகிழ்ந்ததாக ஒரு மரபு கூறப்படுகின்றது. இந்நிகழ்ச்சி நம்பியாண்டார் முதலிய பலராலும் பாராட்டப்பெறுகின்றது.

கண்டாராதித்தர் முதற்பராந்தகனின் புதல்வர் (956-57) ஈழத்தை வென்று பொன்னம்பலமாகத் தில்லையம்பலத்தை ஆக்கியவராகக் கூறப்படும் கண்டராதித்தர் இவரே. முதல் இராசராசன் கல்வெட்டில் பூந்துருத்திக்காடவநம்பி, நம்பிகாடவநம்பி ஆகிய ஆத்ரேயகோத்திரவராகக் குறிக்கப்படுவதாக அறிஞர் நம்புவர்: தில்லை, திருவாரூர் இறைவனுக்குத் திருவிசைப்பா பாடிய இவர் ஒரு அர்ச்சகரென்பர்.

திருவாலியமுதர் திருமயிலையைச் சேர்ந்தவர். வேணாட்டடிகள் திருவாங்கூர் பகுதியினர். சோழ பரம்பரையினராகிய சேதியர்கோன் இவர் எனக் கூறுவர்.

சேந்தனார் பாடிய திருப்பல்லாண்டு 13 பாடல்களும் மற்ற என்பர் பாடிய திருவிசைப்பாக்கள் 301 பாடல்களும் ஆக இத்திருமுறை 314 பாடல்களைக் கொண்டது. பாடல்கள் உள்ளத்தை உருக்குந் தன்மைக்குப் பேர்பெற்றன. நாள்தோறும் பாராயணப் பாடல்களாக இவை சைவரால் கொள்ளப்படுவன ஆகும்.

பட்டினத்தார் : பதினோராந்திருமுறையில் பாடிய பட்டினத்தடிகள் சேந்தனார்காலத்தில் அவரை அமைச்சராகக் கொண்டு விளங்கியவர் என்பது பொருந்தலாம். காவிரிப்பூம்பட்டினமே பட்டினம் எனப்படுவது. திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் வரகுணனைப் பாடுவதால் இவர் வரகுணனது ஒன்பதாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவர். நம்பியாண்டார் இவர் பாடல்களைத் திருமுறையுள் தொகுத்ததால் அவரது பதினோராம் நூற்றாண்டுக்கு முந்தியவர். பட்டினத்தார் துறவுபற்றிய கதைகள் எல்லாம் இவரைப் பற்றியவேயாகவேண்டும். இவர் பிற்காலத்தில் அருணகிரியாரின் தந்தையார் எனப்படும் ஒரு பட்டினத்தாரின் வேறானவர். கோயில் இரட்டைமணிமாலை (40 பாடல்கள்) திருக்கழுமல மும்மணிக்கோவை (12 பாடல்கள்) திருவிடைமருதூர் மும்மணிக்கோவை (30 பாடல்கள்) திருவேகம்பர் திருவந்தாதி (100 பாடல்

கள்) திருவொற்றியூர் ஒருபாவொருபஃது ஆகியவையே இவர் பாடியனவாகும். பாடல்கள் நல்ல சொல்லமைப்பும் எளிமையும் பெருமிதமும் உடையவை.

*சிவவாக்கியர் :* சித்தர் வரிசையில் சிறந்த ஒருவராக வைத்து எண்ணப்படுபவர். சந்தப்பாடல்களைப் பாடியுள்ளார். பட்டினத்தார் தம் பாடல்களில் இவரைச் சித்தமார் சிவவாக்கியர் எனப்பாராட்டுகிருர். மாணிக்க வாசகருக்குப்பின் இவரைக் குறிப்பிடுகிருர். சித்தர்கள் உருவ வணக்கத்தையும் சமயச்சடங்குகளையும் வெறுப்பவர்கள். உலகவழக்கியல் சொற்களுடன் எளிய நடையுடைய பாடல்களால் சாதாரண மக்களையும் கவர்ந்தவர்கள் இவர்கள். இவரும் சித்தருடைய மரபுக்கேற்பச் சமயப் பொதுமையுடையராய் இராமர் முதலோரைப் போற்றிப் பாடுகிருர்.

*சில காவியங்கள் :* குண்டலகேசி, வளையாபதி ஆகிய பெருங்காவியங்களையும் சூளாமணி தவிர்த்த மற்ற சிறு காப்பியங்களையும் பத்தாம் நூற்றுண்டில் வைப்போர் பலர். அவர்கள் சிந்தாமணியையும் பத்தாம் நூற்றுண்டில் வைப்பவர்கள். சிந்தாமணி ஏழாம் நூற்றுண்டில் வைக்கப்படுவது. குண்டலகேசியும் நீலகேசியும் ஏழாம் நூற்றுண்டினவாகத் திரு மு. சீனிவாச பிள்ளை போன்ருேர் கூறுவது பொருத்தமாகலாம். பெருங்காப்பியங்கள் பெரிதும் ஒருகாலத்தவே ஆகவேண்டும். நீலகேசி குண்டலகேசித் தொடர்புடையதாகலின் அதுவும் ஒருகாலத்ததாகவேண்டும்.

வளையாபதியும், யசோதா காவியம், நாககுமார காவியம், உதயண சரிதை முதலிய சிறு காவியங்களும் இக்காலத்தன எனப் பலர் வாதிப்பர். இவை மிகத் தாழ்ந்த தரமுடையனவாகலின் இவற்றைக் காவிய வரிசையில் வைத்து எண்ணலாகாது என்பர் அறிஞர். வளையாபதியின் பாடல்கள் பலபுறத்திரட்டு முதலாம் தொகுதிகளிலேயே காணப்படுகின்றன.

**அமிதசாகரர் :** யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை ஆகிய இரு பெரும் இலக்கண நூல்களின் ஜைன ஆசிரியர். கி. பி. 1116 முதற்குலோத்துங்கன் கல்வெட்டு ஒன்று கந்தன் மாதவன் என்பவன் அமித சாகரரை செயங்கொண்டசோழமண்டலத்து இருத்திக் காரிகை எழுதுவித்த மன்னவன்வழியினன் என்கின்றது. இதிலிருந்து முதல் இராசராசன் காலத்தவர் இவ்வாசிரியர் என்பர் அறிஞர். செயங்கொண்டசோழ மண்டலம் அச்சோழன் காலத்தேதான் அமைக்கப் பட்டது. 10ஆம் நூற்றுண்டில் குணசாகரர் என்ற ஜைன ஆசிரியர் விளங்கியமை கல்வெட்டுக்களால் தெரிகின்றது. அவர் மாணவரே அமிதசாகர் என ஆராய்ச்சியாளர் கூறுவர்.

ஆனால் இவ்விரு இலக்கணங்களுக்கும் குணசாகரர் என்பவர் உரையெழுதியிருப்பது கொண்டு அவரை அமிதசாகரரின் ஆசிரியரென்பர். உரை 12ஆம் நூற் றுண்டு ஔவை காலத்தில் எழுதப்பட்டிருக்கும் என்ற குறிப்பு கிடைப்பதால் இக்கருத்து பொருந்தாது.

யாப்பருங்கலம் யாப்பைப் பற்றிய விரிவான அறி வுக்கும் ஆராய்ச்சிக்கும் பயன்படும். காரிகை தொல்

காப்பியத்திற்கடுத்துக் கற்போர்க்கு மிகவும் பயன் படுவது: கட்டளைக்கலித்துறையால் இயன்ற காரிகை மூன்றியல்களை யுடையது. யாப்பருங்கலம் 96 சூத் திரங்களையும் மூன்றியல்களையுமுடையது. இக் காலத்தே மேற்கோளாகக் கொள்ளப்படுவது காரிகை தான்.

*வீரசோழியம்:* புத்தமித்திரர் என்ற பௌத்தரால் எழுதப்பெற்றது. இவ்விலக்கண ஆசிரியர் தஞ்சைப் பொன்பற்றி யென்ற ஊரைச்சார்ந்தவர். 11ஆம் நூற் ருண்டில் ஆண்ட வீரசோழன் என்பவன் பெயரால் இந்நூல் எழுதப் பெற்றுள்ளது.

வடமொழி இலக்கணங்களைத் தழுவி இவர் இந் நூலை யியற்றினுர். ஐந்திலக்கணங்களையும் இதில் எழுதியிருப்பதாக ஆசிரியர் கூறுகிருர். திகடசக்கர என்பதில் ழ - த இரண்டும் புணர்கையில் ‘ட’ ஆகும் என்பதற்குரிய இலக்கணம் இந்நூலிற்ருன் கிடைக் கிறது. வடமொழியையே பின்பற்றியதால் மக்க ளிடை இது செல்வாக்குப் பெருமற்போயிற்றென்ன லாம்.

*கந்தபுராணம்:* காஞ்சி ஆதிசைவக் குடியிற் ருேன்றிய கச்சியப்பசிவரச்சாரியார் என்ற அருட்புலவ ரால் இயன்றது கந்தபுராணம். குமரகோட்டத்தில் அரங்கேறிய இந்நூல் திகடசக்கர என முருகனுலேயே அடியெடுத்துக் கொடுக்கப்பட்டது. எழுநூற்றின் மேலாய் இலகு கந்தபுராணம் அரங்கேறியது என்ற பாடலைக் கி.பி. 8 ஆம் நூற்றுண்டிற்காக்குவோர் சிலர்.

7-8 நூற்றுண்டுகளில் இத்தகைய பெரும் புராணங்கள் தோன்றுவதற்குரிய காரணங்கள் இல்லை. அறிஞர்கள் இதனைத் திகடசக்கர என்ற பாடலிலக் கணத்தையுடைய வீரசோழியத்தில் 11ஆம் நூற்றுண்டுக்குரியதாக்குவர். எழுநூறு என்பது ஆயிரத்தின்மேல் 100 எனக் கொண்டால் 1178ல் இப்புராணம் இயன்றிருக்கவேண்டும். இவ்வாறும் இதனைப் பொருள் கொள்வதுண்டு. பதினைந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்த ஞானவரோதயன் என்பவர்தம் உபதேச காண்டத்தில் கச்சியப்பரைப் போற்றுவதால் இதனைப் பின் நூற்றுண்டுகளுக்குக் கொண்டுபோக இயலாது.

இதிகாச வகையில் இயன்ற இப்புராணம் 10346 விருத்தப்பாடல்களைக் கொண்டது. முருகவழிபாட்டைத் தமிழகத்தே முதன் முதலில் பரப்பிப் பதிவித்த புராணம் இதுவாகும். பதினோராம் நூற்றுண்டில் இஃது இயன்றிருந்தால் பெரிய புராணம், கம்பராமாயணம் முதலியவற்றிற்கெல்லாம் வழிகாட்டியாய் இருந்திருக்க வேண்டும். 12ஆம் நூற்றுண்டிலும் இயன்றிருக்க வழி உண்டு; தெளிவாகச் சொல்ல முடியவில்லை. இந்தப் புராணம் வடமொழி ஸ்காந்தத்தைப் பின்பற்றி எழுதப் பெற்றது எனத் தெரிகின்றது.

நாதமுனிகள் : நாதமுனிகளும் நம்பியாண்டாரும் வைணவ சைவக் கடவுட்பாடல்களைத் (பிரபந்த - தேவாரங்களை) தொகுத்தளித்ததன்மூலம் தமிழுக்கு அருந்தொண்டாற்றியவர்கள். இருவரும் ஒருகாலத்தவராகவும் கருதப்பெறுவர். இருவரும் தில்லைக்கடுத்த ஊர்களில் பிறந்தவர்கள்.

நாதமுனிகள் வீரநாராயணபுரத்தவர். வீரநாராயணன் என்பது முதல்பராந்தகன் பெயர். குருபரம்பரை நாதமுனிகள் கங்கைகொண்டசோழபுரத்திற்குச் சென்றதாகக் கூறும். முதல் இராசேந்திரன்காலத்தே கங்கைகொண்டசோழபுரம் அமைந்தது. எனவே, இவர் 10-11 நூற்ருண்டுகளில் விளங்கியவர். அன்பில் செப்பேடுகள் இரண்டாம் பராந்தகன் காலத்தது (950-965) ஸ்ரீநாதர் என்ற சான்ருேரைப்பற்றிக் கூறுகிறது. ஸ்ரீநாதரே நாதமுனிகள் என அறிஞர் கருதுவது பொருத்தமாகலாம். நாதமுனிகளின் பேரர் ஆளவந்தார் இராமானுசரைக் கண்டிருக்கிருர். மதுரகவிகளின் மாணவராகிய பராங்குசரை நாதமுனிகள் கண்டிருக்கிருர்.

சிலசில பாடல்களே அப்போது கிடைத்தமையால் பிரபந்தப் பாடல்கள் முழுவதையும் தேடித்தொகுத்து, அவற்றிற்கு இசையும் வகுத்தளித்தது நாதமுனிகளின் பணியாகும். பராங்குசரின் கருத்துப்படி நம்மாழ்வாரை நினைந்து உருகி வழிபட்டு அவர் அருளால் பிரபந்தங்களைக் கேட்டனரென்பது குருபரம்பரை. இசை வகுக்க உதவியவன் அங்கும் சோழவேந்தன்.

நம்பியாண்டார்: திருநாரையூரில் பிறந்தவர். அவ்வூர் பொல்லாப் பிள்ளையாரிடம் அனைத்துக் கலைகளையும் கற்றவர் என்பர். சோழனுடைய வேண்டுகோளுக்கு இணங்கிப் பிள்ளையாரின் திருவருளால் தேவாரங்கள் தில்லைக்கோயிலில் இருப்பது அறிந்து அவற்றை வெளிப்படுத்தியவர்.

திருமுறை கண்ட அரசன் சோழன் அபயன் இராசராச மன்னன் குலசேகரன் என்கிறது. அபயன் என்ற பெயர் முதல் குலோத்துங்கனுக்கே உரியது. மற்றும் திருமுறைகளில் பதினொன்றுவரை நம்பியாண்டாரே வகுத்தார் எனத் திருமுறைகண்ட புராணம் சொல்லுகிறது. உமாபதிசிவம் போன்ற சான்றோரின் சொற்களை வீணே மறுக்கவேண்டியதில்லை. 9ஆம் திருமுறை ஆசிரியர்கள் 11ஆம் நூற்றாண்டிலும் இலங்கியமையை முன்பு அறிந்தோம். எனவே, இவர் 11ஆம் நூற்றாண்டிலும், பின்பும் விளங்கியிருக்கலாம்.

மற்றும் திருமுறைகளைச் செப்பேடுகளில் பொறித்து வைத்தவன்முதற்குலோத்துங்கனின் படைத்தலைவன். திருமுறை என்ற பெயரும் இச்சோழன்காலத்தேதான்: கல்வெட்டுக்களில் காணப்படுகின்றது. சம்பந்தர் 1-3, அப்பர் 4-6, சுந்தரர் 7, மாணிக்கவாசகர் 8, சேந்தனார் முதலோர் 9, திருமூலர் 10, பட்டினத்தடிகள் நம்பியாண்டார் முதலோர் 11, சேக்கிழார் 12 என்ற திருமுறைகளின் ஆசிரியராவர். இவரைத் தமிழின் வியாசர் நம்பியாண்டார் என்பர். இவரது திருத்தொண்டர் திருவந்தாதியே சேக்கிழார் பெரிய புராணத்திற்கு உதவியது. திருத்தொண்டத் தொகை அந்தாதிக்கு அடிப்படையாயிற்று. சம்பந்தர், அப்பர் ஆகியோர்மீதும் இவர் 5 நூல்களைப் பாடினர். கோயில் திருப்பண்ணியர் விருத்தமும் இவருடைய பாடல்களே யாகும். புதைபொருள் ஆராய்ச்சியாளர் நாகரீகத்தைத் தோண்டி வெளிப்படுத்துவது போல இவர்கள் தமிழ் இலக்கிய நாகரீகத்தை வெளிப்படுத்தியவர்கள்.

இலக்கிய வரிகள் :

சம்பந்தர்

1. அறங்காட்டும் சமணரும் சாக்கியரும்
2. மடல்விண்ட முடத்தாழை மலர் நிழலைக்குருகென்று
   தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் புறமறையக்
   கடல்விண்ட கதிர்முத்தம் நகைகாட்டுங் காட்சியதே
3. உலகத்துக்கா மென்று சரண்புகுந்தார் தமைக் காக்கும் கருணையினன்
4. எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடி யார்க் கிங்கே யென்றருள் புரியும்
5. செந்தமிழ் பரப்புறு சீர்புகலி
6. கலையின் மேவுமனத்தோர் இரப்போர்க்குக் கரப்பிலார்
7. துஞ்சலில்லா நல்ல உலகம்
8. மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்
9. அறவன் அன்னியூர்
10. ஏழிசையின் பொருள் வாழும் வாழ்க்கை வினையின் புணர்ப்பாகி
11. இன்று நன்று நாளை நன்றென்று நின்ற இச்சை யால் பொன்றுகின்ற வாழ்க்கை
12. கவிகள் பாடுவ்வன, கண்குளிர்விப்பன, அடிகள் வேடங்களே
13. இன்னவுரு இன்ன !நிறம் என்றறிவதேலரிது நீதிபலவும் தன்னவுருவாமென மிகுந்தவன்
14. ஊனுடுண்டல் நன்றென ஊனுடுண்டல் தீதென, ஆனதொண்டர் அன்பினல் பேசுகின்ற தன்மையான்
15. துன்பமொடின்பம தெல்லாம் கடந்தவர்
16. நால்வர்க் கறம்பொருளின் பயனளித்த திங்கள் சேர் சடையார்

17. சினமலியறுபகை மிகுபொறி சிதைதரு வகைவளி
நிறுவிய மனனுணர்வொடு மலர்மிசையெழுதரு
பொருள் நியதமும் உணர்பவர்

18. தென்சொல் விஞ்சமர் வடசொல் திசைமொழி
யெழில் நரம்பெடுத்து

19. அறத்தாலுயிர் காவல் அமர்ந்தருளி

20. சந்துசேனனும் இந்துசேனனும்: தருமசேனனும்
(ஆலவாய்)

21. ஊனிலுயிர்ப்பை யொடுக்கி ஒண்சுடர்
ஞானவிளக்கினை யேற்றி நன்புலத் தேனைவழி
திறந்தேத்துவார்

22. கொல்வாரேனும் குணம்பல நன்மைகள்
இல்லாரேனும் இயம்பு வராயின்
எல்லாத் தீங்கையும் நீங்குவர்

23. அந்தண் மதுரைத் தொகை யாக்கினனும்

சுந்தரர்

1. மன்னே மறவாதே நினைக்கின்றேன்
மனத்துன்னை

2. பங்கம் பல பேசிடப் பாடும் தொண்டர் தமைப்
பற்றிக் கொண்டாண்டு விடவும் கில்லீர்

3. முடியால் உலகாண்ட மூவேந்தர்

4. அகரம் முதலின் எழுத்தாகி நின்ருய்

5. இன்பம் உண்டேல் துன்பம் உண்டு

6. இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ
டிசைந்த வாழ்வு

7. எண்ணியிருந்தும் கிடந்தும் நடந்தும்
அண்ணல் என நினைவார்

8. அடியவர்க் கடியனும் ஆனேன் (எழுமையும்
அடியேன்)

9. தங்களூர் தமிழான் என்று பாவிக்கவலல
எங்களூர்

10. நமணநந்தியும் தருமசேனனும்
11. பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தைப் புகலூர் பாடுமின் புலவீர்காள்
12. தம்மானை அறியாத சாதியார் உளரே
13. பொய்யே உன்னைப் புகழ்வார் புகழ்ந்தால் அதுவும் பொருளாக் கொள்வானே
14. கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டும்
15. வழுக்கிவீழினும் திருப்பெயரல்லால் மற்று நானறியேன்
16. அறிவினுல் மிக்க அறுவகைச் சமயம்
17. பொன்னு மெய்ப்பொருளுந் தருவானை
18. பட்டவார்த்தை படநின்ற பாராமே தவிரப் பணிப்பானை
19. ஓங்காரத்துருவாகி நின்ருனை
20. தருமனர் தமர் செக்கில் இடும்போது தடுத்தாட் கொள்வான்
21. தண்டமிழ்நூற் புலவாணர்க்கோர் அம்மானே
22. சுந்தரவேடங்களால் துரிசேசெயும் தொண்டன்

அப்பர்

1. நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் (4-1-2)
2. தன்னையடைந்தார் வினைதீர்ப்பதன்ரே தலையாயவர் தங்கடன் 4-1-4
3. தமிழோடிசைபாடல் மறந்தறியேன் 4-1-6
4. அன்பேயமையும் அதிகை 4-2-1
5. அஞ்சுவதியாதொன்றுமில்லை அஞ்சவருவது மில்லை 4-2-1
6. இடமால் தழுவிய பாகம் 4-2-4
7. அரங்கிடை நூலறிவாள ரறியப்படாததோர் கூத்தும் 4-2-6
8. காடொடு நாடு மலையும் கைதொழு தாடா வருவேன் 4-3-5

9. நரியைக் குதிரை செய்வானும் நரகரைத்தேவு செய்வானும் 4-4-2
10. சீர்தரு பாடலுள்ளானும் 4-4-6
11. பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப்புகழ் புரிந்தார்க் கருள் செய்யும் 4-4-10
12. அறமிருக்க மறம்விலைக்குக்கொண்டவாறே 4-5-3
13. கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை 4-7-1
14. எப்போதும் இனியானை 4-7-3
15. சொல்லானைச் சொல்லார்ந்த பொருளானை 4-7-7
16. தென்றிசைக் கெங்கைய தெனப்படும் கடிலம் 4-10-6
17. குலமிலராகிலும் குலத்துக் கேற்பதோர் நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே 4-11-6
18. பண்டரங்க வேடத்தான் பாட்டோவாப் பழனத்தான் 4-12-2
19. ஊரானே உலகானே உடலானே உயிரானே 4-13-6
20. முந்தித்தானே முளைத்தானை 4-15-11
21. தமக்கன்புபட்டவர் பாரமும் பூண்பர் 4-17-2
22. காலையுமாலையும் கைதொழுவார் மனம் ஆலயம் 4-17-8
23. எட்டுக்கொலாமவர் ஈறில் பெருங்குணம் 4-18-8
24. காண்டலே கருத்தாய் நினைத்திருந்தேன் 4-20-1
25. அறத்தையே புரிந்த மனத்தனாய் ஆர்வச் செற்றக் குரோத நீக்கி 4-20-8
26. துன்பநும்மைத் தொழாத நாட்கள் 4-21-9
27. உண்ணிலாப் புகுந்து நின்றங்குணர்வினுக் குணரக்கூறி 4-22-1
28. நீதியால் நினைசெய் நெஞ்சே 4-25-7

29. புல்லிய மனத்துக்கோயில் புக்கனர் 4–25–8
30. அஞ்சினுலடர்க்கப் பட்டிங் குழிதரும் ஆதன் 4–26–5
31. பின்பகல் உணங்கலட்டும் பேதைமார் போன்றேன் 4–28–1
32. நானெனிற்ருனே யென்னும் ஞானத்தார் 4–29–1
33. கோலமும் வேண்டா; சீலமும் நோன்புமாவார் 4–29–6
34. பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி 4–31–4
35. அருமையிவ்வுலகுதன்னை யாமெனக் கருதிநின்று வெறுமைகள் மனைகள் வாழ்ந்து வினைகளால் நலிவுணுதே 4–33–3
36. நீதியாய போருடை விடையொன்றேற வல்லவர் 4–35–3
37. இரப்பவர்க்கீயவைத்தார் ஈபவர்க்கருளும் வைத்தார் 4–38–10
38. தொண்டலாற்றுணையுமில்லை 4–40–4
39. அரியலாற்றேவியில்லை 4–40–5
40. எண்ணிடை எழுத்துமானுர் 4-43-3
41. ஏமத்தும் இடையிராவும் ஏகாந்த மியம்புவார் 4–45–4
42. மனமெனும் தோணிபற்றி மதியெனும் கோலையூன்றி 4–46–2
43. ஆதியுமறிவுமாகி அறிவினுட் செறிவுமாகி 4–48–2
44. முப்பதுமுப்பத்தாறும் முப்பதுமிடு குரம்பை 4–54–3
45. விரிவிலா அறிவினுர்கள் வேருெரு சமயம்செய்து எரிவினுற் சொன்னுரேனும் எம்பிராற் கேற்ற தாகும் 4-60-9

46. பெருவினை பிறப்பு வீடாய் நின்றவெம்பெருமான் 4–63–3
47. குறிக்கோளிலாது கெட்டேன் 4-67–9
48. பண்ணினார் பாடலாகிப் பழத்தினிலிரதமாகி 4–70–4
49. கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கி 4–75–3
50. உடம்பெனு மனையகத்தே உள்ளமே தகழியாக மடம்படும் உணர்நெய்யட்டி உயிரெனும் திரிமயக்கி இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில் 4–75-4
51. அங்கத்தை மண்ணுக்காக்கி ஆர்வத்தை உனக்கே தந்து 4–75–8
52. மெய்ம்மையாம் உழவைச்செய்து விருப்பெனும் வித்தை வித்திப் பொறையெனும் நீரைப்பாய்ச்சி
53. காயமே கோயிலாக கடிமனம் அடிமையாக
54. விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ஞ்ஞெறி: ஞானமாகும் 4–77–3
55. ஒன்றியிருந்து நினையுமின்கள் உந்தமக் கூனமில்லை 4–31-2
56. குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும் காணப்பெற்றால் மனித்தப் பிறவியும் வேண்டுவதே 4–81–4
57. உடலும் உயிரும் ஒருவழிச் செல்லு முலகம் 4–82–8
58. எண்ணும் எழுத்தும் குறியுமறிபவர் தாமொழியப் பண்ணின் இசைமொழி பாடிய வானவர் தாம் பணிவார் 4–9–6
59. சிந்திப் பரியன சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப் பொழிவன 1–92–1
60. உருவாய்த் தெரிந்துன்றனுமம் பயின்றேன் 4–95–6
61. கலைப் பொருளாகி நின்றீர் 4–96-3

62. நும்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்
டினே 5-96-8
63. துஞ்சிடைக்கண்டு கனவின்றலைத்தொழு தேற்க
4-98-4
64. ஆறொன்றிய சமயங்களில் அவ்வவர்க்கப்
பொருள்கள் வேறொன்றிலாதன 4-101-4
65. கொடுகொட்டி கொக்கரை தக்கை குழருளம்
வீணைமொந்தை 4-112-8
66. வானந்துளங்கிலென் மண்கம்ப மாகிலென்
ஒருவனுக் காட்பட் உத்தமர்க்கே 4-113-8
67. தனிமுடிகவித்தாளும் அரசினும் இனியன்
5-128-8
68. அழகனூர்க் கூறி ஊறியுருகுமென் உள்ளமே
5-128-6
69. ஆரியந்தமிழோடிசையானவன் 6-132-3
70. தன்கடனடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே 5-133-9
71. என்னிலாரும் எனக்கினியாரில்லை
என்னிலும் இனியானொருவன்னுளன் 5-135-1
72. பொழுதுபோக்கிப் புறக்கணிப்பாரையும் எழுதுங்
கீழ்க்கணக் கின்னம்பரீசனே 5-135-8
73. அஞ்சியாகிலும் அன்புபட்டாகிலும்
நெஞ்சம் வாழி நினை 5-137-9
74. நெஞ்சமென்பதோர் நீள்கயந்தன்னுளே
வஞ்சமென்பதோர் வான்சுழிப்பட்டு 5-148-8
75. பாசமற்றுப் பராபரவானந்த ஆசையுற்றிடும்
ஆனைக்கா வண்ணலே 5-145-9
76. நன்று நாடொறும் நம்வினை போயறும்
என்றுமின்பம் தழைக்க விருக்கலாம் 5-156-1
77. ஊனுக்குமின்பம் வேண்டி யுழலாதே 5-163-3
78. எங்கேயென்னை இருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடையாள மருளினர் 5-164-1
79. சாத்திரம் பலபேசும் சழக்கர்காள் கோத்திரமும்
குலமும் கொண்டென் செய்வீர் 6-174-3

80. பூவனூரனைப் போற்றுவார் மனிதரிற்றலையான மனிதரே 5-179-6
81. கல்வி ஞானக் கலைப்பொருளாயவன் 5-160-6
82. நாட்டுப் பொய்யெலாம் பேசிடு நாணிலீர் 8-198-2
83. மாசில் வீணையும் மாலை மதியமும் ஈசனெந்தை இணையடி நிழலே 5-204-3
84. ஆளானுர்க் காளானுர் 5-204-1
85. அறிய ஆயிரமாரண மோதிலும் பொறியிலீர் மனம் என்கொல் புகாததே 5-204-6
86. வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும் 5-204-9
87. நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே புக்கு நிற்கும் பொன்னூர்சடைப்புண்ணியன் 5-201-9
88. உறவுகோனட் டுணர்வு கயிற்றினல் முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே 5-204-10
89. என்னைத் தன்னடி யானென்றறிதலும் தன்னை நானும் பிரானென்றறிந்தேனே 5-206-8
90. குணப்பெருங் குன்றினை 5-208-7
91. தன்னிற் றன்னை யறியிற்றலைப்படும் 4-211-29
92. கங்கையாடிலென் காவிரியாடிலென்
பட்டராகிலென் சாத்திரங் கேட்கிலென்
இட்டமீச னெனுதவர்க்கில்லையே 5-213-2,3
93. யாதோர் தேவரெனப்படுவார்க்கெலாம் மாதேவர்; ஈறிலாதவன் ஈசனொருவனே 5-214-4
94. மாயன் மாயத்துப் பட்டமனத்தர் நரிவிருத்தமதாகுவர் நாடரே 5-214
95. மற்றுரும் தன்னெப்பாரில்லாதானை 6-215-2
96. நாரணன் காண்நால்வேதன் 'காண்' 6-222-3
97. பட்டிமையும் படிறுமே பேசாநின்ருர் 6-223-3
98. பிறவாதே தோன்றிய பெம்மான் 6-225-1
99. மனத்துணின்ற கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான்றன்னை 6-233-8

100. தன்னை மறந்தாள் தன்னுமங் கெட்டாள் 6-239-7

101. பரமாணுவாய்ப் பழுத்த பண்களாகி 6-240-6

102. கல்லாதனவெல்லாம் கற்பித்தானை
காணாதனவெல்லாம் காட்டினானை 6-257-1

103. தன்னுகத் தென்னுகம் ஒடுங்கும் வண்ணம்
உலைப்பாடேபடத் தழுவிப்போக லொட்டேன் 6-259-8

104. பேசாத நாளெல்லாம் பிறவாநாளே 6-261-10

105. மண்ணதனி லைந்தை 6-274-3

106. காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே 9-309-3

107. திருக்கோயிலில்லாத திருவிலூரும் 6-309-5

108. ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் அவர்
கண்டீர் யாம்வணங்கும் கடவுளாரே 6-309-10

109. நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்
இன்பமே யெந்நாளும் துன்பமில்லை 6-312-1

புறப்பொருள் வெண்பா

1. ஒள்வாள் மலைந்தார்க்கும் ஒற்றுய்ந்துரைத்தார்க்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் [கும்
கூறிட்டார் கொண்டநிறை (வெட்சி)

2. அங்கட்கிணையன் துடியன் விறலிபாண்
வெங்கட்கு வீசும் விலையாகும்

3. கற்றோன்றி மண்தோன்றுக்காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி (கரந்தை)

4. மண்டமருண் மாறுமைந்திற் கொண்டான்றலை
யொடு கோல்வளை முடிந்தன்று

5. அழிவின்று புகழ்நிறீஇ
வழுவின்று களத் தொழிந்தன்று — தும்பை

6. அறிவன் வாகை: இம்மூவுலகி னிருள் கடியுமாய்
கதிர்போல் அம்மூன்று முற்றவறிதலால்
ஆருயிரென்னு மவிவேட்டார் ஆங்கஃதால்
வீறிய ரெய்தற்பால வீடு.

வள்ளி: பூண்முலையார் மனமுருக
வேள்முருகற்கு வெறியாடின்று

கோழிவென்றி :

பாய்ந்துமெறிந்தும் படிந்தும் பலகாலுக்
காய்ந்தும் வாய்க்கொண்டும் கடுஞ்சேவல்
புறங்கண்டும் தான்வருமேபோர்க்கு

திவாகரம்

(நிறை நரம்பிற்றே பண்ணெனலாகும்
குரலே துத்தம் கைக்கிளை உழையே
இளியே விளரிதாரம் என்றிவை
எழுவகை இசை
சவ்வும் ரிவ்வும் கவ்வு மவ்வும்
பவ்வும் தவ்வும் நிவ்வும் என்றிவை
ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ எனும்
இவ்வேழெழுத்தும் ஏழிசைக்குரிய
பேரியாழ் சகோடயாழ் மருதயாழ்
செங்கோட்டியாழ்
யாமயாழ்ப் பெயர் குறிஞ்சியாழும்
செவ்வழியாழ்ப் பெயர் முல்லையாழ்
பாலையாழும் மருதயாழுமென
நால்வகை யாழும் நாற்பெரும் பண்ணே
திறனில் யாழே நெய்தல் யாழாகும்

திவ்யப்பிரபந்தம்

1. கூழாட்பட்டு நின்றீர்களை எங்கள் குழுவினில்
புகுதலொட்டோம் (பெரியாழ்)
2. வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்
பசுக்கள் (ஆண்டாள்)

3. மாற்ருதேபால்சொரியும் வள்ளல்பெரும்பசுக்கள்
4. ஆவலன்புடையார்தம் மனத்தன்றி மேவலன்
5. என்னை நைவித்து நாளும் உயிர்பெய்து
கூத்தாட்டுக் காணும்
6. திருமாலை ஆங்கு விரைந்தொல்லைக் கூகிற்றி
யாகில் அவனை நான் செய்வன காணே
7. கழல்வளையைத் தாமும் கழல்வளையே
யாக்கினரே
8. கொங்கைதன்னைக் கிழங்கோடும் அள்ளிப்
பறித்திட்டு அவன் மார்பிலெறிந்து என்னழலைத்
தீர்வேனே
9. தீதில் நன்னெறி காட்டி (குலசேகரர்)
10. ஊனேறு செல்வத்துடற்பிறவியான்வேண்டேன்
11. கலைவலவர்தாம் வாழும் கணபுரத்து
12. மூன்று மூர்த்தியாகி நின்று (திருமழிசை)
13. நன்றிருந்து யோகநீதி நண்ணுவார்
14. வேதநூல் பிராயம் நூறு மனிதர்தாம் புகுவ
ரேனும் பாதியும் உறங்கிப்போகும்
15. கங்கையின் புனிதமாய காவிரி
16. சாதியந்தணர்களேனும் நுமர்களைப் பழிப்ப
ராகில் அவர்கள்தாம் புலையர் போலும்
17. ஆயிரம் இன்தமிழ் பாடினுன் அருள்கண்டீர்
இவ்வுலகில் மிக்கதே (மதுரகவி)
18. வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயரிடும்பையிற் பிறந்து (திருமங்கை)
19. அறத்தினை மறந்து புலம்படிந்துண்ணும்
போகமே பெருக்கி
20. கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோளொன்
றிலாமையினுல்
21. முனிவன் மூர்த்தி மூவராகி
22. ஞானத்தின் ஒளியுருவை
23. தாம் வாடவாடத் தவஞ்செய்யவேண்டா
தமதா இமையா ருலகாள கிற்பீர்

24. வந்துனதடியேன் மனம் புகுந்தாய்
25. ஆறிய அன்பில் அடியார் (பொய்கை)
26. தமருகந்தது எவ்வுருவம் தானே
27. தாமத்தால் வேள்வியால் தந்திரத்தால்
மந்திரத்தால் நாமத்தால் ஏத்துதிரேல் நன்று
28. ஒருவன் ஒருவனங்கத்தென்று முளன் (பேயாழ்)
29. நீ யென்னையன்றி யிலே (திருமாமுனி)
30. பேரான பேசப்பெருத பிணச்சமயர்.
31. உகப்புருவன் தானே ஒளியுருவன் தானே.
32. நாக்கொண்டு மானிடம் பாடேன்.
33. சிறுசமயப் பந்தனையார் வாழ்வேல் பழுது.
34. அவரவர் தமதமது அறிவறி வகைவகை.
அவரவர் இறையவர் என அடியடைவர்கள்
(நம்மாழ்.)
35. அற்றது பற்றெனில் உற்றது வீடு.
36. மனஞ்செய்ஞானத்துப் பெருமை
37. அறவனை ஆழிப்படை அந்தணனை
38. பொய்கலவாது என் மெய்கலந்தானே.
39. நக்கபிரானெரு அயனும் ஒக்கவும் தோற்றிய
ஈசன்.
40. சிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம்
இறப்பிலெய்துக எய்தற்க.
41. வம்மின் புலவீர் நும்மெய் வருத்திக் கைசெய்
துய்திம்மினே
நும்இன் கவிகொண்டு நும்நும் இட்ட தெய்வ
மேத்தினல் செம்மின் சுடர்முடி என்திருமாலுக்கு
சேருமே.
42. உறங்குவான்போல் யோகு செய்த பெருமானை.
43. சிவனைய் அயனைய்

*சீவகசிந்தாமணி :*

1. ஓவாது நின்ற குணத் தொண்ணிதிச் செல்வன்.
2. பகை நண்பொடில்லான்.
3. வீடாத கற்பினவன்தேவி.

4. நாவீற்றிருந்த புலமாமகளோடு நன்பொற்
 பூவிற்றிருந்த திருமாமகள் புல்ல – நாட்டணி.
5. நற்பொருள் செய்வார்க்கிடம் பொருள்செய்வார்க் கிடம்.
6. மற்றை நாடு வட்டமாக வைகுமற்ற நாடாரோ.
 பெண்வலைப் படாதவர் பீடினோங்கிய கடிநகர்.
7. வெய்தடி இடுதற் காகா வீதிகள்
8. உண்கலைக் கிடனாய்த் திருமாமகள்
 கண்களுக்கிடனாங்கடி மார்பனே.
9. மெய்பெரு எழுத்துயிர்க்கு மழலைவாய் இளமுறு வல் தையலாள்
10. விண்ணினோடமிர்தம் விலைச்செல்வது
 பெண்ணின் இன்பம் எனப்பெரிதாழ்ந்தவன்.
11. நோதலும் பரிவு மெல்லாம் நுண்ணுணர்வின்மை.
12. வெவ்வாய் ஓரி முழவாக விளிந்தார் ஈமம்விறகாக
 இல்வாருகிப் பிறபபதோ இதுவோ மன்னர்க் கியல் வேந்தே.
13. நாமகள் நலத்தை யெல்லாம் நயந்துடன் பருகி
14. வெண்ணெய் போன்றூறினியள்
15. பொய்யில் பொருளே பொருள்
16. நடுக்கமொன்றுனுமின்றி நகுக.
17. துன்ப முற்றவர்க் கல்லால் இன்பமில்லை
18. பெண்டிரும் ஆண்மை வெஃகிப்பேதுறு முலை யினாள்.
19. ஆலயமிதோவியர்கட் கென்ன அணி.
20. ஆடவர் மனங்கள் என்னும் அரங்கின்மேல் அனங்கமாலை ஆடினாள்.
21. நீர் நின்றிளகிற்றிது வேண்டா, நீரின் வந்ததிது போக
 வாட்புண்ணுற்றுற்றதிது நடக்க, ஒரும் உருமே றுண்டதிது
22. இல்லையேவென்றி தீமை இடங்கொண்ட மனத் தினார்க்கே.

23. பஞ்சு சூழ் பரவையயல்குற் பசுங்கதிர்க் கலாபம் வீங்க
செந்தளிர்க்கோதை சோரக் கிண்கிணி சிலம் பொடேங்க
மைந்தரிற் காமனன்னுன் மகளிரிற்றிருவன்னுளை
அந்தரத்தமரர் பெற்ற அமிர்தெனப் பருகினுனே.
24. வீடுவேண்டி விழுச்சடை நீட்டல்
பீடிலாப் பிறவிக்கு வித்தென்பவே
25. நினைப்பினுற் பெரியர் 26. காப்பியக்கவிகள்
26. ஒண்பொருள் ஆவதையா உடன் பிறப்பாக்க லாகா
27. மயிரெலியம் போர்வையொடெம் மன்னன் விடுத்தானே
28. ஊடினும் புணர்ந்த தொத்தினியவள்
29. தங்குரவர் தாங்கொடுப்பின் நெஞ்சு நேர்ந்து தாழ்வார்தாம்
பொங்கரவ்வ ஆல்குலார் எனப்புகன்று சொல்லி னுன்.
80. தமிழ் தழீஇய சரயலவர்
31. இன்றமிழ் இயற்கையின்பம் நிலைபெற நெறி யிற்றுய்த்தார்.
32. இல்லாளையஞ்சி விருந்தின் முகங்கொன்ற நெஞ் சிற் புல்லாளன்.
33. ஒருவனுக்கொருத்திபோல உளமகிழ்ந்தொளி யின் வைகி.
34. நஞ்சுகுடித்தாலும் நவையின்று தவம் நின்ருல்
35. கடிமலர் மகளிரொத்தார் காவலன் களிவண் டொத்தான்
36. அரிதால் பெரியயோனிகள் பிழைத்திவண் மானிடம் பெறலே.
37. உருவின் மிக்கதோர் உடம்பது பெறுதலும் அரிதே

38. இல்லையே இம்மையல்லால் உம்மையும் உயிரு மென்பார்
39. பகுத்துணும் பாவிகளும் 42. வேட்டன பெருமை துன்பம்
40. யாவதும் துன்ப மன்னு யாக்கைகொண்டவர் கட்கென்ருன்
41. உள்பொருள் இதுவென உணர்தல் ஞானமாம்
42. கடையிலா அறிவொரு காட்சி வீரியம் இடையிலா இன்பமும்
43. துறந்துபோய்க் கடவுளானுன்
44. பற்றெடே நிற்பின் என்றும் திருமகள் பற்றல் செல்லாள்

சூளாமணி

1. அங்கண் உலகிற் கணிவான் சுடராகி நின்ருன்.
2. முன்றிலெங்கு முருகயர் பாணியும்
3. தன்னையும் தரையையும் காக்குமென்பதம் மன்னவன்
4. பெருமகன் உருகும் மென்மை
5, ஆங்கணரக மடைந்தார் படுந்துயர் ஈங்கனுரைக்கின் எமக்கும் பனிவரும்
6. இறுதியிலாப் பேரின்பம்
7. கடையிலெண் குணத்ந்தது காமராகங்கள் இடை நனியிலாததில் இயற்கை யில்லது.
8. தெருளிலார்க் கிசைவிலள் திருவின் செல்வியே.

திருவாசகம்

1. வேகங் கொடுத்தாண்ட வேந்தனடி வெல்க.
2. அவனருளாலே அவன்ருள் வணங்கி
3. நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே.
4. மூலமாகிய மும்மலம்

5. அச்சந்தவிர்த்த சேவகன் வாழ்க.
6. அருச்சனை வயலுள் அன்பு வித்திட்டுத்
தொண்ட வுழவர் ஆரத்தந்த
7. அற்புதமான அமுத தாரைகள்
எற்புத்துளைதோறும் ஏற்றினன் உருகுவது
8. கல்வியென்னும் பல்கடற் பிழைத்தும்
9. நாத்திகம் பேசி நாத்தழும்பேறினர்
10. துரியமுமிறந்த சுடரே போற்றி
11. அன்பெனக்கு நிரந்தரமாயருளாய்
12. நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து
13. யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக்கென் கடவேன்
14. உள்ளந்தாணின்றுச்சியளவு நெஞ்சாய் உருகா தால் உடம்பெல்லாம் கண்ணாய்
15. செந்தாமரைக் காடனைய மேனித்தனிச்சுடரே
16. யாமார்க்குங் குடியல்லோம் யாதுமஞ்சோம் (தி. சதகம்)
17. அன்பர்க் கவரினும் அன்ப
18. போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி இன்பமும்
19. அழுதாலுன்னைப் பெறலாமே.
20. உருகி நானுனைப் பருக வைத்தவா 21. குலங் களைந்தாய்
21. முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே.
22. பண்சுமந்த பாடல் 23. தண்ணார் தமிழ்
23. ஆனையாய்க்கீடமாய் மானுடராய்த் தேவராய்
24. இமவான் மகட்குத் தன்னுடைக்கேன்வன் மகன் தகப்பன் தமையன்.
25. நானார் என்னுள்ளமார் ஞானங்களாரென்னை யாரறிவார்

26. ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமிலார்க்காயிரந்
திருநாமம் பாடி
27. அறம்பாவமென்றிரண்டச்சம் தவிர்த்து.
28. உவலைச்சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம்.
29. ஊன் கெட்டுயிர்க் கெட்டுணர்வு கெட்டென்
னுள்ளமும்போல் நான் கெட்டவா பாடி
30. தன்பெருமை தானறியாத் தன்மையன்.
31. சித்தஞ்சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்.
32. நித்த மணாளர் நிரம்ப அழகியர்.
33. புகழிற்றிகழுமழகன்
34. நின்னடியார் பழங்குடில்தோறும் எழுந்தருளிய
பரனே
35. ஈறிலாப் பதங்களியாவையும் கடந்த இன்பமே
என்னுடையன்பே
36. சென்றுசென்றணுவாய்த் தேய்ந்துதேய்ந்
தொன்றும்
37. தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா யார்கொலோ சதுரர்
38. வெறுப்பனவே செய்யுமென் சிறுமை
39. அருளைப் பெறுவானசைப்பட்டேன்
40. வித்துமேல் விளையாமல் என்வினையொத்தபின்
திருக்கோலம் நீ வந்துகாட்டினாய்
41. சாதிகுலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத்
தடுமாறும் ஆதமிலி நாயேன்
42. மனவாசகங் கடந்தான்
43. அன்பினில் விளைந்த ஆரமுதே
44. ஊனினையுருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா
ஆனந்தமாய தேனினைச் சொரிந்து
45. ஓசையாலுணர்வார்க் குணர்வரிய வுணர்வுதந்
தொளியாக்கி
46. ஆதிப்பிரமம்
47. சேரக்கருதிச் சிந்தனையைத் திருந்த வைத்துச்
சிந்திமின்

48. காணுங்கரணங்களெல்லாம் பேரின்பமெனப்
பேணுமடியார்
49. ஓங்காரத்துட்பொருளை
50. செத்திடமும் பிறந்திடமும் இனிச்சாவா
திருந்திடமும் அந்தணையுமறியாதார்

திருக்கோவையார்

1. ஆரணங்காணென்பர் அந்தணர், காமுகர் காம
நன்னூலதென்ப
2. காமன்றன் வென்றிக்கொடி 1
3. யாழுடையார் மணங்காண ணங்காய் வந்தகப்
பட்டதே 7
4. அன்பரென்புருகக் குனிக்கும் பாம்பலங்காரப்
பரன் 11
5. உயர்கூடலிணுய்ந்த ஒண்தீந்தமிழின் துறைவாய்
நுழைந்தனேயோ அன்றி ஏழிசைச் சூழல்புக்கோ
இறைவா தடவரைத் தோட்கென் கொலாம்
புகுந் தெய்தியதே 20
6. ஆலத்தினுலமிர் தாக்கியகோன் 27
7. தீங்கரும்பும் அமிழ்தும் செழுந்தேனும் பொதிந்து
செப்பும் கோங்கரும்பும் தொலைத் தென்னையு
மாட்கொண்ட கொங்கைகளோ 46
8. ஆழமன்னேவுடைத்திவ்வையர் வார்த்தை 61
9. தழைகொண்டொருவனென்று முன்னம் உள்ளந்
தழைத்திடுமே 67
10. தோகைக்கும் தோன்றற்கும் ஒன்ருய் வருமின்ப
துன்பங்களே 71
11. என் தொல்பிறவி ஏழுமெழுதாவகைச் சிதைத்
தோன் 79
12. சங்கந்தரு முத்தியாம் பெற
13. சிங்கந்திரிதரு சீறூர்ச் சிறுமியெந்தேமொழியே
100

14. வித்தகஞ்சேர் மெல்லெனேக்க மன்றே என்
விழுத்துணையே 106
15. ஈசற்கியான் வைத்த அன்பின் அகன்று (பெருங்
கண்களே) 109
16. வினைவள நீறெழ நீறணியம்பலவன்
17. வினைவித்திக்காத்து விளைவுண்டதாகி விளைந்
ததுவே 140
18. பல்கதிரோனடைத்த தாமரையில்லினிதழ்க்கத
வந்திறந்தோ தமியே
வந்து வைகி நயந்ததுவோ 154
19. சிற்றிடைக்கே விலை செப்பலொட்டார்
கலம்பாவிய முலையின் விலையென்னீ கருதுவதோ
197
20. வரகுணனும் தென்னவ னேத்தும் சிற்றம்பலத்
தான் 306
21. ஒருயிர் ஈருருக் கொண்டானந்த வெள்ளத்
திடைத் திளைந்தாலொக்கும் 308
22. சிவன் செய்த சீரருளாந் தில்லை 358
23. சீறணி சிந்தாமணி யனதில்லைச் சிவனடிக்கு 400

பட்டினத்தார்

1. மக்களியாக்கைக்கு நினைப்பினும் கடிதே இளமை
நீக்கம்
2. கொண்டோள் ஒருத்தி உண்டி வேட்டிருப்ப
அருளில் மடந்தையர் ஆகந்தோய்ந்தும்

ஔவை

1. அடகென்று சொல்லி அமுதத்தை யிட்டாள்
2. யாதவர் கோன் இல்லை யினிது
3. கொடுப்பவர் தாமறிவர் தங்கொடையின்சீர்
4. உப்புக்கும் பாடிப் புளிக்குமொருகவிதை
5. என்றுங்கிழியாதென் பாட்டு.
6. கோடானுகோடி கொடுப்பினும் தன்நாக்
கோடாமை கோடியுறும்.

3. உழப்பின் வாரா உறுதிகள் உளவோ

நம்பியாண்டார்

1. என்புந்தழுவிய ஊனும் நெக அகமேயெழுந்த அன்பின்
2. நல்வழி நின்ருர் பகை நன்று
3. சைவப் பெருநெறிக்கே அணியன நாவுக்கரை யர் பிரான்றன் அருந்தமிழே.
4. தொடுத்தான் மதுரகவி (சுந்தரர்)
5. பண்டிதர்க் கின்பன் பரசமய கோளரி(சம்பந்தர்)
6. பதிகமேழெழு நூறு பகருமா கவியோகி (அப்பர்)

கந்தபுராணம்

1. திகடச் சக்கரச் செம்முகம் ஐந்துளான் (1)
2. இந்திரராகிப் பார்மேல் இன்பமுற்றினிதுமேவிச் சிந்தையினினைந்த முற்றிச் சிவகதி யதனிற் சேர்வர் (4)
3. அறுவகை நெறிகளும் பிறவுமாக்கிய இறைவி (8)
4. செந்தமிழ்க்கு வரம்பெனச் செப்பிய முந்து காஞ்சி (19)
5. முதிரு முத்தமிழ் விரகனதேடென மொய்ம்மீன் எதிர்புகுந்திடப் போவது பாலியாமியாறு (27)
6. நெறியிடை யொழுகலா விழுதை நீரரை மறலிதன் கைரிடை வருத்தல் போலுமால் (31)
7. புவியோருணர்வாமென மேயவீதி (56)
8. கண்டு கேட்டவை யுண்டுயிர்த் துற்றறி கருவி கொண்ட வைம்புல ஞெருங்குற நடாத்திய கொள்கைத் தொண்டர் (41)
9. செந்நெறி யொழுகுவார்க்கே செப்புவன் புராணம் (123)
10. யார்க்குங் காரணன் சிவனே யென்கை கழறவும் வேண்டற்பாற்ரே (78)

11. புறநெறிக்கணே வீழ்ந்துளோர் சிவநெறி
புகுங்கால்
அறிவும் ஆற்றலும் குறிகளும் வேறுபட்டனபோல
12. தவந்தனுக் கொப்பது தவமதாகுமே (23)
13. உடம்பினை ஒறுத்து நோற்பார் உலகெலாம்
வியப்ப வாழ்வர் (25)
14. பத்தின் மேம்படும் ஆண்டினர், ஒத்தபண்பிலர்,
அத்தன் அன்னை யீந்தருளுமுன் ஒருவர்மேல்
ஆர்வமுற்றவர் சேரவைத்த சிந்தையர் 5-6
15. தாயுண்டாயின் மைந்தர் தமக்கோர்
தளர்வுண்டோ 10–5
16. தந்தைதன் மெலிவுகாணில் தங்குடித் தலைமை
யெல்லாம்
மைந்தர்கள் பிரித்துக் கோடல் வழக்கதாம்
அறனுமஃதே 21–26
17. தீந்தமிழின் வைப்பான தெக்கிண தேயம் 30-2
18. ஆவிபொருளாக் கொள்ளாதார் தஞ்சேவகத்தின்
நெறிபிழையார் 43–25
19. ஒன்ருய் இருதிறமாய் ஓரைந்தாய் ஐயைந்தாய்
அன்ருதியின் மீட்டும் ஐந்தாய் அளப்பிலவாய்
10-78
20. பாரெலாம் உண்டவனுமென உடலம் விம்மினன்
10–27
21. ஈசனேயவன் ஆடலால் மதலையாயினன் காண்
12-129
22. போதம் யாவையும் குமரவேள் பொருவிலா
உருவம் 12–132
23. உபநிடதத்துச்சியில் விரிந்த போதக் காட்சிக்கும்
காணலன்

கம்பராமாயணம்

1. தமிழ்க்குற்றமெல்லாம் அராவும் அரமாயிற்றன்றே
கம்பநாட்டாழ்வான் கவி

2. நம்புமாமாலையாலே நரருக்கின்றமுதமீந்தான்
3. ஆவின் கொடைச்சகரர் ஆயிரத்து நூற்றெழித்து
எண்ணிய சகாத்தம் எண்ணூற்றேழின்மேல்,
களியரங்கேற்றினனே
4. கம்பநாடன் கவிதையிற் போல் கற்றோர்க்கிதயம்
களியாதே

1. எண்ணிய மூன்றனுள் முற்குணத்தவரே முதல்வர்
2. வையம் என்னை இகழவும் மாசெனக்கு
எய்தவும் இஃதியம்புவன்
3. ஆசலம்புரி ஐம்பொறி வாளியும்
நெறியின் புறஞ்செலாக் கோசலம்புனை நாடு 12
4. மானம் நேர்ந்தறன் நோக்கி மனுநெறி
போன தண்குடை வேந்தன் 16
5. தொல்லையில் ஒன்றே யாகித் துறைதொறும்
பரந்த சூழ்ச்சிப் பல்பெரும் சமயம் சொல்லும்
பொருளும்போற் பரந்ததன்றே 30
6. செங்காலன்னம்
மாலுண்ட நளினப்பள்ளி வளர்த்திய மழலைப்
பிள்ளை காலுண்ட சேற்றுமேதி கன்றுள்ளிக்
கனைப்பச் சேர்ந்த பாலுண்டு துயிலப் பச்சைத்
தேரை தாலாட்டும் பண்ணை
7. பெருந்தடங்கண் பிறை நுதலார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால் 67
8. குலம் சுரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம்
ஆற்றல் நல்லற மல்லதில்லாமையால்
எற்றமல்லதிழிதக வில்லையே 70
9. கந்தனை யனையவர் கலைதெரிகழகம் 79
10. வண்மைஇல்லை ஓர் வறுமை இன்மையால் 84
கற்பின் நின்றன காலமாரியே 90
11. செவ்விய மதுரம் சேர்ந்த நற்பொருளில்
சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞர் 93
12. பூதலத்தியாவையும் அவண 99

13. கள்வார் இலாமைப் பொருள் காவலும் இல்லை
கல்லாது நிற்பார் பிறர் இன்மையின் [165
எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை உடையார்களும் இல்லை
மாதோ 166

14. தாயொக்கும் அன்பில் தவமொக்கும் நலம்
பயப்பில் அறிவொக்கும் எவர்க்குமன்னுன் 171

15. உயிரெலாம் உறைவதோர் உடம்புமாயினுன் 177

16. வையக முழுவதும் வறிஞன் ஓம்புமோர்
செய்யெனக் காத்தினிது அரசு செய்கின்ஞன் 177

17. ஆடவர் பெண்மையை அவாவும் தோளினுய்384

18. தீதென்றுள்ளவை யாவையும் செய்து (எமைக்
கோதென்றுண்டிலன்) 396

19. சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம் 411

20. ஆறிய அறிவன் 418

21. ஈந்தவர் அல்லது இருந்தவர் யாரே 446

22. குணங்களால் உயர்ந்த வள்ளல் 561

23. ஆதரித் தமுதில்கோல் தோய்த்த வையவம்
அமைக்கும் தன்மை
மதனற்கும் எழுதவொண்ணுச் சீதை 565

24. சொற்கலை முனிவன் 566

25. மெய்வருபோகம் ஒக்க உடன் உண்டு விலையும்
பையரவல்குலார் 577 [கொள்ளும்

26. செஞ்சொல் கவியின்பம் 584

27. கல்லும் புல்லும் கண்டுருகப் பெண்கனிநின்ருள்
[593

28. இப்பாவை தோன்றலால்
அழகெனும் அழகுமோர் அழகுபெற்றதே 595

29. இருவரும் மாறிப் புக்கிதயம் எய்தினுர் 598

30. கண்வழி நுழையுமோர் கள்வன் 616

31. நிலாக்கற்றை, பண்ணை வெண்ணெய்ச்
சடையன்றன் புகழ்போல் எங்கும் பரந்தனதால்

32. (நிலா) வெள்ளை வண்ண விடமும் உண்டாங்
கொலோ 707

33. உயிரனைய கொழுநர்வரக், கண்டுமனம் களி
 சிறப்ப ஒளிசிறந்து
 மெலிவகலும் கற்பினர்போல் 713
34. புலிப்போத்தும் புல்வாயும் ஒருதுறையில்
 நீருண்ண உலகாண்டோன் ஒருவன் 723
35. ஆயிரம்வில்லை அனங்கனிறுத்தான் 774
36. மங்கையர்பூத்த கொம்பாமெனப் பொலிந்தார் 905
37. புதியன கண்டபோழ்து விடுவரோ புதுமை
 பார்ப்பார் 781
38. அல்குல் நின்றும்
 கற்றை மேகலைகள் நீங்கிச் சீறடிகௌவக் காலில்
 சுற்றிய நாகமென்று துணுக்கத்தால் துடிக்
 கின்ருழும் 1022
39. தன்னையும் துறக்கும் தன்மை காமத்தே
 தங்கிற்றன்றே 1101
40. இருவர்தம் உணர்வும் ஒன்றே என்ற போதி
 யாவர் வெல்வார் 1102
41. கனவெனும் நலத்தினல் கணவற் புல்லினள்
 1108
42. பல்லியல் நெறியிற் பார்க்கும் பரம்பொருள்
 என்ன் யார்க்கும்
 இல்லையுண்டென்ன நின்ற இடையினுக்
 கிடுக்கண் செய்தார் 1211
43. கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள்
44. அரியநூலும் கற்றவர் அயோத்தி 7 1237
45. பிச்சமும் கவிகையும் பெய்யும் இன்னிழல் நிச்சய
 மன்று 26
46. தத்தமக்குற்ற அரசெனத் தழைக்கின்ற மனத்தர்
47. மன்னுயிர்க்கு
 எனையவாறு அன்பினன் இராமன் ஈண்டவற்கு
 அனையவாறன்பின அவையும் என்றனர்
48. மன்வயிற்றின் அடக்கிய மாயனைத்
 தன்வயிற்றின் அடக்கும் தவத்தினள் 94

49. ஆரொடும் பகை கொள்ளலன் என்றபின்
போரொடுங்கும் புகழ் ஒடுங்காது 1101
50. திருமுகச்செவ்வி
அப்பொழுதலர்ந்த செந்தா மரையினை வென்ற
தம்மா 293
51. பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற
தன்றே 285

1. மெய்யைத்தான் சிறிதுணர்ந்து நீ விதித்த
மன்னுயிர்கள் உய்யத்தானாகாதோ உனக்
கென்ன குறையுண்டோ  (ஆரணிய காண்டம்)
2. மூண்டெழு வெகுளியை முதலில் நீக்கினர்
3. நீண்ட தமிழால் உலகை நேமியினளந்தான்
4. புவியினுக்கணியாய் ஆன்ற பொருடந்த புலத்
கவியெனக் கிடந்த கோதாவரி  [திற்றாகி
5. வஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவ மனுங்க
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்
6. தாமுறு காமத்தன்மை தாங்களே யுரைப்பதென்
பது
ஆமெனலாவதென்றால் அருங்குல மகளிர்க்கு
7. கற்பின் கனலி
8. பழுதறு பெண்மையோடும் இளமையும்
பயனின்றேக
9. பொழுதொடு நாளும் வாளா கழிந்தனபோலும்
10. பார் அவள் பாதம் தீண்டப் பாக்கியம் படைத்த
11. பிள்ளைபோல் பேச்சினள்  [தம்மா
12. மூவுலகும் இவள் (பெண்) முறையின் ஆளயான்
ஏவல் செய்துய்குவென் இனி
13. காண்பார்க்கும் காணப்படுபொருட்கும் கண்ணகி

கிட்கிந்தா காண்டம்

1. கற்பகமனையவக் கவிஞர் நாட்டிய சொற்பொருளா
மெனத் தோன்றல் சான்றது (கிட்கிந்தா)

2. சொல்லின் செல்வன்
3. ஆணியிவ் வுலகுக்கெல்லாம்
4. பின்பிறந்தார்களெல்லாம். ஒத்தாற்
   பரதன் பெரிதுத்த மனுதலுண்டோ
5. தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும்
   பதத்தை
6. ஓவியத்தெழுத வொண்ணுவுருவத்தாய்
7. தீமைதான் பிறறைக் காத்துத்தான் செய்தாற்
   றீங்கன்ருமோ
8. அறவேலியைப் படுத்தாய் விறல் வீரனே
9. தக்கவின்ன தகாதன இன்னவென்
   ருெக்க வுன்னலராயி னுயர்ந்தள, மக்களும்
   விலங்கே
10. சிறியன சிந்தியாதான்
11. பகையுடைச் சிந்தையார்க்கும் பயனுறு பண்பிற்
    நகையுடை முகத்தையாகி [றீரா
12. அறத்தின திறுதி வாழ்நாட்கிறுதி
13. எத்திறத்தினும் ஏழுலகும் புகழ்
    முத்துமுத்தமிழும் தந்து முற்றுமே (தென்தமிழ்
    நாடு)
14. மென்மருங்குல்போல் வேறுள அங்கமும் மெலிந்
15. மெய்த்திருப்பதம் மேவென்ற போதினும் [தாள்
    இத்திருத்துறந்தேகென்றபோதினும்சித்திரத்தின்
16. அலர்ந்த செந்தாமரை ஒத்திருக்குமுகம்
17. தென்தமிழ் உரைத்தோன்
18. பேணநோற்றது மனைப்பிறவி
19. தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு
20. அத்தூயவன் வில்லின் ஆற்றற்கு மாசென்று
    வீசினேன் (சுந்தர)
21. இந்த இப்பிறவிக்கு இருமாதரைச்
    சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்

22. மிதிலை மன்னன் தன் பெருந்தன்மை யென்னும்
　　தகைமைக்கும் தலைமை சான்ருள்
23. இற்பிறப்பென்பதொன்றும் இரும்பொறை என்ப
　　தொன்றும்
24. கற்பெனப் பெயரதொன்றும் களிநடம் புரியக்
　　கண்டேன்

யுத்தகாண்டம்

1. பேசுவதுமானம் இடைபேணுவது காமம் (யுத்த)
2. ஆனவள் கற்பினுல் வெந்தது அல்லது ஓர்
　　வானரம் சுட்டது என்றுணர்தல் மாட்சியோ
3. ஓதிக்கேட்டது பரம்பொருள் இன்னமொன்று
　　ஏதோ (இரணியன்)
4. அவைதன்னுளே நின்று தான் அவற்றுள்
　　தங்குவான்
5. சாணிலும் உளன் ஓர் தன்மை அணுவைச் சத
　　கூறிட்ட கோணிலும் உளன்
6. அடைந்தவர்கருளாயின் அறன் என்னும்
　　ஆண்மை என்னும்
7. அந்தமில் குணத்தினன்.
8. தோன்ருத்தாய் அவள் உலகுக்கெல்லாம்
9. ஒரு முழம் உயர்ந்த ஞானத்தம்பி
10. கால்வலி காட்டிப் போந்தேன் கைவலிக்கவதி
　　யுண்டோ
11. நாய்தரக் கொள்ளும் சீயம் நல்லர சென்று
　　நக்கான்
12. நவையறு கவிஞர் நாவரும் சொல் எனத் தொலை
　　விலாத்தூணி
13. அறத்தினுல் அன்றி அமரர்க்கும் அருஞ்சமம்
　　கடத்தல் மறத்தினுல் அரிது
14. அவன் கைவாளி,
　　ஊழித்தீயையும் தீய்க்கும் செல்லும் திசையையும்
　　தீய்க்கும்
　　சொல்லின்வாயையும் தீய்க்கும் முன்னின்
　　மனத்தையும் தீய்க்கும்
15. வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ்
　　போனதோ, புகுந்ததோ பொன்றும் காலமே

16. அறம் உனக்கஞ்சி இன்றெளித்ததால்
17. ஊன் உயர்ந்த உரத்தினன்
18. கவிஞரின் அறிவு மிக்காய்
19. சாதியின் புன்மையின்னும் தவிர்ந்திலபோலும்
20. தீயவை செய்வர் ஆயின் சிறந்தவர் பிறந்த
உற்றூர் தாய் அவர் தந்தைமார் என்றுணர்வரோ
தருமம் பார்ப்பார்
21. தீவினை ஒருவன் செய்ய அவனொடும்தீங்கிலா
வீவினை உறுதல் ஐய மேன்மையயோ [தோர்
22. போர்க்கோலம் செய்துவிட்டார்க்குயிர் கொடா
தங்குப் போகேன்
23. கும்பிட்டு வாழ்கிலேன் யான் கூற்றையும் ஆடல்
கொண்டேன்
24. குணங்களால் உயர்ந்தான் 25 புகழின் பூணினாய்
26. பெண் தான் உற்ற பெரும்பீழை உலகுக்கெல்லாம்
பெரிதன்றோ
27. இன்றுளார் நாளை மாள்வர் புகழுக்கும் இறுதி
யுண்டோ
28. கலையினால் திங்கள் போல வளர்கின்ற காலத்தே
29. புகழுளதனையும் உள்ளாய்
30. அன்றே என்னின் அன்றேயாம் ஆமென்
றுரைக்கின் ஆமேயாம்
31. உண்ணாதே உயிர் உண்ணாது ஒரு நஞ்சு, சனகி
யெனும் பெருநஞ்சுன்னைக் கண்ணாலே
நோக்கவே போக்கியதே
32. இராமனார் யாவர்க்கும் இறைவனாதல்
33. எல்லாரும் பகைஞரே யார்முகத்தே
விழிக்கின்றாய் எளியையானாய்
34. கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை மனச்
சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்குமெனக் கருதி உடல்புகுந்து
தடவினவோ ஒருவன் வாளி

35. வரமென்னும் பாற்கடலைச் சீதையென்னும் பிறை
கடையிட்டழிப்பதனை அறிந்தேனே
36. கற்பினுக் கரசினை பெண்மைக் காப்பினை
பொற்பினுக் கழகினை புகழின் வாழ்க்கையை
37. ஒத்த மூவுலகத்தோர்க்கும் உவகையின் உறுதி
உன்னின் தம்தம் உச்சியின்மேல் வைத்த
தொத்தது அத்தாம மோலி

ஔவை

1. உடையது விளம்பேல்　2. ஊப்போல்வளை
3. சனிநீராடு　4. மன்றுபறித்துண்ணேல்
5. அனந்தலாடேல்　6. கிழமைப்படவாழ்
7. கோதாட்டொழி　8. சையெனத்திரியேல்
9. பீடுபெறநில்　10. வெட்டெனப்பேசேல்
11. ஏவா மக்கள் மூவா மருந்து
12. தந்தைசொல் மிக்க மந்திரமில்லை
13. பையச் சென்றால் வையம் தாங்கும்
14. போனகமென்பது தானுழந்துண்டல்
15. உரவோரென்கை இரவாதிருத்தல்
16. நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யுமழை (மூதுரை)
17. நீட்டோலைவாசியா நின்றான் குறிப்பறியமாட்டா
தவன் நன்மரம்
18. உடன்பிறந்தே கொல்லும் வியாதி
19. மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்
20. சாதியிரண்டொழிய வேறில்லை
21. சேவித்தும் சென்றிருந்தும் தெண்ணீர்க்கடல்
கடந்தும் போவிப்பம் பாழினுடம்பை வயிற்றின்
கொடுமையால்
22. மூதேவி சென்றிருந்து வாழ்வாளே மன்றோரம்
சொன்னார் மனை (நல்வழி)
23. உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
24. முப்பதா மாண்டளவில் மூன்றற்றொரு பொருளைத்
தப்பாமற் றன்னுட் பெறுனுயின்

25. தேவர் குறளும் திருநாள் மறைமுடிவும்
மூவர் தமிழும் திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒருவாசகமென்றுணர்

வெண்பாப்பட்டியல்

சாற்றரிய காப்புத்தால் செங்கீரை சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை — பேசரிய
அம்புலியே யாய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்புசிறு தேரோடும் பத்து (பிள்ளைக்கவி)

வைக்கும் புயம் தவம் வண்டம்மனை பாண்மதங்கு
கைக்கிளை சித்தூசல் களிமடக்கூர் — மிக்கமறம்
காலந்தழையிரங்கல் சம்பிரதம் கார்தூது
கோலும் கலம்பகத்தின் கூறு (கலம்பகம்)

ஆய்ந்த கலித்துறைதான் நானூறகப்
பொருண்மேல் வாய்ந்தநற்கோவை (கோவை)

திறந்தெரிந்த பேதைமுதல் எழுவர் செய்கை,
மறந்தயரவந்தார் மறுகென்றறைந்தகலி
வெண்பா உலாவாம் (உலா)

மூண்ட அமர்க்களத்து மூரிக்களிறட்ட
ஆண்டகையைப் பரணியாய்ந்துரைக்க (பரணி)

ஒட்டக்கூத்தர்: தக்கயாகப் பரணி

1. வெல்லும் பொருளதிகார மலங்காரம் விளங்கச்
சொல்லும் பொருள் பகருங்குடின் மடவீர்
கடைதிறமின்

2. அரனும் ஏனை இமையவரும் உண்பரென அஞ்சி
நஞ்சுமமுதமுடன் திரைமகோததியைவிட விருந்
தனைய தெய்வமாதர் கடைதிறமினோ

3. பாடிவீடு கொள் படங்கெனக் கன்னிவேலிகளின்
மீதெழப்பல சிலம்பி நூல்கொடு கவிக்குமே 54

4. நச்சுக்கண் முலேமே விடுதுகிற்கு நகுபொற்
கச்சுக்கு மடையப் புடவிகையடைகொலோ: 83

5. அறந்தவா மலயப் பொருப்பில் அகத்தியற்கமு
தாகநீர் வறந்த வாரிதி ஏழின் மீனும் எடுத்து
வாயின் மடுத்தனர் 12

1. நெடுநில மளந்துகொள்ள வளர்ந்து தாணீட்டு
நாளில் இடுநிழல்போல நின்ற இப்பெரும்
பேயைப் பாராய் 3

கலிங்கத்துப்பரணி

1. முருகிற் சிவந்த கழுநீரும் முதிரா இளைஞர்
ஆருயிரும் திருகிச் செருகும் குழன் மடவீர்
செம்பொற் கபாடம் திறமினோ

2. கலவிக் களியின் மயக்கத்தால் கலைபோயகலக்
கலைமதியின் நிலவைத் துகிலென்றெடுத்துடுப்பீர்
நீள்பொற்கபாடம் திறமினோ 34

களபவண்டலிடு கலச கொங்கைகளின்
மதியெழுந்து கனல்சொரியுமென்
றளகபந்திமிசை யளிகள் பந்தரிடும்
அரிவைமீர் கடைதிறமினோ 60

காஞ்சி யிருக்கக் கலிங்கங் குலைந்த
கலவி மடவீர் கழற்சென்னி
காஞ்சியிருக்கக் கலிங்கங் குலைந்த
களப்போர் பாடத் திறமினோ 63

நேயக்கலவி மயக்கத்தே நிகழ்ந்த மொழியைக்
கிளியுரைப்ப வாயைப்புதைக்கு மடநல்லீர்
மணிப்பொற் கபாடம் திறமினோ 69

வருவார் கொழுநரெனத் திறந்தும் வாரார்
கொழுநரெனவடைத்தும் திருகுங்குடுமி விடிவள
தேயும் கபாடம் திறமினோ 69                    [வும்

புகழேந்தி

1. பிழையொன்றிரண்டு பொறுப்பதன்றோ கடன் பேதையர்க்கே
2. இரவிகுலோத்துங்கன் வாசல் வந்தால்
தானே திறக்குநின் கைம்மலராகிய தாமரையே
3. நாட்டில் அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற
சொல்லும் உடையான் சராமன் ஊர்
4. செழியனையும் சேரனையும் சேரத்திறைகொள்
மொழியின் சுவை (நளவெண்பா)
5. மெய்த்திருவந்துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும்
ஒத்திருக்கும் உள்ளத் துரவோன்
6. ஞானக் கலைவாழ்நகர்
7. தெரிவன நூலென்றும் தெரியாதனவும்
வரிவளையார் தங்கண் மருங்கே — ஒருபோதும்
இல்லாதனவும் இரவே
வெஞ்சிலையே கோடுவன மென்குழலே சோருவன
8. சீதமதிக் குடைக்கீழ்ச் செம்மையறங் கிடப்ப
9. நாற்குணமும் நாற்படையா ஐம்புலனும்
நல்லமைச்சா ஆர்க்குஞ் சிலம்பே அணி முரசா
10. இவ்வளவிற் செல்லுங்கொல் இவ்வளவிற்காணுங்
கொல் இவ்வளவிற் காதல் இயம்புங் கொல்
11. சேவல் குயிற்பெடைக்குப் பேசும் சிறுகுரல்கேட்
டாவி யுருகி யழிந்திட்டாள்
12. அறங்கிடந்த நெஞ்சும் அருளொழுகு கண்ணும்
மறங்கிடந்ததிண்டோள் வலியும்
13. மன்னன் புயநின் வனமுலைக்குக் கச்சாகும்
14. பாவேய்ந்த செந்தமிழா மென்னப் பரந்ததே
15. கேட்ட செவிவழியே கேளாதுணர் வோட
ஓட்டை மனத்தோடுயிர் தாங்கி
16. நெற்றித் தனிக்கண் நெருப்பைக் குளிர்விக்கும்
கொற்றத் தனியாழ்க் குலமுதல்வன்

1. அழகு சுமந்திளைத்த வாகத்தாள்
2. தீராத காமத்தழலைத்தன் செம்மைபெறு நீரா
   லழித்து 86
3. பைந்தொடியா ளாவி பருகுவானிற்கின்ற
   அந்தி முறுவலித்த தாமென்ன அமைந்தபிறை
4. கானும் தடங்காவும் காமன் படைவீடு
5. பொடியாடி கொன்ற எல்லாம் பொய்
6. கோதை பெருங்கண்ணின் சிறுவிழிக்கு நோற்
   றிருந்த சேய்
7. செங்கழுநீர் மொட்டை
   அரவின் பசுந்தலையென்றஞ்சி இரவெல்லாம்
   பிள்ளைக் குருகிரங்கப் பேதைப்புள் தாலாட்டும்
8. ஒருவ ருடலில் ஒருவர் ஒதுங்கி
   இருவரெனுந் தோற்றமின்றி
9. முந்தை மறைநூல் முடியெனலாம் தண்குருகூர்ச்
   செந்தமிழ் வேதச் சிரமெனலாம்
10. இளம்பேய்க்கும் தோன்றுவிருள்
11. வண்டமிழ் வாணர்ப்பிழைத்த வான்குடிபோல்
12. காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
   பாதகன்
13. குறையாத கற்பினுள் கொண்டானுக் கல்லால்
   இறவாத ஏந்திழையாள்

ஔவை

1. ஈதலறம் தீவினை விட்டீட்டல் பொருள் எஞ்ஞான்
   காதலிருவர் கருத்தொருமித் – தாதரவு (றும்
   பட்டதேயின்பம் பரனை நினைந்திம் மூன்றும்
   விட்டதே பேரின்ப வீடு
2. மக்கள் யாக்கையிற் பிறத்தலுமரிதே
3. தெய்வமொருவனே
4. கொடைக்கடம் பூண்டு வாழ்வது பொருந்தா
   சாவது மினிதவர் [தாகிற்
5. ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன்றும்
   வார்த்தை பதினாயிரத் தொருவர் [புலவர்

6. பாடல் பெருனேல் பலர்மெச்ச வாழானேல்
7. புலனைந்தும் வென்ருன் தன்வீரமே வீரம்

பெரிய புராணம்

1. தெரிவரும் பெருமைத் திருத்தொண்டர் 6
2. செப்பலுற்ற பொருளின் சிறப்பினுல்
அப்பொருட்குரை யாவருங் கொள்வரால் 7
3. தன்னையார்க்கும் அறிவறியான் 11
4. வென்றி வெண்குடை அனபாயன் செய்யகோல்
அபயன் 22
5. தேசம் எல்லாம் விளங்கிய தென்திசை 46
6. தன்னுல்தன் பரிசனத்தால், ஊனமிகு பகைத்
திறத்தால் கள்வரால் உயிர்தம்மால் ஆனபயம்
ஐந்தும் காத்தறங் காப்பான் 121
7. கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினுர் 143
8. ஈர அன்பினர் யாதுங்குறைவிலர்
வீரம் என்னுல் விளம்பும் தகையதோ 144
9. தீதகன்றுலகம் உய்யத்திருவவதாரம் செய்தார்
149
10. வித்தகம் பேசவேண்டாம் பணிசெய்யவேண்டும்
187
11. அர்ச்சனை பாட்டேயாகும் 216
12. ஊனும் உயிரும் உருகும் அன்பால் 270
13. நன்புலனுகிய ஐந்தும் ஒன்றி நாயகன் சேவடி
எய்த 272
14 பேர்பரவை பெண்மையினில் பெரும்பரவை,
ஏர்பரவை 294
15. ஒருமையால் உலகை வெல்வார் 342:
16. திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக்கரையன்
17. கடல்சூழ்ந்த உலகெல்லாம்காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்கன்

18. மானமும் பொறையுந்தாங்கி மனையறம் புரிந்து
வாழ்வார் 356

19. நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்டபோதில்
அகப்பட்ட ஆர்வமுதல் குற்றம்போல் ஆயினர்
634

20. நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏற 752

21. தன்பரிசும் வினை இரண்டும் சாருமலம் மூன்றுமற
அன்பு பிழம்பாய்த் திரிவார் அவர் கருத்தின்
அளவினரோ 803

22. தடுத்தசராசரங்களெலாம் தங்கவரும்தங்கருணை,
அடுத்த இசையமுது 944

23. ஆறுமின்னிடைசூழ் மாலைப்பயோதரம் அசைய
வந்தாள் ஞாலநீடரங்கி லாடக்கா ரெனும் பருவ
நல்லாள் 949

24. ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ் 975
தமிழ் நூலின் விளங்கு வாய்மைச் செம்மைப்
பொருள் 979

25. தீயஎன்பன கனவிலும் நினைவிலாச்சிந்தை
தூய மாந்தர் 1129

26. அலகில் கலையின் பொருட்கெல்லை: ஆடுங்கழலே
1225

27. சிறிய பெருந்தோன்றலார் 1259

28. அடியார் செய்தனவே தவமாம் 1269

29. எழுதாத மறையளித்த எழுத்தறியும் பெருமான்
1605

30. பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல்
உன்னையென்றும் மறவாமைவேண்டும் 1781

31. உவமையிலாக்கலைஞானம் – சிவஞானம் 1973

32. சென்ற காலத்தின் பழுதிலாத்திறமும் இனி எதிர்
காலத்தின் சிறப்பும் 9562

33. ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்
துணையை வானத்தின் மிசையன்றி மண்ணில்
வளர்மதிக் கொழுந்தை 2631

34. ஞாலம் நின்புகழேயாகவேண்டும் 2643
35. புண்ணியப் பதிறைருண்டு 3012
36. சித்துவிகற்பங்களைந்து தெளிந்த சிவயோகத்தில் 3588
37. ஞானமுதல் நான்குமலர் நற்றிரு மந்திரமாலை 3594
38. காணுங் கண்ணுற் காண்பது மெய்த்தொண்டே 3598
39. செய்வினையும் செய்வானும் அதன்பயனும் கொடுப்பானும் 3645
40. எந்நிலையில் நின்றுலும் எக்கோலம் கொண் டாலும் மன்னிய சீர்ச் சங்கரன்தாள் மறவாமை 3646
41. அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய் நிகழ்குறியாஞ் சிவலிங்கம் 3648
42. மங்கையர்க்குத் தனியரசி எங்கள்தெய்வம் 4196
43. மெய்விரும்பிய அன்பர் விளங்குக 4287

சிவஞானபோதம் :

1. இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா (7)
2. ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தைநாடி - 9
3. ஏகனுகி இறைபணி நிற்க, மலமாயை தன்னெடு வல்வினையின்றே.
4. அயரா அன்பின் அரன்கழல் செலுமே-11
5. மாலறநேயம் மலிந்தவர் வேடமும் ஆலயம்தானும் அரனெனத் தொழுமே-12

திருப்புகழ் :

1. முத்தமிழடைவினை முற்படு கிரிதனில் முற்பட எழுதிய முதல்வோனே -1
2. இன்பரசத்தே பருகிப் பலகாலும் என்ற னுயிர்க் காதரவுற்றருள்வாயே -2

3. இருக்கு மந்திரமெழுவகை முனிபெற
வுரைத்த சம்ப்ரம சரவண பவகுக
இதத்த இங்கித மிலகிய அறுமுக எழில்வே
ளென்று –4

4. கறுக்கு மஞ்சன விழியிணை அயில்கொடு
நெருக்கி நெஞ்சற எறிதரு பொழுதொரு
கனிக்குளின் சுவை யமுதுகு மொருசிறுநகை
யாலே –6

5. கொஞ்சித்தமிழைப் பகர்வோனே
செஞ்சொற் புலவர்க் கன்புற்ற திருச்
செந்திற்குமரப் பெருமாளே –19

6. வீர அச்சுதனுக்கு நலற்புத மருகோனே -278

வில்லிபாரதம் :

வரந்தருவார் :

1. பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே
கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வைகை ஏட்டிலே தவழ்ந்த
பேதை –1

2. மூவரும் நெருக்கி மொழிவிளக்கேற்றி
முகுந்தனைத் தொழுத நன்னாடு –9

பாரதம் :

1. ஆக்குமா றயனும் முதல் ஆக்கிய உலகம்
காக்குமாறு செங்கண் நிறை கருணையங்
கடலாம் வீக்குமாறரனும் –1

2. கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சும்
சொல்லால் உருக்கி – 58

3. மாரனை மகுடம் சூட்ட வந்தது வசந்தகாலம் 90

4. கற்றவர்க்கும் நலம் நிரைந்த கன்னியர்க்கும்
வீரர் என்று யர்ந்தவர்க்கும் ஒன்று சாதி

5. மறுத்துரைப்பது கடனன்று மாந்தருக் கறத்
   தியல் ஆர்கணும் அமைதல் வேண்டுமால்
6. அருள் இல் இதயமும் நெறி இல் சரிதமும்
   அழகு இல் உருவமும்
7. நன்றறிவார் வீற்றிருக்கும் நான் மாடக் கூடல்
8. வெந்துருவம் இழந்த மதன் மீளவும் வந்திரதி
   யுடன் மேவுமாபோல்
9. பாராமல் நகையாமல் பாடாமல் ஆடாமல் ஆரா
   மம் தோறும் தங்கள் அவயவம் போல்வன
   கொய்தார் அணங்குபோல்வார்
10. மணத்தாலும் திருத்தகு நூல்வரம் பாலும்
    இனத்தாலும் தெரிந்து
11. புதல்வரில் ஒருசார் அன்பு தந்தையர்க்கில்லை
12. அடியும் ஆண்மையும் அழகும் வென்றியும்
    குலமும் இன்பமும் தேவும் சேரமடியுமால்
    மதியுணர்ந்தவர் சூதின்மேல் வைப்பரோ மனம்
13. என்னைத் தோற்று மனுநெறிகூர் இசையோன்
    தன்னைத் தோற்றனனே
    தன்னைத் தோற்றுத் தன்மனத்தளர்வால்
    என்னைத் தோற்றனனே
14. தழலோ என்னும் கற்புடைய தனிநாயகி
15. நாண முதலாம் நாற்குணனும் நண்ணும்
    கற்பும்
16. பிறர்க்குத் தொண்டாய் விட்டுச் சுரிகுழலைப்
    பின்னை தோற்க உரிமையினால் பெறுமோ
    என்று பேசீரோ
    எம்பிரான் முனிவுக்கு அஞ்சல் என்பதுபோல்
    இயைந்தது வசந்த காலமுமே
    ஆய்ந்த நூலறிஞர்க் கீந்த அரும்பொருள் என்ன
    மேன்மேல்
    வேந்தர்கோன் பகழி ஒன்று கோடியாய்
    விளைந்த தெங்கும்

தீண்டாத கற்புடைய செழுந்திரு
அந்தத்தில் முடியும் வகை அடியேற்குத்
　　　　　　　　　　தெரியுமோ ஆதிமூர்த்தி
ஆவதுகருதாகுகில், நாவது காவாகுகில் அவ
னுக்கா நடந்துபோரில் சாவது பழுது
மடந்தை பொன் திரு மேகலைமணி உகவே
மாசறத் திகழும் ஏகாந்த
இடந்தனில் புரிந்தே நானயர்ந்திருப்ப
எடுக்கவோ கோக்கவோ என்ருன்.

இரட்டையர் :

1. அப்பிலே தோய்த்திட்டடுத்தடுத்து நாமதனைத்
தப்பினுல் நம்மையது தப்பாதோ

2. கேட்ட வரமளிக்கும் கீர்த்தியுள்ள தெய்வங்காள்
கூட்டோடு மெங்கே குடிபோனீர்-பாட்டாகேள்
செல்கால மெல்லாம் செலுத்திஞேம் அல்காலம்
கல்லாஞேம் செம்பாஞேம் காண்

காளமேகம் :

1. இம்மென்னுமுன்னே எழுநூறும் எண்ணூறும்
அம்மெனவே ஆயிரம் பாட்டாகாதோ

2. பாணந்தான் மண்டின்ற பாணமே.

3. பெண்ணே,இடத்திலே வைத்த இறைவர் சடாம
குடத்திலே கங்கை யடங்கும்

4. காரென்று பேர்படைத்தாய் ககனத்துறும்போது
மோர் என்று பேர்படைத்தாய் முப்பேரும்
　　　　　　　　　　பெற்ருயே

5. ஆடிக் குடத்தடையும் ஆடும்போதே இரையும்
மூடித்திறக்கின் முகங்காட்டும் - ஓடுமண்டை
பற்றிப் பரபரென்னும் பாரிற் பிண்ணுக்கு
முண்டாம்
உற்றிடுபாம் பெள்ளௌனவே ஓது.

6. சீரங்கத்தாரும் திருவானைக் காவாரும்
போரங்க மாகப் பொருவதேன் - ஓரங்கள்
வேண்டாமிதெல்லரம் விகற்பந்தெரியாதோ
ஆண்டானும் தாதனுமானல்

சித்தர் :

1. வெட்ட வெளிதனைமெய் யென்றிருப்போர்க்குப்
பட்டய மேதுக்கடி - குதம்பாய்

2. தாவார மில்லைத் தனக்கொரு வீடில்லை
தேவார மேதுக்கடி - குதம்பாய்

## 12-ஆம் நூற்ருண்டு

இந்நூற்ருண்டினைக் காவிய காலம், உரைகால்ம் என்னலாம். கவிச்சக்கரவர்த்திகள் எனப் பேர்பெற்ற புலவர்களெல்லாம் இக்காலத்தே விளங்கினர். I, II, III குலோத்துங்கர்கள் இந்நூற்ருண்டில் இலங்கினர். இரண்டாம் இராசராசன் விக்ரமன்போன்ற சோழர் களும் சிறந்த இலக்கிய பாதுகாவலர்களாயிருந்த னர். சென்ற நூற்ருண்டுகளின் விளைவாக இந்நூற் ருண்டில் ஒருவித அரசியல் சமூக அமைதி இருந்துள் ளது. இது இந் நூற்ருண்டின் இலக்கியப்பணிகளுக்கு ஊக்க மூட்டுவதாயிருந்தது. புலவர்களிடையே ஏற் பட்ட போட்டியும் இத்தகைய பணிகளுக்கு ஒருவித உதவியாயிற்று.

இக்காலத்தில் புதிதாக வெளிவந்த பரணி பிள் ளைத்தமிழ் முதலிய பிரபந்தங்கள் பிற் காலத்திற்கும் நல்வழிகாட்டிகளாயின. சைவம் வைணவம் சைனம் ஆகிய எல்லாச் சமயங்களும் சமமாகவளர்ச்சி பெற் றன. கடவுளைவிட அரசர்களைப் போற்றும்:இலக்கியங் கள் பல ஏற்பட்டன. தமிழில் தலைசிறந்த இலக்கியப் படைப்புக்கள் பல இப்போது தோன்றின. இக்கால இலக்கியங்கள் வரலாற்றுக் குறிப்புக்கள் மிகவாக உடையவாயிருந்தன.

தமிழ் நாவலர் சரிதை, தனிப்பாடல் திரட்டு, தனிச் செய்யுள் சிந்தாமணி, பெருந்தொகை ஆகிய தொகைநூல்களிலுள்ள தனிப்பாடல்கள் பெரிதும் வர

லாற்றுத் தன்மையுடையனவாக விருக்கின்றன. இக் கால இலக்கியங்களுக்கு அவை மிகவும் ஆராய்ச்சித் துணையாயிருந்தன. காளமேகம், இரட்டையர், முத லியோர் வரலாற்றாராய்ச்சியில் இப்பாடல்கள் மிகவும் உண்மையாகின்றன.

இராமாநுசர் மெய்கண்டார் முதலிய பெரியார்கள் இக்காலத்தே இலங்கியுள்ளனர்.

ஜெயங்கொண்டார்:

இந்நூற்றாண்டின் இணையற்ற புலவர்களில் ஒரு வர் கலிங்கத்துப்பரணி பாடியவர். கவிச்சக்கரவர்த்தி யென ஒட்டக்கூத்தரால்பாராட்டப்பெற்றவர். பரணிக் கோர் ஜெயங்கொண்டான் எனத் தனிப்பாடலொன்று பகர்கின்றது. திருவாரூரையடுத்த தீபங்குடி என்பது இவர் ஊராகும். இது ஜைனர்களுடைய இருப்பிட மாகும்.

பரணியில் சைவக் கடவுளரையே இவர் வாழ்த்தி யிருப்பதால் இவரைச் சைவர் எனக் கொள்ளு தற்கிடமுண்டு. குலோத்துங்கனை வாழ்விக்குமாறு உமாதேவியை வேண்டுமிவர் முதற் குலோத்துங்கன் (1070–1118) காலத்தவராகவேண்டும். கி. பி. 1112 அளவில் கலிங்கப்போர் நிகழ்ந்திருக்க வேண்டுமென் பர் வரலாற்றாளர். அவ்வாறாயின் சில நூற்றாண்டுகள் கழித்து இந்நூல் இயற்றப் பெற்றிருக்கலாம்.

பதினோராம் நூற்றாண்டிலேயே பரணிகள் பல பாடப்பெற்றுள்ளன. ஆனால் பரணிகளுள் இது பேர்

பரவியதாகும். போர்ப்பிரபந்தங்களுள் இஃதொன்ரு கும். ஆயிரம் யானைகளைப் போரிற்கொன்ற வீரனின் வெற்றியைப்பாடுவது பரணியாகும். பரணி நட்சத்தி ரத்தன்று கொற்றவைக்குப் பலியிட்டு வென்ற வீரர்க் கெல்லாம் விருந்தளிப்பது பரணியாம். இராசராசன் முதலாம் சோழர் பலர் வீரத்தைப் பார்த்தபின் பாடியது கலிங்கத்துப்பரணி. சோழ அரசர் பாரம்பரியம் முதலிற் கூறப்படுகின்றது. தமிழர் வீரத்திற்கும் அவர்தம் பாட்டுத் திறத்திற்கும் பரணி ஓர் எடுத்துக் காட் டாகும்.

13–பாகங்களைக்கொண்ட இப்பிரபந்தம் ஒரு தனி நடையைக்கொண்டதாகும். இதற்குப்பின் நூற்ருண்டு களில் தத்துவக் கருத்துக்களை உருவகப்படுத்திப் பரணி நூல்கள்பல இயன்றன.

இவ்வாசிரியர் மேலும் தம்மூரைப்பற்றி தீபங்குடிப் பத்து என்ற பத்துப்பாடலமைந்த நூலும் இசையா யிரம் என்ற ஆயிரம் பாட்டாலான செட்டிகள் மேற் புகழும்பாடியுள்ளாரெனத் தெரிகின்றது.

### புகழேந்தி

சோழர் அரசவைப் புலவோருள் சிறந்த நால்வ ருள் புகழேந்தியொருவர். தொண்டை நாட்டு (களந்தை) பொன்விளைந்த களத்தூரைச் சேர்ந்த இவர் சோணுட்டுறையூர் முரணைச் சந்திரன்சுவர்க்கி யால் ஆதரிக்கப் பெற்றவர். செஞ்சியர்கோன் கொற் றந்தையைப்பற்றிக்கலம்பகம் பாடியவர். இவர் பாண் டியர் அவைப் புலவராயிருந்து அவன் பெண்ணுடன்

சீதனமாகச் சோழன் அரசவைவந்து அங்குப் புலவரா யிருந்தவர். அப்போதிவர்க்கும் ஒட்டக்கூத்தர்க்கும் ஏற்பட்ட போட்டிப் பூசல்களைப்பற்றித் தமிழ் நாவலர் சரிதைகள் பலவாருகக் கூறும். அவை முழுவதும் பொய்யெனற்கில்லை.

புகழேந்தி தம் தனிப்பாடல்களில் விக்ரமன் குலோத்துங்கன் பராக்கிரம பாண்டியன் ஆகியோ ரைக் குறித்துள்ளார். இவர்கள் 12–ஆம் நூற்ருண்டுத் தமிழரசர்கள். சிங்கை ஆரிய சேகரனையும் புலவர் தம் பாடலுள் குறிக்கிருர். பராக்ரம பாண்டியன் சிங்கள அரசனிடம் இக்காலத்துப் படைத்துணை வேண் டியதெல்லாம் வரலாற்றினுல் தெளிவாகின்றது. பாண் டியருக்கும் சோழருக்கும் இக்காலத்திருந்த பிணக்கே புகழேந்திக்கும் ஒட்டக்கூத்தருக்குமிடையே பிணக் குக்குக் காரணமாகியிருக்கலாம். இப்பிணக்கின் கார ணமாக இவர் பாடிய நூல்களும் பாடல்களும் மிகப்பல.

அல்லியரசாணிமாலை, பஞ்சபாண்டவர் வனவாச முதலிய பல எளிய நூல்களை இக்காலத்திவர் இயற்றி யிருக்கிருர். வித்வான்குறம் வைகுந்த அம்மானை முத லியவும் இவர் நூல்களாகக் கூறப்படுகின்றன.

நளவெண்பாவே இவர் நூல்களுட் சிறந்தது. 424 பாடல்களில் அரசவாழ்வும் காதலும் பற்றிய பொருள்களைப்பற்றி அழகாக எழுதப்பட்டது இச்சிறு காவியம். வெண்பாவிற் புகழேந்தி, உவக்கப் புகழேந்தி

யென்றெல்லாம் இதனுலிவர் பாராட்டப்பெற்ருர். மங்கை உடலுறுப்புகளுக்குரிய உவமைகளைத் தொகுத்த இரத்தினச்சுருக்கம் என்ற 71 பாடல் நூலும் இவருடையதாகும். வெண்பாவிலும் சிறந்த கற்பனையுடைய காவியங்களைச் செய்ய முடியுமென்பதை வெற்றியுடன் நிறுவியவர் புகழேந்தி. பாரதத்தைப் பலர் வெண்பாவிற்பாடி வெற்றிபெற முடியவில்லையென்பது இங்கு நோக்கத்தகும்.

ஔவை

தமிழ் இலக்கிய வரலாற்றில் எக்காலத்தும் பெண் புலவர்களுள் சிறந்தவர் ஔவையார். சங்க காலத்தொருவரும் பின்னர் சைவ சங்க காலத்தொருவரும் 12–ஆம் நூற்ருண்டில் ஒருவரும் ஆக ஔவையார் மூவராவர்.

இக்காலத்தவ்வை சைவ சமயப் பற்றுடையவரெனவும் சோணுட்டிற்குரியவரெனவும் தெரிகின்றது. தனிப் பாடல்களால் வைணவத்திற்கும் இவர் எதிரியல்லரென்பது புலனுகும். அகளங்கனை (விக்ரம சோழன்) ஒரு தனிப்பாடலில் இவர் குறிப்பிடலால் இவர் காலம் நன்கு தெளிவாகிறது. எனவே ஔவை புகழேந்தி ஒட்டக்கூத்தர் கம்பர் ஆகியோர் ஒரு காலத்தவரென்ற மரபு உண்மையாகக்கூடும். அகளங்கன் காலத்து இவர்கள் ஒன்ருகியுள்ளனரெனப் புலனுகிறது. ஒரு தனிப்பாடலால் ஔவை ஒட்டக்கூத்தரை மதிக்காமல் அவர் முன்னே காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தாரென்பதும் அவர் அப்போது கிழவி

யாயிருந்திருக்கலாமெனவும் தெரிகின்றது. ஔவை யென்பதே பாட்டி எனப்பொருளாகும்.

எளிய நடையில் தமிழிலுள்ள நீதிக் கருத்துக்களை யெல்லாம் சுருக்கமாகச் சொல்லி இளஞ்சிருருக்கெல் லாம் நல்லிலக்கியங்களைத் தந்துவிட்டார் ஔவை யார். வாக்குண்டாம் மூதுரையென்றே பெயர்பெறும். அது 30 பாடல்களும் நல்வழி 40 பாடல்களும் அடங் கியது. ஆத்திச்சூடி 56 வரிப் பாடல்களையுடையது. கொன்றைவேந்தன் என்று கீழ்க்கணக்குகளை யடுத் துக் குமரகுருபரர் முதலோர் காலத்துக்குமுன் நீதிகளை உணர்ச்சியுடைய சொற்களால் வடித்துத்தந்தவர் ஔவையார். அசதிக்கோவை பந்தனந்தாதி என்பன ஆதரித்த கொடையாளரைப் பற்றியவாகும். மற்றும் கல்வி யொழுக்கம், யோகக்குறள், பிடகநிகண்டு, கணபதி விருத்தம் முதலியவும் இவர் பாடியவாகக் கூறப்படும். இவற்றைத் தவிர 104 தனிப் பாடல் கட்கும் இவர் ஆசிரியராவார். புகழேந்தியினும் இறங்கி ஏழைகளுக்காகப் பாடுவதில் இவர் ஏற்றமுற்ருர். கூழுக்கவ்வை கூழுக்குப் பாடுபவர் என்றே பலராலும் அறியப்பட்டார்.

### சேக்கிழார்

பெரிய புராணத்தை இயற்றிய பேரருட் புலவரும் அமைச்சருமாயவர் சேக்கிழார். சோழன் அவையில் அமைச்சராய் அமைந்திருந்தவர். தொண்டை நாட்டு குன்றத்தூரில் பிறந்த இவர் இராமதேவர் எனப் பெயர் பெற்றவர். பின்னர் சோழனுல் உத்தமசோழப்பல்லவ

ராயர் என்ற பட்டமளிக்கப்பெற்றவர். சீவக சிந்தா மணியைச் சோழன் விரும்பிப் படிக்கக்கண்ட சேக்கிழார் மனம்வருந்தி அதுமனித காப்பியம் எனவே தேவ காப்பியங்களையே கேட்க வேண்டுமென்ன உடனே அரசனது வேண்டுகோட்கிணங்கப் பெரியபுராணமியற்றித்தந்தனர். இறைவனே உலகெலாம்என அடியெடுத்துக் கொடுக்கத் தில்லையில் வந்திருந்தியற்றி அதனை முடித்து அங்கேயே அரங்கேற்றிச் சோழனால் சிறப்புப் பெற்றனர். சுந்தரரின் திருத்தொண்டத் தொகையையும், நம்பியாண்டாரின் திருத்தொண்டரந்தாதியையும் அடிப்படையாகக் கொண்டது பெரிய புராணம். சேக்கிழாரின் சைவப்பற்றினையறிந்த சோழன் அவரை ஓய்வாகவிருந்து சிவத்தொண்டு செய்திருக்குமாறு வேண்ட அவ்வாறே தம் வாழ்நாளைக் கழித்தனர். அருண்மொழித்தேவர், தொண்டர் சீர் பரவுவாரென்ற சிறப்புப் பெயர்களும் இவர்க்குண்டு. இவர் இரண்டாம் இராசராசன் காலத்திலும் வாழ்ந்தமை கல்வெட்டால் அறியப்படும்.

அனபாயன், அபயன் என்ற பெயர்களை இவர்தம் காலத்தரசன் பெயர்களாகக் குறித்தலால் இவர் முதற் குலோத்துங்கன், இரண்டாம் குலோத்துங்கன் ஆகியோர் காலத்தவர் என்றாகும்.

அபயன் என்பது முதற்குலோத்துங்கனுக்கே கல்வெட்டுக்களில் பெயராகக் குறிக்கப்படுகின்றது. அனபாயன் திருப்பணிகளாகப் பெரியபுராணம் குறிப்பனவெல்லாம் இரண்டாம் குலோத்துங்கன் இயற்றியவாக

ஒட்டக்கூத்தரது குலோத்துங்கனுலாவால் உரைக்கப் படுகின்றன. எனவே அனபாயன் இரண்டாம் குலோத்துங்கனேயாவன்.

அப்பர், சம்பந்தர் முதலாம் 63 நாயன்மாரின் வரலாற்றினை 72பகுதிகளிலும், 4286பாடல்களிலும் இயம்புவது பெரிய புராணம். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கப் பாடிய இப்பாடல்கள் அதே காதலைக் கற்பாரிடத்தில் கனிவிப்பன. ஒழுகிய பாடல்களில் சிவப் பற்றினை உணர்த்தும் பாடல்கள் தேவாரத் திருமுறைகளின் விளக்கங்களாக அமைந்துள்ளன. ஜைனப் பரவலைத் தடுக்கவந்த இந்நூல் ஜைன தீர்த்தங்கரர் 63-பேரைப்பற்றிய மாபுராணத்திற் கீடாகச் செய்யப் பெற்றதென்பர். சிலப்பதிகாரம் போன்று இதனையும் தமிழ்நாட்டுக் (National Epic) காவியம் என்பர். சங்க வள்ளல்களுக்கிருந்த தியாகவுள்ளம் சைவ அடியார்களுக்குமிருந்தது. அத்தகைய மனமே காலந்தோறும் உலகினை அரசியல், சமூக, சமய அழிவுகளிலிருந்தும் காத்துள்ளது. அன்புடையார் என்புமுரியர் பிறர்க்கென்ற வாழ்வே பெரியபுராண அடியார் வாழ்வு. இவ்வாழ்வைத் தமிழகத்தில் அழியாமற்காத்ததே இவ்விலக்கியத்தின் திறன். பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய இக்கவிகளே சைவத்தை மற்றெந்த மதத்தினும் மேலாகத் தமிழகத்தே வளர்வித்தன, வாழ்வித்தன. வைணவர்க்குக் கம்ப இராமாயணம் போலச் சைவர்க்குப் பெரியபுராணம் பயன்பட்டு நிற்கின்றது.

ஒட்டக்கூத்தர்

சோழருடைய அவைப் புலவருள் சிறந்தவர் ஒட்டக்கூத்தர். இரண்டாம் குலோத்துங்கன் அவையில் கவிச்சக்கரவர்த்தியாக இவர் இருந்திருக்கிருர். விக்ரமன், குலோத்துங்கன், இராசராசன் ஆகிய மூவருலாப் பாடியிருத்தலால் அவர்கள் மூவர் காலத்தும் 12ஆம் நூற்றுண்டில் இலங்கியவர் இவராவர். காழி ஒட்டக் கூத்தர் என்ற தனிப்பாடலால் இவர் சீர்காழிப்பதியின ரெனத் தெரிகின்றது. இவர் செங்குந்த மரபினர். பாடல்களைக் குறிப்பிடட் கருத்துக்கு ஒட்டப் பாடிய தாலோ, அன்று வெட்டப்பட்ட செங்குந்தர் தலைகளை மீண்டும் ஒட்டப் பாடியதாலோ ஒட்டக்கூத்தர் எனப் பெயர் பெற்றுர். முதற் காரணமே பொருந்துவதாக லாம். கூத்தன் என்பது குடிப்பெயர்; சிவபெருமானின் பெயரை இவர் குடியினர் வைத்துக் கொள்ளுதல் மரபாகலாம்.

சேக்கிழார், ஒட்டக்கூத்தர் ஆகிய இருவரும் ஒரே அரசவையில்இருந்தும் பெருந்தன்மையுடன் ஒருவருடன் ஒருவர் மோதாமல் சென்றமையால் கூத்தர் சேக்கிழாரை எங்கும் குறிக்கவில்லை. சேக்கிழார் அமைச்சராகவே நடந்திருக்கிருர். மற்ற புகழேந்தி, கம்பர், ஔவை ஆகியோருடன் அடிக்கடி கூத்தர்க்கு மோதல்கள் ஏற்பட்டுள்ளன. அரசச் செல்வாக்கையெல்லாம் பயன்படுத்தி அவர்கட்கு ஆன மட்டில் தொல்லை கொடுத்திருக்கிருர். செங்குந்தரிட மட்டும் இவர் செல்வாக்குப் பயன்படவில்லை. ஒருமுறை அவர்களால் கொல்லப்படு நிலையுற்றுத் தக்கயாகப் பரணிபாடி

உயிர்தப்பினர். தோற்ற புலவர்களின் தலைகளைக் கொய்துவிடுதல் இவர் பழக்கம். கடைசியில் புகழேந்தியால் இவர் செருக்கடக்கப்பட்டது. கம்பனோடு போட்டியிட்டு இராமாயணம் பாடமுடியாமற் போன துண்மையாகலாம். கடைசியில் உத்திரகாண்டம் இவராலியற்றப் பெற்றதென்பர். அதுவும் பொருந்த வில்லை. வாணிதாதன் என்ற இவர்கள் காலத்து வாணியப் புலவனே அதனை இயற்றியிருக்கவேண்டும்.

பலரிடத்தும் அரசனிடத்தும்கூட இவர் அடிக்கடித் தகராறுகள் செய்து கொண்டு கடைசியில் தலைதப்பித் துக்கொண்டும் வந்திருக்கிறார் என்பது புலனாகின்றது. இவர் ஓரளவு வைணவத்திடம் காழ்ப்புடையவர். அது தக்கயாகப் பரணியில் காணப்படுகின்றது. அக் காழ்ப்பு விக்கிரமன் தி குலோத்துங்கன் ஆகியோரிடமும் இருந்துள்ளது. இருந்தும் ஒப்பற்ற கவித்திறத்தாலும் சிவபக்தியாலும் கூத்தர் நீண்டகாலம் சோழனால் ஆதரிக்கப்பெற்று வாழ்ந்திருக்கிறார். இவர் இறந்த போது வருந்தி ஔவை பாடியதாக ஒரு தனிப்பாடல் கிடைக்கின்றது.

இவர் நூல்களில் மூவருலாப்பற்றி முன்பே மொழியப்பட்டது. கோவை உலாப்பாடுதற்கு ஒட்டக்கூத்தன் என்றே பாடல் உள்ளது. குலோத்துங்கன் கோவை, பிள்ளைத்தமிழ், ஈட்டி எழுபது முதலியனவும் இவர் பாடியவை. தக்கன் யாகத்தைச் சிவபெருமான் அழித்து வென்றது பற்றியது தக்கயாகப்பரணி. இறைவனின் மேன்மையையும் பக்தியுணர்ச்சியையும் எடுத்துரைப்பது இப்பரணியாகும். வரலாற்று நூலாகவும்

இது மிளிர்கின்றது. இறந்த செங்குந்தரை எழுப்ப எழுதியது எழுப்பெழுபது. காங்கேயன் என்பான்மீது நாலாயிரக் கோவையும் இவர் பாடினுர். சரஸ்வதியந்தாதி யொன்றும் இவர் பாடியதாகக் கூறுவர். அரும்பாக்கம் காளிங்கராயன் என்பான்மீது அரும்பைத் தொள்ளாயிரம் பாடினுர். இவர் பக்தியும் பாடல்களும் இன்றளவும் தமிழகத்திற்குவழி காட்டியாயுள்ளன. பிற்காலப் பிரபந்தங்களுக்கு இவர் பிரபந்தங்கள் எடுத்துக்காட்டாயின வென்னலாம்.

**நெற்குன்ற வாணர்**

ஒட்டக்கூத்தருடைய நண்பர். திருப்புகலூர் அந்தாதி என்ற பிரபந்தத்தின் ஆசிரியர் I குலோத்துங்கனின் 49ஆம் ஆண்டு கல்வெட்டொன்று இவரைப்பற்றியதாகும். நம்பிகாளி என்ற புலவரின் நண்பர். புலவர்கட்கடிமை எனத் தம்மைப் பெருமிதத்துடன் கூறிக்கொள்பவர். தனிப்பாடல்களால் கூத்தருக்கும் இவர்க்குமிருந்த நட்பு புலனுகின்றது.

**கம்பர்**

கம்பன் பிறந்த தமிழ்நாடு எனக் கவி பாரதி மார்தட்டும் வகையில் தமிழின் ஈடும் இணையுமற்ற புலவர் கம்பர். சோழன்முதல் பலவரசர் அவைகளை அணி பெறச் செய்தவர் கம்பர். கம்பராமாயணம் அவர் தமிழ்மக்களுக் களித்த ஒப்பற்ற புதையலாகும்.

கம்பன் பிறப்புப்பற்றிய கருத்துக்கள் பல. வாணிதாதன் பாடலின்படி அவர் கம்பநாடர் எனவும்

கோயிற் பூசைசெய்தவர் எனவும்பெறப்படும். தேரழுந்தூர் நாட்டு மூவலூர் ஆதித்தன் மகனெனப் பல பாடல்கள் பேசுகின்றன. கம்பநாட்டுத் தலைவன் மகன். தாய்நாட்டில் தோன்றிய கலகத்தில் பூசாரி வீட்டில் அடைக்கலம் புகுந்தார் என்பதும் உண்மையாகலாம். இளமையில் கோயில் பூஜை செய்கையிலேயே தமிழ் அறிவினை வளர்த்துக்கொள்ள, அதனையறிந்த வெண்ணெய்ச்சடையவள்ளல் அவரை ஆதரிக்கத் தொடங்கியுள்ளார். இவர் ஏகம்பவாணன் முதலியவர்களாலும் ஆதரிக்கப் பெற்றுள்ளார். சோழர் பாண்டியர் அவைப்புலவராகவும் பிற்காலத்தில் பிரதாபருத்திரன் அவைப்புலவராகவும் அமர்ந்து வாழ்ந்திருக்கிறார். சோழன் விருப்பப்படி இராமாயணம் பாடத் தொடங்கி வெண்ணெயூரிலும் ஒற்றியூரிலும் இருந்து இக்காவியத்தினை எழுதினார். இடையிடையே பலபல தாசியரின் நட்புகள் இவரைத் தடுமாறச் செய்துள்ளன. வாணிதாதன் ஒட்டக்கூத்தர் முதலியோருடன் பூசலும் இவரை மிகவும் அலைத்துள்ளது. இந்நிலையில் இவர் சோழனுடனேயே பிணங்கிப்பல வின்னல்களையுற்றுக் கடைசியில் அவனம்பாலேயே வீழ்ந்திருக்கிறார். சோழன் மகள் காரணமாக அம்பிகாபதி கொல்லப்பட்டதும் கம்பர், மகள் காவிரி காரணமாகச் சோழன் மகன் கம்பரால் கொல்லப்பட்டதும் பற்றிய பல கதைகள் உள்ளன. கம்பரையும் புகழேந்தியையும் அலைத்த சோழனும் ஆதரித்த பாண்டியனும் ஒருவராகவே இருக்கவேண்டும். இராமாயணத்தை எழுதிய இவர் நீண்ட காலம் வாழ்ந்திருக்கவேண்டும்.

இவரையாதரித்த சடையவள்ளல் ஒட்டக்கூத்தரை யாதரித்த சங்கரன் என்பானின் மகன். கம்பர் காலத்திற்குத் தெளிவான குறிப்புக்கள் கிடைக்கின்றன. ஓரங்கல் ருத்திரனைத் தெளிவாக ஒரு பாடலில் குறிக்கிறார். அவன் காலம் 12ஆம் நூற்றாண்டு. குலோத்துங்கனை இவர் தம் தனிப்பாடலிலும் 'அபயன்' என இராமாயணத்தும் குறிக்கிறார். தியாகவினோதன் என்ற சோழ வீரனையும் தம் காவியத்தில் குறிக்கிறார். III குலோத்துங்கன் தியாகவினோதன் என்ற பட்டமுடையவன். அவன் காலத்தேயே மக்களும் நாடுகளும் தியாகவினோதன் என்ற பெயருடனிணைத்து வழங்கப்பட்டுள்ளன. அகளங்கனையும் குலசேகர பாண்டியனையுங்கூட இவர் குறித்துள்ளார்.

பாயிரப்படி கம்பராமாயணம் 7 காண்டங்களையும் 120 படலங்களையும் 12016 பாடல்களையுமுடையது. இவற்றுள் ஏழாவது உத்தரகாண்டத்தை விலக்கியே கணக்கிடவேண்டும். அமரகவியாகிய கம்பர் உலகிற் சிறந்த புலவரோடெல்லாம் ஒப்பிடப்பெறுவார். கம்பநாட்டாழ்வார் எனவே கூறப்பட்டவர். கல்வியிற் பெரியவர் எழுதிய காவியமும் பெரிய பெருமையுடையது. மானுடன் 'மனிதன்' வெல்வதற்காகவே மனிதப்பண்பு முழுமையடைந்து முற்றின்ப முறுவதற்காகவே கம்பர் கவி பாடினார். கம்பனைப்போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை என்பதுண்மையாகலாம். கம்பன்கரியன். கரியன்கரியமாலை விருத்தமென்னும் ஒண்பாவில் பாடியுயர்ந்தான். விருத்தப்பாவகை இவரால் வெற்றிபெற்றது.

கம்பராமாயணத்திற்கேற்பட்டுள்ள பாடபேதங்களைப் பார்க்கும்போது இக்காவியத்தைப்போலப் புலவராலும் பெருமக்களாலும் மிகவாகப் பயிலப்பட்ட நூல் வேறில்லை யெனத் தெரியவரும். கம்பராமாயணமும் பெரியபுராணமும் (இன்றளவும்) பின்னைய நூற்றாண்டுகளில் பெருநூல்களும் சிறுநூல்களும் பாடப்பெறுதற்கு வழிகாட்டிகளாகியுள்ளன.

சரசுவதி அந்தாதியும் சடகோபரந்தாதியும் இவர் பாடிய நூல்கள். வேளாண்மையைப் போற்றியது ஏரெழுபதும் திருக்கை வழக்கமும். சிலையெழுபது வில்லையும் அம்பையும் வீரத்தையும் பற்றியது. மும்மணிக்கோவை யொன்று பாடியதாகத் தனிப்பாடல் கூறும். இவற்றைத்தவிர இவர்பாடிய தனிப்பாடல்கள் 70.

**அம்பிகாபதி:**

கம்பர் மகனே இக்கவியாவார். அம்பிகாபதிக் கோவை பாடியவர். மகனே என இரங்குகிறூர் கம்பர் இவர் இறப்பில். கம்பராமாயணத்தைப் பாராட்டிய கவியொன்றும் அம்பிகாபதியால் ஆகியுள்ளது.

அருமையும் நயமும் அள்ளிச் சொரியும் பாடல்கள் இவர் தம் கோவைப் பாடல்கள். கம்பரின் மகன் என்றற்கேற்ற தகுதி இவர்தம் தனிப்பாடல்களிலும் கூடக் காணப்படுகின்றது.

**நம்பியகப்பொருள்:**

நாற்கவிராச நம்பி என்பவரால் இயற்றப்பெற்றது. தொண்டை நாட்டுப் புளியங்குடிச் சைனராகிய இவர்

ஆசு முதலிய நாற்கவிகளிலும் ஆற்றல் படைத்தமை யின் நாற்கவிராசராயினர்.

இந்நூலின் உரையால் இதன் காலம் பாண்டியன் குலசேகரனின் 12-ஆம் நூற்றுண்டெனத்தெரிகின்றது. அகத்தைப் பற்றி ஐந்தியலாக 252 சூத்திரங்களில் எழுதப்பட்டது இந்நூல். இன்றுவரைத் தொல்காப் பியத்திற்குப் பதிலாக மாணவர் பலர்க்கும் பயிலப் பயன்படுவது; எளிதும் சுருக்கமுமானது. இறையனர கப் பொருளிலும் ஒருவகை விரிவுடையது.

தண்டி:

தண்டியலங்காரம் இயற்றியவர். அணியிலக்க ணங்களில் தொல்காப்பியத்திற்குப் பதிலாகப் பயிலப் படும் எளிய நூல் இதுவாகும். பிற்கால விரிவுகளே யெல்லாமுடையது. தில்லையைச் சேர்ந்த நடன ஆசி ரியர்; அம்பிகாபதியின் மகன் எனப்படுபவர். கம்பர் மகன் அம்பிகாபதியின் மகன் இவர் எனக்கருதுவாரு முளர். இவர் மேற்கோள்பாடல்களில் அனபாயனை அடிக்கடிப் புகழ்தலால் இவர் இரண்டாம் குலோத்துங் கன் காலத்தவராகலாம். இது தண்டியின் வடமொழி அணியிலக்கணமொழிபெயர்ப் பன்றென்பர் அறிஞர். 123 சூத்திரங்களும் 3 இயல்களும் உடையதிந்நூல். வீரசோழிய உரையில் இந்நூல் அடிக்கடி எடுத்துக் காட்டப் படுகின்றது.

குணவீரபண்டிதர்:

நேமிநாதம் வெண்பாப்பாட்டியல் இரண்டன் ஆசிரி யரும் இவரேயாவார். தொண்டை நாட்டுக் களத்தூர்

ஜைனர் இவ்வாசிரியர். பாட்டியலின்பாயிரம் திரிபுவன தேவனுகிய இரண்டாம் குலோத்துங்கனைக் குறிக்கின்றது. நேமிநாதம் இயற்றியதால் இவர் பெயர் நேமிநாதர் எனவிருந்திருப்பின் இவர் ஒட்டக்கூத்தர் காலத்தவராவார்.

சின்னூல் என்ற நேமிநாதம் வெண்பாவினுல் இயன்ற இலக்கணம். நன்னூலுக்குப்பின் நிலையிழந்தது. 100 பாடல்களில் பிரபந்தங்களின் இலக்கணங்களைக் கூறுவது வெண்பாப்பாட்டியல். பயிலவும் ஆராயவும் பயன்படும் நூலாய்விட்டது பாட்டியல்.

பொய்யாமொழிப்புலவர்:

தஞ்சையரசன் தஞ்சைவாணன்மீது கோவைபாடியவர். அக்கோவை நம்பியகப்பொருள் மேற்கோட் பாடல்களாகியுள்ளது. அருணகிரியார் தம் திருப்புகழில் இவரைக்குறிப்பிடுகிருர். எனவே 15-ஆம் நூற்ருண்டுக்கு முற்பட்டவர்; ஔவையும் பொய்யாமொழியும் பாடியதாகத் தனிப்பாடல் ஒன்றுள்ளது. இதனுலிவர் இந்நூற்ருண்டினராகலாம். மலைநாடுவென்ற பாண்டியனைக் கோவை குறிப்பிடுகின்றது. அவன் 13-ஆம் நூற்ருண்டின் குலசேகரன் என வரலாற்றறிஞர் கூறுவர். இவர் 11-ஆம் நூற்ருண்டவர் என்ற கருத்து பொருந்தவில்லை.

முருகனை முட்டை யென்று பாடியருள்பெற்ற புலவர் இவராவார். மற்றும் பல அருட்செயல்களை இவர் பாண்டியனிடத்தில் நிகழ்த்தியுள்ளார். தொண்டை நாட்டுறையூரினராகிய இவர் சிவனருளையும் நிரம்பப்

பெற்றவர். சீனக்கன் என்ற வள்ளலிடம் உயிர் நண்பராய் உள்ளங்கலந்த உறவினராய் வாழ்ந்த இவர் அவ்வள்ளல் இறந்தபோது அவருடன் தாமும் உயிர் நீத்தாரென்பர். பாண்டிக் கோவைக்கும் திருக்கோவைக்கும் பின்னர் இஃதொரு சிறந்த இலக்கியமாக நின்று நிலவுகிறது.

*அடியார்க்கு நல்லார்:*

சிலப்பதிகாரத்திற்குரை யெழுதிய ஜைன ஆசிரியர். உரைகாரருள் சிறந்ததோர் இடமுடையவர். நிரம்பையூரினராய பொப்பண்ணகாங்கேயனுல் ஆதரிக்கப்பெற்றவர். இப்பொப்பண்ணன் முதல் குலோத்துங்கன் காலத்து விஷ்ணு வர்த்தனன் (1111–1141) என்ற அரசனிடம் அமைச்சனுக இருந்தானென அறிஞர் கூறுவர். அடியார்க்கு நல்லார் கலிங்கத்துப்பரணியிலிருந்து அடிக்கடி மேற்கோள் தருகின்ருர்.

வஞ்சிக்காண்டமுழுவதற்கும் மற்றும் ஐந்து காதைகளுக்கும் அவருரை கிடைக்கவில்லை. அரங்கேற்றுகாதை யுரையொன்றே அவர்தம் பணிக்குப் போதுமானது. தமிழர்தம் நாடகக்கலையின் பழமையும் பெருமையும் இதனுல் வெளிப்படுகின்றன. தெளிவும் அளவுமுடையது இவருரை. அடிக்கடி நல்ல நயங்களும் நுட்பங்களும் இதனில் காணப் பெறுகின்றன. தொல்காப்பிய உரையாசிரியர் வரிசையில் வைத்தெண்ணத்தக்கவர் அடியார்க்கு நல்லார்.

இவருரை பரிமேலழகர் உரைக்கொப்பான பெருமையுடைய தென்னலாம். நச்சினுர்க்கினியரின் சிந்தாமணி உரையையும் இதற்கொப்பிடலாம்.

### இளம்பூரணர்

தொல்காப்பிய முழுவதற்கும் முதலில் உரைகண்டவர் இளம்பூரணர். அடியார்க்கு நல்லாரும் மயிலைநாதரும் இவரை ஏதமின் மாதவர் என்பதால் இவர் ஜைனர் என்பதும் அடியார்க்கு நல்லார்க்கு முந்தியவரென்பதும் புலப்படும். முதலுரை கண்டமையின் இவர் உரையாசிரியரென்றே அனைவராலும் உரைக்கப் பெற்றார். அட்டாலும் பால்சுவையின் என்ற ஔவையின் பாடலை மேற்கோள் காட்டுமிவர் 12ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்திருக்கலாம். இவர் 11ஆம் நூற்றாண்டிறுதியிலும் இருந்திருக்கலாம்.

பழைய மரபுகளையும் பழைய இலக்கிய இலக்கணங்களையும் குறிப்பிட்டெழுதுமிவர் தொல்காப்பியத்தின் உண்மைப் பொருளை எளிதாகவும் இனிதாகவும் சுருக்கமாகவும் உரைத்துள்ளார். இவருரையை விரித்தும் விளக்கியுமே பின் வந்தவர்கள் எழுதினர். இளம்பூரணரிடத்தில் அவர்கள் அனைவரும் பெருமதிப்பு வைத்து எழுதுகின்றனர். உளங்கூருரையாய இளம்பூரணம் என இவருரை பாராட்டப்பெறுகின்றது.

### வைணவ உரையாசிரியர்கள்

### இராமாநுசர்

நாலாயிரப் பிரபந்த வியாக்யானங்களுக்குப் பேருக்க மளித்த இராமாநுசர் வைணவத்தின் ஆசாரியத் தலைவர். வியாக்யானங்களை விரிவாக விவாதித்த வகையிலும் ஒரு சில தனியன் பாடல்களைப் பிரபந்தத்திற்களித்த வகையிலும் இவர் சிறந்த இலக்கியத்

தொண்டு செய்தவராவர். கி. பி. 1017 ஏப்ரல் 4-ல் இவர் ஸ்ரீபெரும்புதூரில் பிறந்தவர். 1137 வரை (II குலோத்துங்கன் காலம்) இவர் 120 ஆண்டுகள் இவ்வுலகில் விளங்கி வீற்றிருந்ததாகக் கூறுவர். இளமையிலிருந்தே பல இன்னல்களைக் கடந்து வியத்தகு செயல் பல புரிந்து தலைமைக்குயர்ந்தவர். பெரிய நம்பி என்ற ஆசிரியரிடம் பாடங் கேட்டவர். திருவாய்மொழியை ஆசிரியர்களிடத்தில் முறையாகப் பாடங் கேட்டவர். காஞ்சி, மைசூர், திருமலை, காஷ்மீரம், பதரிகாச்சிரமம் முதலிய திருப்பதிகளைக் கண்டவர். மைசூர் விஷ்ணுவர்த்தனனைச் சிறந்த அடியானாக்கியவர். கடைசியில் திருவரங்கத்தில் இருந்து திருநாட்டிற்கெழுந்தருளியவர்.

திருக்குருகைப் பிரான் பிள்ளானைத் திருவாய்மொழி 6000 படி எழுதுவித்தவர் இவரேயாவர். இவரையே ஒரு வியாக்யானம் எழுதுமாறு கேட்க வேறொருவர் எழுதுவதே சிறந்ததெனக் கருதியே எம்பெருமானார் இந்த ஏற்பாட்டைச் செய்தாரென்பது மரபு. இவர் வியாக்யான விவாதம் செய்ததுபற்றிப் பெரியவாச்சான் பிள்ளை குறிப்பிடுகிறார். குருகைப்பிரான் பிள்ளான் 1060ல் பிறந்தாரென்பர். ஒரு பரமரகசியமும் பிள்ளான் எழுதியுள்ளார்.

பட்டர்

இராமாநுசரின் சிறந்த மாணவர். கி. பி. 1112ல் காஞ்சிக்கடுத்த கூரத்தில் பிறந்தவர். நஞ்சீயர் என்ற வேதாந்தியை வைணவராக்கியதே இவர் செய்த

அருஞ்செயலாகும். வியாக்யானங்களிலே இவருடைய நுட்பமான கருத்துக்களைப்பற்றி பிரபந்த வியாக்யான உரைகாரர்கள் அடிக்கடி எடுத்துக்கூறிப் பாராட்டுவர். திரிபுவன தேவராயனுக்கு (II குலோத்துங்கன்?) அருள்புரிந்தவர். இவர் குறுகிய காலமே (30 – 40 ஆண்டுகள்) இவ்வுலகில் இலங்கினரென்பர். திருமங்கை மன்னனின் மைவண்ண நறுங் குஞ்சிக்கு இவரது விரிவுரையைப் பலரும் உலகறியப் பாராட்டுவர்.

### திருவரங்கத்தமுதனார்

சிறந்த வைணவக் கவியும் அறிஞருமாவார். இராமானுசரின் சீடர் கூரத்தாழ்வானின் மாணவர் இவர். மூன்றும் குலோத்துங்கன் (1178—1216) காலக் கல்வெட்டொன்று மூங்கிற்குடி திருவரங்கத்தமுதன் என்பவன் திருவரங்கத்திலும் திருக்கோயிலூரிலும் வாழ்ந்தவனென்கிறது. வன்னியமலையமான் என்பவன் சில நிலங்களை வாங்கி அமுதனரிடம் ஒப்படைத்துத் திருவரங்கக் கோயிற் பணிக்காக்கிக் கொள்ளச் சொல்லியுள்ளான். தனியன் பாடல்களும் இவரை மூங்கிற்குடியமுதனென்றே தெரிவிக்கின்றன. 100 பாடல்களில் இராமானுச நூற்றந்தாதி இயற்றியவர் இக்கவி. 1137ல் இவர் மறைந்ததாகக் கூறுவர். நாலாயிரப் பிரபந்தத்தில் இவ்வந்தாதி இணைக்கப்பட்டு வழங்குவதிலிருந்தே இவர் பெருமை புலனாகும். திருப்பதிக்கோவையொன்றும் இவர் செய்துள்ளார்.

### சைவ நூலாசிரியர்கள்

#### திருவுந்தியார்; திருக்களிற்றுப்படியார்

சைவ சித்தாந்தத் தத்துவ நூல்களில் முதன்மையானவை எனக்கூட மொழியப் பெறும் இந்நூல்கள்

இக்காலத்தேதான் இயன்றனவென்பர். திருவுந்தியார் திருவியலூர் உய்யவந்த தேவ நாயனாராலும் திருக்களிற்றுப் படியார் திருக்கடவூர் உய்யவந்தாராலும் இயற்றப்பெற்றது. திருவியலூர் உய்யவந்தாரின் மாணவர்க்கு மாணவர் திருக்கடவூர் உய்யவந்தாரென்பர். முன்னவர் வடநாட்டவர் என்பர். கடவூர் நாயனார் களிற்றுப்படியாரைச் செய்து தில்லை நடராசப் பெருமானது யானைமுகப்படியிடைவைக்க அதனை அக் களிறெடுத்துப் பெருமானிடம் தந்ததால் களிற்றுப்படியார் என்றாயிற்றென்பர். முன்னவர் கி. பி. 1148-லும் பின்னவர் 1178-லும் விளங்கியதாக ஒரு மரபுள்ளது. திருவுந்தியார் 45 பாடல்களாலும் திருக்களிற்றுப்படியார்100 பாடல்களாலும் ஆயிற்று. உந்தியாரின் விரிவே களிற்றுப்படியார். உந்தீபற என்ற விளையாட்டுடன் கலந்து தத்துவத்தைப் புகட்டுவது உந்தியார். இவை மெய்கண்டார் முதலியோரைக் குறிக்காமல் சேந்தனாரைக் குறிக்கின்றன.

### மெய்கண்டதேவர்

சிவஞானபோதம் என்ற சைவ சித்தாந்த முதல் தத்துவ நூலைத்தந்த ஞானியாவார். சுவேதவனன் என்ற இயற்பெயர் உடையவர். பெண்ணாகடத்தில் சைவவேளாளராகப் பிறந்து வெண்ணெய்நல்லூரில் அம்மான் வீட்டில் வளர்ந்தவர். கடந்தையில் அவர் சமாதிஉள்ளது. சம்பந்தரையும் பட்டரையும் போன்று இளமையிலேயேஞானவொளியுடன் திகழ்ந்தவர். பரஞ்சோதிமுனிவர் என்ற சிவஞானியின் அருளால் தமிழில் சிவஞானபோதம் இயற்றியவர். வெண்ணெய்நல்லூர்

பொல்லாப் பிள்ளையாரிடம் நல்லருளும் சிவ ஞான போதச் சூர்ணிகையும் பெற்றதாகக் கூறுவர். சகலாகம பண்டிதரென்ற அருணந்தி சிவாச்சாரியாரை ஆட்கொண்டருளியவர். அவருடன் திருவதிகை மனவாசகங்கடந்தார் முதலிய 49 மாணவரையுடையவர்.

இவர் மாணவர் மனவாசகங்கடந்தாருடைய கல்வெட்டு 12-ஆம் நூற்றுண்டில் கிடைப்பதால் மெய்கண்டார் 12 அல்லது அதற்கு முந்திய நூற்றுண்டினர் என்ற கருத்தே உறுதிப்படக்கூடும்.

சிவபெருமானிடம் பரபக்தியைப்பற்றிக் கற்பிக்கும் இவர்தம் நூல் சரியை கிரியை யோக அறிவுடையவர்களுக்கு ஞான நெறியை விளக்குவதாகும். 4 இயல்களையும், 12 சூத்திரங்களையுமுடைய இந்நூல் சுருக்கமும், ஆழமும் உடையது. சூத்திர மேற்கோள்களையும் இவரே தந்துள்ளார். தேவாரத் திருமந்திரத்தின் உட்பொருள்களே சிவஞானபோதத்தின் உட்பொருள் என்பர் உணர்ந்தோர். உலகப் பேரறிஞர் பலராலும் பாராட்டப்பெற்றது இவ்வுயர் தத்துவ நூல்.

**மனவாசகங்கடந்தார்**

மெய்கண்டாரின் மாணவர் உண்மை விளக்கம் என்ற தத்துவநூலை உதவியவர். திருவதிகை விக்ரம சோழன் கல்வெட்டொன்றில் (1124 கி. பி.) மனவாசகங்கடந்தார் சில நிலங்களை வாங்கிப் பள்ளீச்சுரம் சிவன்கோயில் பூசைக்குதவியதாகக் கூறுகின்றது. ஊரும், பெயரும், சமயமும் ஒன்றி வருதலால் இவ்விரு மனவாசகங்கடந்தாரும் ஒருவரே யாவரென்பது பொருத்தமேயாகும்.

*அருணந்தி சிவாச்சாரியார்*

மெய்கண்டாரினும் வயதில் மூத்தவர். ஆனல் மெய்கண்டாரின் மாணவர். மெய்கண்டாரால் ஆணவ மடங்கப்பெற்று ஆட்கொள்ளப்பட்டவர். திருத்துறையூர் என்றும், சண்பைநகர் என்றும் இவர் ஊரைக் கூறுவர். சண்பைநகரில் பின்பு வாழ்ந்திருக்கலாம்.

இவர் இயற்றிய சிவஞானசித்தியார் சிவஞானபோதத்தின் விரிவாகும். சித்தியின் மேலும் நூலில்லை என்னும்படியான பெருமையுடையது. 301 + 228 என 529சூத்திரங்களையும் இரண்டுபாகங்களையும் (சுபக்கம் பரபக்கம்) உடையது. பரபக்கம் 14 - சமயங்களின் கோட்பாடுகளையும், சைவத்தின்மேன்மையையும் கூறுவது. விரிவிலும் எளிமையிலும், தெளிவிலும் சிவஞானபோதத்திலும் சித்தி பயனுடையதாகப் பலராலும் பயிலப்படுகிறது. கேள்வி விடை வடிவில் 20 பாடல்களாலான இருபா இருபஃதும் இவரானது.

*சங்கரசோழன் உலா*

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சங்கரசோழன் மூன்ரும் குலோத்துங்கன் காலத்தவன் எனப்படுகிருன். இது ஒட்டக்கூத்தரின் இரு உலாக்களைக் குறிப்பிடுகின்றது.

## 13—14 ஆம் நூற்றுண்டுகள்

இந்நூற்றுண்டுகளை உரையாசிரியர்தம் நூற்றுண்டுகளென இயம்பலாம். தொல்காப்பியம், திருக்குறள் நன்னூல் ஆகியவற்றின் உரையாசிரியர்களும் தத்துவ ஞானிகளும் சைவ வைணவ தத்துவ உரையாசிரியர்களும் இக்காலத்தில் இலங்கியுள்ளனர்.

அரசியலில் சோழர்கள் மறைந்து சிற்றரசர்களின் செல்வாக்கு நாட்டிலோங்கியது. மகம்மதியர்கள் தமிழகத்தில் புகத் தொடங்கினர். :இந்நிலை இலக்கிய வளர்ச்சியைச் சிறிது தடைப்படுத்தியது. கம்பராமாயணம் போன்ற பெருநூல்கள் ஏற்பட முடியவில்லை. வெளியாருக்கெதிராகத் தமிழர்கள் தம் இலக்கியத்தையும் தத்துவத்தையும் கற்றுக்கொள்ளத் தொடங்கினர். இதன் விளைவே இலக்கண இலக்கிய உரைநூல்களும் சமயதத்துவ நூல்களும். இவற்றுல் நாட்டின் தனித்தன்மையும் சொந்தப் பண்பும் மறையாமற் போற்றப்பட்டன. இலக்கிய உலகையும் சமூகத்தையும் அவை செம்மைப்படுத்தின. காவிய உரைகள் தமிழ்க் கலைகளுக்குப் புத்துயிரும் புது விளக்கமும் தந்தன. இக்காலத்தும் ஜைனர்கள் நன்னிலையிலிருந்து நீதி நூல்களையும் புராணங்களையுமெழுதினர்.

அறநெறிச்சாரம் முதலிய நீதிநூல்கள், நம்பி திருவிளையாடல், மேருமந்தர புராணங்கள் இரட்டையர் கலம்பகங்கள் ஆகியவை இந்நூற்றுண்டுகளில் தோன்றியுள்ளன.

**பௌத்த சமண இலக்கிய வளர்ச்சி :**

முதலிடைச் சங்க நூல்களைப் பற்றித் தெளிவாகத் தெரியாமையின் அவற்றிலிருந்த பௌத்த சமணக் கருத்துக்களைப் பற்றித் தெரிந்து கொள்ள முடியவில்லை. தொல்காப்பியரைச் சமணர் என்னும் வரலாற்றுசிரியரும் உளர். கி. மு. நூற்றுண்டுகளிலேயே இச்சமயங்கள் தென்னகத்தே பரவிவிட்டன. கடைச் சங்கப் புலவர்களின் பெயர்கள் சிலவற்றைப் பௌத்த சமணச் சார்புடையவாகச் சிலர் கருதுகின்றனர். ஆனால் தெளிவாகக் கீழ்க்கணக்குகளிலும் இரட்டைக் காப்பியங்களிலுமே இச்சமயக் கருத்துக்கள் மிகவாகக் கலந்துள்ளன. கொல்லாமை, புலாலுண்ணுமை முதலாம் அறங்கள் இவர்களாலேயே பெரிதும் வற்புறுத்தப் பெற்றன. அறங்கூறும் சாக்கியரும் சமணரும் என்றே இவர்கள் எதிரிகளாலும் ஏத்தப் பட்டனர். கீழ்க்கணக்குகளிற் பெரிதும் அறநூல்கள் என அணைவரும் அறிவர். நாலடியார், பழமொழி, ஏலாதி, சிறுபஞ்சமூலம் ஆகியவற்றின் ஆசிரியர்கள் ஜைனர்களாக அறியப் பெறுவர்.

பௌத்தர்களைவிடச் சமணர்கள் மிகுந்த செல்வாக்கும் தமிழ்ப் புலமையும் பெற்றிருந்திருக்கலாம். மணிமேகலை, வீரசோழியம் தவிர்த்த மற்ற சிலவாய பௌத்தத் தமிழ் இலக்கியங்களும் கிடைக்கவில்லை. உரையாசிரியர்கள் காட்டும் மேற்கோட் பாடல்கள் ஓரிரண்டாலேயே இவற்றைப்பற்றி அறியமுடிகின்றது. குண்டலகேசி பௌத்த தத்துவங்கள் பொதிந்த நூலாகத் தெரிகின்றது. அதனை மறுத்தெழுதியதே ஜைன

ரது நீலகேசி காப்பியம். நீலகேசியுரையால் பிம்பசார கதை யென்பதொன்று தெரிகின்றது. கி. மு. வில் ஆண்ட பிம்பசார மன்னனை அவன் மகன் அஜாதசத்துரு கொன்ற வரலாற்றைத் தெரிவிப்பதே இப் பௌத்த கதை. தந்தை தாயரிடத்தில் கொள்ள வேண்டிய அன்பினையும் நன்றியையும் அறிவிப்பதாகலாம் இக்கதை. ஆசிரியத்தில் அமைந்ததாகலாம் இந்நூல். சித்தாந்தத் தொகை, திருப்பதிகம் அபிதர்மாவதார முதலியன பௌத்த தத்துவங்களை விளக்குவனவாம். வீரசோழியம் புத்தமித்திரர் எழுதிய இலக்கணம் 11-ஆம் நூற்றுண்டில் இயன்றது.

ஜைனரின் வரலாறும் பௌத்தரதைப் போன்றே காலத்தைப் பொருத்தமட்டில் இணைந்ததேயாகும். சிலப்பதிகாரம், சிந்தாமணி, வளையாபதி, சூளாமணி நீலகேசி முதலாம் காப்பியங்கள் ஜைனச் சார்புடையன. மற்றும் புராணங்களையும் பிரபந்தங்கள் செய்யுட் கதைகள், இலக்கண இலக்கிய உரைகள் நிகண்டுகள் ஆகியவற்றையும் இவர்கள் அளவில்லாதனவாகச் செய்தனர். கணிதம், சோதிடம், மருத்துவ முதலிய அறிவியல் துறைகளிலும் இவர்கள் வல்லவராய் நூல் பல செய்துள்ளனர். திரையக்காணம்; பரிபாடை முதலாம் நூல்கள் இவ்வகையவாகலாம். யாப்பருங்கலம் தொல்காப்பிய முதலியவற்றின் உரைகளில் இத்தகைய நூல்கள் (இறந்தனவாயினும்) குறிக்கப்பெறுகின்றன. இலக்கிய உரைநடையில் மணிப்பிரவாளத்திற்கு வழி காட்டியன இவர்கள் 9-10ஆம் நூற்றுண்டுகளில் எழுதிய ஜைன புராணங்களென்னலாம். 11-15 நூற்றுண்டுகளில் வளர்ந்த வைணவ வியாக்

யான நடைக்கெல்லாம் இப்புராண நடை ஓர் தூண்டுதல் என்னலாம். யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, களவியற் காரிகை யாகியவற்றில் குறிக்கப் பெறும் சுமார் 100 நூல்களுள் யாப்பியல் மற்ற இலக்கணங்கள் பற்றிய மிகுதியான நூல்கள் ஜைனராலேயே இயற்றப்பெற்றிருக்கலாம்.

13–14 நூற்ருண்டுகள் வரையில் வெளிப்படையாக இலக்கியப்பணி செய்த ஜைனர் பலர் 15–ஆம் நூற்ருண்டில் சித்தர் மரபினராகிவிட்டிருக்கலாமெனக் கருதுவோர் பலர்.

*பேராசிரியர் :*

தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்கு உரையெழுதியவர்களில் பெருமையுடையவர் பேராசிரியர். இவர் மதுரையைச் சேர்ந்தவரென்பர். நல்லறிவுடைய தொல்பேராசான் என நச்சினர்க்கினியர் இவரைப் புகழ்கிருர். எனவே நச்சினர்கினியர்க்குக் காலத்தால் முற்பட்டவர். பேராசிரியர் குறுந்தொகைக்கு உரையெழுதியதாகவும் கடைசி 20 பாடல்களுக்கு உரை எழுதாமல் அவர் விட்டுவிட அதனை நச்சினர்க்கினியர் எழுதி முடித்ததாகவும் பாடலொன்றுள்ளது. இதனல் நச்சினர்க்கினியர் பேராசிரியர்க்கண்மைக் காலத்தவராக விளங்கியிருக்கலாம். இவர் பெயரைக்கொண்டு இவரை ஆசிரியர்க்கெல்லாம் ஆசிரியராக விளங்கியவரென அறிஞர் கருதுகின்றனர்.

தண்டியலங்காரப் பாடல்களையும் ஒளவையின் ‘கொன்றை வேய்ந்த’ என்ற பாடலையும் இவர் மேற்

கோள் காட்டுதலால் இந்நூல்களுக்குரிய கி. பி. பன்னிரண்டாம் நூற்ருண்டுக்கடுத்தோ அண்மையிலேயோ வாழ்ந்திருக்க வேண்டும்.

திருக்கோவையார் உரையாசிரியரையும் யாப்பருங்கல விருத்தியிற் குறிக்கப்பெறும் மயேச்சுரரையும் பேராசிரியராகவே பலர் கருதினர். இவையெல்லாம் பழைய ஆராய்ச்சிகள். பேராசிரியர் எனப் பெயர் முதல் சிறப்புப்பெயர் கொண்டோரையெல்லாம் ஒரு காலத்தில் இப்பேராசிரியருடன் இணைத்தனர். ஒட்டக்கூத்தர் காலப் பேராசிரியர் நேமிநாதரையும் இவ்வாறே கருதினர்.

தொல்காப்பியத்தின் பிற்பகுதியாகிய உவமை மெய்ப்பாடு முதலாம் இயல்களுக்கே இவர் உரை கிடைக்கின்றது. ஆனல் அகத்திணை முதலாம் இயல்களுக்கும் உரையெழுதியதாகவே ஆசிரியர்தம் உரையிற் குறிக்கிருர். பேராசிரியருடன் பல விடங்களில் வேறுபட்டாலும் நச்சினுர்க்கினியர் அவர்க்கு மாறுபட்டவரல்லர். பேராசிரியம் பெருமிதமும் அளவும் தெளிவுமுடையது.

சேனுவரையர் :

ஆனுவியல்பிற் சேனு வரையர் எனவும் வடநூற் கடலை நிலை கண்டுணர்ந்த சேனுவரையர் எனவும் பாராட்டப்பெறும் இவர் தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்குரை எழுதினுர். சேனுவரையர் என்பது சேனைத்தலைவர் எனப் பொருளாகும். இவரோ இவர் குடும்பத்தினரோ சேனைத்தலைவர்களாக இருந்திருக்க

லாமென அறிஞர் கருதுவர். ஆசிரியன் படைத்தலை வன் சேனவரையனென மயிலைநாதர் குறிப்பது இவ ரையோ தெரியவில்லை.

இவர் எடுத்துக் காட்டுக்களையெல்லாம் பாண்டி நாட்டு வழக்குக்களிலிருந்து தருதலால் இவர் பாண்டி நாட்டவராக இருக்கலாமெனக் கருதப்படுகிறது.

நச்சினர்க்கினியர் தம் உரையில் சேனவரைய ரைக்குறித்தலால் இருவரும் ஒரு காலத்தவராகவோ அன்றி சேனவரையர் நச்சினர்க்கினியர்க்கு முற்பட்ட வராகவோ இருந்திருக்கலாம். கி. பி. 1276 பாண்டி யன் மாறவர்மன் குலசேகரன் கல்வெட்டொன்று ஆத் தூர் சேனவரையர் என்பவர் தமக்கு ஆசிரிய மாண வப் பரம்பரையாக வந்த சொத்துக்களை யெல்லாம் அவ்வூர்க்கோயிலுக்குக் கொடுத்துவிட்டதாகக் கூறு கிறது. ஆசிரிய பரம்பரையில் வந்த சொத்தென்ப தால் இக்கல்வெட்டுள் காணும் சேனவரையரும் உரை யாசிரியரும் ஒருவரேயெனப் பலர் கருதுகின்றனர். இஃதுண்மை யானல் இவர் 13–ஆம் நூற்ருண்டுக்குரி யவர். இஃது பலவகையிலும் பொருந்தி வருகின்றது.

இவர்தம் உரை நுட்பமும் ஆழமும் உடையது. வடமொழியறிவைத்துணைக் கொண்டு உரை யெழுதி யோருள் பரிமேலழகருடன் இவரும் சிறந்தவராவர். உரையாசிரியராகிய இளம்பூரணர் போன்ருேரிடம் இவர்க்குக் கருத்து வேறுபாடிருப்பினும் மதிப்பு பெரி திருக்கின்றது. சொற்றிறம் மிகுதியுடைய இவர் உரை முன்னைய உரை மரபின் அறிவினை யுடையார்க்கன்றி

மற்றோர்க்குப் புரிந்துக் கொள்ளுதல் அருமையாக விருக்கின்றது.

**நச்சினார்க்கினியர் :**

உரையாசிரியருள் மிகப் பெரும்பணியாற் சிறந்தவர் நச்சினார்க்கினியர். உச்சிமேற்புலவர் கொள் நச்சினார்க்கினியர் எனப் போற்றப்படும் இவர் மதுரைப் பாரத்துவாசி கோத்திரத்தவர். பாயிரத்தாலும் உரைமேற்கோள்களாலும் இவர் சைவர் எனத் தெரிகின்றது. சிந்தாமணிக்கு உரையெழுதுகையில் சைனர்களுடன் மிகவும் பழகி ஜைனக் கோட்பாடுகளை அறிந்தார் எனப்படுகின்றது. பத்துப்பாட்டு, கலித்தொகை, தொல்காப்பியம், சிந்தாமணி குறுந்தொகையில் 20 பாடல்கள் ஆகியவை இவரால் உரை காணப்பட்டன. குறுந்தொகை உரை கிடைக்கவில்லை.

'குடம்பை தனித்தொழிய' என்ற குறளுரையைப் பற்றிப் பரிமேலழகரை இவர் நேரிலேயே பாராட்டினார் என்ற நிகழ்ச்சி உண்மையானால் இவர் பரிமேலழகர் காலத்தவர். முன்பு பேராசிரியர்க் கண்மையராகலாம் எனக் கூறப்பட்டது.

இத்தனை மிக்க உரைகளை எழுதுதற்கு இவர் நீண்டகாலம் வாழ்ந்திருக்க வேண்டும் எனத் தெரிகின்றது. இலக்கிய இலக்கணங்களில் இவர் அறிவும் நினைவும் அளவிடற்கரியன. ஒன்றில் ஒன்றைத் தொடர்பு காட்டி உரை கூறுவதில் வல்லவர். அருமையும் நன்மையுமுடைய உரை நடை இவருடையதாகும். இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர்,

ஆகியோரை மனதிற் கொண்டும் அவர்களைக் குறிப்பிட்டும் இவர் எழுதுகிறார். சேனாவரையரால் காட்டவியலாத மேற்கோளை இவர் காட்டினாரென்பர்.

தெய்வச்சிலையார்:

தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு இவரோர் உரையெழுதியுள்ளார். 'மந்திரம்' என்பதை விளக்கியிருப்பது கொண்டு இவரும் சைவர் எனத் தெரிகின்றது. இளம்பூரணர் முதலிய மூவர் உரையைக் கொடுத்தபின் இவர் உரையைக் கூறுகிறாராகலின் அவர்கட்குப் பிற்பட்டவரெனத் தெரியும். வைணவப் பேருரையாளரைப் போல இவர் இத்தனை கிரந்தங்களாலானதென ஒவ்வோரிடத்திலும் கூறுகிறார். எனவே இவர் பதினான்கு அல்லது அதனிலும் சிறிதடுத்த நூற்றாண்டுகளில் விளங்கியிருக்கக் கூடுமெனத் தெரிகின்றது.

நன்னூல்:

பிற்காலத்தே பெயர்பெற்று விளங்கும் நன்னூல் என்னும் இலக்கணத்தின் ஆசிரியர் பவணந்தி முனிவராவர். இவர் காஞ்சிக்கடுத்த ஜனகாபுரத்தவர் சீயகங்கன் என்பவரால் ஆதரிக்கப் பெற்றவர். இக்கங்கவரசன் காலம் கி. பி. 1178-1216. இவர் ஜைனரென்பது நூலின் கடவுள் வாழ்த்தாலேயே தெரிகின்றது. திரு. பூர்ணலிங்கம் பிள்ளையவர்கள் 1205-ல் நன்னூல் இயற்றப்பெற்றதென்பர்.

எழுத்தும் சொல்லும் என இரண்டு பிரிவுகளையுடைய இவ்விலக்கணம் தொல்காப்பியத்தை நினைவு

கொண்டதாயினும் வடமொழிக் கூறுகளைப் பல விடங்களில் பின்பற்றியுள்ளது. கற்போர்க் கெளிதாகச் சுருக்கமும் தெளிவுமுடையது இந்நூல்.

*மயிலை நாதர் :*

நன்னூலுக்குரை கண்ட முதலாசிரியர் என்னலாம். மயிலை நாதர் என்பது மயிலாப்பூரில் கோயில் கொண்ட ஜைனர் கடவுளின் பெயராகும். இவ்வுரை ஜைன மேற்கோள்களால் நிறைந்திருப்பதாலும் கங்கனகன் மார்பன் எனக் கங்கனைப் போற்றுவதாலும் இவர் மேற்கூறிய சீயகங்கன் காலத்து வாழ்ந்த ஜைனராக வேண்டும். இளம்பூரணரை உரையிற் குறிக்குமிவர் இளம்பூரணருக்கண்மையராகக்கூடும். இவர் போன்ற முந்தை உரையாசிரியர்களால் பல அரிய தமிழ் இலக்கிய இலக்கணங்களைப் பற்றிய குறிப்புகள் கிடைக்கப் பெறுகின்றன. ஐம்பெருங்காப்பியம், கீழ்க் கணக்குகள் பாட்டும் தொகையும் பற்றிய விவரங்கள் இவரால் தரப்படுகின்றன.

*பரிதி*

திருக்குறள் உரையாசிரியர்களில் ஒருவர். உரையால் இவர் சைவரெனவும் ஆனல் சமயப் பொதுமையுடையரெனவும் தெரிகின்றது. உலகப் பேச்சு வழக்கு நடையும் தெளிவுமுடையது இவரதுரை. அடிக்கடிப் பல அனுபவக் குறிப்புக்களை எழுதுவார். குறளுரையாளர் பெயர்ப் பாடலின்படி பரிமேலழகருக்கு முந்தி இவர் வருகிருர். இவரும் மணக்குடவருக் கடுத்துப் பன்னிரண்டாம் நூற்ருண்டில் வாழ்ந்திருக்கலாம்.

தஞ்சாவூர் – திருப்பருதி நியமத்தில் கோயில்கொண்ட இறைவன் பரிதியென்ற பெயரினராதலால் இவரை அவ்வூர்க் கருகினர் என அறிஞர் சிலர் கருதுகின்றனர். இது ஆராய்ச்சிக்குரியது.

பரிப்பெருமாள்

மற்ருேர் குறளுரையாசிரியர் பாண்டிய நாட்டுத் தென்செழுவையைச் சேர்ந்தவர். செழுவைப் பாண்டியர்கள் பதின்மூன்ரும் நூற்ருண்டில் இருந்துள்ளனர். மணக்குடவர் உரையைப் பலவிடங்களில் மறுக்கும் இவர் அவருக்குப் பின்னவராக வேண்டும். உரைப் பாயிரப் பாடலால் இவர் மொழிநூலும் காமநூலொன்றும் எழுதியதாகத் தெரிகின்றது. குறள் உரையாசிரியர்களெல்லாம் மறைந்தபின் தாம் உரையெழுதியதாக இவர் குறித்தலால் குறளுக்குக் கடைசி உரையாசிரியருள் ஒருவராகப் பரிமேலழகருக்கு முந்தி இவர் விளங்கியவராகவேண்டும். சொல்லுக்குச் சொல் உரையெழுதாமல் பொழிப்பாகச் சில குறிப்புக்களே உரையாசிரியர் எழுதுகிருர். அவை மிகவும் தெளிவுடையனவாக உள்ளன.

காளிங்கர்

பரிமேலழகருக்கடுத்தோ அண்மையிலோ வாழ்ந்திருக்கலாம் எனக் கருதக்கூடியவர் காளிங்கர். இவர் ஜைனரென்பது உரையால் தெரிகின்றது. இவர் உரை மிகப் பலவிடங்களில் பரிமேலழகருரை போலவும் அவருரையையும் விளக்குவதுபோலவும் விரிவாக அமைந்துள்ளது. பாடல் இவரைக் கடைசியில்தான் வைக்கிறது.

பரிமேலழகர்

அரிமேலழகுறூஉம் அன்பமை நெஞ்சப் பரிமேலழகர் குறளுக்குரை செய்தாருள் குறிக்கத்தக்கவராகக் கருதப்படுகிருர். பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ உரையெல்லாம் பரிமேலழகன் தெரித்த உரையாமோ என்பர். பரிமேலழகர் என்பது காஞ்சியில் கோயில் கொண்ட பெருமாளுக்குரிய திருப்பெயர். இவர் வைணவராகவும் தெரியப்பெறுகின்ருர். உரைப்பாயிரத்தாலும் தனிப்பாடல்களாலும் இவர் காஞ்சிக்கும் பாண்டிநாட்டு ஒக்கைக்கு முரியவராகக் கூறப்படுகின்ருர். இரண்டிடத்தும் இவர் வாழ்நாளின் பகுதிகளைக் கழித்திருக்கக் கூடும். ஒக்கையில் பிறந்து பிற்காலத்தில் காஞ்சியில் தங்கியிருக்கவேண்டும்.

கி. பி. 14ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த உமாபதிசிவம் பரிமேலழகர் உரையைத் தனிப்பாடலொன்ருல் பாராட்டுகிருர். எனவே இவர் உமாபதிசிவத்திற்கு முன்பு விளங்கியிருந்தாராதல் வேண்டும். காஞ்சி வரதராசர்கோயில் கல்வெட்டொன்று கி. பி. 1272க்குரியது காஞ்சிவண்துவரைப்பெருமாளான பரிமேலழகியதாதர் நந்தவனத்தைப்பற்றிக் கூறுகின்றது. அப்பரிமேலழகரைக் குறளுரையாசிரியருடன் ஒன்ருக்குகின்றனர். காலத்தோடொத்துவரலால் இப்பதின்மூன்ரும் நூற்ருண்டுக் கடுத்துப் பொருந்துவதாகலாம்.

இவர் திருமுருகாற்றுப்படைக்கும் பரிபாடலுக்கும் உரையெழுதியதாகப் பலர் கருதுவர். குறளுரைக்கும் இவ்வுரைகளுக்கும் பலவகையில் வேறுபாடிருப்பதாலும் இவர் எழுதிய உரைப்பாயிரங்களில் ஒன்றிலே

னும் இவர் எழுதிய மற்றவுரைகளைப் பற்றிய குறிப் பின்மையாலும் இக்கருத்து மேலும் ஆராய்தற்குரிய தாகும்.

இவருரை நிறைந்த தமிழ்மொழி வடமொழிப் புல மைத் துணையுடன் எழுதப்பெற்றது. தர்மசாத்திர அர்த்தசாத்திர அறிவு இவர்க்கு மிகுதி. நடைதெளி வும் சிறிதருமையுமுடையது. பாட்டிடையிட்ட உரை நடையில் இவர் பேர்பெற்றவர். மேற்கோள்களை எடுத் துக் காட்டுவதில் மேம்பாடுடையவர். முன்உரையா ளரின் வேருன பாடங்களையும் உரைகளையுங்கொண்டு இவர் எழுதும் திறம் படைத்தவர். அளவும் பெருமித மும் உடையது இவர்தம் உரையாகும். மிகுதியாகப் பயிலப்படுவதும் பலரது கருத்து முரண்பறிற்ய குறை_காண்டலுக்கு முட்பட்டது இவ்வுரையாகும்.

**நஞ்சீயர்:**

வைணவப் பிரபந்தப் பேருரையாளரில் நஞ்சீயர் இக்காலத்தில் இலங்கியுள்ளார். மைசூர் கங்கோரை யைச் சேர்ந்த வேதாந்தியாகிய இவரைப் பட்டர் வைணவராக்கிப் பணிகொண்டார். இராமாநுசரின் ஸ்ரீபாஷ்யத்தின் எண்ணிக்கையைப் பின்பற்றித் திரு வாய் மொழிக்கு 9000 படி இயற்றினர். பெரிய திரு மொழி; திருப்பள்ளியெழுச்சி; கண்ணிநுண் சிறுத் தாம்பு ஆகியவற்றிற்கும் அவர் உரை செய்துள்ளமை தெரிகின்றது. கலி 4214க் கீடான கி. பி. 1113ல் அவர் பிறந்தாரெனப் பரம்பரை கூறுகிறது. இவர் நூருண்டு களுக்குமேலும் வாழ்ந்த குறிப்புள்ளது. கி. பி. 1206-ல்

பிறந்த நம் பிள்ளைக்கு இவர் குருவாகையாலே அது பொருந்தலாம்.

**நம்பிள்ளை :**

திருவரங்கத்திற்கருகான நம்பூருக்குரியவர். திருவாய்மொழிக்குப் பேருரைச் சொற்பொழிவாற்றிய இவர்தம் உரையே மாணவர்களால் 36000 படியென்னும் ஈடாகத் தொகுக்கப் பெற்றது. இது வியாக்யானங்களுக்குள்ளேயே மிக்க ஏற்றமுடையதாகக் கூறப்படும். திருவிருத்தம் பெரியதிருமொழி திருப்பள்ளியெழுச்சி ஆகியவற்றிற்கும் இவர் உரையியற்றியுள்ளார். ஆசிரியர் கூறிய உரைநூலை ஆற்ருேடு விட்டு அதனை அப்படியே மனத்திலிருந்து எழுதியவர். நம்பிள்ளை ரகசியம், நாலுவார்த்தை ஆகியவையும் இவருடைய நூல்கள். ஒரு மரபுப்படி இவர் கலி 4308 பிரபவ ஆண்டுக்கு நேரான கி. பி. 1207 நவம்பரில் பிறந்தார். பெரியவாச்சான் பிள்ளை முதலாகிய ஒரு பெரும் உரையாசிரியர் பரம்பரையையே இவர் உருவாக்கிவிட்டார். இவரை நடுவாக வைத்தே வைணவ வியாக்யான ஆசிரியர்கள் பாராட்டப்படுகின்றனர்.

**பின் பழகிய பெருமாள் ஜீயர் :**

நம்பிள்ளையின் மாணவராகிய இவர் குருபரம்பரைப் பிரபாவம் 6000 படி எழுதினுர். இந்நூல் ஆழ்வார், ஆசாரியர் ஆகியோரின் வரலாறென்னப்படுவது. இவ்வகைப் பட்ட 3000 படி 12000 படி ஆகியவற்றிலும் இஃதொருவகை ஏற்றமுடையது.

வடக்குத்திருவீதிப்பிள்ளை :

நம் பிள்ளையின் மாணவரும் பிள்ளைலோகாசாரியரின் தந்தையுமாவர். முன் கூறிய நம்பிள்ளையின் பேருரையாகிய 36000 படியை எழுதி நூலாக்கியவர் இவரே. இலட்சம் கிரந்தங்களில் இவர் ஒரு பேருரையெழுதியதாகவும் நம்பிள்ளையே அதனைச்செல்லுக்கிரையாக்கி விட்டதாகவும் பரம்பரை கூறும். அவ்வுரை இருந்தால் ஆராய்ச்சிக் கெவ்வளவோ பயன்படும். அட்டாட்சர தீபிகை முதலான இரு நூல்களையும் இவர் எழுதியதாகத் தெரிகின்றது. சிறந்த நூல்களை மட்டுமன்றி தம்மில் அறிவுடைய பிள்ளைகளையும் உலகிற்கீந்த உயர்ந்தோர் இத்திருவீதிப் பிள்ளையாவார்.

பெரியவாச்சான்பிள்ளை :

குடந்தை செங்காநல்லூரைச் சேர்ந்த இவர் நம்பிள்ளை மாணவருட் புகழ் பெற்றவர். நாலாயிரப் பிரபந்தத்திற்கு 24000 படி எழுதியவர். வைணவத் தத்துவங்களென்னும்படிப் பல நூல்களை இவர் இயற்றினர். வேதாந்த தேசிகர் காலத்தவர் இவர் என்பர். இவர் பேருரை பலராலும் பயிலப்படுவதும் எடுத்துக்காட்டப்படுவதுமாகும். மரபுப்படி இவர் கலி 4329க்கான 1227 ஆகஸ்டு 7–ஆம் தேதி பிறந்தார். ஆழ்வார் பாடல் அனைத்திற்கும் இவர் உரையெழுதினர். அதனில் பெரியாழ்வார் பாடல் உரையிற் சில பகுதிகள் மறைந்து போக அதற்கு மணவாளமாமுனிகள் உரை கண்டு நிரப்பினர்.

அழகிய மணவாள ஜீயர் :

இவர் பெரியவாச்சான் பிள்ளை மாணவர். திருவாய் மொழிக்கு 12000 படி உரை கண்டவர். மற்றும் 11 நூல்களையும் இவர் எழுதினர்.

**பிரம்மதந்திர யதீந்திர சுவாமி :**

வேதாந்த தேசிகரின் மாணவர். குருபரம்பரை 3000 படி எழுதினர். ஆழ்வார்களின் பிறப்பு பற்றிய பல நுண் குறிப்புக்களை இது தருகின்றது. வேதாந்த தேசிகர் வரைப்பட்ட ஆசாரியரின் வரலாறுகளை விவரிக்கின்றது. இதனை வடகலை மரபிற்குரிய வரலாறென்பர்.

**வேதாந்த தேசிகர் :**

வடகலை வைணவ ஆசாரியராகிய இவர் காஞ்சியைச் சேர்ந்தவர் ; சிறந்த கவிஞரும் தத்துவ ஞானியுமாவார். இவர் ஓரிரவில் ஆயிரங்கவிகளைப் பாடினரென்பர். இவர் கலி 4370 சுக்லவருடம் (8—9—1269) பிறந்ததாகக் கூறுவர். கி. பி. 1268—1369ல் இவர் வாழ்ந்திருந்தாரென்பர் ஆராய்ச்சியாளர். தேசிகப் பிரபந்தம் என்ற இவர் நூற்றொகுப்பில் 24 தமிழ் நூல்கள் உள்ளன. அவற்றுள் அமிர்தாஞ்சனி, அட்டகிரி மான்மியம் முதலியன அடங்கும். திருவந்திபுர முதலிய பல திருப்பதிகளில் இவர் தங்கியிருக்கிருர். எண்ணற்ற விந்தைகளையும் வாதங்களையும் செய்து வென்றிருக்கிருர். வடக்குவீதிப் பிள்ளையின் பிள்ளைகளுடன் சமய முரண்பாடு கொண்டிருந்தார் எனத் தெரிகின்றது. செயற்கரும் செயலாற்றலுடைய இவர் இன்று தென்னுட்டு வைணவர் பாதியினர்க்கு ஒப்பற்ற தலைவராக விளங்குகிருர்.

**பிள்ளைலோகாச்சாரியார்**

வடக்கு திருவீதிப் பிள்ளையின் இரு கண்களாய புதல்வர் இருவருள் ஒருவர். இவரும் வேதாந்த தேசி

கருடன் வாதிட்டவர் என்பர். இவர் பிறந்தது குரோ தன ஐப்பசி (18—10—1265) எனத் தெரிகின்றது. 1264—1327ல் இவர் வாழ்ந்திருக்கக் கூடுமென்பர். அட்டாதச ரகசியமென்ற 18 நூல்களின் ஆசிரியர் இவர். சீவனபூஷணம், தத்துவத்திரயம், முமூட்சுப்படி ஆகிய இவர் நூல்கள் வைணவ தத்துவப் பேரொளிக ளாகப் பயிலப்படுகின்றன. இவர் மாணவர் விளாஞ் சோலைப் பிள்ளையென்பவர் ஏழு நூல்களை எழுதினர்.

### அழகியமணவாளப்பெருமாள் நாயனர்

பிள்ளைலோகரின் தம்பி கி. பி. 1264க்கும் 1327க்கு மிடையே இவர் வாழ்ந்திருக்கவேண்டும். பிள்ளைலோ கர் காலத்தேயே இவர் மறைந்துவிட்டாரெனத் தனிப் பாடல் ஒன்று கூறும். பிரபந்த உரை கூறுதலில் பேராற்றலுடையவர் இவர் ஆழ்வார்களிடத்தில் அளப்பரும் ஈடுபாடுடையவர். ஆசார்ய இருதயம் என்ற நூலால் நம்மாழ்வாரின் திருவாய்மொழியைத் தமிழ் மறையென நிறுவியவர் இவராவர். திருப்பாவை உரை, மாணிக்கமாலை அருளிச் செயல் இரகசியம் முத லியவும் இவர் எழுதியனவேயாம். ஆசாரிய இருதய மும் ஸ்ரீ வசனபூஷணமும் வைணவ தத்துவங்களின் இருகண்கள் போன்றனவாம்.

### மறைஞான சம்பந்தர்

திருக்களாஞ்சேரி மறையவர் வகுப்பைச் சேர்ந்த இவர் கடந்தை, மருதநகர் ஆகியவற்றிற் குரியவரென உமாபதிசிவம் கூறுகிருர். இவர் உமாபதி சிவத்தின் ஆசிரியரெனத் தெரிகின்றது. ஆசிரிய மாணவ

வொழுக்கம்பற்றிய சைவ சமய நெறி என்பது இவரது நூலாகும். இவர் வெண்ணெய் நல்லூர் மெய்கண்டாரை யன்றி வேறொருவரையும் தம் நூலில் வணங்காமையால் இவர் பதினாறும் நூற்றாண்டைய மறைஞான சம்பந்தரோடொன்றுகார்.

*உமாபதி சிவாசாரியார் :*

தத்துவஞானியும் சிறந்த சீர்திருத்த வாதியுமாகிய இவர் சிதம்பரம் கொற்றவன்குடிக்குரியவர். இவர் சங்கற்ப நிராகரணத்தை கி. பி. 1313-ல் இயற்றியிருந்தலால் 14-ஆம் நூற்றாண்டுக்குரியவர். இவர் 1324-ல் மறைந்ததாகப் பரம்பரையொன்றுள்ளது. சிவஞான போதம் சித்தியார் ஆகியவற்றைத் தொகுத்த 100 பாடல்களாலாகிய சிவப்பிரகாசமே இவரது சைவ சித்தாந்த தத்துவமாகும். உண்மை விளக்கம், திருவருட்பயன், வினாவெண்பா, கொடிக்கவி முதலியவற்றுடன் சிவப்பிரகாசமும் சேர்ந்த சித்தாந்த அட்டக நூல்கள் இவருடையவெனப்படும். இவற்றைத்தவிர சேக்கிழார் புராணம் திருமுறைகண்ட புராணம் கோயிற்புராணம் ஆகியவையும் இவரால் இயற்றப் பெற்றன. இவருடைய புராண நூல்கள் வரலாற்றுச் சிறப்புடையன. தத்துவ நூல்கள் சுருக்கமும் தெளிவுமுடையன; மிகுதியாகப் பயிலப் படுவன. சைவ சித்தாந்த ஆசிரியர்க்குள்ளேயே இவர்க்கோர் தனியிடமுண்டு.

*நம்பி திருவிளையாடல்*

அல்லது வேம்பத்தூரார் திருவிளையாடல் எனப் படும் இப்புராணத்தைப் பெரும்பற்றப் புலியூர் நம்பி

என்பவர் எழுதினர். மதுரைக்கடுத்த செல்லிநகர் அந்தண வகுப்பைச் சேர்ந்த இவர் தில்லை நம்பி எனவும் அழைக்கப்பட்டார். கி. பி. 1361ல் இயன்ற ஒரு கல்வெட்டின்படி திருப்பத்தூர் கோயில் அர்ச்சகர் ஒருவர் பெரும்பற்றப்புலியூர் நம்பியென்பவருக்கு நிலங்களை அளித்ததாகத் தெரிகின்றது. இந்நம்பியும் திருவிளையாடல் ஆசிரியரும் ஒருவரேயனக் கருதுகின்றனர்.

திருவிளையாடற் புராணங்களுள் இதுவே முதலாகும். கல்லாடத்தில் திருவிளையாடற் கதைகள் சுருக்கமாகக் குறிக்கப் பெற்றுள்ளன. நம்பியின் இப்புராணமே பரஞ்சோதியாருக்கும் துணைபுரிந்திருக்கவேண்டும். புராணங்கள் பொதுமக்கள் இலக்கியங்களாகலின் அவை யாவருக்கும் ஆர்வமூட்டுகின்றன.

வாமன முனிவர்

ஜைனரின் மேருமந்தர புராணத்தை இயற்றியவர்; மல்லிசேனர் எனவும் பெயருடையவர். திருப்பருத்திக் குன்றத்துக் கல்வெட்டுக்கள் இரண்டனுல் வாமன முனி புஷ்பசேனரின் "ஆசிரியரெனவும் புஷ்பசேனர் கி. பி. 1387 அளவில் ஆண்ட புக்கராஜரின் ஆசிரியரெனவும் தெரிகின்றது.

நீலகேசி உரையாசிரியராகிய வாமனருடன் இவரையும் ஒன்ருக்குவோர் பலர். ஆனுர் நீலகேசி உரையாசிரியரே இப்புராணத்தை 'எம்மோத்து' என்பதால் அக்கருத்து பொருந்தாது. 12 சருக்கங்களையும் 1406 பாடல்களையும் கொண்ட இப்புராணம் மேருமந்தார் என்ற இரு சகோதரரின் கதைகளையும் ஜைனக் கோட்பாடுகளையும் விவரிப்பதாகும்.

**இரட்டையர் :**

காளமேகத்தின் வரிசையில் இரட்டையரும் பேர் பெற்றவர்கள். வசைபாடுவதில் வல்லவர்கள். இவர்கள் இரட்டையராகப் பிறந்தவர்களா, சிற்றப்பன் பெரியப்பன் மக்களா எனத் தெரியவில்லை. இளஞ்சூரியர் முதுசூரியர் என்ற இவர்கள் பெயரால் இரட்டைப் பிறவிகள் என்றே தெரிகின்றது. ஒருவர் குருடர் மற்றவர் முடவர்: முடவர் குருடர் தோளிலேறி வழிகாட்டிக் கொண்டு எங்கும் செல்லுவர் என்பர். ஆமிலந்துறை என்ற சோழநாட்டூரினர் எனச் சோழமண்டல சதகம் கூறுகின்றது. இவர்கள் இயற்றிய ஏகாம்பரநாதருலா 14ஆம் நூற்றுண்டில் ஆண்ட (மல்லிநாத) சம்புராயர்களைக் குறித்தலால் இந்நூற்றுண்டுக்குரியவர்கள்.

வில்லிபுத்தூராரை யாதரித்த வக்கபாகை வரபதியாட் கொண்டானை இவர்களும் பாராட்டுகின்றனர். 13-ஆம் நூற்றுண்டில் விளங்கிய கோப்பெருஞ்சிங்கன் கல்வெட்டுகளில் ஆட்கொண்டகாங்கேயன் எனப் படுகிருன். அவனுகவோ அவனுக்கடுத்த பரம்பரையினனுகவோ இவர்கள் குறிக்கும் வரபதியாட் கொண்டானுகை வேண்டும். திருவண்ணுமலைச் சம்பந்தனையும் இவர்கள் குறித்துள்ளனர்.

தில்லை, திருவாமாத்துர் ஆகிய கலம்பகங்களைப் பாடிய இரட்டையர் ஏகாம்பரநாதர் உலாவிற்கும் ஆசிரியர்களாவர். இவற்றுடன் இவர்கள் பாடியவாக 25 தனிப்பாடல்கள் கிடைக்கின்றன. இத்தனிப்பாடல்களே பெரும்பாலான மக்கள் கையில் அகப்படுவனவாம். இவற்றுலேயே இரட்டையரைக் கற்றோரும் அறி

வர். கலம்பகத்திற் கிரட்டையர் என்ற புகழையும் இவர்கள் பெற்றனர். தொல்காப்பியதேவர் என்பார் இயற்றிய திருப்பாதிருப்புலியூர்க் கலம்பகத்தை இவர் கள் ஒரு பாடலில் பாராட்டியுள்ளனர். நகைச்சுவை யும் வசையுமுடைய பாடல்களால் இவர்கள் செய்த இலக்கியத் தொண்டு என்றும் நிலைத்து நிற்பதாகும்.

**நவநீதப்பாட்டியல்:**

நவநீதன் என்பவரால் எழுதப் பெற்றது. இவர் வைணவர். ஆடல் ஆசிரியர் இந்நூல் 44 சிறுபிரபந்தங் களைப்பற்றித்தான் கூறுகின்றது. 96–பிரபந்தங்கள் பற்றிய கருத்து 16–ஆம் நூற்றுண்டிற்றுன் வந்ததென வும் வச்சணந்திமாலை பிரபந்தங்களைப் பற்றிப் பேசுகிற தெனவும் கூறி இதனை இந்நூற்றுண்டுகளில் வைக் கின்றனர் அறிஞர்.

**உவமானசங்கிரகம் :**

திருவேங்கடையர் என்பவர் எழுதினுர். இவர் வில்லிபுத்தூர் அந்தணர். இந்நூலைப் புகழேந்தி எழு தியதாகவும் கூறுவர். காதற் பாடல்களில் வரும் உவமான உருவகங்களைத் தொகுத்ததாகும் இந்நூல். நூல் சுருக்கமும் அழகுமுடையது.

**பன்னிருபாட்டியல்:**

பொய்கையார், பரணர். அகத்தியர், கபிலர், கல் லாடர், இந்திரகாளியர், அவிநயர், கல்லாடர், சேந் தம்பூதன், சீத்தலையார், மாபூதன், பல்காயன் பெருங் குன்றூர்கிழார் முதலிய பன்னிரண்டு ஆசிரியர்களால் இயற்றப்பெற்ற தொகுப்பு நூலாகும். இவர்கள் பிற்கா

லத்தவர்கள். இந்திரகாளியர் வெண்பாப் பாட்டியலில் குறிக்கப்பெறுகிறார். 11-13 நூற்றாண்டுகளில் இந்நூல் உருவாகியிருக்கலாமெனக் கருதுவர் அறிஞர். உரையாசிரியர் இந்நூலாசிரியர்களை அடிக் கடிக் குறிக்கின்றனர். இந்நூலில் பிரபந்தங்களைப்பற்றி விரிவாக உரைக்கப்படுகின்றது.

### உரிச்சொல் நிகண்டு

இதனை இயற்றியவர் காங்கேயர் என்பவர் செங்கற்பட்டு வெள்ளாழராக இவர் கருதப்படுகிறார். கொங்கு மண்டல சதகம் மோரூருக்குரியவரென்னும். அகராதி நிகண்டில் இந்நூல் கயாதரத்திற்கு முன்பாகக் குறிக்கப் பெறுதலால் இது இந்நூற்றாண்டுகளில் வைக்கப் பெறுதல் பொருத்தமாகலாம். முகமதியரால் தமிழகத்தே கொண்டுவரப்பட்ட சலாம் (செய்தல்) முதலிய சொற்கள் இதனில் காணப்படுகின்றன. உரிச்சொற்களைத் திரட்டியுரைத்தது இதன் திறன்.

### பொன்னவன் :

கணுநூல் இக்காலத்திற்றான் இயன்றிருக்கவேண்டுமெனக் கருதுகின்றனர். இவர் ஜைனர். அம்பர்கணபுரத்தேவன் என்பான் விருப்பிற்கிணங்க ஆசிரியர் இதனைச் செய்ததாகக் கூறுவர்.

### அறநெறிச்சாரம் :

ஜைன நூல்கள் பல இக்காலத்தெழுதப் பெற்றுள்ளன. முனைப்பாடியார் எழுதிய இந்நூல் 226 பாடல்களைக் கொண்டது. 400 ஆண்டுகட்குமுன் தொகுக்கப் பெற்ற புறத்திரட்டிலிருந்து இஃது தொகுக்கப்

பெற்றதால் இதனை இக்கால நூலாகக் கருதுவர். ஜைன அறநூல்களில் இது குறிக்கத்தக்கதாகும். அருங்கலச் செப்பு என்ற நீதி நூலும் இக்காலத்ததே யென்பர்.

*திருக்கலம்பகம்:*

தொண்டைமண்டலத்து உதீசித்தேவர் (ஆரணி-ஆற்பாகை) என்பார்இயற்றியது. புத்தருடன் வாதிட்ட ஜைனரிவர். இந்நூல் 110 பாடல்களை யுடையது.

*திருநூற்றந்தாதி:*

100 பாடல்களிலான அறநூலும் ஜைனக் கடவுட் பாடல் நூலுமாகும். ஆசிரியர் அவிரோத நாதர். மயிலை நேமிநாதர் கோயிலைக் குறிக்கும் இந்நூல் அக் கோயில் கடலிலாழ்தற்குமுன் இயன்றிருக்கவேண்டு மெனக் கருதுவர். கோயில் 300 ஆண்டுகட்கு முன் கடலில் ஆழ்ந்ததென்பர்.

*அட்டபதார்த்தசாரம்:*

திருக்கலம்பகம் இயன்ற இக்காலத்திலேயே இது வும் எழுதப்பெற்றிருக்கக் கூடுமென்பர்.

*சீவசம்போதனை:*

இப்பெயர்கொண்ட ஜைன நூலின் தமிழ்வடிவம் இந்நூல். தேவேந்திர முனியென்பவர் இதன் ஆசிரியர்.

*ஆதிநாதர் பிள்ளைத்தமிழ்*

ஜைன தீர்த்தங்கரர் மீதியன்ற இப்பிரபந்தமும் இக்காலத்திற்குரியதாம். நேமிநாதர் கோயில் மறை

வுக்கு முன்னிருந்த அறப்பாக்கை தச்சை வாழைப் பந்தல் முதலிய ஊர்களை இந்நூல் குறித்தலால் திரு நூற்றந்தாதியைப்போல இதுவும் இக்காலத்தியன் றிருக்கக்கூடும்.

## கல்வெட்டுக்களில் காணும் நூல்கள்

கி. பி. 13ஆம் நூற்றுண்டுக் கல்வொட் டொன்று கரியமாணிக்கன் வீரபாண்டிய காளிங்கராயன் என் பானைப்பற்றிக் கூறுகின்றது. கப்பல் கோவைப் பாடல் தலைவன் கரியமாணிக்கனையும் இவனையும் ஒன்ருக்கு கின்றனர் அறிஞர். கப்பல் என்பது தலைநகரம். இக் கரியமாணிக்கர் பாண்டியனுக்குத் துணைவனுக வேண்டுமெனக் கல்வெட்டாராய்ச்சியாளர் கருதுகின் றனர்.

## ஆதிச்சதேவன்

கொடிக் கொண்டான் பெரியன் ஆதிச்சதேவன் என்பவன் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ;காலத்தில் (1216–38) 1230ல் பாண்டியனிடம் அலுவல் செய் திருந்த காங்கேயன் என்பான்மேல் ‘பிள்ளைக்கவி’ ஒன்று பாடினுர்.

## காரணை விழுப்பரையன் மடல்

சுந்தரபாண்டியன் காலத்தில் அவன் அரசவைப் புலவராகவும் ஆதிச்சதேவனின் நண்பராகவும் இருந்த காரணை விழுப்பரையன் என்னும் இப்புலவர் திண்டிவனத்திற்கடுத்த காரணை யென்னும் ஊரினர். இம்மடல் பாண்டியனைப்பற்றியதாகக் கூடும்.

*திருவாழிபரப்பினுன் கூத்தன்*

மூன்ரும் இராசராசன் காஞ்சிக் கல்வெட்டொன்றி ணுல் (13ஆம் நூற்றுண்டு) திருவாழிகூத்தன் என்ப வன் காஞ்சி வரதர்பேரில் சிந்து :பிரபந்தமொன்று பாடியதாகக் கூறுகின்றது.

*அருணிலே விசாகன்*

சிறந்த சைவராகிய இப்புலவர் மூன்ரும் குலோத் துங்கன் காலத்தில் 'பாரதம்' தமிழில் ஆக்கியவர் எனப் பாராட்டப் பெறுகிருர். திருவாலங்காடு கல் வெட்டொன்று இதனைத் தெரிவிக்கின்றது. சோழர்க் கீழ்ப்பட்ட குறுநில மன்னராக இவர் இருந்திருக்கலா மென வத்தராசன் என்ற இவரது பட்டப் பெயரால் தெரிவதென்பர்.

பெருவஞ்சி

பொன்னமராவதி (சுந்தரபாண்டியன்) கல்வெட் டொன்று தேவன் திருவரங்குள முடையானென்பவன் மறமாணிக்கர் எனும் வீரர்கள்மேல் 'பெருவஞ்சி' என்றதோர் வீரப்-பிரபந்தம் பாடியதாகக் கூறு கின்றது.

## 15 ஆம் நூற்றுண்டு

### முன்னுரை

இந்நூற்றுண்டு இலக்கிய வரலாற்றில் ஒரு புது யுகத்தைத் தொடங்கி வைக்கிறதென்னலாம். ஆந்திரரும்' முகம்மதியரும் தமிழகத்தில் தம் செல்வாக்கைப் பரப்ப முனேந்தனர் என்பதற்குரிய சில குறிப்புக்கள் இலக்கியங்களுள் காணப்படுகின்றன. இராயர்கள் காளமேகத்தையும் அருணகிரியையும் ஆதரித்துள்ளனர். இர்ாவுத்தன், துப்பாக்கி போன்ற சொற்கள் காளமேகம் பாடல்களில் காண்கின்றன.

காளமேகம்; அருணகிரி; வில்லிபுத்தூரார்; மணவாள மாமுனிகள்; சிற்றம்பல நாடிகள் போன்ருேரே இந்நூற்றுண்டிற்குரிய இலக்கிய ஆசிரியர்கள். வில்லி பாரதத்தைத் தவிர்த்து இக்காலத்தில் காணும் இலக்கியப் படைப்புக்கள் சிற்றிலக்கியங்களும் தனிப்பாடல்களுமேயாகும். காளமேகத்தின் தனிப்பாடல்கள் இக்காலத்தில் பேர்பெற்றன. இப்பாடல்கள் இக்காலத்திற்குரிய அரசியல் சமூக நிலேகளே நன்கு தெளிவுறுத்துகின்றன.

இலக்கியத்துள் தென்னகச் சமயங்களின் தத்துவங்களேயும் ஒற்றுமை வேற்றுமைகளேயும் காணும் முயற்சி மேலோங்கியிருந்தது. அருணகிரியார் பாடல்களும் காளமேகத்தின் பரப்பிரம்ம விளக்கமும் இதற்காம் சான்றுகள். அருணகிரி, வில்லி, காளமேகம் ஆகியோர் சைவ வைணவ ஒற்றுமைக்காக இலக்கியப் பெரும்பணி செய்தனரென்னலாம். பிறநாட்டுப் பண்பு

கட்கெதிராகத் தமிழகத்தின் தனித்தன்மைகளைக் காக்கு முயற்சியில் இலக்கியப் பூசல்களும் போட்டிகளும் நிகழ்ந்துள்ளன. புலவர்கள் பாடுந்திறனில் போட்டிகள் இட்டுள்ளனர். இவ்வகையில் திறம்படப் பாடாத புலவர்களைக் காதை அறுத்தலும் குட்டுதலும் முதலிய ஒறுப்பு முறைகள் கையாளப்பட்டிருக்கலாம். அருணகிரியார் முன் வில்லிபுத்தூரார் காதறுபடும் நிலையில் தோற்று நின்றமையும் அருணகிரி வில்லியைப் பொறுத்தமையும் பற்றிய கதை உண்மையாகலாம். மணவாள மாமுனிகளும் சிற்றம்பலநாடிகளும் பிற்காலச் சைவ வைணவ வளர்ச்சிக்குப் புத்துணர் ஊட்டியவர்களென்னலாம். மற்றும் சில இலக்கண நூல்களும் உரைநூல்களும்கூட இக்காலத்தில் ஏற்பட்டிருக்கலாம்.

காளமேகம்

தமிழ் கூறும் நல்லுலகறிந்த புலவருள் ஒருவர் காளமேகம். பெயர் பொறித்த பேராண்மையுடைய பாடல் இயற்றும் கவிஞரும் அவரே. சிலேடைப் பாடல்களாலும் நிந்தாத்துதிப் பாடல்களாலும் நிலைத்த புகழடைந்தவர் அவர்.

கும்பகோணத்திற்குரிய அவர் முதலில் வரதன் என அழைக்கப்பட்டார். பின்பு கவிபொழியும் காளமேகமானார். முதலில் திருவரங்கத்திலும் பின்பு திருவானைக்காவிலும் கோயிற் பரிசாரகராயிருந்தார். திருவானைக்காத் தாசியொருத்தித் தொடர்பினால் வைணவத்திலிருந்து சைவத்திற்கு மாறினாரென்பர். ஆனால் அவர் என்றும் சமயப்பொறையுடையவராகவே திகழ்ந்

திருக்கிறார். ஆனைக்காவிற் கோயிற்கொண்ட அம்மையின் அருளால் பாடுந்திறம் பெற்றுத் திருவானைக்கா வுலாப் பாடினார். வாழ்வில் பல கொடையாளிகளையும் நாடிப் பாடிப் பொருள்பெற்றுத் தீர்த்தயாத்திரை செய்திருக்கிறார்: 'பாணந்தான் மண்தின்ற பாணமே' என்ற வரிபாடிய வாயினராய்த் தம் வாழ்நாளை முடித்திருக்கிறார். இரட்டையர் இவ்வரியின் முதல் வரியாக நாணென்றால் நஞ்சிருக்கும் என்பதைப்பாடி அதனைத் தொடர்ந்து முடிக்கவியலாது சென்றதாகவும் அதனைக் காளமேகம் இவ்வாறு முடித்ததாகவும் கதை. கவியின் எதிரியாகிய அதிமதுரகவி முதல்வரியைப் பாடியதாகவும் கூறுவர்; அதுவே பொருந்துவதாகலாம். அணிலாடு முன்றில்; ஓரே ருழவர்போலப் புலவன் பெயரை புகழுடையதாக்கும் வரிகளுள் 'பாணந்தான்' என்பதும் ஒன்றாய்விட்டது.

அவரைப் புரந்தவருள் சிறந்தவர் திருமலைராயர். தம்பாடல்களில் அவரை (கொப்பையன் உதவும் சாளுவத் திருமலைராயன்என) மனமாரப் பாராட்டுகிறார் கவிஞர். கி. பி. 1453; 1473ல் திருமலைராயன் திருவரங்கம் திருவானைக்கா கோயில்களுக்குக் கொடையளித்ததுபற்றிய கல்வெட்டுக்கள் கிடைக்கின்றன. காளமேகத்தின் தனிப்பாடல்களிலும் கல்வெட்டிலும் திருமலைராயன் பெயர்கள் ஒரே மாதிரியுள்ளன. எனவே இக்காலத்தில் காளமேகம் வாழ்ந்திருக்க வேண்டுமென்பது தெளிவு. வரலாற்றின்படி திருமலைராயன் காலமும் இதுவேயாகும். அவன் 1468 வரையாண்டிருக்கிறான். மண்மாரியால் அவன் தலைநகரம் அழிந்தது. அவன் ஆட்சியின் கடைசியைக் குறிக்கு

மாயின் காளமேகம் 1468க்குப் பின்னும் வாழ்ந்திருக்க வேண்டும். மண்தின்ற பாணமென்றவாய் எனப் பாராட்டியது இரட்டையர் என்ற கதை உண்மையாகு மானுல் இரட்டையருள் ஒருவராவது காளமேகம் இறந்தபோது இருந்திருக்கவேண்டும். இதுவும் அதி மதுரமே பாடியது என்ற மரபே பொருந்தலாம். சம் பந்தன் என்பான் காலத்தில் காளமேகமும் இரட்டை யரும் வாழ்ந்துள்ளனர். 1. திருவானைக்காவுலா 2. சித்திரமடல் (காதல் பிரபந்தம்) 3. பரப்பிரம்ம விளக்கம் 4. சரசுவதிமாலை ஆகிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். 5. கடல் விலாசம் என்றதோர் நூலையும் இவர் இயற்றியதாகத் தனிச் செய்யுள் சிந்தா மணி கூறுகின்றது. பரப்பிரம்ம விளக்கம் சைவ வைணவ சமயத்தன்மைகளை ஆராயும் நூல்.

இவற்றைத் தவிர 204 தனிப்பாடல்களை இக்கவி பாடியுள்ளார். அவற்றுள் 35 வசைப் பாடல்கள். சமூ கத்திலும் சமயத்திலுமிருந்த குறைகளை எடுத்துரைப் பதை அவ்வசைகள் (Satires) பிற மொழிகளிலும் இத் தகைய வசைபாடும் புலவர்கள் பிறங்கிப் பாராட்டப் பட்டுள்ளனர். இதற்காக இவர் வசைபாடக் காள மேகம் என்றே பாராட்டப்பெற்றிருக்கிறுர். இம்மென்னு முன்னே எழுநூறும் எண்ணூறும் பாடும் இவர் பாடல் களில் இவ்வளவே கிடைத்துள்ளன. சிலேடைப் பாடல்களிலும் இவர் சிறந்தவர். சிலேடை-வசைப் பாடல் யுகத்தையே இவர் வளர்த்தார் என்னலாம். இப்பாடல்கள் அறிவும் குறும்பும் கலகலப்புமுடையன. இரட்டையரிடமும் இப்பாடல்கள் மிகுந்தன. இதனுல்

செய்யுளைப் படிப்பதிலுள்ள மந்தத்தன்மை மாறி ஒரு சுறுசுறுப்பும் இன்பமும் ஏற்படுகின்றது. காலப்போக்கில் சிலேடையழகே இவர் பாடல்களின் அழகாய் விட்டது.

வில்லிபுத்தூரார்

வைணவ இலக்கியத்திற்கும் சமயத்திற்கும் பெருந் தொண்டு செய்த காரணத்தால் வில்லிபுத்தூரரும் கம்பரும் ஆழ்வார்களெனவே கருதப்பட்டனர். சனி நகர் வாழ் வில்லிபுத்தூரர் என இவர் இலக்கியத்துட் குறிக்கப்படுகிறார். வில்லிபுத்தூரிற் பிறந்து சனியூரில் இவர் தங்கியிருக்கலாம் அல்லது வில்லிபுத்தூரர் என்பதே இயற்பெயராக விருக்கலாம். இரட்டையர் பாடிய வக்கபாகை வரபதியாட்கொண்டானே இவரைப்புரந்தவனென இவர் மகன் வரந்தருவார் பாரதப் பாயிரத்தில் கூறியுள்ளார். அருணகிரியாருடனும் வாதஞ்செய்து காதறுபடும் நிலையிலிருந்த இவரை அருணகிரியார் பொறுத்தருளியதாக வரலாறுள்ளது. எனவே இரட்டையர், அருணகிரியார் காலத்தில் இவர் வாழ்ந்தவர் ஆவர். எனவே 15ஆம் நூற்றாண்டின் முதலில் இவர் இருந்திருக்கலாம்.

குறைக்கவிகளைக் காதறுப்பது இவர் பழக்கமாக இருந்தது. அருணகிரியிடம் கந்தரனுபூதிப் பாடலுக்குப் பொருள் சொல்லத் தெரியாமல் தோற்ற பிறகே இவர் செருக்கு மாறியிருக்கவேண்டும். குற்றமுள்ள பாடல்களைப் பாடும் கவிகளைத் தலையையே வெட்டுவார் ஒட்டக்கூத்தர்; அதிவீரராம பாண்டியர் தலையில் குட்டுவார்; இக்காலம் செய்யுளியற்றுந்திறனில்

மேம்பட்டிருந்ததும், செய்யுளில் குறையுருமற் காக்கக் கருதியதும் இதனால் தெரிகின்றது.

கவிக்கும் அவரது தமையனுக்கும் ஏற்பட்ட தாய பாகம் பற்றிய பகையைப் பாரதம் பாடச் செய்து அக் கதையை எடுத்துக் காட்டியது மூலம் வரபதியரசன் தீர்த்துவைத்தான் என்பது கதை. இக்காலத்தில் ஒரு வகைச் சைவ வைணவ சமரசம் காணப்பட்டுள்ளது. காளமேகம், வில்லி, அருணகிரி ஆகியோர் கவிகளில் இதனைக் காணலாம்.

பிறந்த திசைக் கிசை நிற்கப் பாரதமாம் பெருங் கதையைத் தமிழில் எழுதுமாறு வரபதி கேட்டுக் கொண்டான். அவ்வாறே எழுதப்பெற்ற இக்காவியம் இன்றளவும் தோன்றிய எல்லாப் பாரதங்களையும் வென்று மேலோங்கி நின்று நிலவுகின்றது. இதன் பின்னர் பாரதம் பாடிய நல்லாப்பிள்ளை இவர் பாடல் களை அப்படியே அவர் நூலில் இணைத்துக்கொண்டார். பெருந்தேவனார் அருணிலை விசாகன் முதலோர் பார தங்களும் தோன்றியுள்ளன. இராமாயணத்திற்கோர் கம்பனைப் போலப் பாரதத்திற்கு வில்லியானார். தமிழ் நாட்டு ஊர்தோறும் ஆண்டுதோறும் விழாக்களில் பாரதம் பெரிதும் பயிலப்பட்டு வந்தது. அவ்விடங் களில் வில்லிபாரதமே பெரிதும் பாடலாகப் படிக்கப் பெற்று விளக்கம் செய்யப்பட்டு வந்தது. பிற்காலத்தே பண்பாகப் பகர்சந்தம் பாடிய படிக்காசுக் கெல்லாம் சந்தப்பாடல்களியற்றி வழிகாட்டிய பெருமை வில்லிக் கும் அடுத்து அருணகிரிக்கும் உரியதாகும். 4700 சந்த விருத்தங்களில் இவர் பாரம் இயன்றுள்ளது.

இவர் பாடல்கள் செம்மையும் எளிமையும் இனிமையுமுடையன. சுருக்கமாக ஆனால் தெளிவாகப் பாரதத்தை விளக்கியவர் இவராவர்.

## வரந்தருவார்

வில்லிபாரதத்திற்குப் பாயிரம் பாடியவர். வில்லிபுத்தூரார் மைந்தன் என்றே தம்மைக் கூறிக் கொள்கிறார். 22 பாடல்களும் 22 மணிகள் என்னத்தக்கவாக உள்ளன. வில்லிமகன் என்பதற்கேற்ற பெருமை பாடல்களிற் காணப்படுகின்றது. உள்ளங் கவர் தொடர்கள் பல இவர் பாடல்களிற் காண்கின்றன. மூவருங் கூடி மொழி விளக்கேற்றி; பிறந்ததிசைக் கிசைநிற்ப, போன்றன அவற்றுட் சிலவாகும்.

## அருணகிரிநாதர்

நாயன்மார் தேவாரத்தாலும், ஆழ்வார்கள் பிரபந்தத்தாலும் சமயத்தைப் பரப்பியதுபோல அருணகிரியாரும் திருப்புகழால் சமயத்தை வளர்த்தார் என்னலாம். முருகவழிபாடு தமிழகத்தில் விரிவடைந்ததற் கவரே காரணமென்னலாம். திருவள்ளுவர் திருக்குறள் போல இவரது திருப்புகழ்ப்பாடல்கள் ஒப்புயர்வற்றனவாய்விட்டன. இவர் திருவண்ணமலை தாசிக்குப் பிறந்தவர் என்றெல்லாம் கதைகள் உள்ளன. இவற்றிற்குப் போதிய ஆதாரங்கள் கிடைக்கவில்லை. இளமையில் தாசிகளின் கூட்டுறவால், தமக்கையால் மிகவும் வையப்பட்டுக் கோயில் கோபுரத்திலிருந்து வீழ்ந்து (உயிர்விடத்துணிய) முருகனால் காக்கப்பட்டனரென்பர். தாசியர் அழகையும் உறவையும் பற்றி மிகவாகப் பாடியுள்ளார். பிறகு ஊர்தோறும் சென்று முருகனைப்

பாடினர். வில்லிக்கும் இவருக்குமேற்பட்ட வாதம்பற்றிக் கூறப்பட்டுள்ளது. கடைசியில் சம்பந்தாண்டான் என்பவனுக்கும் இவருக்குமேற்பட்ட பூசலில் இவர் இறந்ததாகக் கதையுள்ளது.

வடமொழியில் சாளுவாப்யுதம் என்ற நூலை எழுதிய ராஜநாதகவி யென்பவன் (15ஆம் நூற்றாண்டில்) தன் தந்தை மூவேந்தராலும் போற்றப்பட்ட திண்டிமகவி அருணகிரிநாதர் என்கிறான். இத்திண்டிம கவியும் அருணகிரிநாதரும் ஒருவரே யென்பர் சிலர். பரம்பரைச்செய்திகளால் இத்தகைய கதைகள் உறுதிபடுத்தப்பெறவில்லை.

கி. பி. 1370 கல்வெட்டால் அறியப்பெறும் சோமநாதன் மடத்தையும், பிரவுடதேவராயன் என்பானையும் அருணகிரியார் தம் பாடல்களில் பாராட்டுகிறார். 15ஆம் நூற்றாண்டின் முதற்பகுதியில் இரு பிரவுடதேவர்கள் (விசயநகரத்தரசர்)ஆண்டுள்ளனர். 14ஆம் நூற்றாண்டிற்குமுரிய வில்லியுடன் தொடர்புடைய அருணகிரி 15ஆம்நூற்றாண்டு முற்பகுதிப் பிரவுடதேவர்கள் காலத்திற்றான் விளங்கியிருக்கக்கூடும்.

அவர் 16000பாடல்கள் பாடியிருக்கலாம். ஆனால் இப்பொழுது கிடைப்பன 1200 திருப்புகழ்களே. இது சந்தப்பாடல் காலம். அருணகிரி சந்தப்புலி என்னலாம். வில்லிபற்றிப் பார்த்தோம். வாக்கிற்கருணகிரி கருணைக் கருணகிரி என்றெல்லாம் சொல்வதுண்டு. திருப்புகழ்படிக்குமவர் சிந்தைவலிவைப்பற்றிப் பலரும் பாராட்டுவர். திருப்புகழ்ப் பாடல்கள் சொல் உச்சரிப்பைத் தெளிவுபடுத்தும் என்பர். தாளக்கட்டும், காதுக்

கினிமையுமுடையன சந்தப்பாடல்கள். இவை சிறந்த இசைப்பாடல்களாகவும் அமைந்தன. 12ஆம் நூற்றுண்டில் ஔவை, பொய்யாமொழி போன்ருேர் முருக வழிபாட்டை மீண்டும் தொடங்கினர். இந்நூற்ருண்டில் அருணகிரி அதனை மிகவும் பெரிதாக்கினுர்.

திருப்புகழ்ப் பாடல்களைத் தவிர கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தரனுபூதி, வேல்விருத்தம், மயில் விருத்தம், திருவகுப்பு முதலிய நூல்களையும் இவர் பாடினுர். இவை பிற்காலத்தே பாராயண நூல்களாகப் பெரிதும் பயிலப்பட்டன. பின்னர் தாயுமானவர் இப் பாடல்களுக்காக இவரை எந்தை அருணகிரியெனப் போற்றினுர்.

வருணகுலாதித்தன் மடல்

ஒரு தாசி இம்மடல் பிரபந்த இலக்கியத்தை எழுதியதாகக் கூறுவர். அம்மைச்சி, நீலாயதாட்சி, காளி முத்து என அவள் பெயரைப் பலவாருகக் கூறுவர். அம்மைச்சி 17ஆம் நூற்ருண்டில் ஒருத்தி வாழ்ந்திருக்கிருள். எனவே அது பொருந்தாது. 15ஆம் நூற்ருண்டுப் பராக்ரம பாண்டியனைக் காளிமுத்து என்பவர் ஒரு பாடலில் பாடியிருக்கிருர். அவரே தனிப்பாடல்களில் 8 காதற்பாடல்களைப் பாடியுள்ளார். அவரே இம்மடலின் ஆசிரியராக வேண்டும். இம்மடலைப் பல நூற்ருண்டுகளில் வைக்கின்றனர். நாகைக்காத்தான் வருணகுலாதித்தன் என்பவன் பாட்டுடைத்தலைவனுக இப்பாடலில் குறிக்கப்பெறுகிருன். காளமேகம் ஒரு கத்துகடல்சூழ்நாகைக் காத்தானைப் பாடியிருத்தலால் இருதலைவர்களும் ஒருவரேயாக வேண்டும். இதனுல் இப்பாடல் இந்நூற்ருண்டிற்குரியதாக வேண்டும்.

திருமங்கையாழ்வார் இரண்டு மடல் நூல்கள் பாடியுள்ளார். காதல் கைகூடாதபோது தலைவன் பனைமடலால் செய்த குதிரை மீதேறி தலைவியைக் குறிக்கொண்டு ஊர்வலம் செய்வதே மடலேறுதல். சங்கப் பாடல்களிலும், கோவை நூல்களிலும் இதுபற்றிய பாடல்கள் உண்டு. பிற்காலத்தில் இது தனிப் பிரபந்தமாகவே ஆயிற்று. கூளப்பநாய்க்கன் காதல்போன்று பாடல் எளிமையும், சுவையும் காதல் விறுவிறுப்பும் உடையது.

*மணவாள மாமுனிகள்*

தென்கலை வைணவ வளர்ச்சிக்கும், விரிவுக்கும் பெருந்தலைவராகவும், கவியாகவும் இருந்தவர் மாமுனிகள். இவர் சிறந்த உரையாசிரியரும், தத்துவ நூல் ஆசிரியருமாவார். பாண்டிநாட்டுச் சிக்கிலில் பிறந்த இவர் பிள்ளைலோகாச்சாரியார் மாணவர் திருவாய்மொழிப் பிள்ளையிடம் உபதேசம் பெற்றவர். எனவே 15ஆம் நூற்றுண்டுக்குரியவர். கி. பி. 1465ல் திருவரங்கப்பெருமாள் சிலையை மீண்டும் ஏற்படுத்தினூர் எனக் கோயிலொழுகு கூறுகிறது. இவர் சுமார் 80 ஆண்டுகள் (1370 – 1465க்குள்) வாழ்ந்தார் எனத் தெரிகின்றது.

முதலில் அரசாங்க அலுவலில் இருந்த மணிவாசகரைப் போல அரசாங்கப் பொருளை அறநெறியில் செலவிட்டு அதுபழித் துறவு மேற்கொண்டு பின்னர் பெரிதும் திருவரங்கத்திருந்து 3600படித் திருவாய்மொழிச் சொற்பொழிவுகள் செய்துகொண்டிருந்தார். இதனைப்

பாராட்டிப் பெருமாளே இவர்மேல் 'சீசைலேச' என்ற தோத்திரம் பாடியதாகக் கூறப்படும்.

வைணவத்தைத் தமிழகத்தே பரப்ப வானமாமலை சீயர் முதலிய 72 சிம்மாசனுதிபதிகளை ஏற்படுத்தியவர் இவரே.

1. உபதேசரத்னமாலை, 2. திருவாய்மொழி நூற்றந்தாதி இரண்டும் சிறந்த பாடல்நூல்கள்; ஆழ்வார் ஆசாரியர் பரம்பரையையும், திருவாய்மொழிப் பெருமையையும் கூறுவன. 36000 படியை வியாக்யானித்ததுமூலம் திருவாய்மொழிக்கே ஒரு பெருமையை தேடித்தந்தவர். 1. ஆசாரிய இருதயம், 2. ஸ்ரீ வசனபூஷணம் இரண்டிற்கும் இவர் எழுதியஉரைகள் மிகவும் சிறந்தன. இந்நூல்களும் வைணவத்தில் பெருமையடைய இவர் உரைகளே காரணமெனலாம். பிள்ளைலோகாச்சாரியரின் ஸ்ரீவசனபூஷணம் தவிர மற்றும்பல தத்துவநூல்களுக்கும் இவர் உரைவகுத்தவர். ஆர்த்திப் பிரபந்தம், பிரமேயசாரம், யதிராஜவிம்சதி முதலிய தத்துவ நூல்களும் மாமுனிகளால் இயற்றப் பெற்றனவே.

### சிற்றம்பல நாடிகள்

வைணவத்தில் மணவாள மாமுனிகளைப்போன்று சைவத்தில் சிற்றம்பல நாடிகள் இந்நூற்ருண்டில் சிறந்தவரென்னலாம். இவரது நூல் சில பதிப்புக்களில் சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினன்கனுள் ஒன்ருக வைக்கப்பட்டிருத்தலால் இவரது ஏற்றம் புலப்படும். 16ஆம் நூற்ருண்டிற்குரிய தத்துவப்பிரகாசர் போன்ற மாணவர்களை ஆக்கியவர் இவராவர். எனவே 15ஆம்

நூற்ருண்டினர் எனல் பொருத்தமே. இவரை உமாபதி சிவத்தின் மாணவரென்பர். மெய்கண்டார் சந்தானத்தினராக இவர் தம்மைக் கூறிக்கொள்கிருர். உமாபதி, மச்சுச்செட்டி ஆகிய இருவர்க்கும் அடுத்தப் பரம்பரையில் இவர் வைத்தெண்ணப்படுகிருர்.

சிற்றம்பல நாடிகள் சீகாழிப்பதியில் பிறந்தவர். சிறந்த சைவஞான குருவாக விளங்கிய இவர் கடைசியில் 60-க்கு மேற்பட்ட தம் மாணவர்களுடன் ஒரே சமயத்தில் சமாதியில் புகுந்தனரென்ற வியத்தகு வரலாருென்றுள்ளது.

1. துகளறுபோதம் என்ற சைவசித்தாந்த சாத்திர நூலே இவர் எழுதினர். இது 100 பாடல்களில் மெய்கண்டார் முதலிய முன்னேரின் தத்துவங்களேயும், ஆசிரிய, மாணவ ஒழுக்கங்களேயும் விளக்குகின்றது. 2. சிவப்பிரகாசத்திற்கும் இவரோர் உரையெழுதினரென்பர். 3. வினவெண்பா என்ருெரு நூலும் இவர் பெயரால் வழங்குகின்றது.

### தத்துவநாதர்

இவரும் சீகாழிப்பதியினர். சிறந்த சைவஞானி. சிற்றம்பல நாடிகளின் மாணவராகத் தம்மைக் கூறிக்கொள்கிருர். மேற்கூறிய தத்துவப்பிரகாசரும் இவரும் ஒருவரல்லர். உபதேசப் பஃருெடைக்கு இவர் உரை சிறந்ததாகப் பாராட்டப் பெறுகின்றது.

இவர் உண்மை (நெறி) விளக்கம் என்ற நூலேத் துகளறுபோதத்தைப் பின்பற்றி எழுதியுள்ளார்.

இந்நூலை உமாபதி சிவம் எழுதியதாய்ப் பலர் கூறுவர். ஆனால் அறிஞர்கள் உமாபதிசிவத்தின் எட்டுநூல்களில் (அட்டகம்) இது இணைக்கப்பெறவில்லையென்பர். இவரையும் தத்துவப்பிரகாசரையும் ஒருவரென்பதில் அதிகத் தடையிருப்பதாகப் புலப்படவில்லை.

### ஓங்குகோயிற்புராணம்

மெய்கண்டார் வழியினைச் சேர்ந்த திருவம்பலமுடையான் என்பாரால் இயற்றப்பெற்றது. கி. பி. 1484ல் திருப்பத்தூரில் கோயில்கொண்டசிவனைப்பற்றியது இப்புராணம். இச்செய்திகள் அங்குள்ள ஒரு கல்வெட்டினால் புலப்படுகின்றன.

### கணக்கதிகாரம்

சோணாட்டு முகரியென்னும் ஊரினராகிய காரியால் இயற்றப்பட்ட கணிதத்தைப் பற்றிய நூல். இவ்வகையில் இப்போது கிடைக்கும் நூல் இஃதொன்றேயாகும். இதனில் கணபதி வணக்கம் கூறப்பட்டுள்ளது. 15ஆம் நூற்றாண்டினதாக இந்நூல் கருதப்படுவதைத் தவிர வேறாதாரமில்லை.

### கயாதர நிகண்டு

நிகண்டு வரிசையில் இதுவும் பேர் பெற்றதாகும். இராமேசுவரம்–கயாதரன் என்ற அந்தணரால் இயற்றப்பெற்றது. மற்றும் ஒரு கோவையும் அத்தாதியும் கூட இவர் இராமேசுவரத்தின் மீதியற்றியுள்ளார். 16 ஆம் நூற்றாண்டின் மாறனலங்கார உரையில் இந்நூல் குறிக்கப்படுதலால் அறிஞர் இதனை இந்நூற்றாண்டிற் குரியதாக்குவர்.

### பாண்டிப்பெருமாள்

சிவஞானபோதத்திற்கு உரை கண்டவர். சிற்றம் பல நாடிகள் தத்துவநாதர் முதலியோர் காலம் இது, எனவே தத்துவ நூலுரைகள் பெருகியுள்ளன. கி. பி. 1498 கோயில்பட்டிக் கல்வெட்டொன்று மணவையூருடையான் பாமாலைக்கூத்தர் பாண்டிப்பெருமாள் என்பவர் மாணிக்கவாசகர் விழாவிற்காகப்பொருளளித்தது பற்றிக் கூறுகின்றது. இவரும் சிவஞான போத உரையாசிரியரும் ஒருவரெனக் கருதுகின்றனர் அறிஞர். மணவைக்கூத்தன் என்பவரைப் புலவராகக் கூறும் தனிப் பாடலொன்று இக்கருத்திற்கரண் செய்கிறது.

### சித்தர்கள்

சித்தர்பாடல் என்ற பாடல்களைப் பாடிய உயர்ந்த தமிழ் ஞானிகள் சித்தராவர். 18 சித்தர் பாடல்கள் என்பன அனைவரும் கேட்டனவாம். ஆனல் சித்தர் பலராவர். குறித்த மனவமைப்பும் வாழ்க்கையுமுடையோர் சித்தரெனப்பட்டனர். பாடல்களில் அவர்கள் குறித்த தொடர்களால் அவர்கள் பெயர்கள் அமைந்தன. மற்றும் பலர்க்கு இயற்பெயர்கள் ஏற்பட்டிருந்தன.

அகப்பேய், அழுகணி, குதம்பைச்சித்தர்களை அறிஞர் இந்நூற்ருண்டில் வைக்கின்றனர். மற்றும் பலர் இதற்கு முன்பும் பின்பும் வாழ்ந்துள்ளனர். துப்பாக்கி, சந்தோஷம், மோக்ஷம் போன்ற பிறசொற்கள் எளிதாக இவர்கள் பாடல்களில் பயில்கின்றன. விசயநகரத்தரசர் காலத்தில் இவர்கள் வாழ்ந்திருக்கக்கூடும் என நம்புகின்றனர்.

தத்துவம், சோதிடம், மருத்துவம், இரசவாதம் முதலிய பொருள்களை இவர்கள் பாடலில் எடுத்துரைத்தனர். சமயப் பொதுமையும், சமயங்கடந்த இயல்பும் இவர்களது இயல்பாகவிருந்தது. இதற்காக இவர்கள் சமயங்களையும் பலபோதுகளில் கடிந்தும் இடித்தும் இழித்தும் பாடினர். இவர்கள் பாடல்கள் சுருக்கெனத் தைக்கும் சொற்களையுடையவை. காலந்தோறும் தாயுமானவர், குலோத்துங்கன், இராமலிங்கர், பாரதி போன்றோர்தோன்றிச் சமயப்பொதுமைகாட்டி உலகை நடத்தியுள்ளனர். அவ்வழியினரே சித்தர்கள் என்னலாம். இவர்கள் சாதி, சமயம், நாடு, மொழி இனம் கடந்த இருடிகள் ஆவர். எளிய உலக நடை (Colloquial) இலக்கியத்திற்கு இவர்தம்பாடல்கள் ஏற்றஎடுத்துக் காட்டுக்களாகும்.

## 16 ஆம் நூற்றுண்டு.

முன்னுரை.

இந்நூற்றுண்டு சமய மடங்களால் ஆதரிக்கப் பெற்ற சமயப்புலவர்கள் நிறைந்ததாகும். தருமபுரம், திருவாவடுதுறை, மதுரை காஞ்சி, திருவண்ணுமலை, சூரியனுர்கோயில் முதலியவிடங்களில் சைவ மடங்கள் இக்காலத்துத் தோன்றின. இப்புலவர்கள் எழுதிய சமயப் புராணங்களும், தத்துவ நூல்களுமே இக்காலத் திலக்கியங்களாகும். சிறு பிரபந்தங்களும் சில நிகண்டு களும், இலக்கணங்களும் இக்காலத்துத் தோன்றின. தென்காசிப்பாண்டியரும், விசயநகர அரசர்களும் இக் காலத்தில் புரவலரும், புலவருமாக இருந்துள்ளனர். இதுவரை இலக்கிய வரலாறுகளில் காணப்பட்ட புல வர்களைவிட 16, 17, 18ஆம் நூற்றுண்டு வரலாறுகளில் ஒவ்வொரு நூற்றுண்டிலும் பல புதிய இலக்கியங்கள் கண்டு இந்நூலில் இணைக்கப்பெற்றுள்ளன. இக்காலத் துச் சமய வாதங்கள் நிகழ்ந்துள்ளன. சைவ, வைணவ தத்துவ நூலுரைகள் பல இக்காலத்தெழுதப்பெற்றன. நாட்டியத்தைப் பற்றிய இலக்கணங்கள் சில இப்போ தெழுந்தன. தத்துவப்பிரகாசர், தத்துவராயர், பிள் ளைப்பெருமாள் ஐயங்கார், பரஞ்சோதி முனிவர், அரி தாசர், செவ்வைச்சூடியார், திருக்குருகைப்பெருமாள் கவி, மறைஞான சம்பந்தர், கமலை ஞானப்பிரகாசர், நிரம்ப அழகிய தேசிகர், அதிவீரராமன், வரதுங்க ராமன், சைவஎல்லப்பர், குருநமச்சிவாயர், இரேவண சித்தர், அரபத்தர் முதலியோர் இக்காலத்தே விளங் கிய புலவர்களாவர்.

பட்டினத்தார் பாடல் என்ற பாடல்களை எழுதிய பட்டினத்தார் இக்காலத்தேயே இலங்கியிருக்க வேண்டும். இந்நூற்றுண்டின் பிற்பகுதியில் கிறித்தவப் புலவர் சிலரும் இருந்துள்ளனர்.

### காஞ்சி ஞானப்பிரகாசர்

காஞ்சி சைவமடத்தின் முதல் தலைவர்களுள் ஒருவர். இவர் மாணவரே புராணத் திருமலைநாதர். இவர் கச்சிக் கலம்பகம், கிருஷ்ணதேவராயர்மீது மஞ்சரிப்பாவினுல் ஆகிய இரண்டு பிரபந்தங்களை எழுதினுர். மஞ்சரிப்பாவினுல் இவர் 16ஆம் நூற்றுண்டிற்குரிய கிருஷ்ண தேவராயர் காலத்தவர் என்பதறியப்பெறும். மஞ்சரிப்பா என்பது அகம், புறம் எனும் இரு பகுதிகளையும் கொண்டு பாடுவது. புராணத்திருமலைநாதர் காலம் தெளிவாகக் கிடைப்பதால் இவர் 15 – 16ஆம் நூற்றுண்டுகளில் விளங்கியிருக்க வேண்டுமெனத் தெரிய வருகின்றது.

### புராணத்திருமலைநாதர்

சிதம்பரம் சைவ வேளாளர் பரம்பரையினர். இவரது மதுரைச் சொக்கநாதர் உலா வீரமாரபாண்டியன் காலத்தில் (1473–1506) அரங்கேறியது. கி. பி. 1508ல் இவர் சிதம்பரபுராணம் இயற்றினுர். புராணம் 813 விருத்தங்களையும், 576 கண்ணிகளையும் உடையது. உமாபதி சிவத்தின் கோயிற்புராணத்துடன் இவர் புராணமும் சிதம்பரத்தின் வரலாறுகளைக் கூறுவனவாகும்.

### பரஞ்சோதியார்

திருமலை நாதரின் தோன்றலாவார். சிதம்பரப் பாட்டியல் என்ற இலக்கண நூலை இயற்றியவர். பாட்டியல் பற்றிய இலக்கண நூல்களுள் இதுவும் சிறந்ததாகும்.

### தத்துவப் பிரகாசர்

சிறந்த சைவத்தத்துவ ஞானியாகிய இவர் திருவாரூர் சிவபுரத்திற் பிறந்து சிற்றம்பல நாடிகளின் மாணவராய் அவர்க்கடுத்த ஆசாரியாராய்த் திகழ்ந்தார். திருவாரூர் கோயில் கண்காணிப்பாளராக இருந்த இவர் ஒருமுறை கிருஷ்ணதேவராயரிடம் சென்று கோயிற்பூசை முதலியவற்றைச் செம்மை செய்தார். இவர் நூல் தத்துவப் பிரகாசம் 337 பாடல்களில் சரியை முதலியவற்றைப்பற்றி விளக்குவதாகும். இவர் மாணவராகிய தோணியப்பர் என்பார் புலவர் திறத்தைப் பற்றியெல்லாம் விளக்கும் தனிப்பாடல்கள் சிலவற்றைப் பாடியுள்ளார்.

### அரிதாசர்

இரு சமய விளக்கம் என்ற நூலை 2119 பாடல்களில் இயற்றியவர். இது சைவ வைணவ சமயங்களின் இயல்புகளை எடையிட்டு வைணவத்தின் உயர்வைக் கூறுவது. இவர் கிருஷ்ணதேவராயன் ஆட்சியில் தமிழ்நாட்டில் கவர்னராக இருந்தவர். அரிதைப் பதியென்னும் ஊரினர்.

### வீரகவி

என்பவர் நல்லூருக்குரியராய் கி. பி. 1524ல் 1225 பாடல்களில் அரிச்சந்திரபுராண மியற்றினர்.

திருப்புல்லாணி திருமால் கோயிலில் இப்புராணம் அரங்கேறியது.

### செவ்வைச்சூடுவார்

12 படலங்களும் 4970 விருத்தங்களும் கொண்ட பாகவத புராணத்தைத் தமிழில் எழுதினர். நிம்பை யென்னுமூரினர். திருநெல்வேலி வரதராசய்யங்கார் 1542ல் புராண பாகவதம் எழுதுமுன் இஃதெழுதப் பட்டதாகத் தெரிதலால் இதன் காலம் 1542க்கு முற் பட்டதாக வேண்டும். இதன் ஆசிரியர் பெயரைச் சில பிரதிகள் ஆரியப் புலவர் என்கின்றன அது பொருத்த மில்லை. அருளாளதாசர் எனப்படும் அய்யங்காரின் புராண பாகவதம் 9151 விருத்தங்களையுடையது.

### திருக்குருகைப் பெருமாள் கவி

ஆழ்வார் திருநகரியினராகிய இவவைணப் புலவர் இலக்கியவுலகில் சிறந்தவர். கி. பி. 1448ல் திருக் குருகா மான்மியத்தையும் 1551ல் மாறனகப் பொருள் என்ற அகப்பொருள் இலக்கணத்தையும் எழுதினர். 327 பாடல்களிலான மாறனலங்கார மென்னும் அணி யிலக்கணமும் இவராலேயே பாடப்பெற்றது. மாறன் கிளவிமாலை, மாறன்பாப்பா வினம் என்ற நூல்களும் இவராலேயே இயற்றப் பெற்றன வென்பாரும் உளர். சங்கப் புலவர்க்குச் சமமாகக் கருதப்பெற்ற இப்புலவர் தமிழுக்குச் சிறந்த இலக்கண இலக்கியங்களை இயற்றி யருளினர்.

### மறைஞான சம்பந்தர்

சிதம்பரத்தில் கண்கட்டி மறைஞான சம்பந்தர் என்ற பெயருடன் வாழ்ந்த சைவ தத்துவ ஞானியாகிய இவர் பல தத்துவ நூல்களை இயற்றியுள்ளார். தொல்காப்பியச் சிவமயம் என்பது சைவத்தைப்பற்றியதாகும். 20 படலங்களையும் 1065 விருத்தங்களையும் உடைய கமலாலய புராணத்தையும் சிவதரு மோத்திரம் என்ற சிறந்த தத்துவ நூலையும் இவர் இயற்றினார். பசுபதி பாசபனுவல்; சங்கற்ப நிராகரணம்; பரமோபதேசம்; முத்திநிலை முதலியனவும் இவர் எழுதிய நூல்களேயாகும். சிற்றம்பலநாடி வெண்பா என அவ்வாசாரியர்மீது ஒரு பாராட்டையும் இவர் இயற்றியுள்ளார். இவர் உமாபதி சிவத்தின் ஆசிரியரினும் வேறானவரேயாவர். இவர் மாணவர் மறைஞான தேசிகர் சிவஞான சித்தியாருக்கு ஒரு உரை எழுதினார்.

### சிவாக்கிரயோகி

சூரியனார்கோயில் ஆதீனத்தின் தலைவராக இருந்த இவர் சாதி வேறுபாடு கடந்த துறவியாக விளங்கியவர். திருவீழிமிழலையில் வாழ்ந்திருந்த இவர்க்கு தஞ்சைச் செவ்வப்ப நாய்க்கன் முதலோர் மாணவராக இருந்தனர். கி. பி. 1564ல் சைவ சந்நியாச பத்ததி என்ற சைவதத்துவ நூலை எழுதினார். 215 பாடல்களில் சிவநெறிப்பிரகாசம், சிவஞான சித்தியார் உரை ஆகியவற்றின் ஆசிரியரும் இவராவர். இம்மூன்று நூல்களும் சைவ வுலகில் மிகவும் பயிலப்படுவனவாகும்.

**கமலை ஞானப்பிரகாசர்**

இந்நூற்றூண்டின் தலைசிறந்த சைவஞானி திருவாரூருக்குரியவர். தமக்கென ஒரு அடியார் கூட்டத்தையே ஏற்படுத்திவிட்டார். தருமபுர மடத்தலைவர் திருஞானசம்பந்தரை அங்கமைத்தவர் இவரேயாவர். குருஞானசம்பந்தர், திருவொற்றியூர் ஞானசம்பந்தர், நிரம்பவழகிய தேசிகர் ஆகியோர் இவர் மாணவர்கள். திருவையாற்றுக்கடுத்த திருமழுவாடிப் புராணத்தைக் கி. பி. 1565ல் 610 பாடல்களில் இயற்றினார்.

அக்காலத் தஞ்சையரசன் கிருஷ்ண மகாராஜையன் ஆணையால் சிக்கல் முதலிய ஊர்க் கோயில்களுக்கு இவர் கண்காளிப்பாளராக அமர்த்தப்பட்டார். திருவானைக்கா புராணமும் இவர் எழுதினார். ஞானப் பள்ளு என்பது பலகாலம் திருவாரூரில் நாடகமாக நடாத்தப்பெற்று வந்தது. அனுட்டான அகவல், புட்பவிதி, பூமாலை, சிவபூஜை அகவல் முதலியன இவர் சமயநெறிபற்றி எழுதியன.

**குருஞானசம்பந்தர்**

ஸ்ரீவில்லிபுத்தூருக்குரியவர், சிவபோகசாரம், முத்திநிச்சயம், சொக்கநாத வெண்பா முதலிய பல நூல்களை இயற்றியவர்.

**ஆபத்தாரணர்**

என்பவர் கமலை ஞானசம்பந்தரின் மற்ருேர் மாணவர்; பூகோளவிலாசம் என்ற நூலை 899 பாடல்களாக இயற்றினார்.

**மாசிலாமணி சம்பந்தர்**

தொண்டைநாட்டு நல்வாயில் என்னும் ஊரினர். 456 பாடல்களில் திருவுத்தரகோசமங்கைப் புராணம் இயற்றியவர்.

**திருவொற்றியூர் ஞானப்பிரகாசர்**

சேந்தை என்னும் ஊரினர். திருவொற்றியூர் புராணத்தை 568 பாடல்களில் இவர் இயற்றினுர். சிவ ஞானசித்தி பரபக்கத்திற்கும் சங்கற்ப நிராகரணத்திற்கும் இவர் எழுதியுள்ள உரை மிகவும் பாராட்டப் பெற்றதும் பின்பற்றப் பெறுவதுமாகும்.

**நிரம்ப அழகிய தேசிகர்**

கமலை ஞானப்பிரகாசருடைய மாணவராய் வேதாரணியம் அல்லது துழாயூரைச் சேர்ந்த இவர் பல சிறந்த புராணங்களை இயற்றியவராவர் சேதுபுராணத்தால் இவர் புகழ்பெற்றுர். அது 3438 பாடல்களையும் 49 படலங்களையுமுடையது. திருப்பரங்குன்றப் புராணமும் இவரதேயாகும். இந்நூற்றுண்டில் கோயிற் பணிகள் பலவற்றைச் செய்த இராமநாத முனி என்பார்க்கு இவர் வணக்கங் கூறுகிருர். இவரது சிவஞான சித்தியுரை பலராலும் பாராட்டப்பெறுவதாகும். அதி வீரராமனும் பரஞ்சோதி முனிவரும் இவர் காலத்தவ ரென்பர் அறிஞர். இவர் பல மாணவர்களைத் தோற்று வித்த பெருமைக்குரியவர். இவர் மாணவருள் ஒருவராகிய **ஞானக்கூத்தர்** திருவையாற்றுப் புராணம் (பஞ்சநதிப் புராணம்) என்னும் நூலை 437 விருத்தங்களில் பாடினுர். **சம்பந்தமுனிவர்** என்ற மற்றெருரு மாணவர்

அழகாபுரியைச் சேர்ந்தவர் திருவாரூர் புராணத்தை 2929 பாடல்களில் கி. பி. 1592ல் இயற்றினர் சம்பந்த முனிவரின் மாணவரொருவர் வரையறுத்த பாட்டியல் இலக்கண நூலை இயற்றினர்.

### தத்துவராயர்

இந்நூற்றுண்டின் மற்றேர் இணையற்ற தத்துவ ஞானியாவார். இவர் வீரையென்னும் நகரினர். இவருடன் சிவப்பிரகாசர் என்ற ஆசிரியரிடம் பயின்ற மற்றேர் மாணவர் சொரூபாநந்தர். திருவாவடுதுறை மடத் தலைவராயிருந்த நமசிவாய மூர்த்திகளின் ஆசிரியர் சிவப்பிரகாசரே தத்துவராயரின் ஆசிரியருமாக வேண்டும். இவர்பல பிரபந்தங்களைப் பாடியுள்ளார். அவை யாவும் தத்துவத் தன்மை யுடையனவே. இவருடைய பாடுதுறை, சசிவன்னபோதம், அஞ்ஞைவதைப்பாணி, மோகவதைப்பாணி, ஈசுவரகீதை, பிரமகீதை முதலியன மிகவும் பாராட்டப் பெறுவனவாகும். மற்றும் இவர் தாலாட்டு, பிள்ளைக்கவி, தூது, கலம்பகம் முதலிய பிரபந்தவகை நூல்கள் பலவற்றை எழுதியுள்ளார். சசிவன்னபோதம் ஆங்கிலத்தில் பாக்கர் என்பவரால்மொழி பெயர்க்கப்பெற்றது.

### அதிவீரராமன்

தென்காசிப் பாண்டியருள் குலசேகரன் மகன் அதிவீரராமன். கொற்கைப் பாண்டியர் எனவும் இவர்கள் தம்மைக் கொண்டாடிக் கொண்டனர். இவன் கி. பி. 1564ல் முடிசூட்டிக்கொண்டான். நளன் கதையைக் கொண்ட நைடதத்தாலும் வெற்றிவேற்கையா

லும் இவர் தமிழரனைவராலும் அறியப்பெற்ருர். நைடதம் புலவர்க்கு ஒளடதம் எனப் பாராட்டப்பெறும். அது 20 படலங்களையும் 1172 பாடல்களையும் கொண்டது. காதல் இன்பச்சுவை நிரம்பியது. காசி காண்டம் கூர்மபுராணம் ஆகிய ஆயிரக்கணக்கான பாடல்களாலான புராணங்களையும் இவர் இயற்றினர். சிறுவர்களும் கற்கும் வெற்றிவேற்கையும் கற்பிலக்கணம் என்ற நூலும் இவர் இயற்றியனவேயாகும். இலிங்க புராணமும் வாயுசங்கிதையும் இவர் குடும்பத்தினரால் இயற்றப்பெற்றனவாகத் தெரிகின்றன. இவரை நிரம்ப அழகியரின் மாணவரெனச் சிலர் கூறுவர். இந்நூற்ருண்டின் சிறந்த நூல்கள் சிலவற்றை இவர் இயற்றியுள்ளார்.

### வாதுங்கராம பாண்டியன்

இவர் அதிவீரராமனின் ஒருவகை அண்ணன் உறவினர். இவர் மனைவியும் நல்ல புலமையுடையவர். வாதுங்கர் கி. பி. 1689ல் பட்டம் பெற்ருரென்பர். இவருடைய திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதிகள் குட்டித் திருவாசகம் எனப் புகழப்படுவனவாகும். அவை உருக்கமும் பாடலொழுக்கமும் உடைய பிரபந்தங்கள் ஆகும். பிரமோத்தரகாண்டம் இவருடைய புராணங்களில் ஒன்ருகும். இது 1310 விருத்தங்களையுடையது. ஐந்தெழுத்து, விபூதி ஆகியவற்றின் பெருமைகளைக் கூறுவதிந்நூல். மிகச் சிறந்த சைவராகிய இவர் கொக்கோகம் என்ற இன்பநூலை எழுதினரென்பர். அது அதிவீரராமனல் எழுதப்பெற்றதென்பார் கருத்து பொருத்தமுடையதாகும். இவர் மனைவி நைடதத்

தைப்பற்றிப் பாடிய பாடலொன்று தனிப்பாடல்களில் காணப்பெறுகின்றது. இவ்வண்ணன் தம்பிகட்குள் ஒரு குடும்பத் தகராறேற்பட்டதாயும் வரதுங்கர் எழுதி யனுப்பியபாடல்களால் அதுதீர்ந்ததெனவும் கூறுவதுண்டு.

வாதுங்கரின் அவைக்களப் புலவர் *காசிக்கலியன் கவிராயர்* என்பவர் வாதுங்கர்மீது நாள்மங்கலம் குடைமங்கலம் முதலியவற்றைப் பாடியுள்ளார். மற்றொருவர் *ஐயம்பெருமாள் சிவந்தகவியென்பவர்* புரூரவ (சக்கரவர்த்தி) கதையை 920 பாடல்களிற் பாடினுர்.

### பரஞ்சோதி முனிவர்

திருவிளையாடற் புராணத்தின் ஆசிரியர். நம்பி திருவிளையாடலுக்கடுத்தது இப்புராணமாகும். இவர் வேதாரணியத்தும் மதுரையிலும் வாழ்ந்தவர்; நிரம்ப அழகியரின் உடன் மாணவராகக் கருதப்படுகிருர். மதுரை மடத்தைச் சேர்ந்தவர்

இவர் புராணம் கி. பி. 1508 ஐ அடுத்து இயற்றப் பட்டதாக ஒரு மரபுண்டு. புராணம் அரங்கேற்றப் பட்டபோது பலபட்டடைச் சொக்கநாதர் அங்கிருந்த தாக ஒரு மரபுள்ளது. சொக்கநாதர் 18ஆம் நூற்ருண்டிலும் இருந்தவர். எனவே பரஞ்சோதியார் 17ஆம் நூற்ருண்டிலும் இருந்திருக்கவேண்டும். 68 படலங்களில் 3363 பாடல்களையுடையது பாண்டியரது வரலாற்றிற்குப் பெருந்துணை புரியும் இப்புராணம். பதிற்றுப்பத்தந்தாதி, கலிவெண்பா முதலாம் பிரபந்தங்களுடன் இன்னும் இரண்டு புராணங்களையும் இவர்

இயற்றியதாகத் தெரிகின்றது. சைவர்களால் மிகுதியும் பற்றுடன் பயிலப்படுவது இப்புராணமாகும்.

**கவிராஜபண்டிதர்**

வீரசோழத்தைச் சேர்ந்த இவர் எழுதியது சௌந்தர்யலகரி என்ற பிரபந்தமாகும். உமாதேவியின் உடலழகுகளையெல்லாம் கற்பனை நலமும் நயமும் பெற வருணிப்பது இந்நூலாகும். ஆனந்தலகரி சௌந்தர்யலகரி என்னும் இரு பகுதிகளைக் கொண்டது இப்பாடல். இதனைத் தவிர இரண்டு மாலைப் பிரபந்தங்களையும் இவர் பாடினர். எல்லப்ப நாவலர் லகரிக்கோர் உரையெழுதினர். எனவே அவர் காலத்திற்கு முந்தியவர் கவிராஜர். நெல்லை வருக்கைக் கோவை யியற்றிய வீரை அம்பிகாபதியைக் கவிராஜர் குமாரர் என்பாரும் உளர்

**எல்லப்ப நாவலர்**

இப்பெயரையுடைய புலவர் இருவர் என்பர் அறிஞர். தாழைநகர் எல்லப்பநாவலர் ராதாநல்லூர் எல்லப்பர் என அவர்களைக் குறிப்பர், அருணையந்தாதி, அருணசல புராணம் சௌந்தரியலகரி உரை ஆகியவற்றிற்குரியவர் தாழைநகர் எல்லப்பரெனவும் திருவெண்காடு திருச்செங்காடு ஆகியவற்றிற்குப் புராணம் எழுதியவர் மற்றவரெனவும் அவர்கள் கருதுவர். ஒரே புலவர் இரண்டிடங்களுக்குரியராய் இருந்ததுமுண்டு. தஞ்சையரசனே இரண்டிடங்களையும் ஆட்சி செய்துள்ளான். 649 விருத்தங்களையுடைய அருணகிரிப்புராணமும் அருணகிரியந்தாதியும் இவர் நூல்களுட் சிறந்

தன. திருவாரூர் கோவை, அருணைக் கலம்பகம் செவ்வந்திப் புராணம் முதலியனவும் இவர் நூல்களேயாகும். இவரைச் சமய ஆவேசமுடையவர் என்பதுண்டு. சைவசமயத்தினும் சிறந்ததோர் சமயமில்லை என்பார் இவர். பிள்ளைப் பெருமாள் அய்யங்காருடன் இவர் வாதிட்டதாக ஒரு மரபுண்டு. இவர் காலத்தில் தனிப் பாடல்கள் சிலவற்றைப் பாடிய பரமேசுவரப் புலவர் என்பவர் ஒருவர் இருந்தார்

### சேறைக் கவிராசர்

சோழநாட்டுச் சேறை (திருச்சேறை?) என்ற ஊர்க்கருணீகராகிய இவர் ஆசுகவியாகவும் வண்ணக் களஞ்சியமாகவும் விளங்கியவர். புகழ் சிறந்த திருக் காளத்திநாதருலாவிற்காசிரியர். அந்தகக்கவி வீரராகவர் இவரையும் எல்லப்பரையும் தம் சேயூர் முருகனுலாவில் பாராட்டுகிறூர். அதிவீரராமனுக்குச் சீட்டுக் கவியொன்றிவர் எழுதியுள்ளார்.

### பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்

அட்டப் பிரபந்தத்தின் ஆசிரியராகிய மணவாள தாசர் இவரேயாவர். இவரூர் மங்கை என்பதாகும். மணவாளதாசர் என்ற பெயரில் நால்வர் இருந்தாக ஆசிரியர்கள் கூறுவதுண்டு. திருவரங்கத் தூசல் திருநாமம் எழுதிய வெண்மணிபிள்ளைப் பெருமாளைத் தவிர மற்றைப் பிரபந்தங்களை யெல்லாம் பாடியவர் ஒருவரே யாவார்.

இவர் 17ஆம் நூற்றுண்டுத் தொடக்கத்தில் திருமலை நாயக்கனிடம் பதவியில் இருந்ததாகவும் கூறுத

லால் இவர் 16 - 17ஆம் நூற்ருண்டுக்குரியராவார். இராமாநுசருக்கும் பட்டருக்கும் வணக்கங் கூறுதலால் இவரை அவர்கட்கடுத்த (12ஆம் நூற்ருண்டு) காலத் தவராகப் பலர் கருதுவர். இவர் கூறுவது பத்மநாபப் பட்டர் என்பவர். மணவாள மாமுனியைப் பாராட்டிப் பாடியுள்ள பராசர பட்டர் என்பவரே ஐயங்கார் குறிக் கும் பட்டராகத் தெரிதலால் இப்பட்டர் இராமாநுசர் மாணவரல்லர். இராமாநுசர் காலத்தவராஞல் இவ ரைக் குரு பரம்பரைகள் குறிக்கத் தவறியிருத்தற்கிட மில்லை. குமரகுருபரர்க்கும் இவர்க்கும் வாதம் நிகழ்ந்த தாகவும் ஒரு மாபுண்டு. திருவரங்கம், திருவேங்கடம் திருமாலிருஞ்சோலைத் திருமால் உருவங்களைப் பாராட்டி அந்தாதி, மாலை, கலம்பகங்களாக எழுதப் பெற்றதே அட்டப் பிரபந்தம். இன்னும் இரண்டு பிர பந்தங்களையும் இயற்றியதாகக் கூறுவர்.

### குருநமச்சிவாயர்

குகை நமச்சியவாயர் மாணவர். சிதம்பரத்தில் விளங்கியவர். சிதம்பர வெண்பா அண்ணுமலை வெண்பா பரமரகசியமாலை ஆகிய பிரபந்தங்களை இயற்றியவர். கி. பி. 1592ஆம் ஆண்டு வேங்கடபதி ராயன் கல்வெட்டொன்று இவ்வாசிரியர்க்கு ஒரு மடம் தந்ததுபற்றிக் குறிப்பிடுகின்றது. இவர் 1602ல் மறைந் தார் என்பதோர் வெண்பா உள்ளது.

### குகை நமச்சிவாயர்

திருவண்ணுமலை குகைமடத்தில் இருந்தவர். அருணகிரி யந்தாதி சோணகிரி யந்தாதியென்ற

இரண்டு அந்தாதிகளை இயற்றியவர். தமிழ் மாணவரிடத்திலும் ஆசிரியர்களிடத்திலும் பெரிதும் பயிலப் படுவது இவர் அந்தாதிப் பாடல்களாகும்.

### இரேவண சித்தர்

அகராதி நிகண்டின் ஆசிரியரே புலியூர் இரேவண சித்தர். புலியூர் கோடம்பாக்கத்தைக் குறிப்பதாகத் தெரிகிறது. இவர் வீர சைவர். கி. பி. 1594ல் இவர் தம் நிகண்டையியற்றினர். இது 3368 சூத்திரங்களை யுடையது. அகராதியென்ற பெயரை முதலில் இவர் ஆண்டிருக்கிறர். பட்டீச்சுரம் திருமேற்றளி வலஞ்சுழி ஆகியவற்றின்மீது புராணங்களும் இவர் பாடியதாகத் தெரிகின்றது. உத்தண்ட வேலாயுதகவி யென்பவர் திருவதிகைக் கலம்பகத்தையும், பெயரறியப்படாத புலவர் ஒருவர் 1546ல் திருவாரூர் புராணத்தையும் இந்நூற்றுண்டில் இயற்றியுள்ளனர்.

### அனந்தவீரியர்

என்ற ஜைனர் 1518ல் திருப்பருத்திக்குன்றத்தில் கோயில் பணியிலிருந்தவர் நீலகேசிக்கோர் உரையெழுதினர். அதனுள் திருக்குறளையும் மேருமந்தர புராணத்தையும் 'எம்ஓத்து' என இவர் குறித்தலால் மேருமந்திர புராண ஆசிரியராய அனந்தவீரியரின் இவர் வேருனவர்.

### அரபத்தர்

பரதசாத்திரத்தை இக்காலத்தேயே எழுதியிருக்க வேண்டும். இவர் 14ஆம் நூற்றுண்டின் சாரங்கதேவரைக் குறிக்கிறர். ஆனல் 17ஆம் நூற்றுண்டின் வேங்

கடமகியையும் 72 மேளகர்த்தாக்களையும் குறிக்காததால் இந்நூற்ருண்டவராகக் கருதவேண்டியுள்ளது.

### அறம்வளர்த்தான்

பரதசங்கிரகத்தை இக்காலத்தேசிய இயற்றியிருக்கவேண்டும். முதலில் குறித்த சிதம்பரப் பாட்டியலை இவர் தம் நூலில் மேற்கோள் காட்டுகிருர். 32 மேளகர்த்தாக்களையே பேசுகிருர்.

### ஆனந்தக் கூத்தர்

பாண்டிநாட்டு வீரவநல்லூரைச் சேர்ந்தவர். இவர் திருவாசகத்திற்குரை யெழுதிய ஆனந்தக் கூத்தரும் இவரும் ஒருவரோ தெரியவில்லை.

### ஞானவரோதய பண்டாரம்

என்பவர் கந்தபுராணத்திற்கோர் உபதேசகாண்டம் எழுதினுர். இவர் காளமேகத்தின் காலத்திலும் இருந்தாரெனத் தெரிகின்றது. இவற்றைத் தவிர இக்காலத்தில் கதிரைமலைப்பள்ளு; மாந்தைப்பள்ளு; பரத சித்தாந்தம்; தொண்டைமான் அம்பலத்தாடும் அய்யனெழுதிய வசுசரித்திரம் அறம் வளர்த்த முதலியார் கலம்பகம் முதலியனவும் இயற்றப்பெற்றிருக்க வேண்டும் எனத் தெரிகின்றது.

## 17 ஆம் நூற்றாண்டு.

### முன்னுரை

இந்நூற்றாண்டிலும் இலக்கியங்கள் பெரிதும் சமய நோக்குடன் எழுதப்பெற்றன. மைலத்திலும் துறையூரிலும் வீரசைவ மடங்கள் சமயப்பணியுடன் தமிழ்ப் பணியும் செய்யத் தொடங்கின. நாயக்க அரசப்பிரதிநிதிகள் தமிழகத்தில் மதுரை, திருச்சி, தஞ்சை ஆகிய இடங்களிலிருந்து ஆண்டுள்ளனர்.

சேதுபதிகள். புதுக்கோட்டை எட்டயபுரம் விசய நகரம் அரியலூர் ஆகியவற்றின் அரசர்கள், வடமலையப்பன் திருவேங்கடநாதன் சீதக்காதி போன்ற வள்ளல்கள் இந்நூற்றாண்டிலக்கியங்கட்கும் பெருங்காரணராகவும் புரவலராகவுமிருந்தனர். இஸ்லாமிய புலவர்கள் இக்காலத்திலக்கியப் பணியில் கலந்து கொண்டனர். மேற்குறித்த ஒவ்வொரு புரவலரும் இந்நூற்றாண்டின் புலவர்கள் பலரை ஆதரித்துள்ளனர். புராணங்களும் புரவலரைப்பற்றிய புகழ்ப்பாடல்களும் இந்நூற்றாண்டின் ஏற்றமுள்ள இலக்கியப் பகுதிகளாகும். நாடுகளின் வரலாற்றைப்பற்றிய மண்டல சதகங்கள் இக்காலத்து விளக்கமுற்றன. கோவைப் பிரபந்தத்தின் தனித்துறை ஒவ்வொன்றைக் குறித்து விரிவான தனி நூல்கள் எழுந்தன.

### இசை நாடக இலக்கியங்கள்

கி. பி. 16ஆம் நூற்றாண்டில் அறம் வளர்த்தான் முதலியோர் நாட்டிய இலக்கணங்கள் எழுதினர். நாடகம் என்பது கி. பி. 18ஆம் நூற்றாண்டு வரையுங் கூட

நாட்டியத்தையே குறிப்பதாகும். நாடக இலக்கணங்கள் பெரிதும் இசைபற்றியும் பேசும். பரதர் எழுதிய வடமொழி பரதத்திலும் இவ்வாறே எழுதியுள்ளாரெனத் தெரிகின்றது. ஆடல் பாடல் அழகு கலந்ததே நாடகமாதலின் ஆடலுடன் பாடல் கலந்தேயிருக்கும். அகத்தியர் முத்தமிழ்க்கும் இலக்கணம் எழுதினுரெனவும் பிறரையும் வெல்லும் இசைப்புலமை யுடையவராயிருந்தாரெனவும் கூறப்படுகின்றது. முச்சங்கங்களிலுமிருந்த பரிபாடல்களும் கலிப்பாடல்களும் இசைத்தன்மையுடையனவே. அக்காலத்தியன்ற இசை நாடக இலக்கண நூல்களைப்பற்றித் தொடக்கத்தும் மொழியப்பட்டது. பதிற்றுப்பத்து, கலித்தொகை, பரிபாடல் ஆகிய தொகைநூல்களில் ஒவ்வொரு பாடலின் கடைசியிலும் அதற்குரிய பண் குறிக்கப் பெற்றுள்ளது. பத்துப் பாடல்களில் பாணரும் கூத்தரும் யாழ் வகையியல்புகளும் நிரம்ப கூறப்பெறுகின்றன. பதினெண் கீழ்க் கணக்கிலும் இசைக் குறிப்புக்கள் காணப் பெறுகின்றன. காப்பியங்களுள் சிலப்பதிகாரம் சிந்தாமணி யாகியன இசைக் கருவூலங்கள். தேவாரங்களும் வைணவப் பிரபந்தங்களும் ஏழிசை இலக்கியங்கள். திவாகர முதலிய நிகண்டுகளில் அரிய இசையிலக்கணங்கள் உணர்த்தப் பெறுகின்றன. தேவார நாலாயிரப் பிரபந்தப் பாடல்களுக்குச் சில நூற்ருண்டுகட்குப் பின் இசைவகுத்தனரென்பர். முதற் குலோத்துங்கனே ஒரு இசைநூல் எழுதியதாகத் தெரிகின்றது. பிற்காலச் சோழர் காலத்தே இசைக்கு மிகவும் ஏற்றம் தரப்பட்டுள்ளது. 13—14 நூற்ருண்டுகளிலிருந்த சாரங்கதேவரும் 17ஆம் நூற்ருண்டிலிருந்த வேங்கட

மகியும் பிற்காலக் கர்நாடக இசைக்குப் புத்துயிரளித்த வர்கள். அவர்களையொட்டி 17ஆம் நூற்றுண்டுவரைப் பட்ட இசைத்தமிழ் இலத்கணங்கள் 32 இராகங்களையே பேசுகின்றன. பின் நூற்றுண்டுகளிற்றுன் ஆசிரியர் கள் 70 மேளகர்த்தா இராகங்களைப் பேசுகின்றனர். சந்தங்களில் பாடிய வில்லிபுத்தூரர் அருணகிரி முதலி யோர் இசைத்தமிழ் இலக்கியங்களையே தந்தனர் என்ன வேண்டும். மறைந்த இசை இலக்கண நூல் கள் பல உரையாசிரியர்தம் குறிப்புக்களால் அறியப் பெறுகின்றன. கடைசி இரு நூற்றுண்டுகளில் ஆப்ர காம் பண்டிதரது கருணுமிர்தசாகரமும் விபுலானந்த ரது யாழ்நூலும் ஆழமும் அகலமும் உடைய இசை நூல்களாகும். சங்ககால நாடக நூல்களைப்பற்றி முன்பே கூறினேம். கூத்தரும் விறலியரும் நாடகத் திறலினர். முத்தமிழ்க் காப்பியம், நாடகக் காப்பியம் என்றே சிலப்பதிகாரம் கூறப்படும். இடைக்காலத்தே மறைந்த நூல்களில் பல நாடகநூல்களாகக் கூடும். தமிழரசர் கல்வெட்டுக்களில் நாடகங்களுக்கு மிகவும் ஆக்கமும் ஊக்கமும் தரப்பட்டுள்ளது. கதைகளையே நாட்டியத்தால் நடித்துக் காட்டுவது வெகுகாலம்வரை யிருந்த வழக்கு. 11 – 12 நூற்றுண்டுகளில் பல நாட கங்கள் இயற்றப்பெற்றன. குறவஞ்சி இலக்கியங்க ளெல்லாம் நாடகவகைப்பட்டன. பள்ளியையும் இவ் வகையிற் சேர்த்துக்கொள்ளலாம். 16ஆம் நூற்றுண்டு கமலை ஞானப்பிரகாசரின் ஞானப்பள்ளு என்பது பிற் காலத்தில் நாடகமாக நடிக்கப்பட்டுள்ளது.

## சைவ வைணவ இலக்கியங்கள்

கடைச்சங்கப் பரிபாடல்கள் திருமாலையும் சிவனை யுமே பாடிப் பரவுகின்றன. முதற்சங்கப் பரிபாடல்க ளும் அவ்வாறே இருந்திருக்கவேண்டும். திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும் துவரைக் கோமானும் சங்கங்களிலிருந்தமை அறியப்படுகின்றது. மாயோன் மேய காடுறை உலகம் என்கிறது தொல்காப்பியம். சிவனும் மாலும் கண்ணனும் பலதேவனும் என இவர் கள் கடைச்சங்கப் பாடல்களிற் குறிக்கப்பெறுகின்ற னர். கலித்தொகையிலும் இவர்களைப்பற்றிய குறிப்புக் கள் வருகின்றன. கீழ்க்கணக்குகளில் வாழ்த்துப் பாடல்கள் உள்ளன. சிலப்பதிகாரம் இரு சமயங்களை யும் ஏத்துகின்றது. மணிமேகலை இரு சமயதத்துவங் களையும் சுருக்கமாகக் குறிக்கின்றது. தேவாரப்பாடல் கள் நாலாயிரப் பிரபந்தப் பாடல்கள் மற்றும் திரு முறைப் பாடல்கள் ஆகியவற்றைப்பற்றிச் சொல்லத் தேவையில்லை. 11 – 12ஆம் நூற்றாண்டுச் சோழர் காலம் ஒருவகைச் சமயப்பொறையுடையது. பெரிய புராணம் கம்பராமாயண முதலிய சமயக்காப்பியங் கள் இக்காலத்தே தோன்றின. தொடர்ந்த நூற்றாண் டுகளில் வில்லிபாரதம், திருப்புகழ், திருவிளையாடல் புராண முதலிய தோன்றின. தனிப்பாடல்கள் அள வில்லாதனவாக இச்சமயங்களைப் போற்றின. சைவ வைணவ சித்தாந்த நூல்களும் உரைகளும் வெகுவா கப் பரவின. பிரப்பிரம விளக்கம், இரு சமய விளக்கம் இச்சமயங்களை நிலைநாட்ட எழுதப்பட்டவை. மற்றும் பாகவதங்களும், சைவப்புராணங்களும் பிரபந்தங்க ளும் கி.பி. 16ஆம் நூற்றாண்டுக்குப்பின் நூற்றுக்கணக்

கில் எழுதப்பெற்றன. திருவிளையாடல், மச்சபுராணம் காசிகாண்டம், தலபுராணங்கள் முதலியன இந்நூற்றுண்டுகளில் எழுதப்பெற்றனவே. சிவஞான முனிவர் காலத்தும் திருசிரபுரம் மீனுட்சிசுந்தரம் பிள்ளை காலத்தும் இப்புராணங்களும் பிரபந்தங்களும் மிகவாகப் பாடப் பெற்றன. இருபதாம் நூற்றுண்டிலும் இச்சமயங்களைப்பற்றிய இலக்கியங்களும் கட்டுரைகளும் (விவாதங்களும் கூட) மிகலாயின வென்னலாம்.

## சித்தர் சிவப்பிரகாசர்

சமயப் புலவராகவும் திகழ்ந்த இவர் பிற்காலத்தில் சிறந்த வீரசைவத் தலைவராய் விளங்கினுர். திருவாவடுதுறை நமசியவாயமூர்த்திகளின் மாணவராகிய இவர் சித்தராய்ப் பல வியத்தகு செயல்களைச் செய்தார். திருத்துறையூர் மடத்துக்குத் தலைவரானுர். அக்காலத்தில் விசயநகரத்து அரசப் பிரதிநிதிகள் வைணவப் பற்றினுல் சிதம்பரம் கோயிற் பூசைகள் நன்கு நிறைவேருமல் தடுத்தனர். இது சம்பந்தமாக வேலூர் நாயக்கப் பிரதிநிதி இலிங்கம நாயக்கனிடம் (கி. பி. 1610) சென்று அணைத்தையும் செம்மைப்படுத்தனுர். இவர் அத்துவித வெண்பா முதலிய ஐந்து தத்துவ நூல்களை எழுதினுர்.

## அம்பலவாண தேசிகர்

நமசிவாயமூர்த்திகளின் மற்ருெரு மாணவர். திருவாவடுதுறை மடத்தின் இரண்டாவது தலைவராக அவர் எழுதிய நூல்கள் பல: சித்தாந்தப் பஃருெடை; தசகாரியம்; சன்மார்க்க சித்தி; உபதேச வெண்பா

முதலியன அவற்றுள் சில. பண்டார சாத்திரம் என்ற தொகுப்பில் இவை அடங்கியுள்ளன.

### ஞானக்கூத்தர்

சித்தர் சிவப்பிரகாசருக்கடுத்த துறையூர் மடத்துத் தலைவர். 438 விருத்தங்களில் விருத்தாசல புராணம் இயற்றினர். தமிழ்மக்கள் இதனை ஒருகாலத்துத் தினமும் படித்துவந்தனர். திருவிடைமருதூர்ப் புராணமும் இவர் எழுதியதாகும்.

### அகோர முனிவர்

திருவாரூரினர்; கமலை ஞானப்பிரகாசர் வழிவந்த துறவியாவார். இந்நூற்ருண்டில் இலங்கிய வைத்தியநாத நாவலர்க் காசிரியர். வடமொழியிலும் வல்லவர். கும்பகோணம், வேதாரணியம், கானல்பேர் ஆகியவற்றின் மீது புராணங்களைப் பாகுனர்.

### வெள்ளியம்பலவாணத் தம்பிரான்

தருமபுர மடத்தைச் சேர்ந்தவர். குமரகுருபரர் மாணவரும் சிவப்பிரகாசர் ஆசிரியருமாவர் இவர் என அறியப்படுகிறது. தம் ஆசிரியர் ஞான சம்பந்த தேசிகர்மீது தாலாட்டு முதலிய பல பிரபந்தங்களை இவர் பாடியுள்ளார். முத்திநிச்சயத்திற்குரைகளும் சிவஞான சித்தியுரையும் இவர் பெயரை இலக்கியவுலகில் என்றும் நிறுத்தக் கூடியன. மிருகேந்திரத்தை வடமொழியிலிருந்து பெயர்த்திருக்கிருர். பெரியபுராணத்திலும் இவர் சில பாடல்களை எழுதிச் சேர்த்திருக்கிருர் எனப் பலர் கூறுவதுண்டு.

### குமரகுருபர சுவாமிகள்

இவரும் சிவப்பிரகாச சுவாமிகளும் இந்நூற்றுண்டின் இணையற்ற புலவரேறுகளெனப்படுவர். இவர்கள் பாடல்களுள் பொதுமக்களும் படித்துப் பயன்பெறத் தக்கன பலவாகும். குமரகுருபரர் ஸ்ரீ வைகுண்டத்தில் தோன்றிப் பிறவியில் ஊமையாய்ப்பின் முருகனருளால் பேசும் திறம் பெற்ருர். திருமலைநாயக்கன் விருப்பத்திற்கேற்ப இவர் நீதிநெறி விளக்கம் பாடினுரென்பர். மீனுட்சியம்மை குறத்திலும் நாயக்கன் பெயர் குறிப்புள்ளது.

இவரும் துளசிதாசரும் ஒரு காலத்தவரென்பர். இவர் மொகலாய மன்னர் அரண்மனைக்குச் சென்று பல விந்தைகளைப் புரிந்து வடநாட்டிலும் தமிழ் மணமும் சைவ மணமும் கமழச் செய்தனர்.

இவர்தம் பாடல் இனிமையைக் கேட்க மீனுட்சியம்மையே; 'மீனுட்சியம்மைப் பிள்ளைத்தமிழ் வருகைப் பருவத்தை இவர் பாடியபோது', ஒரு குழந்தையாகத் தவழ்ந்து வந்ததாகக் கூறுவர். கந்தர் கலிவெண்பாவே இவரெழுதிய முதற் பிரபந்தமும் பலரும் பாராயணம் செய்வதுமாகும். கைலைக் கலம்பகம், மதுரைக் கலம்பகம், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ். சிதம்பரச் செய்யுட் கோவை, சிவகாமியம்மை இரட்டைமணிமாலை, சகலகலாவல்லி மாலை, காசிக் கலம்பகம் முதலிய பல பிரபந்தங்களை இவர் எழுதியுள்ளார்.

**சிவப்பிரகாச சுவாமிகள்**

வெள்ளியம்பலத் தம்பிரானிடம் பாடம் கேட்டவர். கிறித்துவத்திற் கெதிராகவும் வாதாடி வீர சைவத்தைத் தமிழகத்தே வளர்த்தவர்களில் இவரும் முதல்வராவார். இவரும் துறையூர் (நல்லாற்றூர்) சிவப்பிரகாச அடிகள் என்றே அழைக்கப்படுவர். ஏசுமத நிராகரணம் என்றே ஓர் நூல் எழுதினுரென்பர்.

1652ல் பிரபுலிங்கலீலையென்ற வீரசைவ சித்தாந்த நூலை எழுதினுர். வீரசைவத்தைத் தோற்றுவித்த அல்லம தேவர் கதை வடிவில் அஃதமைந்துள்ளது. 25 படலங்களும் 1157 விருத்தங்களும் உடையது. இதழ் இணையாத திறம்படைத்த பாடல்களால் பாடிய திருச்செந்தில் நீரோட்டகயமக அந்தாதியும், சோணசைலமாலையும், திருவெங்கைப் பிரபந்தங்களும், நால்வர் நான்மணிமாலை, தர்க்க பரிபாஷை, மைலம் பாலைய சுவாமிகள்மீது பல பிரபந்தங்களும் திருக்கூவப் புராணமும் பழமலை அந்தாதியும், நன்னெறியும் காளத்தி புராணமும் இவர் நூல்களுட் பலவாகும். நன்னெறி மாணவராலும் பயிலப்பெறுவது. நாயன்மார் நால்வர்பற்றிய நான்மணிமாலையும் கற்போரால் நன்கறியப்படுவது. கற்பனைக் களஞ்சியம் என்றே இவர் கற்போர் அனைவராலும் கருதப்படுபவராவார்.

**சாந்தலிங்கர்**

சிவப்பிரகாசரின் மைத்துனர். பாலைய சுவாமிகளின் மாணவர். வைராக்ய சதகம், தீபம், அவிரோத உந்தியார், கொலைமறுத்தல் முதலியன இவர்தம் நூல்கள்.

### கருணைப்பிரகாசர்

சிவப்பிரகாசரின் தம்பியாவார். இட்டலிங்க அகவலும் காளத்திபுராணத்திற் பகுதியும் இவர் பாடினார்.

### வேலையர்

சிவப்பிரகாசரின் உடன் பிறந்தவர். நல்லூர் புராணம். நமசிவாய மாலை (குகை நமசிவாயரைப் பற்றியது) காளத்திபுராணப் பகுதி, மைலத்துலா இரட்டைமணி மாலை முதலிய இவரியற்றிய நூல்களாகும்.

சிவப்பிரகாசரின் தந்தையான குமாரசுவாமி தேசிகரும் நற்புலமையுடையவர். அவரது தனிப்பாடல் ஒன்று திரட்டுக்களில் காணப்பெறுகின்றது.

### சம்பந்த சரணாலயர்

தர்மபுர மடத்தைச் சேர்ந்தவர். இவரெழுதிய கந்த புராணச் சுருக்கம் 1048 பாடல்களையுடையது. சைவர்களால் மிகவும் பயிலப்படுவதாகும். இவரும் வெள்ளியம்பலத் தம்பிரான் மாணவர்.

### பாலசுப்ரமணிய கவி

பழனியில் தோன்றியவர். இவர் தந்தை பெரியவன் கவிராயர் கோயிற் பணி செய்தவர். தஞ்சையரசன் பாலசுப்ரமணிய கவிக்கும் பட்டமளித்துப் பாராட்டினான். இவரெழுதிய பழனித்தல புராணம் 1628ல் இயற்றப் பெற்றது. 987 பாடல்களையுடையது. வைணவத்திற்கு மேலாய சைவதத்துவங்களைக் கூறும் நூல்கள் உட்பட இவர் எட்டு நூல்களை எழுதியுள்ளார்.

சைவத்தை நிலைநாட்ட இவர் பெருமுயற்சி செய்திருக்கிறார் எனத் தெரிகின்றது.

### தமிழாகர முனிவர்

தருமபுரமடத்து மாணவர். திருநெல்வேலியினர். இவர் 1633ல் பிராயச்சித்த சமுச்சயம் என்னும் தத்துவ நூலை எழுதினர்.

### வைத்தியநாத தேசிகர்

இலக்கணவிளக்கம் வைத்தியநாத நாவலர் எனப் பெயர் பெற்றவர் இவரே. இவரிலக்கணம் குட்டித் தொல்காப்பியம் எனவும் பெயர் பெறும். மாதைத் திருவேங்கட நாதர் மகனுக் காசிரியராய் அவ்வையரால் ஆதரிக்கப்பெற்றவர். மாணவனுக்காகவே இவ்விலக்கணத்தை எழுதினரென்பர்.

பாசவதைப் பரணியும் நல்லூர்ப்புராணமும் இவரியற்றியவல்ல என்பார் உளரேனும் இவரே அவற்றின் ஆசிரியர் என உறுதிப்படுத்தப் பெறுகின்றது.

வாட்போக்கிப் புராணமும் மைலம் பிள்ளைத் தமிழும் உட்படப் பல பிரபந்தங்களையும் இவரியற்றினர். இவர் மகன் வடுகநாத தேசிகர் இரண்டு புராணங்கள் வைத்தீசுவரன் கோயிலுக்கும் திருமுல்லைவாயிலுக்குமியற்றினர்.

### படிக்காசுப் புலவர்

பண்பாய பகர்சந்தம் பாடுவதில் வல்லவர் தொண்டை நாட்டுப் பொன்விளைந்த களத்தூரினர்.

வைத்தியநாத நாவலரின் மாணவர். தொண்டை மண்டல சதகம்பாடிப் பெயர்பெற்றவர் இவர். இரகு நாத சேதுபதிக்கும் சீதக்காதிக்கும் நண்பர். சிவந் தெழுந்த பல்லவராயன் (1681-86) மீது பிள்ளைத் தமிழும் உலாவும் இவர் பாடியுள்ளார். தண்டலையார் சதகமும் (பழமொழி விளக்கம்) இவர் பாடியதென்பர். இன்னும் பல இலக்கியங்களையும் இவர் பாடினர். படிக் காசருரைத்த 'தமிழ்வரைந்த ஏட்டைத் தொட்டாலும் கைமணக்கும் சொன்னாலும் வாய்மணக்கும், சேற்றில் நட்டாலும் தமிழ்ப்பயிராய் விளையுந்தானே' என்ற பாராட்டுப்பாடல் ஒன்றுள்ளது.

### மாதைத் திருவேங்கட நாதர்

பிரபோத சந்திரோதயம் என்ற வேதாந்த தத்துவ நூலால் பெயர்பெற்றவர். மாதையென்னும் ஊரினர். திருமலை நாயக்கன் பிரதிநிதியாய் கயற்தாற்றுப் பகுதியை ஆண்டவர். வைத்தியநாதநாவலர் தொடர்புடையவரென முன்புரைக்கப்பெற்றது. பிரபோதசந்திரோதயம் வடமொழியினின்றும் பெயர்த்தது. 2019 விருத்தங்களையுடையது. வைத்தியநாத நாவலர் இதனாசிரியர் என்பார் கூற்றும் ஆராயத்தக்கது. கீதாசாரத் தாலாட்டு, ஞான சோபானம் என்ற திருநூல்களும் இவ்வாசிரியரால் எழுதப்பெற்றதென்பர். இவர் சிறந்த செல்வராகவும் இந்நூற்ருண்டின் புரவலராகவும் இலங்கியிருக்கிருர்.

### சுப்ரமணிய தேசிகர்

ஆழ்வார் திருநகரியினர். வடமொழி இலக்கண நெறியைத் தழுவிப் பிரயோக விவேகம் என்ற இலக்

கண நூலை எழுதித் தஞ்சையரசரிடம் வடமொழிப் புலவராயிருந்த இராமபத்ர தீக்ஷிதர் முன்பில் அரங்கேற்றினுர். இவரே இந்நூற்கோர் உரையும் எழுதியுள்ளார். தமிழ் இலக்கணங்களின்முன் இவையெல்லாம் நிற்கவில்லை.

### சாமிநாத தேசிகர்

திருவாவடுதுறை மடத்தைச் சேர்ந்த ஈசான தேசிகர் எனப் பெயர் பெற்றவர். இருமொழிப் புலமையுமுடையவர். அதனுலேயே தமிழை ஐந்தெழுத்தால் ஒரு பாடையுமுண்டென் றறையவும் நாணுவர் அறிவுடையோரே என இகழ்ந்துரைத்துத் தமிழரிடம் தணியாப் பழியைத் தேடிக்கொண்டார். இலக்கணக் கொத்தென்ற நல்ல தமிழிலக்கணத்தில்தான் இவர் இவ்வாறெழுதினுர். திருச்செந்தில் கலம்பகமும் இவரெழுதினுர். இவர் மாணவர் சங்கர நமச்சிவாயர் நன்னூலுக்கோர் விருத்தியுரை யெழுதினுர்.

### களந்தைக் குமரன்

புகழேந்தியின் பொன் விளைந்த களத்தூரினர். கி. பி. 1616ல் 830 விருத்தங்களில் திருவாஞ்சியப் புராணம் இயற்றினுர்.

### அந்தகக்கவி வீரராகவ முதலியார்

குருடராயிருந்தும் பெரும் புலவராய் விளங்கிய விந்தை தமிழகத்தில்தான் நிகழ்ந்தது. முத்தமிழைத் தன்னெஞ்சமே ஏடாகக் கற்றவர் என இவரைப் பாராட்டுவர். திருக்கழுக்குன்றத்தினருகே பிறந்தவர். வாழ்க்கையில் இலங்கைவரைச் சென்று பல புரவலர்

களால் பொருளுதவப்பெற்றுயர்ந்தவர். வைத்தியநாத நாவலர் காலத்தெல்லாம் இவர் வாழ்ந்திருக்கிறார். பரராசசேகரன்மீது ஒரு வண்ணம் பாடியிருக்கிறார்.

திம்மப்பய்யன் (கி.பி. 1680) தலைமையில் இவர்தம் திருக்கழுக்குன்றப் புராணத்தை அரங்கேற்றினார். தருமபுரம் சிற்றம்பலதேசிகர் மீதுபஞ்சரத்னம் பாடினார். புராணம் 832 பாடல்களை உடையது. திருவாரூர் உலா முதலாம் பல உலாக்களும், சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் முதலிய பிள்ளைத்தமிழ்களும் என இவர் சுமார் 10 பிரபந்தங்களைப் பாடியுள்ளார்.

இவர் பாடல்கள் மிக்க இலக்கிய நயமுடையன. முதலியார் பாடல்களே பாடல்கள், மற்றையோர் பாடல்கள் வெறும் கற்கள் எனப் பரராசசேகரன் ஒரு முறை பாராட்டினார்.

இவர் பாடலைப் பாராட்டித் தலையசைக்க ஆதி சேடனின் ஆயிரந்தலைகளும் வேண்டும் என இவர் பாடலைப்பற்றிப் பாராட்டுவதும் உண்டு.

*அழகிய சிற்றம்பலக்கவி*

டாக்டர் ஐயரவர்களுக்கு அரிய ஏடுகளை எல்லாம் உதவியது இவர் தொகுத்த ஏடுகளிலிருந்துதான் என்பர். மாமல்லபுரத்தில் பிறந்து மிதிலைப்பட்டியிற் சென்று தங்கியவர்.

நாயக்கர் பிரதிநிதியாகிய வெங்காளப்பநாயக்கன் மீது குறவஞ்சி பாடி, மிதிலைப்பட்டியை மானியமாகப்

பெற்றார். தளவாய் விசயரகுநாதசேதுபதி மீது தளசிங்கமாலையும் பாடினார்.

*பாகை அழகப்பன்*

கோடம்பாக்கத்தைச் சேர்ந்த இவர் 108 வெண்பாக்களில் வடமலைவெண்பாப் பாடினார். இவர் வடமலையப்பப்பிள்ளை காலத்தவர்.

*வென்றிமாலைக்கவி*

திருச்செந்தூர் பூசகர் குடும்பத்தில் பிறந்து, திருச்செந்தூர் புராணத்தை 829 விருத்தங்களாகப் பாடினார். டச்சுக்காரர்கள் இக்காலத்து முருகன் சிலையைக் கடலில் எறிந்துவிட அதனை நாயக்கப் பிரதிநிதிகள் மீட்டுதவினர். 20-1-1653ல் இது நிகழ்ந்ததாக இப் புராணத்தில் பாடல் ஒன்றுள்ளது.

*காரி ரத்னகவி*

திருக்குருகைப் பெருமாள்கவியின் மாணவராகிய இவர் மாறனலங்காரத்திற்கும் தொல்காப்பியத்திற்கும் நுண்ணுரைகள் எழுதினார். தொல்காப்பிய உரை கிடைக்கப்பெறவில்லை. இவர் மகன் திருமேனிக்கவி வடமலையப்பன் திருப்பேரையிற்செய்த திருப்பணிகளைக் குறித்துத் திருப்பணிமாலை ஒன்று பாடினார்.

*சிறிய காரிரத்னகவி*

காரிரத்னகவியின் குடும்பத்தினர். இரசை வடமலையப்பன்மீது புலவராற்றுப்படை 271 கண்ணிகளில் 1695ல் பாடினார். இதன் பாக்கள் மிக்க நயம் உடையவை.

### அமிர்தகவி

இராமநாதபுரம் பொன்னங்காலைச்சேர்ந்த இவர் திருமலைச்சேதுபதியின் அவைப்புலவராவார். இவர் பெயருக்கேற்ப இனிமையாய் நாணிக்கண்புதைத்தல் என்றதொரு பிரபந்தம் இயற்றினார். 400 கோவைத் துறைகளில் நாணிக்கண்புதைத்தல என்ற ஒரே துறையைக்கொண்டு 400 பாடல்கள் பாடுவதென்பது இலக்கிய யாப்பில் ஓர் அருஞ்செயலாகும். ஒவ்வொரு பாடலுக்கும் சேதுபதி ஒரு பொன்தேங்காய் பரிசளித்தாரெனக் கூறுவது உண்டு. இவர் அந்தககக்கவியின் காலத்தவர் என்பதுண்டு.

### திருப்பூவணம் கந்தசாமிப் புலவர்

திருப்பூவண் நாதருலாவும் புராணமும் இவர் பெயரை நிலைக்கச் செய்தவை. திருப்பூவண புராணம் கி. பி. 1621ல் இயன்றதாகத் தெரிகிறது. இவர் உமறுப்புலவர் காலத்தவர் எனத் தெரிகின்றது. புராணம் 1437 விருத்தங்களையுடையது. திருவாப்பனூர், திருப்புவனவாயில் ஆகியவற்றிற்கும் இவர் புராணம் இயற்றினார். திருப்பூவணத்திற்குத் தீர்த்த வகுப்பு மூர்த்தி வகுப்பு முதலியனவும் இவர் இயற்றியுள்ளார்.

### கடிகை முத்துப்புலவர்

எட்டயபுரத்தவர். சமுத்திரவிலாசத்தால் சிறப்புற்றவர். உமறுப்புலவர் இவர் மாணவர் என்பர். மதனவித்தாரமாலை, காமரசமஞ்சரி, திருவிடைமருதூரந்தாதி முதலிய பிரபந்தங்களையும் இவர் இயற்றினார். கடலைப்

பார்த்துத் தலைவி இரங்குவதாகப் பாடியதே சமுத்திர விலாசம். நாணிக்கண் புதைத்தலைப்போன்றதே இப்பிரபந்தப் பாடற்றிறனும்.

உமறுப்புலவர்

இந்நூற்ருண்டின் இணையற்ற இஸ்லாமியத்தமிழ்ப் புலவர். சீருப்புராணம் என்ற மகமது நபியின் வரலாற்றைப் பாடியவர். இவர் பாண்டி நாட்டைச் சேர்ந்தவர்.

சீதக்காதியின் பொருளாளர் அபுல்காசிம் தலைமையில் இப்புராணம் அரங்கேற்றப்பட்டது. 92 படலங்களையும் 5027 பாடல்களையுமுடையது சீருப் புராணம். ஆசிரியரும், புராணமும் இஸ்லாமியத்தைப் பற்றியேயாயினும் தமிழ் மரபையும் நடையையும் தழுவியே ஆசிரியர் இப்புராணத்தை இயற்றியுள்ளார்.

இக்காலத்துப் பெயரறியாப் புலவர் ஒருவர் சீதக்காதிமீது நொண்டி நாடகம் பாடினுர்.

சர்க்கரைப் புலவர்

இதே பெயருடன் பலர் இவர் குடும்பத்தில் இலங்கியுள்ளனர். முதல்வர் நெட்டிமாலைச் சர்க்கரைப்புலவர் எனப் பெயர் பெற்றவர். பாடலுக்கு நெட்டிமாலையைப் பரிசாகப் பெற்றமையால் இவர்க்கிப்பெயர் ஏற்பட்டது.

திருச்செந்தூர்க் கோவையும் வேதாந்தசூடாமணியுரையும் இவரால் எழுதப்பெற்றன.

### இரண்டாவது சர்க்கரைப் புலவர்

மிழலைச்சதகம், சித்ரகவி மஞ்சரி முதலியவற்றை எழுதினர்.

### முக்கூடற்பள்ளு

பள்ளுப் பிரபந்தங்களில் பெயர் பரவியது இப்பள்ளாகும். இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. திருநெல்வேலிப் பகுதியினர். முக்கூடற்பள்ளு நாடகம் ஒன்றுள்ளது. அதனாசிரியர் என்னயினைப் புலவரே இதனாசிரியர் என்பர் சிலர். திருமலைக்கொழுந்து பிள்ளை முதலோர் இதனில் குறிக்கப் பெறுதலால் இதனைப் பதினேழாம் நூற்றாண்டிற்குரியதாக்கலாம்.

உழவரது வாழ்க்கையை வருணித்தெழுதுவதே பள்ளுப்பிரபந்தம். குற்றாலக் குறவஞ்சி சைவத்திற்குரியதானால் இது வைணவத்திற்குரியதாகும்.

### தாயுமானவர்

பல நூற்றாண்டுகட்கொருமுறை தோன்றும் ஞானிகளுள் ஒருவர். 10–11ஆம் நூற்றாண்டுச் சைவ அடியார்கட்குப்பின் இப்பொழுதே தாயுமானவர் போன்ற சைவத் தோன்றல்கள் விளங்கித் தத்துவத்தையும், சைவத்தையும் வளர்த்தனர். வேதாரணியத்தில் தோன்றி நாயக்கர்களிடம் பதவி வகித்தார். அப்பொழுது அரசி இவரைத் தன்னுடன் தொடர்புறுத்திக் கொள்ள நினைத்தபோது அனைத்தையும்விட்டுத் துறவியானார். இவர் மாணவர் கோடிக்கரை சுவாமிகள் பாடலால் இவர் 1659ல் மறைந்தார் எனத் தெரிகின்றது. இவர் பாடல்கள் 687 ஆகும். பல தலைப்புகளில்

இவை பாடப் பெற்றுள்ளன. வாழ்வின் பல அனுபவங்களையும் எடுத்துக்கூறி ஆழமான தத்துவங்களைக் கொண்டனவாகும் இவர் பாடல்கள்.

*ஆறுமுகசுவாமி*

குகை நமச்சிவாயர் மாணவர். நிட்டானுபூதி என்ற நல்ல தத்துவநூலை எழுதினர். இது மிகவும் பரவியதும் பயிலப்பெறுவதுமாகும்.

திருவாரூர்ப் புராணமும் (கி. பி. 1605) பேரூர்ப் பட்டிப்புராணமும் (1608) இக்காலத்தேயே இயன்றன.

*நடராசர்*

தென்னுற்காட்டுக் கீரனூரைச் சேர்ந்த இவர் சாதகாலங்காரம் என்ற நூலை 1665ல் எழுதினர். சாதக நூல்களில் மிகவும் பெயருடையதாகும்.

*வரராசையுலா*

சங்கரநயினர்கோயில் சுவாமியைப் பற்றிய இவ்வுலா காவைவடமலையப்பனின் திருப்பணிகளைப்பற்றிப் பேசுகின்றது.

*கண்ணுடைய வள்ளல்*

253 வெண்பாக்களில் ஒழிவிலொடுக்கம் எழுதிய சிறந்த தத்துவஞானி. திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் இதற்கோர் உரையெழுதினர். மாயப் பிரலாபமும் இவரெழுதியதே. இவர் 16-17ஆம் நூற்றுண்டுகளில் வாழ்ந்திருக்கக் கூடும்.

அரசகேசரி

யாழ்ப்பாணத் தரச குடும்பத்தினர். 2404 பாடல்களையுடைய ரகுவம்ச மொழிபெயர்ப்பை இயற்றினர். பரராசசேகரனுக்கு மிக்க உறவினர்.

பாண்டிராசர் என்பவர் தட்சிண கைலாசபுராணம் எழுதியதும் இக்காலத்தேதான் எனத் தெரிகின்றது.

சுந்தரபாண்டியம்: தொண்டைநாட்டு வாயற்பதியூர் அநதாரியப்பரால் எழுதப்பெற்றது. மதுரைமான்மியம் எனவும் இது பெயர்பெறும். இவ்வாசிரியர் 16-17ஆம் நூற்ருண்டுகளில் இருந்திருக்கக்கூடுமெனத் தெரிகின்றது.

அந்தகக்கவியைப் பாராட்டிய தனிப்பாடல்கள்பல இந்நூற்ருண்டில் இயன்றுள்ளன. கயத்தாற்றரசன் என்னும் திருவேங்கடநாதரும் சிலபாடல்கள் பாடியுள்ளார்.

காஞ்சி கந்தபுராணம் கச்சியப்பரும் அந்தகக்கவியைப் பாராட்டிச் சில பாடல்கள் பாடியுள்ளார்.

ஆதிசரணப்பெருமாள் கவி:

விசயரகுநாத தொண்டைமான் முதலோருக்குச் சீட்டுக்கவிகள் எழுதியுள்ளார். இது சீட்டுக்கவி பெருகிய காலம். சர்க்கரைப் புலவர்கள் வரலாற்றிலும் சீட்டுக் கவிகளைப்பற்றிய குறிப்புக்கள் வரும்.

**ஆத்மநாத தேசிகர் :**

திருத்துறைப்பூண்டி வேலூரைச் சேர்ந்த ஆத்மநாத தேசிகர் சோழமண்டல சதகம் பாடினுர். இது தஞ்சை துசி அரசன் (1686-1710) காலத்தில் அரங்கேறியது. மண்டல சதகங்களில் இதுவும் சிறந்ததாகும்.

மற்றும் இக்காலத்தில் அறம் வளர்த்த நாயகி, பிள்ளைத்தமிழ், பணவிடுதூது (திருவேங்கடநாதன் மகன்மீதியன்றது); கிறித்தவரது ஞானப்பள்ளு; குருகூர்ப்பள்ளு; வரலாற்றுச் சிறப்புடைய ராமப்பய்யன் அம்மானை; கடம்பர் உலா; சொக்கப்புலவரது குடந்தைப்புராணம்; திருவரங்கம்கோயில் திருப்பணிபூஜை மரபுகளைப் பற்றிய கோயிலொழுகென்ற வரலாற்றுக் குறிப்புநூல்; சச்சிதானந்தமாலை, கப்பல்சாத்திரம்; கொங்குதேச ராசாக்கள் (உரை) வரலாறு; கல்லாட உரை முதலியவெல்லாம் எழுதப் பெற்றிருக்க வேண்டுமெனத் தெரிகின்றது.

ராபர்ட் டி. நோபிலி என்பவர் (1606-1656) ஏசுநாதர் சரித்திரம், நீதிச்சொல் முதலிய 18 நூல்களை இயற்றினுர்.

இக்காலத்தேயே 1679ல் போர்ச்சுகீஸ் தமிழ்அகராதியும் இயன்றது.

## 18-ஆம் நூற்றுண்டு.

### முன்னுரை

பதினேழாம்நூற்றுண்டின் இலக்கியப்போக்கையே இந்நூற்றுண்டும் தழுவியுள்ளது. அருணுசலக் கவி நாடகம் போன்ற பிரபந்த வகைகளும் சமய இலக்கியங்களும் இக்காலத்திற் பெருகிய இலக்கிய வகைகளாகும்.

கிறித்தவப்புலவர்களும், இஸ்லாமியப்புலவர்களும் இக்காலத்தில் எண்ணற்ற இலக்கியங்களைப் படைக்கத் தொடங்கினர். சமய மடங்கள் இந் நூற்றுண்டிலும் தமிழ்ப் புலவர்களைப் புரந்துவந்தது. தஞ்சை மராட்டிய அரசர், நாயக்கர்கள், பெரம்பூர் ஆனந்தரங்கன்போன்ருேர் புகழ்மிக்க புரவலர்களாக இக்காலத்துத் திகழ்ந்தனர். யாழ்ப்பாணத்திலும் இக்காலத்தில் தமிழ்ப் புலவர்கள் மிகுதியான இலக்கியப் படைப்புக்களைச் செய்துள்ளனர். அகராதி, மொழிபெயர்ப்பு எளிய இலக்கணங்கள் ஆகிய வகைகளில் பிறநாட்டார் தமிழுக்கு நல்ல தொண்டு செய்தனர்.

### பிரபந்தங்களின் வளர்ச்சி :

பிரபந்தங்களைச் சிறு பிரபந்தங்களெனவும், அவை 96 வகையெனவும் கூறுவர். 96 என்ற வகைப்பிரிவு கி. பி. 16ஆம் நூற்றுண்டில்தான் உருவாயிற்றென்பர். அதன்முன் 40, 50 என்ற அளவுகளையுடைய பிரபந்தங்களே ஆக்கப்பட்டிருந்தன. பிள்ளைத்தமிழ்; உலா; கலம்பகம்; தூது; அந்தாதி; பரணி; கோவை; மாலைகள் போன்ற நூல்களே சிறு பிரபந்தங்கள். உலா, பிள்ளைத்தமிழ் போன்றவற்றிற்

காய இலக்கணங்கள் தொல்காப்பியத்திலேயேகாணப் படுகின்றன. காலப்போக்கில் இலக்கியங்களில் பிரபந் தங்களின் உறுப்புக்களும் அமைப்புக்களும் சில பல காணப்பெறுகின்றன. அவற்றை ஒன்றுபடுத்தியும், ஒழுங்குபடுத்தியும் பிரபந்த இலக்கணங்கள் யாக்கப் பட்டன. புராணமும், காவியமும் இவ்வகையுள் சேர்த லில்லை. புராணங்களைப் பெரிய பிரபந்தங்கள் என்ன லாம். காவியம் என்பது முழுமையுடைய நூலமைப் பிற்றாயின் புராணம் அம்முழுமையில் சிறிது (சிலபல) குறைபாடுகளையுடைய தென்பர். அளவில் சிறிதாயி னும் அவற்றுள் காவியம் பலவுண்டு; அளவில் பெரிதா யினும் அவற்றுள் புராணம் பலவுண்டு. சங்ககாலத்தே மாபுராணம் பூதபுராணம் என்பன காவியம் எனப்பேர் பெறினும் அவை இலக்கண நூல்களே. தொல்காப்பியம் எனப்படினும் அதுவும் இலக்கணமேயாகும். ஐம்பெருங் காப்பியம்; ஐஞ்சிறுகாப்பியம்; பெருங்கதை ஆகியவற் றையே காவியமெனக் குறிப்பிடுவர். பாரத இராமா யணங்களும் காப்பியத்துட் சேரும். புகழேந்தியின் நளவெண்பா போன்றனவும் அளவிற் சிறிதாயினும் காவியம் என்னும் தகுதியுடையது. பிம்பிசார கதை, புரூரவ சரிதை போன்ற கதை, சரிதமெனும் இலக்கி யங்களும் காவியத்துட் சேரலாம்.

மணிப்பிரவாளத்திலியன்ற ஜைன புராணங்கள் கி. பி. 9 – 10 எனும் முந்தைய நூற்றாண்டுகளில் தோன் றின. தமிழில் தோன்றிய முதற்புராணம் கச்சியப் பரின் கந்த புராணமாகலாம்; பெரியபுராணமும் ஒரு காலத்ததாகலாம். பின்னர் நம்பி திருவிளையாடலும்

மேருமந்தரபுராணமும் 13-14ஆம் நூற்றுண்டுகளில் இயன்றன. அடுத்துக் கல்வெட்டுக்களால் தெரியும் புராணப் பிரபந்தங்கள் பல. 16-19 நூற்றுண்டுகளிலேயே இவ்விலக்கியங்கள் ஏராளமாகப் படைக்கப்பட்டன. இவை யாவும் பெரிதும் சமய சம்பந்தமானவையே. பரணிக்கோர் ஜெயங்கொண்டான் என்ற பாடலால் சிலசில பிரபந்தங்களில் புலவர்கள் திறமையை வளர்த்துள்ளனர். வெண்பாவிற் புகழேந்தி, விருத்தத்திற்குக் கம்பன், கோவை உலா, அந்தாதிக்கு ஒட்டக்கூத்தன், கலம்பகத்திற்கு இரட்டையர் என்றெல்லாம் பாராட்டப் பெறுவர். அந்தாதிப் பாடல்கள் கடைச்சங்க நூல்களிலும் சங்கச் சார்புக்காலத்து 11ஆம் திருமுறை நூல்களிலும் முதலிற் காணப்பெறுகின்றன. இத்திருமுறைப் பாடல்களில் வெண்பா முதலிய நால்வகைப் பாக்களில் 2-3 என இணைத்து மணிமாலைகள் முதலில் காணப்பெறுகின்றன. கோவையும் 7-8 நூற்றுண்டுகளிலேயே முதலிற்ருேன்றியது. இறையனுர் களவியல் மேற்கோளாக 7ஆம் நூற்றுண்டினதாகிய பாண்டிக்கோவை காட்டப்பெறும். காரிநாயனுர் என்பவரே ஒரு கோவை இயற்றியதாகப் பெரிய புராணம் கூறும். பிள்ளைத்தமிழில் ஒட்டக்கூத்தரது குலோத்துங்கன் பிள்ளைத்தமிழே முதலாவதாகலாம். பரணியில் 11ஆம் நூற்றுண்டிலேயே (கலிங்கத்துப்பரணிக்குமுன்) கொப்பத்துப்பரணி கூடல் சங்கமத்துப்பரணிகள் இருந்தனவாகக்கூறுவர். 9ஆம் நூற்றுண்டின் நந்திக்கலம்பகமே கலம்பகத்துள்ளும் சேரமான் பெருமான் ஏழாம் நூற்றுண்டில் இயற்றிய திருக்கைலாய ஞானவுலா உலாக்களிலும் முதலாவதாம். அடுத்துக்

காலப்போக்கில் ஒவ்வொரு வகையிலும் பல பத்துக் கணக்கான பிரபந்தங்கள் படைக்கப்படினும் அவற்றுள் ஒவ்வொன்றிலும் பேர்பெற்றன சிலவாகவே அமைந்தன. பள்ளு கி. பி. பதினாறிலும் குறவஞ்சி 17–18 நூற்றுண்டுகளிலும் உருவாயின. கோவையுள் குலோத்துங்கன் கோவை, தஞ்சை வாணன் கோவை ஒருதுறைக்கோவை முதலியவும் பரணியுள் தக்கயாகப்பரணி அஞ்ஞைவதைப்பரணி முதலியவும் அந்தாதியுள் பொன்வண்ணத்தந்தாதி, நக்கீரர் நம்பியாண்டார்தம் அந்தாதிகள் அற்புதத்திருவந்தாதி அருணகிரியந்தாதி முதலியவும் பிள்ளைத்தமிழுள் மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ், சேக்கிழார் பிள்ளைத்தமிழ் முதலியவும் இரட்டையரின் தில்லை திருவாமாத்தூர் கலம்பகங்கள் கச்சிக் கலம்பகம், திருவரங்கக்கலப்பகம் திருப்பாதிரிப் புலியூர் கலம்பகம் முதலியவும் மூவருலா, தேவையுலா ஏகாம்பரநாதருலா; திருவாரூர்உலா முதலியவும் நால்வர் நான்மணிமாலை முதலியவும் பிரபந்தங்களுள் சிறந்தனவாகப் பயிலப்படுவனவாம். தூதுப் பிரபந்தம் பிற்காலத்ததேயாகும். 17–18ஆம் நூற்றுண்டுகளில் கச்சி ஆனந்த ருத்ரேசர் வண்டுவிடுதூது தமிழ்விடுதூது முதலியன சிறந்தனவாகும். முக்கூடற் பள்ளு, குற்றுலக்குறவஞ்சிஆகியவும் அவ்வரிசைகளுள் திருவாரூர்ப்பள்ளு; கதிரைமலைப்பள்ளு; சரபேந்திரபூபால குறவஞ்சி முதலியவும் சிறந்தனவாம். பெரிய சிறிய திருமடல்கள்; வருணகுலாதித்தன் மடல்; கூளப்ப நாய்க்கன்காதல் பழனியான் காதல் (19-ஆம் நூற்றுண்டு) முதலியன அவ்வவ்வகையுள் அருமையுடையனவாம்.

**இரசை வடமலையப்பன்:**

ஸ்ரீரங்கம் இறையூரைச் சேர்ந்தவர். மச்ச புராணத்தாசிரியர். வடமலையப்பன் குடும்பத்தினர் இவரைப்பற்றியே சென்ற நூற்றாண்டுப்பிற்பகுதியில் புலவாற்றுப்படை இயற்றப்பெற்றது. இவர் சிறந்த புலவரும் புரவலருமாவார். மச்சபுராணம் 1706-ல் இயற்றப்பெற்றது.

இவர் திருமலைநாயக்கரிடம் பிரதிநிதியாக இருந்தமைக்குரிய ஆதாரங்கள் பலவுள்ளன. இவர் 1640–1706ல் இலங்கியதாகத் தெரிகின்றது. மற்றும் இவர் ஒரு கோவையும், வண்ணமும், கலம்பகமும், நீடூர்ப் புராணமொன்றும் இயற்றியுள்ளார். வடமொழியில் உள்ள 18 புராணங்களுள் மச்சபுராணமும் ஒன்று. இத்தமிழாக்கம் 5120 பாடல்களைக் கொண்டது. சைவத்தன்மையுடையது.

**திரிகூடராசப்பக்கவிராயர்:**

இந்நூற்றாண்டின் இணையற்ற புலவர்களில் ஒருவர். தென்காசி-மேலகரம் என்னும் ஊரினர். இவர் பாடிய குற்றாலக் குறவஞ்சிக்காக மதுரை முத்துவிசயரங்க சொக்கநாத நாயக்கர் (1706-32) இவர்க்கோர் நிலப்பகுதியையே 1718-ல் மானியமாக அளித்தார். ஆசிரியர் 17-18ஆம் நூற்றாண்டுகளில் விளங்கியதாகத்தெரிகின்றது. இவர் வடகரைச் சின்னணஞ்சாத்தேவரையும் (1729–31) பாடல்களில் புகழ்கிறார்.

குறவஞ்சி 96 பிரபந்தங்களுள் புகழ் பெற்றதொன்று குறவருடைய வாழ்க்கையையும் அவர்கள் குறிசொல்

லுதலையும் பற்றிச் சொல்வது. குற்றுலத்தலபுராணம் (2700 பாடல்கள்) உட்படக் குற்றுலத்தைப்பற்றிய மற்றும் 12 பிரபந்தங்களையும் இவர்பாடியுள்ளார். இவர் பாக்களெல்லாம் எளிமையும் தெளிவும் நயமுமிக்கன.

குமாரதேவர் :

மஹாராஜா துறவு என்ற தத்துவநூலை யெழுதிய இவர் கன்னட அரசகுடும்பத்தில்தோன்றித் துறவுமேற் கொண்டவர். அத்துவிதசித்தாந்தத்தைப்பற்றி இவர் இன்னும் பல நூல்களை இயற்றியுள்ளார். சாந்தலிங்க சுவாமிகளின் மாணவர்.

சிவஞான முனிவர்

இந்நூற்றுண்டின் புலமை வேந்தரும், தமிழ் ஞானவொளியும், பன்மொழிப்புலவரும் பல்கலைப் புலவரும் என இவரைப் பாராட்டலாம். இலக்கியம், இலக்கணம், தத்துவம் முதலிய அனைத்துத் துறைகளி லும் அளவற்ற ஆற்றலுடன் பணிபுரிந்தவர் சிவஞான முனிவர். சிவஞான முனிவர் பரம்பரை இந்நூற்றுண் டில் செய்த இலக்கியத் தொண்டு என்றும் நினைக்கத் தக்கதாகும்.

இவர் இந்நூற்றுண்டில் பன்னிரண்டு மாணவர்கள் அடங்கிய ஒரு புலமைப் பரம்பரையையே தோற்றுவித் துள்ளார். கச்சியப்ப முனிவர்போன்றோர் அவருள் முதன்மையானவராவர்.

இவர் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் எழுதியது கி. பி. 1725ல் ஆகும். இவர் மறைவைப்

பற்றிய பாடலொன்றின்படி இவர் 1785 ஏப்ரல் 17ல் சமாதி அடைந்திருப்பாரெனத் தோன்றுகின்றது. அவ்வாருயின், இவ்வாசிரியர் 80 ஆண்டுகட்கு மேலும் இலங்கியிருக்கவேண்டும். இவர் இலக்கியப்பணியின் நிறைவினைப் பார்க்கையில் இது பொருந்துவதாகவே தோன்றும். இவர் 40 ஆண்டுகட்குள்ளேயே இறந் திருக்கக்கூடும் என்ற சிலர் கருத்து இதனுல் மறுக்கப் படலாம்.

இவர் இலக்கியவாதம், சமயவாதம் செய்வதில் மிகவும் வல்லவர். சித்தாந்தமரபுகண்டனம், சிவ சமவாத மறுப்பு, இலக்கண விளக்கத்திற்கு எதிராய இலக்கண விளக்கச் சூருவளி முதலியன இதுபற்றிய இவர் (மறுப்பு) நூல்களாகும். தர்க்கசங்கிரகம் என்பது தர்க்கநூலாகும். சிவஞானபோத விரிவுரையாகிய திராவிடமாபாடியம் இவர் பெயரை என்றும் நிலை நிறுத்துவதாகும். சங்கரநமச்சிவாயர் நன்னூலுக்கு எழுதிய விருத்தியையும் இவர் திருத்தியுள்ளார்.

காஞ்சி புராணம் இவர் கற்பனைக்கும் யாப்புத் திறத்திற்கும்ஓர்எடுத்துக்காட்டாகும். அமுதாம்பிகைப் பிள்ளைத்தமிழும் சோமேசர் முதுமொழி வெண்பாவும் இவர்தம் பிரபந்தங்களுள் சிறந்தனவாம். சோமேச வெண்பா ஒவ்வொன்றிலும் ஒருகுறளையும் அதற்கோர் கதையையும்கொண்ட குறள் விளக்கமாகும். இன்னும் இவர் பலவாகிய பிரபந்தங்களையும் இலக்கணவிலக் கியக் குறிப்புக்களையும் எழுதியுள்ளார்.

### கச்சியப்ப முனிவர்

சில நூற்றுண்டுகட்கு ஓர்முறை தோன்றும் தலைவருள் ஒருவர். கவிராக்ஷசன் என்ற பெயர்பெற்ற இவர் சிவஞானமுனிவரின் சிறந்த மாணவர், தணிகைப் புராணத்தால் இவர் தொண்டும் புகழும் சிறந்தன. இப்புராணம் அரிதாய இலக்கியநடை வாய்ந்தது. 3161 பாடல்களை உடையது. சிவதருமோத்திரம் முதலிய சைவசித்தாந்தக் கருத்துக்களை வற்புறுத்துவதுடன் தமிழ் அகப்புறப்பொருள் மரபுகளை எல்லாம் பயன்படுத்தி இப்புராணத்தை எழுதுகிருர் ஆசிரியர்.

விநாயக புராணம், கச்சி ஆனந்தருத்ரேசர்வண்டு விடுதூது, சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ், பேரூர் திருவானைக்கா ஆகியவற்றின்மீது புராணங்களுடன் இன்னும் பல பிரபந்தங்களும் இவரால் இயற்றப் பெற்றன. இவர் 1790ல் மறைந்ததாகத் தெரிகின்றது.

### சிதம்பரநாத முனிவர்

சிவஞானமுனிவரின் மற்ருேர் மாணவர். 987 பாடல்களில் திருப்பாதிரிப்புலியூர் புராணத்தைத் திருவாவடுதுறை ஆசாரியர் அறவுரையின்படி எழுதிஞர்.

### தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர்

மற்ருேர் மாணவர். திருத்தணிகை, துறைசை, கலைசை ஆகியவற்றின்மீது பிரபந்தங்களும், திருவாவடுதுறை ஆசாரியர்கள்மீது பிள்ளைத்தமிழ் முதலிய பிரபந்தங்களும் முருகன்மீது பஞ்சரத்னங்களும் எனப் பலவாகிய பிரபந்தங்களை இவர் இயற்றியுள்ளார்.

### சோமசுந்தரக் கவி

மற்ருேர் மாணவர். 19ஆம் நூற்ருண்டின் இராமாநுசக் கவியின் ஆசிரியர் திருக்கழுக்குன்றக் கோவை இயற்றியவர்.

### சங்கரமூர்த்தி கவி

மற்ருெரு மாணவர். தம்மை ஆதரித்த சில ஜமீன்தார்கள்மீது கோவையும், பள்ளும் மற்றும் தனிப் பாடல்கள் பலவும் இயற்றியவர்.

### கடவுள் மாமுனிவர்

சிவஞானமுனிவர் மாணவர் எனவும், நண்பர் எனவும் வேறுபட்ட கருத்துக்கள் உள்ளன. 545 எளிய பாடல்களில் திருவாதவூரடிகள் புராணம் இயற்றியவர்.

### கந்தப்பய்யர்

கச்சியப்ப முனிவரின் மாணவர். திருத்தணிகை யைச் சேர்ந்தவர். வீரசைவர். 426 பாடல்களில் தணிகாசல புராணம் இயற்றினுர். தணிகையின்மீது உலா, கலம்பகம், பிள்ளைத்தமிழ் முதலிய பலவகை யான பிரபந்தங்களை இயற்றியவர். விசாகப்பெருமாள் அய்யர், சரவணப்பெருமாள் அய்யர் ஆகியோரின் தந்தையார் இவர். விஞ்சைக்கோவை முதலிய பல பிரபந்தங்களுக்கு இவர் ஆசிரியராகத் திகழ்ந்திருக் கிருர்.

**சுப்ரதீபக் கவி :** இவர் வீரமாமுனிவரின் ஆசிரியர் எனப்படுவார். முதலில் கம்மியராக இருந்து பிற்காலத்

தில் கிறித்தவரானவர். கூளப்பநாயக்கன் காதல், பெரியநாகேந்திரன் காதல் முதலிய காதல் பிரபந்தங்களால் தமிழரைக் கவர்ந்தவர். எளிய இனிய படிப்புடைய பாடல்களைப் பாடுபவர்.

கூளப்பநாயக்கன் மதுரை நிலக்கோட்டை ஜமீன்தாராவார். திருச்சி விசயரங்க சொக்கநாத நாயக்கன் (1705-31) காலத்தவர்.

கூளப்பநாயக்கன் விறலிவிடுதூது ஒன்றும் இவர் இயற்றியதாகக் கூறுவர். ஆனல், அறிஞர் அதனைச் சீரங்கம் அட்டாவதானி என்பார் இயற்றியதாகக் கூறுவர்.

*வீரமா முனிவர்:* 8-11-1680 அன்று இத்தாலியில் பிறந்து கான்ஸ்டன்டைன் பெஸ்கி என்ற பெயருடன் விளங்கியவர். தமிழகத்திற்கு வந்தபின் தைரியநாத சுவாமி, வீரமாமுனிவர் என்ற பெயர்களால் அழைக்கப் பெற்ருர். 1711ல் பாண்டியநாட்டிற்கு வந்து சமயத் தொண்டு புரிந்திருந்து 1747 பிப்ரவரியில் மறைந்தார். தமிழரோடு தமிழராய்த் தமிழ்ப்பண்புடன் வாழ்ந்து தமிழருக்கும் தமிழுக்குமே தொண்டு செய்தார். இலக்கணம், அகராதி, இலக்கியம் முதலிய பலவகை நூல்களையும் இயற்றினர்.

கி. பி. 1724ல் தேம்பாவணி என்ற இனிய தமிழ்க் காவியத்தை எழுதிப் பெரும் புகழ்பெற்ருர். பாடல்கள் ஒழுக்கமும், இனிமையும் உடையவை. சிந்தாமணியைப் பின்பற்றியவை. 3615 பாடல்களில் ஜோசப் என்ற ஞானியின் கதையைப்பற்றியது.

சதுரகராதி ஆங்கிலமுறையில் தொகுக்கப்பெற்ற அகராதியாகும். இதுவும் இவரைச் சிறப்பித்தது. தொல்நூல் விளக்கமும் ஐந்திலக்கணம்பற்றியதாகும். அவிவேகபரிபூர்ண குருகதை இனிய நகைச்சுவை நிரம்பிய உரைநடையாகும்.

அடைக்கலமாலை, திருக்காவலூர் கலம்பகம், வேதியர் ஒழுக்கம் முதலியனவும் இவர் இயற்றியன வாகும். இலத்தீன் மொழியிலும் செந்தமிழ் கொடுந் தமிழ் இலக்கணங்களை எழுதினர்.

*சீனிப்புலவர்:* சாந்துப்புலவருடன் பிறந்தவர். திருச்செந்தூர்ப் பரணிப்பாடினர். திருச்சிற்றம்பலதேசிகர் கலம்பகம் பாடியவரும் இவரே யாவர். முத்து முருகப்புலவர் என்ற மற்ருெரு தம்பி வைரவக்கடவுள் பதிகம் பாடினர்.

*மாரிமுத்துப்பிள்ளை:* சிதம்பரம் தில்லையாடியைச் சேர்ந்தவர். இவர் பல பிரபந்தங்களை இயற்றிப் பெயர் பெற்றவர். புலியூர் வெண்பா, சிதம்பரேசர் விறலி விடுதூது, ஆதிமூலர் குறவஞ்சி, அநீதி நாடகம், தில்லைவிடங்கன் நொண்டி நாடகம் முதலியன அவற்றுள் சிலவாகும். 1759-63ல் ஆண்ட தஞ்சை பிரதாபசிங் காலத்தில் இவர் இருந்ததாகத் தெரிகின்றது. இவரும் இந்நூற்ருண்டின் பிரபந்த மன்னர் என்னலாம்.

*பகழிக்கூத்தர்:* திருச்செந்தூர் பிள்ளைத்தமிழால் பெயர் பெற்றவர். சேதுநாட்டுச் சன்னுசி கிராமத்தவர். 360 பாடல்களில் சீவகசிந்தாமணி சுருக்கமும் இவர்

இயற்றியதாகத் தெரிகின்றது. சேதுநாடு 17-18 நூற்றுண்டுகளில் புகழ்பெற்றமையால் இவரை இந் நூற்றுண்டில் ஆசிரியர்கள் அமைப்பது பொருந்தலாம். இவர் பல புலவர்களாலும் பாடிப் பாராட்டப்பெற்றவர்.

அருமருந்து தேசிகர்: கி.பி. 1763ல் அரும்பொருள் விளக்க நிகண்டினை எழுதினுர்.

ஈசுவரகவி: வடமலை நிகண்டினை 1701ல் எழுதினுர்.

பாவாடைக்கவி என்பவர் திரிகூடராசப்பக்கவியின் மகன். இலஞ்சி முருகன் உலா எழுதியவர்.

திருமலைக் குறவஞ்சி என்பது திருநெல்வேலி பண்புளிப்பட்டினத்தின்மீது 1780ல் இயற்றப்பெற்றது.

வேற்காட்டுப் புராணம் 1768ல் இயன்றது.

சுந்தரலிங்க முனிவர் என்பவர் திருப்பெருந் துறைப் புராணத்தை இக்காலத்தில்தான் எழுதி யிருக்க வேண்டும்.

திருச்சிற்றம்பல தேசிகர்: கி. பி. 1748 வரை விளங்கியவர். திருவாவடுதுறை மடத்தவர். அறிவா னந்தசமுத்திரமும் மற்றும் பல தத்துவப் பிரபந்தங்க ளும் எழுதியவர்.

திருமலை வெண்பா: திருமலைக்கொழுந்து பிள்ளை மீது 60 வெண்பாக்களாலானது. இப்பிள்ளையவர்கள் வடமலையப்பன் காலத்தவர்.

**பாரதி நிகண்டு:** திருவேங்கடநாதையரால் ஆதரிக்கப்பெற்ற பரமானந்த பாரதியால் 17 அல்லது 18ஆம் நூற்றுண்டில் எழுதப்பெற்றது.

**சாமிநாத கவி:** பொருநைநதி கல்லிடை ஊரினர். பொதிகைநிகண்டினை இக்காலத்து இயற்றினுரெனத் தெரிகின்றது. இவர் தம்பி பூவைப் புராணத்தை 1810ல் இயற்றினுர்.

**ஆண்டிப் புலவர்:** தொண்டைநாட்டு ஊற்றங்கால் மங்கலத்தினர். ஆசிரியநிகண்டினை இயற்றியவர். நன்னூலுக்கும் உரை எழுதினுர் இவ்வாசிரியர் என்பது அறிகிறேம். கயாதரத்தை எல்லாம் இதன் முன்நூல்களாக இந்நூல் எடுத்து இயம்புகின்றது.

**சிவசுப்ரமணிய கவி:** பொதிகைநிகண்டாசிரியர் சாமிநாத கவியின் மகன் இவர் என அறிகிறேம். நாமதீப நிகண்டு இயற்றினுர்.

**தியாகராச தேசிகர்:** வைத்தியநாத நாவலரின் மகன். ஆனந்தரங்கன்கோவை இயற்றினுர்.

**இராமநாத கவி** ஆள்வார்குறிச்சியினர். சிவசைலப் பள்ளு பாடினுர்.

**சின்னதம்பி புலவர்:** யாழ்ப்பாணம் - பறளை விநாயகர் பள்ளினைப் பாடினுர்.

**சின்னகுட்டிப் புலவர்:** தண்டிகைக்கனகராயன் பள்ளு பாடினுர். இவ்வாசிரியர் 1793 வரை வாழ்ந்து இருக்கிறுர்.

சின்னேவான்: விசயரங்கசொக்கநாத நாயக்கன் (1704–31) மகன். வையாபுரிப்பள்ளு பாடினர்.

கந்தசாமி புலவர்: கட்டபொம்மனைக் (1709–36) குறிப்பிடும் இவர் திருச்செந்தூர் நொண்டி நாடகம் பாடினர்.

சாமி கவிகாளருத்திரர்: அழகர்பிள்ளைத்தமிழை யும் சாமிநாதைய தேசிகர் பழமலைக்கோவையையும் இக்காலத்துத்தான் பாடினர்.

சுப்பையர் என்பவர் (1795) காரைக்குறவஞ்சி பாடினர்.

மங்கைபாகக்கவி என்பவர் சொக்கலிங்கநாயக்கர் (1713 கி. பி.) மீது வகுக்கக்கோவை பாடிப் பூசாரிப் பட்டி என்றஊரில் வாழ்ந்தனர். இவர்மகன் குழந்தைக் கவி மான்விடுதூது பாடினர். இவர் முருகன்மீது தின கவிதை ஒன்றும் பாடினர்.

சென்னமல்லையர்: சிதம்பரத்தைச் சேர்ந்த இவர் 1768ல் திருக்குறள் விளக்கமாகச் சிவசிவ வெண்பா பாடினர்.

ஆதியப்பர்: பொன்விளைந்த களத்தூரினர். இவரைப் புராண மன்னர் என்னலாம். 1720ல் மாயூர புராணம் பாடினர்.

சிற்றம்பலவர் என்பவர் மருதூர்ப் புராணமும் இக் காலத்தேதான் இயற்றினர்.

முத்தப்ப செட்டியார்: கீழச்சிவல்பட்டி செட்டி நாட்டவர். ஜெயங்கொண்டார் சதகம் பிள்ளைத்தமிழ் முதலிய பல பிரபந்தங்களும் செட்டிமார் வரலாறும் இயற்றினர்.

பொன்னம்பலம் பிள்ளை: சின்னணஞ்சாத்தேவரிடம் பதவியில் இருந்தவர். வாசுதேவநல்லூர்ப் புராணம் பாடியதாகத் தெரிகின்றது.

தாண்டவராயர்: 1756ல் திருமயிலைப்பிள்ளைத் தமிழ்ப் பாடினர்.

வீமநாதபண்டிதர்: கடம்பவனபுராணம் பாடினர்.

மணவைவீரபத்திரன்: மகத்தில்கடல்நீராடுவதைப் பற்றியதாகப் புராண அம்மானையை இக்காலத்துப் பாடியிருக்கலாம். சிராமலைக்கோவையும் இக்காலத்துத் தான் இயற்றப்பெற்றதெனத் தெரிகின்றது.

அழகுமுத்துப் புலவர்: மெய்கண்டவேலாயுத சதகம், திருப்புகழ் முதலிய பல பிரபந்தங்களை இயற்றிய நாகப்பட்டினம் செட்டியார் இனத்தவர்.

தமிழ் நாவலர் சரிதை: 266 தனிப் பாடல்களைக் கொண்ட இவ்வரலாற்றுப் பாடல் நூல் இக்காலத்துத் தான் தொகுக்கப்பெற்றிருக்கவேண்டும்.

அம்பலவாண கவி: அறப்பளீசுரசதகம் இயற்றியதும் இந்நூற்றுண்டிலேதான். இவர் அருணசலக் கவியின் மகன் என்பர்.

**நாராயண பாரதி:** தொண்டைநாட்டு வெண்மணி ஊரினர். திருவேங்கடசதகம் இயற்றினர். கோவிந்த சதகமும் இவர் இயற்றினர் என்பர். இவரை 17ஆம் நூற்றாண்டெனப் பலர் கருதுவர்.

**குருபாததாசர்:** குமரேசசதகம் பாடினர். கோபால கிருஷ்ணதாசர் எம்பிரான் சதகம் பாடியதும் இப்பொழுதே என்பர்.

**உலகநாதன்:** இவர் நாவிதர். உலகநீதி பாடியவர். சாதிபேத விளக்கமும் இவர் எழுதியதாகும். உலக நீதியும் மேற்கூறிய சதகங்களும் தமிழ் கற்கும் மாணவரால் முதலில் படிக்கப்படுவனவாக இந்நூற்றாண்டின் தொடக்கம்வரை நிகழ்ந்ததாகும்.

**சாந்தகவி :** பிரசை என்னும் ஊரினர். அரங்கநாதரைக் குறித்து இரங்கேச வெண்பா பாடினர். இது குறள் விளக்கமுடையது. இந்நூலினைச் சூடாமணி எனவும் கூறுவர்.

**மார்க்கசகாயதேவர்** திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழும், **கணபதிதாசர்** நெஞ்சறிவிளக்கமும் **சிதம்பர முனிவர்** நித்ய கன்மநெறியும், **நல்லநாதர்** சிவராத்திரி புராணமும் இக்காலத்துத்தான் பாடினர் என்பர்.

**வரதபண்டிதர் :** யாழ்ப்பாணத்தினர். கிள்ளை விடுதூது, ஏகாதசி புராணம், சிவராத்திரி புராணம் ஆகியவற்றையும் இக்காலத்துச் செய்தனர். குமர குருபரதாசர், ஆத்மராமாயணமும் ஞானக்குறவஞ்சியும் செய்தார்.

**அழகிய நம்பி:** ஆழ்வார்வாழி திருநாமமும் திருவந்தாதி திருவிருத்த உரையும், வைணவ ஆசாரியரைப்பற்றிய திருமுடியடைவு என்னும் வரலாறும் இவரால் எழுதப்பெற்றன.

**உபேந்திராசிரியர்** என்ற ஜைனர் சினேந்திரமாலை என்ற சோதிட நூலை 464 பாடல்களில் இயற்றினர்.

**மீகாமன்** வலங்கிமானைச்சேர்ந்தவர். அறிவானந்த சித்தி என்ற தத்துவநூலை எழுதினர்.

**கவிக்களஞ்சியப் புலவர் :** முகம்மதியர் இந்நூற்றூண்டிலும் ஏராளமான இலக்கியப்பணிகளைச் செய்தனர். நபி அவதார அம்மானை (கி. பி. 1713) சீருப்புராண வண்ணம் முதலிய பிரபந்தங்களைச் செய்தார்.

**சர்க்கரைப் புலவர்** சவ்வாதுப்புலவரின் மைத்துனர். மைதீனந்தாதி இயற்றினர்.

**காசிநாதப் புலவர்** கும்பகோணத்தினர். யாழ்ப்பாணத்தைப்பற்றிய தாலப்புராணம் இயற்றினர். இது பின்புடெனன்ட் என்பவரால் மொழி பெயர்க்கப்பெற்றது.

**கணபதி ஐயர்** வட்டுக்கோட்டையினர். வலவீமன் நாடகம், குறவஞ்சி, விநாயகர்மீது பாடல்கள் முதலிய பல பிரபந்தங்களை இயற்றினர்.

**வைத்தியநாத செட்டியார்** அச்சுவேலியினர். 1844 வரை வாழ்ந்தவர். தேவியின்மீது பிள்ளைத்தமிழ் பாடினர்.

சேனாதிராஜ முதலியார் கூழங்கைத்தம்பிரான் மாணவர்; ஆறுமுகநாவலரின் ஆசிரியர். நல்லை வெண்பா முதலிய பல பிரபந்தங்களைப் பாடினார். 1750–1840ல் விளங்கியவர்.

பிலிப் மெல்லோ கொழும்பு நகரினர். பைபிளை மொழிபெயர்த்தார். சைமன் காசிச்செட்டியார் தமது தமிழ் புளுடார்ச்சில் இவரைப்பற்றிக் குறித்திருக்கிறார்.

சடகோபதாசர் கீழையூரினர். 1500 விருத்தங்களில் அரிசமயதீபம் எழுதியவர்.

சீர்காழி முத்துத்தாண்டவர் நடராசரைப்பற்றிய இசைக் கீர்த்தனங்களைப் பாடிய இவ்வாசிரியர் 17–18ஆம் நூற்றுண்டுகட்கு உரியவரெனக் கருதப்படுகிறார். திருநாளைப்போவார் சரித்திரக் கீர்த்தனைகளும் இவர் எழுதியுள்ளார்.

ஆளவந்தார் வேம்பத்தூரினர். வேதாந்த தத்துவ சாத்திரமாகிய ஞானவாசிட்டம் இயற்றியவர். 6 பகுதிகளில் 2055 பாடல்களைக் கொண்டது இந்நூல். கதை வடிவிலிருக்கும் இந்நூல் மிகவும் இனிமையுடையது.

தாண்டவராயசுவாமிகள் 293 பாடல்களில் எழுதிய கைவல்லிய நவநீதமும் வேதாந்த தத்துவமேயாகும். இது தமிழகத்தில் மிகவும் பயிலப்பட்டதாகும்.

திருப்போரூர் சிதம்பரசுவாமிகள் சாந்தலிங்க சுவாமிகளின் மாணவர். சாந்தலிங்கர் நூல்களுக்கு

உரை எழுதியவர். திருப்போரைப்பற்றிய பல பிரபந்தங்களை இயற்றியவர். இக்காலத்து மிகவும் புகழ்பெற்று விளங்கியவர் இவராவர்.

இராமநாதபுரம் முத்துராமலிங்க சேதுபதி 1783 வரை வாழ்ந்தவர். புலவரும் புரவலரும் ஆவார். முருகர் அனுபூதி, வள்ளியம்மைமாலை, நீதிபோத முதலிய பல பிரபந்தங்களை இயற்றினர்.

முத்தானந்த சுவாமிகள் ஞானமதியுள்ளான் என்ற தத்துவநூல் எழுதினர்.

அட்டாவதானி சொக்கப்புலவர் தஞ்சை வாணன் கோவைக்குச் சிறந்த உரை எழுதினர்.

அலியார் புலவர் இந்திராயன் படைப்போர், இபுனியாண்டான் படைப்போர் என்ற இருநூல்களைப் பாடினர். இவை மகம்மது அவர்கள் செய்த போர் களைப்பற்றியதாகும்.

மகம்மது ஹுசேன்: பெண்கட்கு அறிவுரை கூறும் பெண் புத்திமாலை, தெளகிதுமாலை முதலியன இவரால் எழுதப்பெற்றன.

சையது மீரான் 1704ல் பப்பரத்தியார் அம்மானை என்ற பிரபந்தத்தையும், நயினர் மகம்மது முக்ரீன் முகைதீன் மாலையையும் மதாறு சாகிபு மிதுருசா நாமாவையும், அகமது லப்பை தாய் மகள் ஏசல் என்ற மகமதுபற்றிய கதையையும் இக்காலத்தே எழுதினர்.

சட்டைநாத வள்ளல் சதாசிவரூபம் என்ற வாதுளாகமச் சுருக்கத்தைப் பாடலாக எழுதினர்.

நமச்சிவாய கவி சிவஞான முனிவரின் மாமன் இவர் என்பர். விக்ரமசிங்கபுரத்தவர். சிங்கைச் சிலேடை வெண்பா, உலகம்மை யந்தாதி முதலியன எழுதினர்.

இராமானந்தர்: சங்கற்ப நிராகரணத்தையும், தலைமலைகண்ட தேவர் மருதூர் யமக அந்தாதியையும் எழுதினர்.

அந்தோணிகுட்டி அண்ணாவியார் வீரமாமுனிவர் காலத்தில் விளங்கியவர். மணப்பாறையினர். கிறித்துவத்திற்கு மாறியவர். ஞானத்திருப்புகழ், பேரின்பப்பாடல் இரண்டையும் எழுதினர்.

மயில்வாகனப்புலவர் 1779–1816ல் வாழ்ந்தவர். யாழ்ப்பாணத்தவர். கூழங்கைத்தம்பிரான் மாணவர். யாழ்ப்பாண வைபவம், காசியாத்திரை விளக்கம், ஞானாலங்கார நாடக முதலிய எழுதினர். இக்காலத்தில் ஈழத்துப்புலவர் பலரும் சிறந்த தமிழிலக்கியப்பணி செய்தனர்.

முத்துராசர்: கைலாசமாலையென்ற யாழ்ப்பாணக் குடியேற்ற வரலாறெழுதினர்.

முத்துக்குமரர்: வட்டுக்கோட்டையினர். கஞ்சன் காவியம் வலைவீசு புராணமியற்றினர்.

சாமிநாதப் பிள்ளை: கும்பகோணம் கிறித்தவர். சாமிநாதன் பிள்ளைத்தமிழ், நரசைக் கலம்பக முதலியன இயற்றினர்.

**கூழங்கைத் தம்பிரான்:** காஞ்சிபுரத்தினர். திருவாவடுதுறைக்கு தம்பிரானுகிப்பின் யாழ்ப்பாணத்தில் தங்கினுர். பின் கிறித்தவராகிய இவர் 1023 பாடல்களில் இயேசுபுராணம் எழுதினுர். 1753 வரை விளங்கிப் பலமாணவரை உருவாக்கினுர்.

**சிவஞான வள்ளலார்:** கண்ணுடைய வள்ளல் மரபினர். 20 சாத்திரங்களடங்கிய வள்ளலார் சாத்திரம் என்ற தத்துவ நூல்களை எழுதினுர்.

**திருச்சிற்றம்பலக் கலித்துறை:** திருச்சிற்றம்பல இரகசியம் என்ற இருநூல்கள் சிதம்பரத்தைப்பற்றி இக்காலத்தேதான் எழுதப்பட்டன.

**சீகன்பால்க்** என்பவர் 1719 வரை விளங்கியவர். இலக்கணமும் (1716); அகராதியும் எழுதினுர்.

**ஷூல்ஸ்** என்பவர் 1710ல் பாரடைஸ் தோட்டம் என்ற நூலையும் எழுதினுர். ஞானக்கண்ணுடி என்ற நூல் 1750ல் எழுதப்பெற்றது.

**ரோட்லர்:** (1740–1836) தரங்கம்பாடியில் பாதிரியாக வந்து ஆங்கிலத்தமிழ் அகராதியைத் தொகுத்தார். கி. பி. 1733ல் தரங்கம்பாடிச் சபையினர் அஞ்ஞானம் என்ற நூலையும் எழுதினர்.

**லிட்டர்ஜீஸ்** என்ற தரங்கம்பாடியினர் 1781ல் ஞானமுறை விளக்கத்தையும் வெளியிட்டனர்.

## 19-ஆம் நூற்றாண்டு.

### முன்னுரை

இந்நூற்றாண்டையும், அடுத்த நூற்றாண்டையும் புதுமைக்காலம் (Modern Period) அல்லது ஐரோப்பியர் காலமென்னலாம். இந்நூற்றாண்டிலும் சென்ற நூற்றாண்டுகளைப்போலவே இலக்கியமரபுகளும் படைப்புக்களும் கால வரலாற்றிலும் இலக்கியத்திலும்கூடச் சில புதுமைகளும் பிணைந்துவிட்டன. அமிர்தம் பிள்ளை, அருணாசலக்கவி, இராமலிங்க சுவாமிகள், கிருஷ்ணப் பிள்ளை, வல்லூர் தேவராசப் பிள்ளை, மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை, முருகதாசர், வேதநாயகம் பிள்ளை போன்றவர்கள் பண்டை மரபுகளைக்காத்து நல்ல இலக்கியங்களை இக்காலத்திலும் படைத்தனர்.

புதிய இலக்கிய வகைகள் மிகுதியாகப் பண்டைய படைப்பு வகைகள் குறையத் தலைப்பட்டன. (ஆங்கிலேயர்) கிறித்துவர் கலப்பினால் உரைநடை இலக்கியங்கள் மலிந்தன. மொழி பெயர்ப்புக்களுங்கூட இக்காலத்துப் பலவாயின. இந்நூற்றாண்டில் அச்சுப்பொறி வளர்ச்சி மிகுதியானமையால் இலக்கியப் பதிப்புப் பணி இலக்கியவளர்ச்சிக்குப் பெருந்துணை புரிந்தது. இலக்கியப் பதிப்புப்பணியும் செய்தித்தாள்களும் பெருகின. பண்டைப் புலவர் மரபில் வந்த ஆசிரியர் பலரும் பதிப்புப் பணியில் பேரூக்கங் காட்டினர். 'மர்டாக்' முதலியோரது அச்சிட்ட நூல்களைப் பற்றிய பட்டியலைப் பார்த்தால் இக்காலத்துச் செய்தித்தாள்களின் வளர்ச்சி நன்கு தெரியும். மற்றொரு வளர்ச்சி கிறித்துவ

நூல்களையும் சிறு பிரபந்தப்பாடல்களையும் பற்றியது. சமயத்தைப் பற்றியும் கோயில்களில் பாடிப் பயன் பெறுவதுபற்றியும் எண்ணிலாச் சிறுபாடல்களும் உரையேடுகளும் இந்நூற்றுண்டில் இயன்றன. இவற்றுலும் பத்திரிகை வளர்ச்சியொன்றும் இக்காலத் ததிகமாகி விட்டதென வியலாது. உரையிலும் பாட்டிலும் கதை நாடகம் சம்பந்தமான நூல்கள் பலவாகப் பயிலப்பெற்றுள்ளன. புராணங்கள் பல உரைநடையிற் பெயர்க்கப் பெற்றுள்ளன. புதுக் காலத்திற்குரிய கலையியல் அறிவியல் நூல்கள் பல எழுதப்பெற்றுள்ளன. சென்ற நூற்றுண்டிலும் மிகுதியாக முஸ்லீம்களும், சிறப்பாகக் கிறித்துவர்களும் இக்காலத்து இலக்கியப் படைப்புக்களில் ஈடுபட்டுள்ளனர். பொதுவாக இலக்கிய நடை உரை மிகுந்ததாகவும் எளியமக்கள் பேச்சு வழக்கு மலிந்ததாகவும் ஆகியிருக்கின்றது. சென்ற நூற்றுண்டுகளில் பிற நாட்டினர் தோற்றுவித்த இலக்கிய இலக்கண அகராதிப் படைப்பு வகைகள் தெளிவும் வளர்ச்சியும் அடைந்தன. இருபதாம் நூற்றுண்டின் நாவல், புதினம், சிறுகதை முதலியவற்றிற்கு இப்பொழுது வித்திடப் பட்டுள்ளது. கிறித்துவ சமயப்பரவல் பெருக்கத்தின் காரணமாகச் சமயக் கண்டன நூல்கள் பலரால் எழுதப் யெற்றுள்ளன. ஆங்கிலம் அறிந்த அறிஞர் பலரால் தமிழுக்கு நல்ல பணிகள்பல ஆற்றப் பெற்றுள்ளன. அயல்நாட்டாதிக்கத்தை எதிர்த்த தேசீய இயக்க உணர்ச்சி இலக்கியத்திலும் தலைதூக்காமலில்லை. தமிழ் இலக்கிய மரபுகளை உரைநடை, கதைகள் முதலிய எவ்வகையிலேனும் எளிய மக்களிடம் பரப்பத் தமிழ்ப் புலவரும் அறிஞரும் பாடுபட்டுள்ளனர். பாண்டித்

துரை முதலியவர்கள் புரவலர்களாக இந்நூற்றுண்டில் இருந்துள்ளனர். தமிழறிந்து தமிழ்ப்பணி புரிய வந்த ஆங்கிலேயர் பலருக்குப் பண்டை மரபுடைப் புலவர் பலர் பாராட்டத்தக்கவகையில் துணை புரிந்துள்ளனர். இதனுல் சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி முதலியவற்றின் தோற்றத்திற்குத் தொடக்கங்கள் செய்யப் பெற்றுள்ளன.

### நீதி நூல்கள்

17ம் நூற்றுண்டிலும், இந்நூற்றுண்டிலும் ஒழுக்க நூல்கள் அல்லது அறநூல்கள் உலகநீதி – சதகங்கள் ஆகியவற்றின்வழியே மிகுதியாகப் பெருகின. வாழ்க்கைக்கு உரிய அறக்கருத்துக்கள் நூல்களின் வடிவில் பதினெண்கீழ்க் கணக்குக்காலத்திலிருந்து வளர்ந்தன. அதன்முன் தொகைநூல் பாடல்களில் இவை நிரம்ப விரவிக் காணப்பெறுகின்றன. இலக்கணங்களிலும் ஒழுக்கம்பற்றிய குறிப்புக்கள் அங்குமிங்கும் தென்படுகின்றன. இவை பெரிதும் இல்லறம், போர், சமூகம், சமயம் ஆகியவைபற்றிய அறங்களேயாம். ஆழ்வார், நாயன்மார் மற்றும் அடியார் பாடல்களிலும் காப்பியங்கள், புராணங்கள் ஆயவற்றிலும் வாழ்க்கைப் பண்புகள்பற்றி நிறையப் பேசியுள்ளனர். 12ம் நூற்றுண்டில் ஒளவை, கம்பர் ஆகியோரும் 13-14ம் நூற்றுண்டுகளில் ஜைனர்களும் பலவாக நீதிப்பாடல்களை இயற்றினர். 15-16ம் நூற்றுண்டுகளில் சமய ஒழுக்கங்களைப் பாடல்களில் வற்புறுத்தினர். அதிவீரராமனின் வெற்றிவேற்கை ஒரு நல்ல நீதிநூல். 17ஆம் நூற்றுண்டில் குமரகுருமரர் நீதிநெறி விளக்கமும், சிவப்பிரகாச

சுவாமிகள் நன்னெறியும் இயற்றினர். அடுத்த நூற்றாண்டில் சிவஞானமுனிவர் சோமேசர் முதுமொழி வெண்பாவும், தாயுமானவர் பாடல்களும் நல்ல பண்புரைகளை வற்புறுத்துவனவாம். கடைசி இரண்டு நூற்றாண்டுகளிலும் இராமலிங்கசுவாமிகள், ஆறுமுக நாவலர், பாரதியார், திரு வி. க. போன்றவர்கள் அறக்கருத்துக்களை மக்கள் உள்ளத்தே நிறைப்பதற்காகப் பெரிதும் பாடுபட்டனர்.

### கிறித்தவ, இஸ்லாமிய இலக்கியங்கள்

கி. பி. 10ஆம் நூற்றாண்டிலேயே முஸ்லீம்கள் தமிழகத்தில் இருந்த குறிப்புக்கள் கிடைப்பினும், 13-15ஆம் நூற்றாண்டுகளிலேயே அவர்கள் தமிழகத்தில் பரவியது கோயிலொழுகுபோன்ற நூல்களால் தெரிகின்றது. காளமேகம் துப்பாக்கி என்ற சொல்லை ஆள்கிறார். இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் முதலில் 17ஆம் நூற்றாண்டிலேயே உமறுப்புலவர் முதலியோரால் இயற்றப்பட்டுள்ளன. சீருப்புராணம் இவ்விலக்கியங்களுள் ஒரு நிலைத்த இடத்தைப் பெற்றுவிட்டது. 18ஆம் நூற்றாண்டில் பத்துக்கு மேற்பட்ட சிறந்த புலவர்கள் ஆண்டவர்பிள்ளைத்தமிழ் போன்ற சீரிய சிறு பிரபந்தங்கள் பலவற்றை இயற்றினர். அடுத்த நூற்றாண்டில் மஸ்தான் சாகிபு போன்றோர் விளங்கினர்.

16ஆம் நூற்றாண்டிலேயே செயிண்ட் சேவியர் ஆன்டிரிக் போன்ற கிறித்தவர்கள் தமிழில் கிறித்தோபதேசம் முதலியவற்றை எழுதத் தொடங்கிவிட்டனர். 17ம் நூற்றாண்டில் சிவப்பிரகாசர் கிறித்தவர்களை எதிர்த்து எழுதியுள்ளார். ராபர்ட் நோபிலி ஏசுநாதர்

சரித்திரம் முதலிய 18 பிரபந்தங்களை எழுதினர். தமிழ் போர்ச்சுகீஸ் அகராதியும் இப்பொழுது ஏற்பட்டது. அடுத்த நூற்றுண்டில் சீகன்பாக், ஷூல்ஸ் போன்ற பலர் பலவாகிய கிறித்தவப் பிரபந்தங்களைப் பாடினர். 19ம் நூற்றுண்டில் ஜான் மர்டாக் என்பவர் தொகுத்த பட்டியலால் ஏராளமான கிறித்தவ பிரபந்தங்களும், அறிக்கைகளும் கோயிற்பாடல்களும் ஏற்பட்டமை தெரிய வருகின்றது. கால்டுவெல், போப் அனையோர் விளங்கிய நூற்றுண்டு இதுவாகும். இருபதாம் நூற்றுண்டில் இவ்விரு சமயத்தவர் இலக்கியங்களும் ஓரளவு குன்றிவிட்டன என்னவேண்டும். சைவ வைணவத் தமிழ்ப் புலவர்கள் உரிமை உணர்ச்சியும் உழைப்பும் இதற்கோர் காரணமாகலாம்.

ஆறுமுக நாவலர்: (1823-79) தமிழுக்கு இந்நூற்றுண்டில் தோன்றிப் பணிசெய்தவருள் தலைமையானவர் நாவலராவார். யாழ்ப்பாணத்தில் தோன்றித் தமிழகத்தில் 'சிதம்பரம்' வந்து தங்கிய சைவர் இவர். பிரம்மச்சாரியாகவே சைவத்தின்வழியே தமிழ்ப்பணி செய்து அழியாப் புகழையுற்றுர். வடமொழிப் புலமையும், ஆங்கிலப்புலமையுமிக்கு பைபிளைத் தமிழில்மொழி பெயர்த்தவர். உரைநடைக்கும், பதிப்புக்கும் இவர் செய்த தொண்டு என்றுமுள்ளதாகும். வசனநடை கைவந்த வள்ளலாரெனச் சூரியநாராயண சாத்திரியால் இவர் பாராட்டப்பெற்றுர். விநாயகர் விருத்தங்கள் பல இயற்றியுள்ளார். பெரியபுராணம், கந்தபுராணம், திருவிளையாடற்புராணம் ஆகியவற்றிற்கு வச

னங்களெழுதினர். இவரெழுதிய பாலபாடங்கள் நீண்ட காலம் தமிழக மாணவர் உலகிற்கு வழிகாட்டியாய் இருந்தன. திருக்குறள், பரிமேலழகர் உரை, சேனு வரையம், பாரதம், நன்னூல்காண்டிகை, திருக் கோவை உரை முதலிய நூல்களைத் திருத்தமாகப் பிழையின்றி அச்சிட்டு உதவினர். பதிப்பாசிரியருள் திரு உ. வே. சாமிநாதையருக்கு நல்ல வழிகாட்டி நாவலர் என்னலாம். சைவசமயத்திற்கும் பல நூல்கள் இயற்றினர். சைவத்தில் இவர்க்கு இருந்த அழுத்த மான பற்றினல் இராமலிங்க சுவாமிகளின் பொதுமை நெறியையும் எதிர்த்து அவரதருட்பாவிற்கு மருட்பா வியற்றினரென்பர். இவர் சிதம்பரத்திலும், வண்ணர் பண்ணையிலும் கல்வி நிலையங்களை நிறுவினர். கிறித் துவர்களையும் எதிர்த்துக் கண்டன மியற்றினர்.

இராமலிங்க சுவாமிகள் 1823-74. வடலூரில் வாழ்ந்து சமரச சன்மார்க்க நெறிகண்டவர். 19ஆம் நூற்ருண்டில் சிதம்பரத்தைச் சுற்றிச் சமயநெறிகளை வளர்த்தவர்கள் இராமலிங்கரும், நாவலரும் ஆவர். இதற்காக வடலூரில் அருட்சோதி மன்றம் ஒன்றியற் றினர். 'அருட்பா' என்ற பாடல்கள் அடிகளால் இயற்றப்பெற்றன. இவரைச் சித்தர் வழியினர் என்ன லாம். அருட்பா மூவரது திருமுறைகளில் ஒன்றென மதிக்கத்தக்கதாகும். எளிமையும், இனிமையும் உருக் கமும்வாய்ந்த பாடல்கள். மாணிக்கவாசகரது ஞானம் இவரது ஆறுதிருமுறைப்பாடல்களில் புலப்படும். இவ ரது மனுமுறைகண்டவாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம் முதலியன நல்ல உரைநடைகள். ஆறுமுக நாவலரும் அவரது தொண்டர்களும் அடிகளின் சமய நெறியை

மிகவும் எதிர்த்தனர். ஆனால் தமிழகத்தில் எதிர்காலத் திற்குரிய நன்னெறியாக அடிகளாரது நெறியும் பாடல் களும் அமைந்து விட்டன. முருகனிடத்திற் பேரன் புடையவர் தமிழ் வள்ளலார்.

திருவாவடுதுறையாதீனத் தலைவராயிருந்த சுப்பிர மணிய தேசிகரென்பவர் சிவஞானசித்தியாருக்குப் பத வுரை எழுதினார். நல்ல தமிழர். நாவலருக்கு அப்பட் டத்தை யளித்தவர் அவரே. தமிழ்ப்புலவர் பலரை ஆதரித்ததன்வழியே தமிழைச் செழிக்கச் செய்தவர்.

திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை: (31-1-1876 மறைவு) 19-ஆம் நூற்றாண்டின் பாடல்கள் பெரும் பான்மையும் இவரால் இயற்றப்பெற்றன. பாடல் இயற் றுவதில் பெரிய்புராண ஆசிரியரையும் மிஞ்சியவர்; இவரைப் பிரபந்த வேந்தரென்னலாம். இம்மென்னு முன்னே எழுநூறு மெண்ணூறும் பாடவியலுமென் பதை மெய்ப்பித்தவர். மேற்கூறிய சுப்பிரமணிய தேசி கரால் ஆதரிக்கப்பெற்றவர். தியாகராசச்செட்டியார், உ. வே. சாமிநாதையர் போன்ற மாணவப் பரம்பரை யைத் தோற்றுவித்தவர். இருபதாம் நூற்றாண்டின் தமிழ் வளர்ச்சிக்கு வித்திட்டவனெனலாம். ஒருவரது வாழ்வில் இத்தனையாயிரப் பாடல்கள் பாடியோர் புல வருள் மிகச் சிலரே. இவரால் பாடப்பெற்ற புராணங் களும் பிரபந்தங்களும் நூறென்னுமளவில் இருக்கக் கூடும். திருநாகை, திருமுல்லைவாயில் முதலிய பதி களுக்கு இவரியற்றிய புராணங்கள் சிறப்புடையன; சேக்கிழார் பிள்ளைத்தமிழ் தமிழுலகறிந்தது. அதனுள் 'பத்திச்சுவை நனி சொட்டச் சொட்ட' என்ற பாடல்

அனைவருள்ளத்திலும் தேன்சொட்டுவதாகும். இவர் தமது பாடல்களைக் கொடிமுந்திரிக்கனிக்கு உவமை கூறியுள்ளார். திருவாரூர் தியாகராசலீலை, திருஞான சம்பந்தர் பதிற்றுப்பத்தந்தாதி, தில்லையமகவந்தாதி முதலியன இவரது பிரபந்தங்களுட் சிறந்தன. இவர் சுமார் 16 புராணங்களும், 10 பிள்ளைத்தமிழ்களும் இயற்றியுள்ளார். இவர் காலத்துடன் தமிழில் கவி போய் விட்டதென்னலாம். அடுத்து இருபதாம் நூற்றாண்டில் பாரதிகாலத்திற்றான் அக்கவி ஓரளவுதலைதூக்குகின்றது

வேதநாயகம் பிள்ளை: இவர் கிறித்தவராயினும் சமரசநோக்குடையவர். அந்நோக்கிற்குத் தூண்டுதல் அளித்தவர் இராமலிங்கராகவேண்டும். சர்வ சமய சமரசக் கீர்த்தனையென்ற இவரது பாடல்கள் நல்ல தமிழிசைப்பாடல்களாகப் பாடப்படுகின்றன. மற்றும் நீதிநூல், பெண்மதிமாலை முதலிய பாடல் இலக்கியங்களையும் இயற்றியுள்ளார். மீனாட்சிசுந்தரம்பிள்ளையின் மாணவர். பிரதாபமுதலியார் சரிதமெழுதி நாவலுக்கும் உரைநடைக்கும் நல்ல காலத்தைத் தொடங்கி வைத்தவர். இருபதாம் நூற்றாண்டின் உரைநடைக்கு இவர் ஓர் வழிகாட்டியெனலாம்.

கோபாலகிருஷ்ண பாரதியின் நந்தனார்கீர்த்தனங்களும் தனித்தொண்டு செய்தன.

அரங்கநாத முதலியார்: (1844–1893) இராசதானிக் கல்லூரியில் கணிதப் பேராசிரியராயிருந்த தமிழறிஞர். கச்சிக்கலம்பகம் இயற்றினார். திருக்குறளுக்கோர் ஆங்கில மொழிபெயர்ப்புச் செய்துள்ளார்.

வ.வே.சு. ஐயரது குறள் மொழிபெயர்ப்பும் இதனுடன் எண்ணத்தக்கதாகும். இவரைப்பற்றி உ. வே. சா. அவர்கள் தமதுரைநடை நூல்களில் எழுதியுள்ளார்.

பேராசிரியர் சுந்தரம் பிள்ளை: (1855-1897) திருவனந்தபுரம் கல்லூரியில் தத்துவப் பேராசிரியராக விளங்கியவர். நாடகத்திற்கோர் நல்லிலக்கியமாய மனோன்மணீயம் இயற்றியவர். தமிழின் வரலாற்றையும் தனித்தன்மையையும் விளக்கிப் பல கட்டுரைகளை ஆங்கிலத்திலும், தமிழிலும் எழுதினுர். இக்கட்டுரைகள் தமிழ் தலைநிமிர்ந்துலவுதற்குதவின. மறைமலையடிகள் போன்றுர்க்கு உணர்ச்சியூட்டின இக்கட்டுரைகள் என்னலாம். தமிழில் ஆராய்ச்சியுணர்ச்சியைத் தூண்டிச் சம்பந்தர்கால முதலியவற்றைத் தெளிவுபடுத்தியவர்.

தாமோதரம் பிள்ளை: (1832-1901). இவருடன் வரிசைப்பட்ட மூவரும் ஆங்கிலத்தமிழறிஞர்கள். இவர் யாழ்ப்பாணத்தவர். நல்ல பதிப்பாசிரியர். நாவலருடன் வைத்தெண்ணத்தக்க பதிப்புப்பணி செய்தவர். இவர்களெல்லாம் செய்த தொண்டினுற்றுன் இன்று தமிழ் விளக்கமுற்றிருக்கிறது. இவர்களெல்லாம் தமிழின் நம்பியாண்டார்கள். உ.வே.சா. வுக்கு உணர்ச்சி தந்தவர்கள் இவரனைய தமிழர்களே. வேதநாயகம் பிள்ளையைப்போல நீதிமன்றத் தலைவராக இருந்தவர். இறையனுரகப்பொருள், வீரசோழியம், தொல்காப்பியப் பொருளதிகாரம், இலக்கணவிளக்கம் முதலியவற்றை ஆராய்ச்சியுடன்பதித்து வெளியிட்டவர். இவரது பதிப்பித்தொண்டு புலவர் பலராலும் பாராட்டப் பட்டதாகும். சைவமகத்துவம் என்ற நூலைச்செய்தவர்.

**டாக்டர் கால்டுவெல்:** (1814-1891) தமிழுக்குத் தனித்தொண்டாற்றிய ஆங்கிலத் தமிழ்ப்புலவர் கால்டுவெல். இவர் திராவிட மொழிகளையெல்லாம் கற்று 'ஒப்பிலக்கணம்' எழுதியது இன்றும் தமிழறிஞர்க்கு ஓர் வழிகாட்டியாகவும் உணர்ச்சியூற்ருகவும் உள்ளது. நன்குவிரிவடையவேண்டிய ஒருதுறைக்கு அடிப்படையிட்டவர் கால்டுவெல் ஆவார். இவர் போன்ருேர் இட்டவித்து இன்று மொழியியற்கல்வி (Linguistics) என வளர்ந்துள்ளது.

**ஜி. யூ. போப்:** (1820-1908) அவ்வரிசையில் மற்றும் சிறந்தவர் போப். நிலையான நல்ல மொழிபெயர்ப்புக்கள் பல இயற்றியுள்ளார். இவரது திருக்குறள், நாலடியார், திருவாசகம் முதலியவற்றின் மொழி பெயர்ப்புக்கள் மிகவும் பாராட்டற்குரியனவாகும். இவர் தமிழிடத்தும், தமிழரிடத்தும் அளப்பிலா ஆர்வமுடையவர். வள்ளுவரை 'மன்பதைப் பெரும் பாவலர்' எனப் பாராட்டினர். தம்மைப்பற்றித் தமது கல்லறையில் 'தமிழ் மாணவன்' எனக் குறிக்குமாறு கூறிச்சென்றவர் என்பதனுலேயே இவரது தமிழ்ப்பற்று நன்கு புலப்படும். இவர் தொடங்கிய மொழி பெயர்ப்புப்பணி இன்னும் விளக்கமடையாமலே இருக்கின்றது. தொடர்ந்து செய்பவரனைவரும் அத்திருக்குறள், திருவாசகம் இரண்டையுமே திரும்பத்திரும்ப மொழி பெயர்க்கின்றனரன்றி வேறு நூல்களில் நாட்டஞ்செலுத்துவதைக் காணேம். இதனைக்காணும் பிற மொழியினரும் மேனுட்டாரும் தமிழில்இவையிரண்டுந் தவிர வேறு சிறந்த நூல்கள் இல்லைபோலுமென்றே கருதுவர்.

கந்தப்பிள்ளை: ஆறுமுக நாவலரின் தந்தையார். நல்லைநகர்க்குறவஞ்சி, நிக்கிலாஸ் நாடகம் ஆகியவற்றுடன் பல நாடகங்களை இயற்றியவர்.

சபாபதி நாவலர் யாழ்ப்பாணத்தவர். சிறந்த தமிழ்ப் புலவர். திருவாவடுதுறை ஆதீன வித்வானாக இருந்தவர். சிதம்பர சபாநாத புராணம். பாரதராமாயண தாத்பர்யசங்கிரகம், ஏசுமதசங்கற்பநிராகரணம், முதலியவற்றில் திராவிடப்பிரகாசிகை மிகவும் பயன்படுவதாகின்றது. நாவலரைப்போன்றிவரும் தமிழுக்கும் சைவத்திற்கும் சீரிய தொண்டு புரிந்திருக்கிறார்.

இராமாநுசக்கவி இராமநாதபுரத்தினர். திருவாவடுதுறை சோமசுந்தரக் கவியிடம் கல்வி கற்றுச் சென்னையில் வதிந்தவர். சிறந்த வைணவர். சிறந்த இலக்கண ஆசிரியரும் உரையாசிரியருமாவார். பச்சையப்ப முதலியார்மீது பஞ்சரத்னம் பாடியவர். பார்த்தசாரதி மாலை, ஆத்திசூடி, கொன்றைவேந்தன் உரைகள், நன்னூல், திருக்குறள் ஆகியவற்றிற்குரைகள் எழுதியவர்.

திருத்தணிகை விசாகப்பெருமாளய்யரும், சரவணப்பெருமாளய்யரும் கந்தப்பையர் தோன்றல்கள். இவர்கள் இணையற்ற பதிப்பாசிரியரும் உரையாசிரியருமாவர். இராமாநுசக் கவியிடம் கல்வி பயின்றவர்கள். முன்னவர் சென்னை மாகாண அரசினர் கல்லூரித் தமிழாசிரியராகவும், வின்சுலோ அகராதிக்குத் துணைபுரிபவராகவும் இருந்தவர். நன்னூல் பிரபுலிங்கலீலை முதலியவற்றின் உரைகளை யெழுதினார். பின்னவர் பரிமே

லழகர் உரை திருவாசக முதலியவற்றைப் பதித்தார். ஆத்திச்சூடி முதலியவற்றிற்குரை யெழுதியதுடன் உரைநடை நூல்கள் பலவற்றையும் எழுதினர்.

வேதகிரி முதலியார்: இராமாநுசக்கவியின் மாணவர். தொண்டைநாட்டுப் பொன்விளைந்த களத்தூரினர். மனுநீதி சதகம் என்ற நூலினை இயற்றியவர்.

அட்டாவதானம் சரவணப்பெருமாள் கவி: சிவஞான முனிவர் பரம்பரையினர். அட்டாவதான முதலிய கல்வித் திறனுடையவர். வசையிலும் நகைச் சுவைப் பாடல்களிலும் வல்லவர். பணவிடுதூது இவரால் எழுதப்பெற்றது.

முருகதாச சுவாமிகள்: தண்டபாணி அடிகளெனவும் வழங்கப்பெற்ற இவர் சந்தச்சரபம் என்னப்பெறும் ஆற்றலுடையவர். இவரது புலவர் புராணம் இலக்கிய வரலாற்றிற்கு ஓர் முதற்படியாகும். சிதம்பரம் பாண்டியநாயக முருகற்கோர் பிள்ளைத்தமிழ் உட்படப் பல பிரபந்தங்களை இயற்றியுள்ளார்.

தாண்டவராய முதலியார் திவாகர முதலியவற்றைப் பதிப்பித்தவர். பஞ்சதந்திரத்தைத் தமிழில் மொழி பெயர்த்தவர்.

வீராசாமிச் செட்டியார்: விநோதரச மஞ்சரியைத் தொகுத்தவர். புலவர்களைப்பற்றியெழுதிய இவர் தம் உரைநடைகள் இலக்கிய வரலாற்றிற்கோர் இன்துணையென்னலாம்.

முத்துவீரிய பாண்டியன்: முத்துவீரியமென்னும் இலக்கணமெழுதியவர்.

கிருஷ்ணப்பிள்ளை: திருநெல்வேலியினர். கிறித்தவ சமயச்சார்பான பலநூல்களை இயற்றினர். இரட்சணிய யாத்திரிகம் போன்றன தேம்பாவணி போன்று படிக்கத் தக்கனவும் பாராட்டத் தக்கனவாகும்.

இராமபாரதி: ஆத்திச்சூடி வெண்பாவை இயற்றினர். இது திருக்குறள் குமரேச வெண்பா போன்றது. நிசகுணயோகி (அரிகரபுத்திரர்) என்பவரால் விவேக சிந்தாமணி இயற்றப்பெற்றது. தமிழ் மாணவர்கள் முதலில் இந்நூலைப் படித்து வந்தனர்.

சிற்றம்பல தேசிகர்: இவர் கம்பராமாயண வசனம் இலக்கண உரைநடைகள் முதலியவற்றை எழுதினர்.

கதிரைவேற் பிள்ளை: தமது அகராதியைத் தொகுத்ததும் இக்காலத்தில்தான். ஆறுமுக நாவலரின் மாணவர். யாழ்ப்பாணத்தவர். வரலாற்றுச் சிறப்புடைய இவ்வகராதி நீண்டகால வழக்கும் பயனுமுடையதாகும்.

கோபாலகிருஷ்ண பாரதி: வேதநாயகம் பிள்ளையைப் போன்று இவரியற்றிய நந்தனர்க் கீர்த்தனை, சிதம்பரக்கும்மி போன்ற பாடல்கள் தமிழிசைக்குத் தனித்தொண்டும், புத்துயிரும் உண்டாக்கிய வென்னலாம்.

இராமச்சந்திர கவிராயர்: சென்னையில் வதிந்து எல்லிஸ் துரையால் பாராட்டப் பெற்றவர். இரணிய

நாடகத்தையும், வீரமாமுனி அகராதியையும் பதித்தவர். இரங்கூன் சண்டைநாடகம், இரணிய வாசகப்பா ஆகியவற்றை எளிதியவர்.

அண்ணுமலைரெட்டியார்: காவடிச்சிந்து பாடுவதில் புகழ்பெற்றவர். பிள்ளைத் தமிழொன்றும் பாடினுர். காவடிச்சிந்து இக்காலத்தில் வளர்ந்த இலக்கியப் பிரபந்தமென்னலாம்.

அமிர்தம் பிள்ளை: தமிழ்விடுதூது, பெண்மைநெறி விளக்கம், யாப்பிலக்கண விஞவிடை என்பன இவர் எழுதியனவாகும்.

அருணுசலக்கவி: கோவையினர். யவனகாவியம், அவிநாசி உலா, பேரூர் உலா, பாம்பண்ண கவுண்டர் குறவஞ்சி ஆகியவற்றைப் பாடினுர்.

அருணுசலக்கவி. மு. ரா: சிவகாசிப் பிரபந்தம், குற்ருலப்புராண வசனம், ஆறுமுக நாவலர் வரலாறு, தனிச்செய்யுட் சிந்தாமணித்தொகுப்பு ஆகியவற்றைச் செய்தவர். சிந்தாமணி இலக்கிய வரலாற்றிற்குமிக்க துணை செய்வது.

அப்பாவு முதலி: வைணவர். தென்ஞசார்ய பிரபாவதீபிகை, குரேசவிசயம்.

அம்பிகை பாகர்: சூளாமணி வசனம், தணிகை புராண உரை.

அனந்த பாரதி: முப்பாற்றிரட்டு, யானைமேலழகர் நொண்டிச்சிந்து, உத்தரராமாயண கீர்த்தனை.

அட்டாவதானம் கிருஷ்ணய்யங்கார் : பஞ்ச தந்திரம், வீரகுமார நாடகம், நாலு மந்திரி கதை.

மாம்பழக்கவிச் சிங்கம் : பழனித் திருவாயிரம் (1836), தேவாங்கு புராணம் ஆகியவற்றை எழுதியவர்.

ஆவிடையம்பாள் : திருவாதி 1896, வேதாந்தப் பள்ளு.

ஆழ்வாரப்பப் பிள்ளை: வள்ளியூர் காவடி (சிந்து).

ஐயாசாமி முதலி : குணங்குடியார் பதிற்றுப் பத்தந்தாதி.

ஒப்பிலாமணிப் புலவர் : குமணன் கதை.

கணபதி புலவர் : பில்கணீய மொழிபெயர்ப்பு, வாதபுரேசர் கதை.

கனகசபை புலவர் : அழகர்சாமி படல், ஒரு சொற் பல்பொருள் நிகண்டு.

கனகசபை பிள்ளை: சென்னை பல்கலைக் கழகத்து இருந்தவர். கலிங்கப்பரணி முதலியவற்றை மொழி பெயர்த்தவர். இவர் எழுதிய 1800 ஆண்டுகட்கு முற் பட்ட தமிழர் என்பது வரலாற்றுச் சிறப்புடையது.

கனகசுந்தரம் பிள்ளை : தமிழ் நாவலர் சரிதையைப் பதித்தவர். சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதித் தொகுப்பிற்குத் தலைமை வகித்தவர்.

குமரசாமிப் புலவர் : தமிழ்ப் புலவர் சரிதம், சாணக்ய நீதிவெண்பா, மேகதூதக் காரிகை

சைமன் காசிச்செட்டி : இவர் எழுதிய தமிழ்ப் புலவர் வரலாறு (தமிழ் புளுடார்ச்சு) இலக்கிய வரலாற்றிற்கு மிகவும் பயன்பெறக்கூடியதாகும்.

சந்திரசேகரன் : மாப்பாய் பேரகராதி.

துரைசாமி மூப்பனுர் : கம்பராமாயண அரும் பொருள் விளக்கம்.

தேவராயசாமி : கந்தசஷ்டிக் கவசம். இது முருகப்பற்று உடையார் பலராலும் பாராயணம் செய்யப்பெற்று மிகவும் பரவியது.

நாகநாத பண்டிதர் : மேகதூதம், உபநிடத மொழிபெயர்ப்புக்கள்.

முத்துக்குமரக் கவி: ஐயனுர் ஊஞ்சல்.

முத்துசாமி பாரதி : விசுவப்பிரமப் புராணம்.

முருகேச பண்டிதர் : விநாயகர் ஊஞ்சல்.

வெறிமங்கை பாகக்கவி : மருங்காபுரி சமீன் பாடல்கள்.

மனேன்மணி அம்மை: புதுவை காமாட்சியம்மன் பதிகம்:

**கதைகளும்; நாடகங்களும்**

இராசம் ஐயர் : கமலாம்பாள் சரிதம்.

காசிவிசுவநாத முதலி: இடம்பாச்சாரி விலாசம், கூலிக்கு மாரடிக்கும் கூத்தாடிச்சியின் நடிப்பு.

சத்தியநாதம் பிள்ளை: கமலா, சுகுணா (சமூகக் கதைகள்).

குமார குலசிங்கம்: பதிவிரதை விலாசம்.

சரசலோசன செட்டி: சரசாங்கி நாடகம்.

சரவணமுத்துப் பிள்ளை: மோகனாங்கி, தத்தை விடுதூது.

சுப்பையா: கனகி புராணம்.

திருவேங்கடாசலக் கவி: வல்லாளராசன் கதை.

நடராசர்: நிர்மலா, ஞானதர்சினி.

நடேச சாத்திரி: பன்னிரண்டாவது இரவு மொழி பெயர்ப்பு. மாமி கொலுவிருக்கை, கோமளம் குமரி ஆனது.

முத்துக்குமரசாமி முதலி: அரிச்சந்திரா நாடகம் (பெயர்ப்பு).

முத்துவீரகவி: வள்ளியம்மை நாடகம்.

மீனாட்சிசுந்தரக்கவி: குவலயானந்தம் (மொழி பெயர்ப்பு)

வயித்திலிங்கம்: சாதிநிர்ணய புராணம், சிந்தாமணி நிகண்டு.

வையாபுரிப் பிள்ளை : (ஞானக்கண்ணு) நல்ல தங்காள் நாடகம்.

மற்றும் இராமாயண ஏலப்பாட்டு, இராயர் அப்பாசி கதைகள், இலக்கண வினு விடை, ஈழ மண்டல சதகம், கருடப்பத்து, கற்பிலக்கண வசனம், காசி ரகசியம், சக்கிலிகள் சிங்காரப் பாட்டு, சனி பகவான் நவக்கிரக தோத்திரம். சூரிய நமஸ்காரப் பதிகம், தத்துவக் குறவஞ்சி, திருமண ஏசல் முதலிய பிரபந்தங்களும் இக்காலத்து இயன்றனவாக அறிகிறோம்.

பிற சமயம்பற்றி இயற்றியன

அந்தோணிநாதர் கிறித்துவ தர்க்கக் கும்மி.

ஆறுமுகத்தம்பிரான் : (1836) கிறித்துவ அஞ்ஞானக் கும்மி.

வின்ஸ்லோ: தமிழ் ஆங்கில அகராதி.

சங்கர பண்டிதர் : கிறித்துமத கண்டனம், சிவதூடண கண்டனம்.

பெர்சிவல் : பழமொழித் திரட்டு.

பெரிய நூலெப்பை : வேத புராணம்.

மஸ்தான் சாகிபு: அகத்தீசர் சதகம், கிறித்துமத கண்டனம், இவர் பாடல்கள் நீண்ட காலம் தமிழகத்தில் மிகவும் பரவியும் உணர்ச்சி ஊட்டியும் வந்தன.

வேதநாயக சாத்திரி : செபமாலை, ஞானத்தச்ச நாடகம்.

மற்றும் அராபிக்கதைகள், அலி பாதுஷா நாடகம் சைதாத்துப் படைப்போர் முதலியனவும் இக்காலத்து இயந்திருக்கவேண்டும்.

அறிவியல் தொடர்புடைய நூல்கள்

அட்டாவதானம் கிருஷ்ணய்யங்கார்: விடநிக்ரக சிந்தாமணி.

இராகவமூர்த்திப்பிள்ளை: பறையர் உற்பத்தி.

இராசகோபால் நாயுடு: தென்னை விவசாய விளக்கம்.

இராமகிருஷ்ணசித்தாந்தி: மனையடி நூல் (பதிப்பு)

இராமசாமி ஐயர்: நகைப் பைத்தியம்.

ஏரம்பையர்: கனுநூல், சூரியன் முற்பிறப்பு சரித்திரம், சிரார்த்தவிதி, ஊஞ்சல்பாடல்.

கன்னைய நாயுடு: சர்வார்த்த சிற்ப சிந்தாமணி.

சின்னத்தம்பி: நில அளவை சூத்திரம்.

சுப்ரமணியபண்டிதர்: பதார்த்தகுணசிந்தாமணி.

முனிசாமி நாயுடு: பதிப்பிலக்கண வினுவிடை.

வரதராச தீட்சிதர்: இந்துதேச சரித்திரம்.

வரதாச்சாரி: புருஷ சாமுத்திரிகம்.

வீராசாமி முதலி: சிற்ப சிந்தாமணி.

வெங்கடசுப்பராவ்: மர்ம சாத்திரம்.

ஆதிநாராயணய்யர்: புகைவண்டிப் பிரயாணப் பாட்டு.

வேலாயுதக்கவி: திருட்டுக்கும்மி.

மற்றும் அங்காதிபாதி சுகரணவாத உற்பாலன நூல்; அண்டபிண்ட வியாக்யானம்; அத்வைத சூரியோதயம்; ஆசௌச விதி; கப்பல்சிந்து; கலியுக விருத்தம்; காந்தசக்தி வைத்தியம்; காலேஜ்ஓடம்; சாலவிநோதத்திரட்டு; சுகர்நாடி; செகவுற்பத்தி; தமிழ்ச்சுருக்கெழுத்து, நடனவாத்தியரஞ்சனம் முதலியவும் இக்காலத்தியன்றனவாக அறியப்படுகின்றன.

# 20-ஆம் நூற்றுண்டு.

முன்னுரை

உரிமையுணர்ச்சி தலைதூக்கி வெற்றிபெற்றது இந் நூற்றுண்டில். இலக்கியத்திலும் அவ்வுணர்ச்சி எழத் தொடங்கிவிட்டது. பாரதி, திரு.வி.க. முதலியோர் இலக்கியங்களில் உரிமைவேட்கையும், ஆடலும் பாடலும் நிறைய காணப்படுகின்றன. இவ்வுணர்ச்சியால் சிறந்த உரைநடையிலும் இலக்கிய இலக்கணங்களிலும் சொந்தமாயவற்றையே போற்றும் ஆர்வம் மிகுந்தது. மறைமலையடிகள், நாட்டார் அனைய புலவர்கள் இவ்வுரிமையைப் பற்றிப் பெரிதும் பேசினர். அஞ்சாமல் உரிமையுடன் எண்ணவும் ஆராய்ச்சிக் கருத்துக்களை வெளியிடவுமாய துணிவு பிறந்தது. தமிழகத்திற்கே பெருந்துணையாய நூல்கள்பல டாக்டர் உ.வே. சா. அவர்களால் ஏடுகளிலிருந்து அச்சியற்றப்பட்டன. இம்முயற்சி சென்ற நூற்றுண்டிலேயே தொடங்கப் பெற்று வளர்ந்திருந்தாலும் இந்நூற்றுண்டில் இவராற்றுன் முழுமையும் பயனுமுற்றதெனலாம். (தமிழ்) வரலாறு, கல்வெட்டு, திறனுய்வு முதலிய துறைகளில் விழிப்பும், முன்னேற்றமும் ஏற்பட்டன.

இந் நூற்றுண்டினைப் பத்திரிகைக்காலம், நாவல் காலம் என்னலாம். திரு. நாராயணய்யங்கார் போன்றவர்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருந்து செந்தமிழ் போன்ற பத்திரிகைகளைத்தொடங்கி விளக்கமுற நடத்தினர். தமிழாராய்ச்சிக்கும், அறிவிற்கும் 20–30 ஆண்டுகள் இப்பத்திரிகை கருத்தரங்காகவும் தூண்டுகோலாகவும் இருந்துள்ளது. அடுத்தெண்ணத் தக்கன

தமிழ்ப்பொழிலும் செந்தமிழ்ச் செல்வியுமாகும். கலைமகள், ஞானசாகரம், சித்தாந்தம், ஆனந்தபோதினி முதலியவும் இப்போது சுதேசமித்திரன், தினமணி, கல்கி, தமிழ்கல்சர், தமிழ்நாடு முதலிய இதழ்களின் மலர்களும் தமிழுக்கு நற்றொண்டு புரிகின்றன. திரு. பவானந்தம் பிள்ளையவர்களும், திரு. எம். பால சுப்பிரமணியமுதலியார் அவர்களும், தமிழகஅரசாங்க ஏட்டுச்சுவடி நிலையங்கள் தமிழ் வளர்ச்சித் துறைகள் ஆகியவையும் தமிழ் நூல்களை நல்ல முறையில் ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் வெளியிட்டு அழியாப் பெயரைக் கொண்டுவிட்டவர்கள். தருமை, பனசை, மயிலம் முதலியவற்றின் சைவ மடங்கள் தமிழ்க் கல்லூரிகள் ஏற்படுத்திப் புலவர்களை யுண்டாக்குவது இந் நூற்றாண்டின் பெருந்தொண்டாகும். இந்நிலையங்களிலிருந்து நல்ல தமிழ் நூல்களும் பதிக்கப்பட்டு வருகின்றன. இக்காலத்தில் அறிவியல் நூல்களும் திறம்பெற எழுதப்பெறுகின்றன.

## உரைநடை இலக்கியம்

மொழி முதலில் பாடல்வடிவில் வளர்ந்ததா, உரை நடையில் வளர்ந்ததா என்றெல்லாம் ஆராய்ச்சிகள் நிகழ்கின்றன. பேச்சு வழக்கும் செய்யுள் வழக்கும் (வழக்கும், செய்யுளும்) இலக்கணங்களில் பேசப்படும். பேச்சு வழக்கே பெரிதும் உரைநடை. தொல்காப்பியத்து உரைநடைநூல்களைப்பற்றி இலக்கணமும் வகைமையும் கூறப்படுகின்றன. உரைநடையிட்ட பாட்டுடைச்செய்யுள் சிலப்பதிகார முதலியன. கி.பி. 8ஆம் நூற்றாண்டைய பாரத வெண்பா முதலியன கத்திய

பாகத்தில் (உரையும் பாட்டுமாகிய யாப்பில்) இயன் றனவாகும். மற்றபடி பொதுவாக செய்யுள் நூல்களுக் கான உரைநூல்களெல்லாம் உரைநடையாலானவை. இறையனர் களவியல்உரை நமக்குக்கிடைக்கும் முதல் உரைநூல் என்னலாம். மற்றும் பெருமளவிற்ருகிய கல் வெட்டுக்கள் (கி. பி. ஏழாம் நூற்ருண்டு முதல்) எளிய பேச்சு வழக்கொடுபட்ட உரையாற்ருன் ஆயின. கி.பி. 19ஆம் நூற்ருண்டின் தொடக்கத்தில் மெகன்சி என் பவர் நூற்றுக்கணக்கான ஏடுகளைத் தொகுத்தார். அவை பெரிதும்உரையாலாயின. தென்னுட்டு ராஜாக் களின் கதைகளும், செலவுக் கணக்குகளும், ஒப்பந் தங்களும், பட்டயங்களும் இவற்றுள் பலவாவன. 11-15 நூற்ருண்டுகளில் தோன்றிய சமயதத்துவநூல் உரைகளும் (வைணவ வியாக்யானங்களைப் போன் றன) இலக்கண உரையாசிரியர்களின் உரைகளும் தமிழ் உரைநடைக்குப் பெரும் விளக்கங்களாம். தெனுலிராமன் கதை, விக்ரமாதித்தன் கதை முதலிய வற்றைப்போன்ற எளிய நாட்டுப்புற நடை நூல்களும் சென்ற நூற்ருண்டிலிருந்து வளர்ந்தனவாகும். கிறித் தவரது அறிக்கைகளும் அகரரதிகளும் உரைநடை இலக் கியங்களே. சிவப்பிரகாச சுவாமிகள், சிவஞானசுவாமி கள் ஆகியோரது மறுப்புநூல்களும் அவ்வகையில் இந் நூற்ருண்டிலாயினவையும் பத்திரிகைகளும், சிறுகதை நாவல்போன்ற இலக்கியங்களும், கட்டுரை ஆராய்ச்சி அறிவியல் விளக்கம்பற்றிய இலக்கியங்களும் உரைநடைகளே. வீரமாமுனிவர், ஆறுமுக நாவலர், இராமலிங்க சுவாமிகள், நமச்சிவாய முதலி யார், தாண்டவராய முதலியார், வீராசாமிச் செட்டி

யார், சாமிநாதய்யர், பாரதியார், வ. உ. சி; கா. சு. பிள்ளை, நாட்டார்; மு.வ; ஆபிரகாம்பண்டிதர், சூரிய நாராயணசாத்திரி, இராகவையங்கார் போன்றவர்கள் இந்நூற்றுண்டில் உரை நடைகளை வளர்த்தவர்கள். இந்நூற்றுண்டில் திரு வி.க. வும், மறைமலையடிகளும் உயர்ந்ததோர் அழகிய உரைநடையை ஆக்கி வளர்த் தவர்கள். திரு வி. க. வின் உரை பேச்சுக்கும், மறை மலையடிகளின் உரை எழுத்திற்கும் வழிகாட்டியாகத் தக்கவாம்.

இந்நூற்றுண்டுகளில் அரசியல் மேடைகளிலும் அறிக்கைகளிலும் நூல்களிலும் உணர்ச்சியும் ஊக்கமு முடைய உரைநடையொன்று வளர்ந்துள்ளது.

மணிப்பிரவாள நடைக்கு வடமொழிச் சொல் மரபு களும், சேனுவரையர் நடைக்கு வடமொழி இலக்கண மரபுகளும் அறியவேண்டும். இளம்பூரணர் பேராசிரி யர் போன்ருரதுநடை செம்மையும் தெளிவுமுடையது. நக்கீரரது நடை அவற்றுடன் ஒரு கனிவும் இனிமையு முடையது. பரிமேலழகர் நடை அளவும் கட்டுப்பாடு முடையது. அவற்றுடன் ஒரு மிடுக்கும் பெருமிதமும் உடையது சிவஞான முனிவர் நடை. சோமசுந்தர பாரதி, பரிமாற்கலைஞன் ஆகியோர்நடைகள் ஓர் அரு மையும் செறிவும் உடையனவாகும். உ. வே. சா, மு. வ. ஆகியோரது நடைகள் எளிமையும் தெளிவும் அழகும் நிறைந்தன. திரு. வி. க. போன்ருரது நடை அமைப்பும், அழகும், இனிமையும், உணர்ச்சியும் கொண்டவாயிருக்கும். இக்கால நாவல் சிறுகதை நடைகள் பல கொச்சைச் சொற்களும் பன்மொழிக்

கலப்புச் சொற்களும் மலிந்து இலக்கண வரம்புகளைப் பற்றி அதிகம் கவலாது செல்லும். நடையைப் பொறுத்தே இலக்கியம் அமைகின்றது. உயர்வகுப்பு மாணவர்க்குப் பாடம் வைக்கக் கூடியவாயும், மொழியறிந்த அறிஞர் படித்துப் பாராட்டுவனவாயும், சில முறைபடித்தபின்பும் போற்றிக்காத்து நினைக்கக்கூடியவாயும் அமையும் நடைகளும் நாவல் சிறுகதைகளுமே இலக்கியம் என்ற வரிசையில் வைத்தெண்ணத் தக்கவாகும். எழுதப்படுவனவெல்லாம் அச்சேறிவிட்டனவெல்லாம் அருந்தமிழ் இலக்கியமாகமாட்டா. தரமுள்ள படைப்புக்களையே இலக்கியத்துள் சேர்க்கக் கூடும்.

### சிறுகதை நாவல் இலக்கியங்கள்

சிறுகதை, நாவல் இலக்கியங்களை சிறு பிரபந்தம் புராண காவியங்களுடன் ஓரளவு ஒப்பிடலாம். முன்னைய நூற்றுண்டுகளில் நரிவிருத்தம் போன்றவற்றைச் சிறுகதை போன்றுரைக்கலாம். சிறுகாப்பியங்களை நாவல் போன்றன வென்னலாம். காவிய முதலியன செய்யுளால் ஆனவை. பிற்காலத்தில் பீர்பால்கதை, தெனுலிராமன் கதை, மெகன்சி தொகுதியின் தென்னுட்டு ராஜாக்களின் கதைகள் ஆகியவற்றைச் சிறுகதையுள் சேர்க்கலாம். விக்ரமாதித்தன் கதை போன்றவற்றை நாவல்களென்னலாம்.

குறுகிய நேரத்தில் பொழுதுபோக்கிற்காகவும் ஒரு சிறு குறிக்கோளை வற்புறுத்துவதற்காகவும் சிறுகதை அமைகின்றது. நாவல் சற்று பெரியதாகும், இன்று

சிறுகதையாசிரியரும், நாவலாசிரியரும் ஒருவராகவே யுள்ளனர். இரண்டும் தொடர்புற்ற திறமைகளாகக் காண்கின்றன. நாவல் ஒரு தன்னேரற்ற தலைவனின் வாழ்க்கைக் கூறுகளையோ அல்லது விரிந்த நிகழ்ச்சி யொன்றையோ கற்பனைத் திறம்பெற விரிவாக எழுது வதாகும்.

வீரமாமுனிவரின் பரமார்த்த குரு கதை தமிழில் முதல் சிறுகதையாகலாம். பஞ்சதந்திரக்கதைகளும் பாரதியார், வ.வே.சு. ஐயர் ஆகியோரின் (சுவர்ண குமாரி, குளத்தங்கரை அரசமரம் போன்ற) கதை களும் இவவகைக்கு நல்ல எடுத்துக் காட்டுக்களாகும். நாவலுள் பிரதாப முதலியார் சரித்திரம், கமலாம்பாள் சரித்திரம் ஆகியவற்றைச் சேர்ப்பர்.

கல்கி கதையுடன் நாவலும் எழுதிய ஆற்றலுடை யவர். வீணைபவானி போன்றன சுவையும் கலைநோக்கு முடையயவை. புதுமைப்பித்தன் சிறுகதையுலகில் ஒரு பெருந்தலைமையை வகித்தவர். குறிக்கோளும் உணர்ச்சியுமுடைய நூற்றுக்கணக்கான கதைகளை எழுதி ஒரு யுகத்தையே தொடங்கியவர். சிற்பியின் நகரம், காலனும் கிழவியும் போன்றன இவர்கதைகள்.

ராஜாஜி, சோமு, கி. வா. ஜகந்நாதன் போன் ேரும் சிறுகதையுலகில் நல்ல படைப்புக்களைத் தந் துள்ளனர்.

அகிலன் புகழ்பெற்ற நாவலாசிரியராகவும் ஆகி வருகிருர். பாவை விளக்கு, நெஞ்சின் அலைகள்,

வேங்கையின் மைந்தன் போன்ற நாவல்கள் பெரிதும் பாராட்டப் பெறுகின்றன.

கல்கியை நாவல்வேந்தன் என்னலாம். இத் துறையில் ஒப்பற்ற தலைமை இவருக்கிருந்தது. புதினங் களைப்படிக்கும் ஆர்வத்தைத் தூண்டி அத்துறைக்கு ஒரு மெருகூட்டியவர் கல்கியாவார். கள்வனின்காதலி, பார்த்திபன்கனவு, பொன்னியின்செல்வன், சிவகாமி யின் சபதம், அலைஓசை போன்ற இவரதுநாவல்களில் வரலாற்றுணர்ச்சியும் கற்பனைத்திறமும் மிகுதியாகும்.

ஆரணி குப்புசாமி முதலியார், வடுவூர் துரைசாமி ஐயங்கார், கோதைநாயகியம்மையார்போன்றபழைய பண்புடைய நாவலாசிரியர்கள். வியத்தகு சூழல்களை யும், கதைக் கட்டங்களையுமுடையன இவர்கள் ஆக் கிய ஏராளமான நாவல்கள். தமிழ்ப் புலமை நிறை வுடன் புதினப் படைப்பாற்றல் நிறைவுமுடையவர் மு.வ. இவர்தம் அல்லி, கள்ளோ காவியமோ, பெற்ற மனம், பாவை, கரித்துண்டு முதலியன. காண்டேகர் நாவல்கள் போன்று சீர்திருத்தமும், செம்மைமுடை யவை.

கு. ராஜவேலு போன்றவர்கள் இவரைப் பின் பற் றிய புலமையும் புதுமையும் உடையவர்கள். இவர் அழகுஆடுகிறது, காதல்தூங்குகிறது என்பனபோன்ற நாவல்களை எழுதியுள்ளார். இலக்கியக் கட்டுரை வன் மையும் இவரிடம் ஏற்றம்பெற்றுள்ளது.

உலகின் பன்மொழிகளிலும் படைக்கப்பட்ட பல வாகிய நாவல்களை இந்நூற்றுண்டைய ஆசிரியர்கள்

மொழிபெயர்த்துத் தமிழ் இலக்கியத்திற்கோர் ஏற்றம் அளித்து வருகின்றனர்.

**நாடக வளர்ச்சி**

பாத்திரங்கள் தாமே பேசியும், பாடியும் (அபிநய வரையறையின்றி) நடிக்கும் நாடகங்கள் 19-20ஆம் நூற்றுண்டுகளில் மிகவாயின. விலாசங்களும், பவளக் கொடி, காத்தவராயன், நல்லதங்காள், பாரத ராமாயணப் புராணங்களை யொட்டிய நாடகங்கள் ஆகியன எளியவாய் பொதுமக்கட்கே யுரியவாயின. அருணசலக்கவியின் இராமநாடகமும், கோபாலகிருஷ்ண பாரதியின் நந்தன் சரிதமும் நல்ல நாடகங்கள். சரசலோசன செட்டியார் முதலியோரும் இந்நூற்றுண்டில் சம்பந்த முதலியார் போன்றோரும் ஏராளமான எளிய நாடகங்களை எழுதினர்.

பரிதிமாற் கலைஞர், மறைமலை அடிகள், மதங்க சூளாமணியின் விபுலானந்த அடிகள், மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளையாகியோர் நல்லஅமைப்புடைய இலக்கிய நாடகங்கட்கு வழிகாட்டினர். பாரதிதாசனின் கவிதை நாடகங்கள் பலவும் நல்லிலக்கியமானவை.

பண்டைத் தமிழ்ப்புலவர் வரிசையில் அரசஞ்சண்முகனர் போன்றோர்கள் பாடுவதிலும் ஆராய்ச்சியிலும் பெருமிதமுற்று விளங்கியவர். இவரது தொல்காப்பிய, திருக்குறள் ஆராய்ச்சிகள் பாராட்டப்படுகின்றன.

யாழ்ப்பாணப் புலவருள் கனகசுந்தரம் பிள்ளையும், சுன்னுகம் குமாரசுவாமிப் பிள்ளையும் குறிக்கத்தக்கவர்

கள். முதல்வர் நல்ல பதிப்பாசிரியர். தமிழ் நாவலர் சரிதை இவராலேயே தமிழுலகிற்குக் கிடைத்தது. சென்னேப் பல்கலேக்கழகத் தமிழ் அகராதி யாக்கத்தில் சிலகாலம் தலேமை பூண்டிருந்தார். பின்னவர் வட நூலும் நிலேகண்டவர். இவரது 'தமிழ்ப்புலவர் சரித்திரம்' மிக்க பயனுடையது. நல்ல 'இலக்கிய வரலாறு' என்னலாம்.

இந்நூற்ருண்டில் ஏற்பட்ட உரைகளுள் நாராயண சாமி ஐயரது நற்றிணேயுரையும், நவநீதகிருட்டின பாரதியின் திருவாசகவுரையும் குறிப்பிடத்தக்கன. நாட்டார் முதலியவர்கள் அகநானூறு, சிலப்பதிகாரம், மணிமேகலே, திருவிளேயாடற்புராணம் முதலியவற்றிற் கெழுதிய விரிவுரைகள் வெளிவந்துள்ளன. யாவற்றிலும் முடியாய் விளங்குவது சிவக்கவிமணி கோவை சுப்பிரமணிய முதலியாரது பெரியபுராணப் பேருரையாகும். இவரது முயற்சியினே நச்சினர்க்கினியர் போன்ருேரது முயற்சிக்கே ஒப்பிடக்கூடும். பாராட்டத்தக்க பெருந்தமிழ்ப்பணி இதுவாகும்.

நா. கதிரைவேற்பிள்ளே தமது 'தமிழ்ப்பேரகராதி'யால் பெயர் பொறித்துக்கொண்டவராவார். பாம்பன் குமரகுருதாச அடிகள் 'குமாரசுவாமியம்' என்ற முருகன் வரலாற்றுப் பெருங்காப்பியத்தைப் பாடியவர்.

திருப்பாதிரிப்புலியூர் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய ஸ்வாமிகள், திரு. வி. க. போன்ருேர் இந்நூற்ருண்டின் ஈடும் எடுப்புமற்ற தமிழ்ச் சொற்பொழிவாளர்கள். இனிய மொழிகளால் உயர்ந்த பொருள்

களை மாசுபடாமல் மணிக்கணக்கில்பேசி இன்பத்தேன் சொரியச் செய்துவந்த சொற்பொழிவாளர்கள் இவர்கள்.

திரு: நமச்சிவாய முதலியாரவர்களும், செல்வ கேசவராயமுதலியாரவர்களும் மாகாணக்கல்லூரி முதலியவிடங்களில் நல்ல தமிழ்ப்பேராசிரியர்களாக இருந்தவர்கள். புலவர்களைப்புரந்தவர்கள். முன்னவர் மாணவர்க்குத் தமிழ்நூல்கள் எழுதியும், நற்றமிழ் நூல்களைப் பதிப்பித்தும் பேர்படைத்தவர். பின்னவர் நல்ல கட்டுரை நூல்களை எழுதியவர். க. ப. சந்தோஷம் என்பாரது நகைச்சுவை நற்றமிழ்க் கட்டுரைகள் நினைக்கத் தக்கவாகும். குழந்தைகட்கும், பொதுமக்கட்கும் எளிய இனிய இலக்கியச்சுவை நிறைந்த பாடல் பலவற்றை அழ.வள்ளியப்பாவும், கண்ணதாசனும் எழுதி வருகின்றனர். எத்துறைபற்றியும் மொழி பெயர்ப்புக்கள் பெருகின.

திரு. பூர்ணலிங்கம் பிள்ளையவர்கள் தமிழுணர்ச்சி மிக்கவர். ஆங்கிலப் பேராசிரியர். ஆங்கிலத்தில் இவரியற்றிய தமிழ் இலக்கிய வரலாறு அவ்வகை முயற்சியுள் முதலாவதாகும். அந்நூல் இன்றும் பேருதவியாகவும் பாராட்டத்தக்கதாயுமுள்ளது. இவரது தமிழ் இந்தியா என்ற ஆங்கில நூலும் தமிழின் தொன்மையையும் தனித்தன்மையையும் விளக்குவதாகும்.

**உ. வே. சாமிநாதய்யர்:** (1855–1942) இருபதாம் நூற்றுண்டில் தமிழுக்குத் தலைசிறந்த தொண்டாற்றியவர். மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் மாணவர். தியாக

ராச செட்டியாருக்கடுத்து அரசினர் கல்லூரிகளில் ஆசிரியராயிருந்தவர். பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி, குறுந்தொகை, புறநானூறு முதலிய நூல்களை ஏடுகளிலிருந்து அச்சிட்டுதவியதே இவரது தொண்டாகும். இவர் செய்த அளவில் இவரது தொண்டு பாராட்டுக்குரியதாகும். தாமோதரம்பிள்ளையனையவர்கள் இவர் பதித்த ஒவ்வொரு நூலையும் பதிப்பிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தனர் என்பதனை ஐயரவர்கள் எழுதியுள்ளார்கள். வளையாபதி ஏடு ஒரு மடத்தில் இருந்ததாகவும், பின்னர் பார்த்தபோது கிடைக்கவில்லையெனவும் எழுதியுள்ளார். அது கிடைக்காமற்போனது ஒரு குறையேயாகும். நல்லுரைக்கோவை, என் சரித்திரம் முதலிய உரைநடை நூல்களை மிகவாக எழுதியுள்ளார். பழைய வரலாறுகளை அரிதாகத் திரட்டிக் கதையாகச் சுவைபடக் கூறுவதில் திறம்படைத்தவர்.

மீனாட்சிசுந்தரம் பிள்ளை நூல்கள் உட்பட பல பிரபந்தங்களைப் பதிப்பித்துள்ளார். இவருக்கு நல்ல ஆதரவளித்தவர்கள் திருவாவடுதுறை ஆதீனத்தாராவர். இவர் பதிப்புச் செலவிற்கும் தமிழுலகம் மிக்க பொருளுதவி செய்தது. அரசியலார் இவருக்கு டாக்டர், மஹாமஹோபாத்யாயர் என்ற பட்டங்களையளித்துப் பாராட்டியது பொருத்தமேயாம். தமிழுக்குத்தொண்டு செய்வதற்காக நீண்டகாலம் 84 ஆண்டுகள் வாழ்ந்தவர் ஐயரவர்கள். பதிப்பீட்டில் பல நல்ல முறைகளைக் காட்டிச்சென்றார். கதைச்சுருக்கம், பொருளட்டவணை ஆராய்ச்சிக்குறிப்புக்கள் முதலியவற்றுடன் இவர்களது பதிப்புக்கள் வெளிவருவதுண்டு.

பாரதி: (882—21-8-1921) சுப்ரமணிய பாரதி தேசீயக்கவியாய் விளங்கியவர். இந் நூற்ருண்டில் சிறந்த பாடல்களையியற்றியவர் இவரே. பாவினங்களை மிகுதியும் பின்பற்றிய இவரது பாடல்கள் ஒரு புதுக் கவிஞரினத்தையே படைத்துவிட்டது. அப்பரம்பரை பாரதிப் பரம்பரை என வழங்கப்படுகிறது. கம்பரைப் போல வாழ்க்கையில் அளப்பிலாத் துன்பங்களை அரசாங்கத்தாரிடமிருந்து ஏற்றுக்கொண்டவர். வடமொழியிலும் ஆங்கிலத்திலும் நற்புலமையுடையவர். உரை நடையும் மிகவாக எழுதியுள்ளார். பாஞ்சாலி சபதம், குயில்பாட்டு, கண்ணன் பாட்டு, தேசீயப் பாடல்கள், சமயப்பாடல்கள் என்பன இவரதுபாடல்களுள் அழியா நிலையுடையன. சமயத்திலும் அரசியலிலும் சமரச நோக்குடையவர். அல்லாவையும், கிறித்துவையும் கண்ணனோடு கலந்து வணங்குவார். சமூகத்திலும் அரசியலிலும் ஒரு புரட்சி கொண்டுவந்தவர். தேசிய விநாயகம் பிள்ளை, நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை, சுத்தானந்த பாரதி ஆகியோர் இவர் வழியில் பேர்பெற்ற கவிஞர்கள். சுத்தானந்தர் 100 நூல்களுக்குமேல் எழுதித் தமிழுக்குத் தனித்தொண்டு செய்துவருகிருர் என்னலாம்.

பாரதிதாசன்: இவரதுமாணவர். அரசியற் கோட்பாட்டில் மாறுபடினும் அடிப்படையில் இருவரும் சீர்திருத்தக்காரர்களே. திருத்தமான சமயம் இருக்கலாம் அல்லது சமயமே வேண்டாமென வெறுப்பவர். இவரது காவியங்கள் பல நிலைத்த காவியத்தன்மையுடையன. அவற்றுள் பாண்டியன் பரிசு, குடும்ப விளக்கு முதலியன குறிக்கத்தக்கவாகும். இவரது

பாடல்களில் வசை சிறிது கலந்திருக்கும். தமிழ்ப்புலவருள்ளும், மேனுட்டுப் புலவருள்ளும் அத்தகையோர் பலர் இருந்துள்ளனர். அவற்றைநீக்கி இவரது கவிதைகளை நோக்கினுல் அவை சீரிய கவித்தன்மையுடையவேயாகும்.

திரு. வி. க. (28-6-83—17-9-53) திரு. வி. கல்யாண சுந்தரனுர் உரிமைக்காக வாழ்ந்த தமிழ்த்தலைவர். என்றும் நிலைக்கத்தக்க பொதுமைக் கருத்துக்களையுடைய பாடல்களைப் பாடியுள்ளார். உரிமைவேட்டல் பொதுமை வேட்டல், திருமாலருள் வேட்டல், கிறித்து அருள்வேட்டல் போன்ற பாடல் இலக்கியங்கள் என்றும் படிக்கத் தக்கனவாகும். இவர் பேச்சுத்திறனும், எழுத்துத்திறனும் உடையவர். இவ்வகையில் ஒரு இனத்தையே இவர் படைத்துவிட்டாரென்னலாம். உணர்ச்சி ததும்ப அழகிய சொற்களை முத்து முத்தாக அமைத்து இனிதாகப் பேசுபவர்; அவ்வாறே எழுதவும் கூடியவர். இவரால் ஊக்கப்பட்டுப் புலவரானவர் பலபேர். முருகன் அல்லது அழகு, பெண்ணின் பெருமை, மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் என்பன போன்ற இனிய உரைநடை நூல்களை இயற்றியவர். தமிழ்த்தென்றல், தமிழ்ச்சோலை என்ற கட்டுரைத் தொகுதிகள் நல்ல அரசியல் சமூகக் கருத்துக்களுடையவை. திரு. வி. க. வாழ்ந்தவரையில் தமிழுக்கோர் செம்மையும் அழகுமிருந்தது.

*மறைமலையடிகள்:* (1883-1958). நல்ல தமிழ்ப் பரம்பரையில் வந்தவர். கிறித்துவக் கல்லூரித் தமிழாசிரியராயிருந்தவர். மும்மொழிப் புலமை நிறைந்

தவர். சைவப்பற்று போலத் தமிழ்ப்பற்றும் உடைய வர். சைவமும் தமிழும் வாழப் பிற சமயங்களையும் ஓரளவு வெறுத்தவரெனவும்கூறலாம். தனித்தமிழியக்கத் திற்குத்தந்தையென இவரைக்கூறலாம். தனித்தமிழ்ச் சொற்களையிட்டு நல்ல நடையில் உரைநடை யிலக்கியங்களை ஏராளமாகப் படைத்துள்ளார். இவரும் தமதுநடைக்கும் நெறிக்கும் ஒருஇனத்தைப் படைத்து விட்டாரென்னலாம். தமிழ் இந்நூற்றுண்டில் தலை தூக்குவதற்கு இவர்களெல்லாம் ஒரு பெருங் காரண மென்பதில் ஐயமில்லை.

அறிவுக்கடல் என்ற பத்திரிகை நடத்தினர். தனக்கென அச்சகம் ஏற்படுத்திக்கொண்டு நூல்களைப் பதித்தார். உயர்ந்த ஆங்கில நடையெழுதக் கூடியவர். ஆங்கிலத்தில் தமிழ்ப் பொருள்களைப்பற்றி நூல்கள் பல எழுதியுள்ளார். தமிழர் மதம், மாணிக்கவாசகர் வரலாறு, சைவசித்தாந்தக் கட்டுரைகள் முதலியன இவரது உரைநடைகள். நாவல், கடிதம், மொழிபெயர்ப்பு முதலிய துறைகளுக்கும் இவர் வழிகாட்டி நூல்கள் பல இயற்றியுள்ளார். இவரது சாகுந்தல மொழி பெயர்ப்பு பலராலும் பாராட்டப்பெற்றது. இவர் சிறந்தஆராய்ச்சி யாளரென்பது 'மாணிக்கவாசகர்கால வாராய்ச்சி'யிற் புலப்படும்.

**பண்டிதமணி கதிரேசன் செட்டியார்:** (16-9-81—24-10-53) தமிழிலும் வடமொழியிலும் சிறந்த புலமையுடையவர். இவரது இலக்கியக் கட்டுரைகள் நல்ல உரைநடையாகும். திருவாசகத்திற்கு இவர் கண்ட உரையே இவர்பெயரை என்றும் நின்று நிலவச்செய்வ

தாகும். இதுவரை வந்த உரைகளுள்ளேயே இவரெழு
திய பகுதிகளின் உரை மிகச்சிறந்ததாகக் கருதப்படு
கிறது. இவருக்குப் பண்டிதமணி, மஹாமஹோபாத்தி
யாய என்ற சிறப்புபட்டங்கள் அளிக்கப்பட்டன.
சாணக்கியரது அர்த்த சாத்திரத்தை இவர் தமிழில்
மொழிபெயர்க்க உதவினர். மற்றும் சுக்ர நீதி, மிருச்ச
கடிகம் ஆகியவற்றின் மொழிபெயர்ப்புக்களும் இவரா
லியன்றன.

வேங்கடசாமி நாட்டார்: (12-4-84—28-3-44)
சொற்பொழிவிலும், உரைநடையிலும் சிறப்புப்பெற்ற
வர். இவரையும் ஒரு உரையாசிரியர் என்று கூறலாம்.
இவர்களெல்லாம் சைவத்தமிழுக்காகப் பெரிதும்வாழ்ந்
தவர்கள். திருவிளையாடற் புராணத்திற்கு இவரெழு
திய உரை மிகவும் விரிவானதாகும். உரையெழுதாத
அகநானூறு போன்ற இலக்கியங்களுக்கு இவர் உரை
கண்டது பாராட்டற்குரியதாகும். சிலப்பதிகாரத்திற்
கும், மணிமேகலைக்கும் புதியவுரைகளும் இவரால் எழு
தப்பட்டன.

வ. உ. சி. (1872—1936) பாரதி, திரு. வி. க.
போன்று தேசியஉணர்ச்சியிலும் தொண்டிலும் சிறந்த
தமிழறிஞர். தமிழுக்கும், தமிழகத்திற்கும் உயர்வு
வேண்டி இன்னல்பலவுற்றவர். பதிப்பாசிரியர். தொல்
காப்பியத்தை உரைகளுடன் பதிப்பித்தார். திருக்
குறள் மணக்குடவர் உரையினைப் பதித்து வெளியிட்
டார். குறளுக்கு உரையுமெழுதியவர். உயர்ந்த தமிழ்ப்
புலமையுடையவர். சாந்திக்கு மார்க்கம், வலிமைக்கு

மார்க்கம் முதலிய அரிய மொழி பெயர்ப்பு நூல்களை யாக்கியவர். பாரதியாரால் பாராட்டப்பெற்றவர்.

கா. சுப்பிரமணிய பிள்ளை: (5—11—88—30—4—45) அண்ணுமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைப் பேராசிரியராயிருந்தவர். தமிழ் இலக்கிய வரலாறு எழுதித் தமிழுக்குச் சிறந்த பணிசெய்தார். ஆராய்ச்சியிற் சிறந்த இவரது நூல்கள் இருபதுக்கு மேற்பட்டன மிக மேம்பாடுடையவாகும். அப்பர், சம்பந்தர் முதலிய நால்வர்க்கும் சேக்கிழார் மெய்கண்டார் முதலியவர்க்கு 'வரலாறும் நூலாராய்ச்சியும்' என்ற நூல்களை யெழுதியுள்ளார். இவை ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படுவனவாகும். மறைமலையடிகளைச்சார்ந்த இவர்களது இனம் ஆராய்ச்சியில் சைவத்திற்கே முதலிடம் தந்து தமிழைக்கூட சிறிது பின் தள்ளிவிடக் கூடியதென்னலாம்.

ரா. இராகவய்யங்கார்: (1870—1948) 20-ம் நூற்ருண்டு வைணவத் தமிழ்ப் புலவருட் சிறந்தவர். நுட்பமான கருத்துக்களுடன் சொற்பொழிவாற்றுபவர். ஆராய்ச்சி வல்லுநர். தமிழ் வரலாறு, குறுந்தொகை விளக்கம், பெரும்பாணுற்றுப்படை விளக்கம் முதலிய நூல்கள் இவரது ஆய்வுத் திறனுக்கு நற்சான்ருகும். 'பாரிகாதை' என்ற நற்றமிழ்க்காவியத்தை வெண்பாவில் பாடியுள்ளார்.

மு. ராகவையங்கார்: (1878–1960) இவர்களிருவரும் ஒரு குடும்பத்தினர். சான்ற புலமையுடையவர்கள். சென்னைப் பல்கலைக்கழகம் தொகுத்த பேரக

ராதிப் பணியில் நீண்ட காலம் தொண்டாற்றியவர். ஆராய்ச்சியில் மேம்பட்டவர். சாசனத் தமிழ்க் கவி சரிதம் பெருந்தொகை, ஆழ்வார்கள் காலநிலை என்ற இவரது மூன்று நூல்களும் இலக்கிய வரலாற்றுக்கு எடுத்துக் காட்டுகள்.

கோபால கிருஷ்ணமாச்சாரி: இவர்களெல்லாம் வைணவத்திற்காகவும், தமிழுக்காகவும் வாழ்ந்தவர்கள். கிருஷ்ணமாச்சாரி, சடகோபராமாநுசாச்சாரி ஆகியவர்களுடன் வெளிவந்த கம்பராமாயண உரை இவர்களை என்றுமுள தென்றமிழுடன் இருக்கச் செய்யக்கூடியதும், எக்காலத்தும் புலவர்க்கோர் வழி காட்டியாயிருக்கக் கூடியதுமாகும்.

சூரியநாராயண சாத்திரியார்: (1870—1903) தமிழுக்காக உழைத்த இளைஞர் சாத்திரியார் என இவரைக் கூறலாம். தமிழ் வாழவேண்டும் என இவர்க்கிருந்த உணர்ச்சி எவர்க்கும் இருந்ததில்லை யென்னலாம். பரிதிமாற்கலைஞன் எனத் தம் பெயரைத் தமிழாக்கிக் கொண்டார். உரைநடைக்கும் நாடகத்துக்கும் நற்பணி செய்தார். நல்ல தமிழில் உயர்ந்த உரைநடை நூல்களை யெழுதினர். நாடகவியல் என்ற நாடக இலக்கண நூலைக் கண்டார். இவரெழுதிய தமிழ்வரலாறு அத்துறையில் அறிஞர்க்கோர் வழிகாட்டியாகும். நடுநிலையான ஆராய்ச்சியுடையவர். சங்ககால நடையைப் பின்பற்றியன இவரது பாடல்களும் உரைநடையும். மதிவாணன் முதலிய உரைநடைகளும் கலாவதி ரூபவதி முதலிய நாடகங்களும் இவரியற்றிய நூல்களுட் சிறந்தன.

தஞ்சை கே. சீனிவாசப் பிள்ளை : (1852—1929) வழக்கறிஞராயிருந்து தமிழ்ப் புலமையும் சான்றவர்களுள் ஒருவர். இவரெழுதிய தமிழ் வரலாறு என்ற இலக்கிய வரலாற்று நூல் அத்துறையில் நடுவுநிலையும் தெளிவுமுடையதாய் அனைவர்க்கும் வழிகாட்டியாய் இருந்து வருகின்றது.

நாவலர் சோமசுந்தரபாரதியார் : (1878—1959) இவரும் வழக்கறிஞர். இந்நூற்றுண்டில் வழக்கறிஞர் பலர் தம்தொழிலையும் விட்டுத் தமிழுக்குப் பணிசெய்ய வந்தனர். அதனால் தமிழுக்கொரு நற்பேறு வாய்த்தது. இவரிருவரும் தமது வழக்கறிவுத் திறமையையெல்லாம் தமிழ் ஆராய்ச்சியிலும் நுழைத்தவர்கள். அவ்வகையில் இவரது 'திருவள்ளுவர்' என்ற இலக்கிய வரலாற்று நூல் ஓர் எடுத்துக்காட்டாகும். தொல்காப்பியப் பொருளதிகார இயல்கள் பலவற்றிக்கு இவர் உரையொன்றெழுதியுள்ளார். இவரது உரைநடை ஒரு தனித் தன்மையுடையது. 'மாரிவாயில்' என்ற செய்யுளும் இவர் எழுதியதே.

வையாபுரிப் பிள்ளை : (13-10-1888—17-2-56) இவரும் வழக்கறிஞரே. சிறந்த ஆராய்ச்சித்திறம்படைத்தவர். சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதித் தொகுப்பிலும் தமிழாராய்ச்சிப் பகுதியிலும் தலைவராக இருந்தவர், உயர்ந்த பதிப்பாசிரியர். ஏராளமான நூல்களை ஆராய்ச்சி முன்னுரையுடன் பதிப்பித்துள்ளார். தமிழ் இலக்கிய வரலாற்றிற்கு இவர் செய்த பணி என்றும் இருப்பதாகும். அவ்வகையில் பல நூல்கள் எழுதியுள்ளார். சொற்களையும் இலக்கணக்

குறிப்புக்களையுங் கொண்டு இலக்கிய வரலாற்றினைத் திட்டம் செய்யும் வகையில் இவர் புதுநெறிகண்டார். 20 நூல்களுக்குமேல் எழுதியும் பதிப்பித்துமுள்ளார். 'இலக்கிய தீபம்' 'தமிழ்மொழி இலக்கிய வரலாறு' ஆகியன இவரது நூல்களிற் சிலவாகும்:

ஆபிரகாம் பண்டிதர்: 1859—1919 கலைகளில் ஆராய்ச்சிமிக்கவர். தஞ்சாவூரில் இருந்தவர். 'கருணாமிர்த சாகரமென்ற' இவரது இசையியல் நூல் மிகவும் பயன் படுவததாகும். இது விபுலாநந்தரது யாழ் நூலுக்கு முந்தியது.

கோபிநாதராவ்: 1872—1919 அரசாங்கக் கல்வெட்டு, புதைபொருள் ஆராய்ச்சியிற் பணிசெய்தவர். வரலாற்று ஆராய்ச்சியறிவு மிக்கவர். இன்றைய கல்வெட்டு, சோழர், பாண்டியர் வரலாறுகள் ஆகியவற்றிற்கு நல்ல அடிப்படையிட்டவர். இன்றைய இலக்கிய வரலாறு பற்றிய முடிபுகள் பலவற்றிற்கு நல்வழி காட்டியவர். சோழர், தமிழகக்கோயிலமைப்பு பற்றியெல்லாம் இவரது கட்டுரைகள் நல்ல மதிப்புடையவாகும்.

சிங்காரவேலு முதலியார்: 1885—1931. பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப்பணிபுரிந்தவர், நல்லாசிரியர். இவர் தொகுத்த 'அபிதான சிந்தாமணி' ஒரு சிறு கலைக் களஞ்சியமாகும். மேற்கூறிய கலைக் களஞ்சியத்திற்கெல்லாம் வழிகாட்டி இத்தகைய நூல்களென்னலாம். ஒரு தனி மனிதர் இத்தகைய அரிய நூலையாக்கியது போற்றத்தக்கதாகும். இலக்கியங்

களைப் புரிந்து கொள்வதற்கு இந்நூல் மிக்க துணைபுரி கின்றது.

டாக்டர். ரா. பி: சேதுப்பிள்ளை: வழக்கறிஞர். இவரது தமிழ்ப் புலமையையும், பணியையும் பாராட் டிச் சென்னைப் பல்கலைக் கழகம் இவர்க்கு டாக்டர் பட்டமளித்தது. சேதுப் பிள்ளையவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்பேராசிரியர். பேச்சிலும் எழுத் திலும் எதுகைமோனையமைந்த நல்ல நடைக்கு வழி காட்டியவர். "சொல்லின் செல்வர்" என்ற பட்டம் இதற்காக இவர்க்குக் கிடைத்தது. "ஊரும் பேரும்" என்ற ஆராய்ச்சி நூல் இவரது ஆராய்ச்சித்திறனுக்கு எடுத்துக் காட்டாகும். திருவள்ளுவர் நூல் நயம், தமிழர் வீரம், தமிழின்பம் முதலிய அரிய கட்டுரை நூல்களையாக்கியுள்ளார்.

டாக்டர். தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர்: சென்னை வழக்கறிஞர் வடிவேல் செட்டியார் வழிவந்த தமிழ்ப் புலவரென இவரைக்கூறலாம். அரசியல் உணர்ச்சி யில் திரு. வி. க. வைப் பின்பற்றியவர். உணர்ச்சியும் உண்மையும் ததும்ப எழுதவும் பேசவும் வல்லவர். பல்கலைப்புலமையும் பன்மொழிப் புலமையும் உடைய வர். சமரசமும் விரிந்த மனப்பான்மையும் கொண்டு எண்ணற்ற தமிழ்ப்புலவர்களை உருவாக்கியவர். தேசீய உணர்ச்சியும் தொண்டுமிக்கவர். தமிழைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதி உலகறியச் செய்யும் ஆற் றல் மிக்க தமிழ்ப் புலவர் ஒரு சிலருள் சிறந்தவர். இவரெழுதிய நூல்களுள் 'பிறந்த தெப்படியோ, திருக் குறள் ஆராய்ச்சிகள், முல்லைப் பாட்டு ஆராய்ச்சி,

தமிழ்மொழி வரலாறு, இலக்கிய வரலாறு முதலியன ஆழமும் ஆராய்ச்சியு முடையவாகும்.

ஔவை. துரைசாமிப் பிள்ளை: சீரிய ஆராய்ச்சித் திறமுடையவர். உரையாசிரியர் பரம்பரையுள் ஒருவ ராகக் கூறலாம். புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப் பத்து, மணிமேகலை, நற்றிணை, யசோதரகாவியம் முதலியவற்றிற்கு இவரெழுதிய உரைகள் என்றும் விளக்கமுறுத்தற்காவனவும் வழிகாட்டியவனவுமா கும்.

டாக்டர் சிதம்பரநாதன்: பெருமித நடையுடன் எழுதவும் பேசவும் கூடியவர். செம்மையாக ஆங்கி லத்தில் பேசவும் எழுதவும் வல்லவர், ஆங்கிலஞ் சிறந்த தமிழ்ப் புலவருள் இவரும் ஒருவர். தமிழ் 'யாப்பியல்' பற்றி ஆங்கிலத்தில் ஆராய்ச்சி யெழுதி டாக்டர் பட்டம் பெற்றவர்: மொழி பெயர்ப்புக்களும், நல்ல கட்டுரை நூல்களும் பல எழுதியுள்ளார். பெரி யார் மன்ருே, இளவேனிற்காலம் முதலிய அவற்றுட் சிலவாகும். 'தமிழ் கல்சர்' என்ற பத்திரிகையில் இவ ரது ஆங்கிலக் கட்டுரைகள் பல வெளிவந்துள்ளன.

டாக்டர் இராசமாணிக்கனுர்: உலேயா உழைப்பி ஞல் இலக்கியங்களை அதன்வழித் தமிழையும் உயர்த்தி யவர். உயர்நிலைப்பள்ளி மாணவர் முதல் அனைவர்க் கும் அளப்பற்ற தமிழ்நூல்களை எழுதியுள்ளார். தமிழக வரலாறு, கல்வெட்டு, இலக்கிய வரலாறு முதலியவற் றில் நல்ல தேர்ச்சியுடன், பல்லவர் வரலாறு சோழர் வரலாறு, சைவ சமய வரலாறு முதலிய ஆராய்ச்சி

நூல்களை எழுதியுள்ளார். ஏராளமான உரை நடை நூல்களையாக்கியுள்ளார்.

டாக்டர் வி.. ஐ. சுப்ரமணியம்: திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில் மொழியியல் பேராசிரியர். ஒலியியல் (Linguistics) துறையில் தேர்ந்தவர். இவ்வகையாராய்ச்சியில் 'தமிழின் ஒலிமுறை'களைப்பற்றியாராய்ந்து அமெரிக்கப் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர். மொழியியலைப் பற்றிய இவரது கட்டுரைகள் நுட்பமுடையன.

டாக்டர் மு. வரதராசனுர்: சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர். உலையாவுழைப்பினை ஆக்கமான வழியில் செலுத்தியவர். சங்கநூல்களில் இயற்கை'யென்ற ஆராய்ச்சியெழுதி டாக்டர் பட்டம் பெற்றவர். தலைசிறந்த தமிழ் எழுத்தாளர். இவரது எழுத்தினைத் தமிழுலக முழுவதும் பாராட்டுகின்றது; மாணவர்க்கு இவரதெழுத்தில் பெரும் ஈடுபாடுள்ளது. நடுவு நிலையுடன் எளிய நடையில் உண்மைகளை அழகாக எழுதுபவர். இவர் எழுதாத இலக்கியத்துறையே இல்லையெனலாம். தமிழ்ப்புலவர்கள் புதினங்களை எழுதவில்லை, எழுதவறியார் என்ற குறையைப் போக்கிப் பல நாவல்களை எழுதியவர். காண்டேகரைப் போன்று சீர்திருத்த நோக்கத்துடன் எழுதுபவர். இதுவரை 50—60 நூல்களுக்குமேல் எழுதியுள்ளார். நாடகம், இலக்கிய விளக்கம், மொழி வரலாறு, மொழி நூல் முதலிய துறைகளில் பல நூல்களை எழுதியுள்ளார். திருக்குறளுக்கு இவரெழுதிய பொழிப்புரை நாடு முழுவதும் நன்கு படித்துப் பயன்பெறப் படுவதாகும்.

டாக்டர் வ. சுப. மாணிக்கம்: அழகப்பா கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். "சங்க நூற்களில் காதல்" என்ற பொருள்பற்றி ஆராய்ச்சியெழுதிப் பட்டம் பெற்றவர். "வள்ளுவம்" என்ற அரிய ஆராய்ச்சி நூலெழுதியுள்ளார். "மனைவியின் உரிமை" முதலியனவும் இவரது நூல்கள் ஆகும்.

டாக்டர் துரையரங்கனுர்: அழுத்தமான படிப்பும் இலக்கணப் புலமையும் நிறைந்தவர். சுந்தரர் தேவாரம் பற்றிப் பெருநூலொன்றெழுதியதால் இவருக்கு டாக்டர் பட்டம் கிடைத்தது. நல்ல கட்டுரையாளர்.

ஜி. சுப்ரமணிய பிள்ளை: அண்ணுமலையில் ஆராய்ச்சிப் பேராசிரியர். நகைச்சுவையுடனும் யாவருக்கும் புலப்படுமாறும் எழுதவும் பேசவும் வல்லவர். மொழி பெயர்ப்பாற்றல் மிக்கவர். 'குறள் விருந்து' அப்பர் விருந்து' மாணிக்க விருந்து' 'வெண்ணிலாவிலே' போன்ற கட்டுரைகள் இவர் எழுதியவை.

லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்: பண்டித பட்டமும் வித்வான் பட்டமும் ஒருங்குடையவர். குறிப்பும் சுருக்கமும்கொண்ட சொல்லுடையவர். பரிபாடல் ஆராய்ச்சி; சங்ககாலத் தமிழர் வாழ்வு; நோக்கு முதலிய நூல்களுக்காசிரியர்.

சதாசிவ பண்டாரத்தார்: இருபதாம் நூற்றுண்டில் சிறந்த இலக்கிய, தமிழக வரலாற்றுப் பேராசிரியர். அண்ணுமலைப் பல்கலைக் கழக ஆராய்ச்சித்துறையில் பணியாற்றியவர். கல்வெட்டுத் துறையில் ஒப்பற்ற

புலமையுடையராய் விளங்கிப் பாண்டியர் வரலாறு, சோழர் வரலாறு ஆகிய வரலாற்றுநூல்களை எழுதினர்.

திரு. மு. அருணசலம் பிள்ளை: அண்ணமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேருரையாளராயிருந்து ஓய்வு பெற்றவர். வரையறுத்த படிப்பும் பாடஞ் சொல்லும் திறமும் படைத்தவர். அண்ணமலையரசர் பற்றிய தமிழ்க் கட்டுரை நூலையெழுதியுள்ளார்.

திரு. வெள்ளைவாரணர்: அண்ணமலை ஆராய்ச்சித் துறையிற் பணி செய்பவர். நுட்பமான தமிழ்க் கல்வியுடையவர். 'தொல்காப்பியம்' 'திருமுறைகள்' ஆகியவற்றிற்கு விரிவான ஆராய்ச்சி வரலாறுகள் எழுதியுள்ளார்.

திரு. ச. தண்டபாணி தேசிகர்: குறளுரை வளத்தை முதலில் தொகுத்து வெளியிட்டவர். கண பதி, முருகன் போன்ற பல ஆராய்ச்சி நூல்களை வெளி யிட்டுள்ளார்.

மயிலை சீனி. வேங்கடசாமி: தமிழ்ப் பேரறிஞர். கல்வெட்டிலும் ஆராய்ச்சியிலும் வல்லவர். நரசிம்மன், மஹேந்திரன், தமிழகக் கலைகள் ஆகியவைபற்றியும், சமணமும் தமிழும், பௌத்தமும் தமிழும் என்பன பற்றியும் அரிய வரலாற்று நூல்களை எழுதியுள்ளார்.

புருடோத்தம நாயுடு: சென்னைப் பல்கலைக் கழக ஆராய்ச்சித் துறையில் பேருரையாளர். பரந்த படிப் பும் பாடஞ்சொல்லுந் திறமும் உடையவர். திருவாய் மொழி ஈட்டுரையையும் ஆசார்ய இருதயத்தையும்

நல்ல தமிழில் பெயர்த்து வெளியிட்டுள்ளார். வைண வத் தமிழிலக்கியங்களில் தேர்ந்தவர்.

கா. அப்பாத்துரை: தமிழும் ஆங்கிலமும் வல்ல வர். அகராதித் தொகுப்புப் பணியில் தேர்ந்தவர். தமிழுணர்ச்சி மிக்கவர். வரலாற்றுக் கதைகளும் அர சியல் வரலாறுகளும் எழுதுவதிற் றேர்ந்தவர். 70 நூல் களுக்கு மேல் எழுதியுள்ளார்.

கோதண்டபாணிப் பிள்ளை: நல்ல தமிழறிஞர். நெடுநல்வாடை யாராய்ச்சியில் இவரது ஆராய்ச்சி பயன்பட்டது. தமிழிசைபற்றிச் சிறந்த ஆராய்ச்சிகளை எழுதிவருகிறார். இவரது 'முதற்குறள் உவமை' ஒரு நல்ல நூல்.

தேவநேயப் பாவாணர்: அகராதித் துறையிலும் சொல்லாராய்ச்சியிலும் ஆழ்ந்தஆராய்ச்சியும் திறமையு முடையவர். வீறுகொண்ட தமிழுணர்ச்சியில் விருப்ப முடையவர். முதல் தாய்மொழி, திராவிடத்தாய், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் முதலிய நூல்களின் ஆசிரியர்.

அ. மு. பரமசிவானந்தம்: பச்சையப்பன் கல் லூரிப் பேருரையாளர். புதினங்களிலும் கட்டுரையிலும் வல்லவர். சுமார் 15 நூல்களுக்குமேல் எழுதியுள்ளார். 'கவிதையும் வாழ்க்கையும்' முதலியவை சிறந்தன.

அ. ச. ஞானசம்பந்தம்: தமிழ்ப்புலவர் பரம்பரை யினர். இலக்கிய ஆராய்ச்சித் துறையில் ஈடுபாடுடை

யவர். அவ்வகையில் இலக்கியக் கலை, இராவணன் வீழ்ச்சியும் மாட்சியும் என்ற நூல்களின் ஆசிரியர்.

பேரகராதி: (Lexicon) இந்நூற்றாண்டுத் தமிழிலக்கியத் தோற்றத்துள் மிக்க ஒளியுடையன இரண்டு, பேரகராதியும், தமிழில் கலைக்களஞ்சியமுமாகும். இவ்வகையில் ஈடுபட்ட புலவர் யாவரும் பெரும் பாராட்டுதலுக்குரியராவர். இலக்கிய விளக்கத்திற்கு இவற்றின் துணை இவ்வளவு அவ்வளவு என்ன முடியாது. போப் முதலிய ஆங்கிலேயரும், மு. ரா. வையாபுரிப் பிள்ளை முதலியோரும் இதற்குப் பெருந்துணை புரிந்தவராவர். இலட்சம் சொற்கள் (30 ஆண்டு முயற்சியில்) இதனில் விளக்கம் பெற்றுள்ளன. தமிழ் மொழிக்கு இதுவொரு நற் கருவூலமாகும்.

கலைக்களஞ்சியம்: அரசியலார், பல்கலைக்கழகத்தார் ஆகியவர் உதவியுடன் திரு. அவினாசிலிங்கம் செட்டியார் தம் வாழ்வில் செய்த அருந்தமிழ்ப்பணி இக் கலைக் களஞ்சியமாகும். இலக்கியத் தோற்றத்திற்கு வள்ளல்கள் பலர் காலந்தோறும் தூண்டுதலளித்துள்ளனர். அவினாசியார் அப்பரம்பரையினர். 10 தொகுதிகளாலாகிய இந்நூல் ஒப்பற்றதாகும். தமிழின் எவ்வகைத் துறையறிவு பற்றியும் திறமான தெளிவான விளக்கங்களைத் தருவது இந்நூல். இதன் பதிப்பாசிரியராகவிருக்கும் திரு. தூரனவர்கள் நல்ல இலக்கியப் பயிற்சியுடன் பல நூல்களை ஆக்கியுள்ளார்.

கி. வா. ஜகந்நாதன்: டாக்டர் ஐயரின் மாணவர். கலைமகள் இதழின் ஆசிரியர், சிறந்த தமிழ்ப்புலமை

யுடையவர். பக்திப் பாடல்களை விளக்கஞ் செய்வதில் தேர்ச்சிமிக்கவர். புலவர்கள், நாவல் சிறுகதை, முதலிய வெழுதுவதிலும் திறம்பெற முடியும் எனக் காட்டுபவர். 50.க்கு மேலான நூல்களை எழுதியுள்ளார்.

இராசாக்கண்ணனூர்: திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகளிடம் தமிழ்ப் பாடங்கேட்டு தன் முயற்சியால் பல்கலைக் கழகப் பட்டங்களைப் பெற்றவர். சென்னை அரசாங்கத் தமிழ்ப் பேராசிரியர். ஞானியார் சொற்பொழிவுகளைத் தொகுத்திருக்கிறர். சிறந்த கட்டுரை நூல்கள் சிலவற்றை எழுதியுள்ளார்: கட்டற்ற தமிழுணர்ச்சியும் சொல்லாற்றலும் உடையவர்.

வித்வான் வேணுகோபாலப்பிள்ளை: பரம்பரையான தமிழாசிரியருள் தளராது உழைத்துப் பணிசெய்பவர் இப்புலவர் பெருமகன்: சிறந்த பதிப்பாசிரியர் எனப் பேர்வாங்கியவர். பவானந்தர் கழகத்திலும் அரசாங்க ஏட்டுச்சுவடி நிலையங்களிலும் இருந்து பல இலக்கண இலக்கியங்களைத் திறம்பெறப் பதிப்பித்தவர். கட்டுரை நூல்கள் சிலவற்றை இவர் எழுதியுள்ளார். வைணவத் தமிழ்ப்புலவருள் இவரும் ஒருவர்.

ஆலாலசுந்தரம் செட்டியார்: சென்னை கிறித்துவக் கல்லூரிப் பேராசிரியராக இருந்தவர். நெறியும் நல்ல நடையுடைத் தமிழ்நடையும் உடையவர். உயர் வகுப்பு மாணவர்க்குரிய கட்டுரை நூல்களை எழுதியுள்ளார்.

சஞ்சீவி: தமிழாசிரியப் பரம்பரையினர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப்பணி புரிபவர். ஆழ்ந்த தமிழ்ப்புலமையும் உணர்ச்சியுமுடையவர்: வேலூர்ப் புரட்சி, மருதிருவர், சங்கச் சான்றோர் போன்ற வரலாற்றுக் கட்டுரைகள் பலவற்றை எழுதியுள்ளார்.

முத்துசண்முகம்: அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தே உயர் பட்டங்களையெல்லாம் பெற்று அங்கேயே மொழியியல் துறையில் பணியாற்றியவர். சிலப்பதிகாரம், தமிழ் கற்பிக்கும் முறை முதலியவற்றிலெல்லாம் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

டாக்டர் க. ஆறுமுகம்: தன்முயற்சியால் உயர் நிலையுற்ற தமிழ்ப் புலவர். இலக்கணத் திறனும் பாடஞ் சொல்லும் திறமும் உடையவர். மதுரைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப்பணி புரிபவர். 'உலகம் வாழும்' என்பது போன்ற கட்டுரை நூல்களுக்காசிரியர்.

டாக்டர் அகத்தியலிங்கம்: திருவாங்கூர் அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் டாக்டர் பட்டங்களைப் பெற்றவர். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் மொழியியல் துறைத் தலைவராக விருக்கிறர். உலக மொழிகள் என்ற வரிசையில் இரண்டு தொகுதிகளை வெளியிட்டுள்ளார்.

டாக்டர் இலக்குவனர்: வீறும் ஆழமும் உடைய தமிழ்ப் புலமையுடையவர். தொல்காப்பியத்திலும்

திருக்குறளிலும் நல்லாராய்ச்சியுடையவர். இவ்விரு பொருள்களைப்பற்றியும் பல நூல்களை எழுதியுள்ளார். நல்ல தமிழ் இதழ்களை நடத்துபவர். அரசாங்கத் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிகிறார்.

டாக்டர் தனிநாயகம்: மலேயா பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராக விருப்பவர். தமிழ் கல்சர் பத்திரிகையை நடத்திவருபவர். தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கெனத் தளராதுழைக்கும் கிறித்துவத் தமிழ்த் தூதர். தமிழ்த்தூது என்ற கட்டுரை இலக்கியத்தின் ஆசிரியர்.

டாக்டர் சுப்பு ரெட்டியார்: தன்முயற்சியால் உயர்ந்த பல்கலைப் புலமையுடையவர். தமிழாசிரியராக நீண்ட பணிபுரிந்து திருப்பதி பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராக விருப்பவர். கற்பிக்கு முறையிலும் அறிவியல் துறையிலும் பலவாகிய நூல்களை எழுதியுள்ளார்.

அ. கி. பரந்தாமனர் எம். ஏ.: மதுரை தியாகராயர் கல்லூரிப் பேராசிரியர். நல்ல தமிழ் எழுத வேண்டுமா; வாழ்க்கைக் கலை; இலக்கிய வாயில் முதலிய நூல்களை எழுதியுள்ளார்.

சோம. லெ. நெற்குப்பையூரினர். உலகஞ் சுற்றிய தமிழர். இக்காலத்துப் பொதுமக்கட்குப் பயன்படும் சிறந்த கட்டுரை நூல்களை எழுதியுள்ளார். மாவட்டங்களையும் உலகநாடுகளையும் பற்றிய இவருடைய தொகுப்பு நூல்கள் மிகவும் பயன்படுவன.

ம. பொ. சி: தன்முயற்சியால் சிறந்த தமிழறிவினைப் பெற்றவர். பேச்சும் சொல்லும் ஒரே மாதிரியான உணர்ச்சியும் செறிவுமுள்ள கருத்துக்களை வெளியிடுவன. அரசியல் 'பத்திரிகைகளையும்; கப்பலோட்டிய தமிழன்; சிலப்பதிகாரமும் தமிழரும்; வள்ளலார் கண்ட பொது நெறியாகிய கட்டுரை நூல்களையும் வெளியிட்டுவருபவர்.

அண்ணாத்துரை சி.என்.: பச்சையப்பன் கல்லூரியில்எம். ஏ. பட்டம் பெற்றவர். தமிழக முதலமைச்சராக இருந்தவர். தன் சொல்லாற்றலால் வலிமைமிக்க ஒரு கட்சியையே உண்டாக்கினார். இவருடைய ஆரிய மாயை முதலிய கட்டுரைகளையும் சொற்பொழிவுகளையும் தொகுத்தால் அதுவொரு சிறந்த கட்டுரை இலக்கியமாகும். ரங்கோன் ராதா; குமாஸ்தாவின் பெண்; பார்வதி பி.ஏ. முதலாம் நாவல்களும் ஓர் இரவு; காதல் ஜோதி முதலாம் நாடகங்களும் இவரால் எழுதப் பெற்றன.

ஆறுமுக நயினார்: சாலிய அந்தணர் புராணம்

இரத்தினவேலு முதலியார்: சிறப்புப் பெயரகராதி

இராமசாமிக் கவி: பேரூர் சிகையறுத்தான் வண்ணம்.

இராமலிங்கமுதலி: அந்தப்புர ரகசியம்; பழமொழிக்கதைகள்.

உலகநாதப்பிள்ளை: கரிகாலன்; அனுமான்; கன்றும் கனியுதவும்

கருப்பையாபாவலர்: விக்டோரியா வரலாறு.

கலியபெருமாள் : சிற்றின்ப சிரோமணி.

பூவை கலியாண சுந்தரர் : தாயுமானவர்; பட்டினத்தார் பாடல் உரைகள்.

சுப்ரமணிய ஐயர் : மீனாட்சியம்மை ஊஞ்சல்.

மாகறல் கார்த்திகேய முதலியார் : மொழிநூல்.

பரம்பன் குருதாசர் : பரிபூரணானந்த போதம்; பிரபந்தவிசாரம்.

மயிலை சண்முகம் பிள்ளை : மணிமேகலைப்பதிப்பீடு.

விருதை சிவஞானயோகி : சிவமரபு நாட்டல்; பிரமசூத்திரம்.

சீனிவாசமுதலி : ரோமியோஜூலியட் மொழிபெயர்ப்பு.

சுந்தரபாண்டிய ஓதுவார் : செங்கோன்தரைச் செலவு.

வெ. ப. சுப்ரமணியமுதலியார் : சாதிவரலாறு; மில்டன்பெயர்ப்பு; கம்பராமாயண உரைகள்.

சொக்கப்ப நாவலர் : சேலம் தலபுராணம்.

திருப்பதிசாரச்சாமி : சிவப்பிரகாச உரை.

திருவிளங்கம் : சிவப்பிரகாச உரை.

நல்லாசாமிப் பிள்ளை : பெரியபுராண சிவஞான போதகமொழிபெயர்ப்புக்கள்

நாகரத்தின நாயகர் : நியாயப் பிரகாசப் பெயர்ப்பு.

பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்: மாணவ ராற்றுப்படை; பழையது விடுதூது; நற்றிணை உரை.

நாராயணசாமி முதலி: புலவர் வரலாறு.

நீலாம்பிகை அம்மையார்: வடசொல் தமிழ் அகராதி.

சவரிராய பிள்ளை: தமிழ் ஆரியக்கலப்பு முதலிய கட்டுரைகள்.

முத்துத்தம்பி: அபிதானகோசம்; தென்மொழி வரலாறு.

முத்துவீராயர்: சாலத்திரட்டு.

வீரபத்திரப்பிள்ளை: தொட்டாய அம்மானை.

வெண்ணிமலைப் பிள்ளை: நைடத அம்மானை.

வெங்கட்ராம சாத்திரி: கதாசரித சாகரப் பெயர்ப்பு.

வெங்கட்ராமய்யர்: நீதிவியாசமஞ்சரி.

வயித்திலிங்கப் பத்தர்: பிருகச்சாதகப் பெயர்ப்பு.

இராகவமூர்த்தி: மாடுபிடிசண்டை.

கோனேரியப்ப நாடார்: அமரர்புராணம்.

அராலி தமிழ் அகராதி.

பரமேசுரஐயர்: சங்கீத சாத்திரம்.

கச்சியப்ப சிவாச்சாரியார் புராணம்.

கண்ணப்பர்: சூத்திரர்யார்.

அன்பு விடுதூது.

கூபசாத்திரம்; கோக சாத்திரம்.

# பிழை திருத்தம்

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| I பாகம் 10 | நிலைமையை | நிலையாமையை |
| 10 | எடுத்துரைத்தத் | எடுத்துரைத்துத் |
| 11 | பாண்கயனென்னும் | பாண்டியனென்னும் |
| 56 | எனேவ | எனவே |
| 82 | அவர் | அவா |
| 91 | வரைகபடாதல் | வரைவுகடாதல் |
| 108 | மாதவிவீட்டில் | மாதரி வீட்டில் |
| 112 | தன் | பின் |
| 117 | எண்ணுணில் | எண்ணில் |
| 124 | என்று மாதங் | என்று மாருத |
| 126 | வணங்கியது | வணக்கியது |
| 162 | அஃதோடு | அஃதொரு |
| 173 | பொற்சிலையை | பொற்கிழியை |
| 182 | என்பது | ஒன்பது |
| 184 | என்பர் | எண்மர் |
| 188 | வீரசோழியத்தில் | வீரசோழியத்தின் |
| II பாகம் 10 | தி குலோத்துங்கன் | II குலோத்துங்கன் |
| 20 | மெய்கண்டர் | மெய்கண்டார் |
| 35 | முரண்பறிற்ய | முரண்பற்றிய |
| 51 | எடுத்துரைப்பதை | எடுத்துரைப்பன |
| 53 | பாரம் | பாரதம் |
| 66 | திருக்குருசை | திருக்குருகை |
|  | இவவைவணப் | இவ்வைவணவப் |
| 71 | வாதுங்கராம | வரதுங்கராம |
| 83 | பாகுனர் | பாடினர் |
| 97 | துசி | துளசி |
| 154 | முதலியவர்க்கு | முதலியவர்க்கும் |
| 170 | அராலி | அராபி |

# அணிந்துரைகளும் மதிப்புரைகளு

இந்நூலினுள் கி.பி. 20வது நூற்றாண்டு வரை அமை
இலக்கியங்களின் வரலாறு நடுநிலையோடு அழகாக எழு
பட்டுள்ளது. இந்நூலினுடைய சிறப்பு நூற்றாண்டு வரிச
படி இது எழுதப்பட்டுள்ளது. அந்தந்த நூற்றாண்
இலக்கியப்போக்கு நன்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ள
இலக்கியவரலாறுகளாக முன்னரே வெளிவந்துள்ள நூல்
பல இருந்தாலும், இதுபோன்ற நூல் ஒன்றுக்கு மேல் அ
மாக வெளிவர வேண்டுமென்று கருதுகிறேன். அவ்வழி
கற்றுத் துறைபோகிய ஆய்வுரைஞர் திரு. கோவிந்தசா
யின் இந்நூல் வரவேற்கப்படும் என்று நம்புகிறே

*Dr. A*

இன்று 'இலக்கியத் தோற்றம்' என்ற தமிழ் இலக்
வரலாற்றினைத் தமிழ் உலகிற்குத் தம் அன்பின் காணிக்
யாகத் தந்துதவுகிறார். நான்காம் சங்கம் என்று ஒன்றிரு
தாக இவ்வாசிரியர் காண்கிறார். இதன் பயனாக இலக்
வரலாற்றுச் சிக்கல்கள் பல தீர்வதாக இவருக்குத் தோன்
கிறது. சிலபல இலக்கியங்களை இந்தச் சங்கத்தே
இணைத்து முறைப்படுத்துவதில் இவர் முந்தியுள்ளார்.

. . . . . . . . . . . . . . . . . . . தெ. பொ.

பரந்து கிடக்கும் தமிழ் இலக்கிய வரலாற்றை அ
வாகச் சுருக்கிக் கோவிந்தசாமியார் தந்திருக்கிறார். பரந்
பட்ட ஒரு பொருளைச் சுருக்குவது எளிதன்று.

—டாக்டர் வி. ஐ. சுப்ரமணிய

'இலக்கிய வரலாறு' என்னும் பெயரில் வெளிவந்துள்
நூல்கள் பலவாக இருந்தாலும் இதுபோன்ற நூல் வந்தில
என்னலாம். நூல் முழுவதும் கற்பவர்க்கு ஆசிரியருடை
பேருழைப்பும் இலக்கிய அறிவும் எண்ணியதைத் தெளிவுப
எழுதிக்காட்டும் எழுத்தாற்றலும் நன்கு தெரியும்.

சுதேசமித்திர